ஓம் குஹேசாயநம :

1788

# குமரகுருதாச சுவாமிகள் பாடலும்,

# திருவலங்கற்றிரட்டு

க, உ - கண்டங்களும்.

மஹாதேஜோமண்டல

வெளியீடு.

ஓம் குஹப்ரஹ்மணே நம :

தேவையம்பதி யெனுந் திருவிராமேச்சுரத்தைச் சார்ந்த பாம்பன்

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத

வைதிக சைவசித்தாந்த ஞானபானு

# குமாரசுவாமி யென்னும்

ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகள்

அருளிச்செய்த

முதல் மண்டலமாகிய

# குமரகுருதாச சுவாமிகள் பாடல்

இது

சென்னை: சாது அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

Second Edition—500 Copies.



1930

சிவமயம்

குஹப்ரஹ்மணே நம:

குமாரகுருதாச குருப்யோ நம:

# முன்னுரை.

சுப்பிரமணியத்தின் மாண்பைத் தமிழிற் சாத்திரவாயிலான் விரித்துரைத்தருளிய பெருமை பாம்பன், ஸ்ரீமத் - குமாரகுருதாச சுவாமிகட்குரியதாகும். இச்சுவாமிகள் இவ்வளவில் அமைந்துவிடாது, முன்னுளில் முருகனடியாராம் பெரும் புலவர்கள் செய்ததுபோல், பல தோத்திரப் பாடல்களும் இயற்றியுள்ளார்கள். இவர்கள் உரைநடையில் அருளியுள்ள நூல்கள் போக, செய்யுளாய்ப் பாடியுள்ளவற்றின் மொத்தம் 6666. இவைகளைச் சுவாமிகளே ஆறு மண்டலங்களாகப் பிரித்துள்ளார்கள். இம்மண்டலங்களுள், முதல் மண்டலமாயுள்ளது **குமாரகுருதாச சுவாமிகள் பாடல்.** இப்பனுவலையே சுவாமிகள் முதன்முதல் பாடத்தொடங்கினுர்கள். இவ்விவரம் அவரது சரித்திரத்தில் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளது :

“ஒரு சுக்கிரவாரத்திலே அதிகாலையிலே மூன்று தென்னந்தோப்புக்களைப் பார்வையிடுமாறு கிழக்குத்திசை நோக்கிச்சென்ற இவர், முதற்கணுள்ள தோப்பு வாயிலினுழைந்தார். ஆங்குத் தமக்கு முன்னே தந்தையார் உட்சென்றிருத்தலை அறிந்து கொண்டு வாயிலடியிலேயே நின்று விட்டார். அஞ்ஞான்று கையிலிருந்த சஷ்டிகவசத்தை விரித்து, இதனை ஆக்கியோர் யாவர் என்பதைக் கவனித்தார். தேவராய சுவாமிகளெனவறிந்தார். இவ்வாறு ஆண்டவனை யானும் பாடக்கடவேனென்னுந் துணிபு தம்முள்ளே துண்ணெனத் தோன்ற, உடனே வடக்கு முகமாய் நின்று செவ்வேளைச் சிந்தித்து வந்தனித்து ஆயிடைக் கிடைத்த ஒரு பனையோலையைத் தமதரையிற் செருகியுள்ள வெள்ளிப் பூக்க ளிடப்பட்ட தந்த எழுத்தாணியை யெடுத்து அதனுல் வகிர்ந்து ஏடாக்கிக் கொண்டு கீழ்த்திசையை நோக்கிச் சூரியோதயமாத லறிந்து இது நல்ல வேளையென எண்ணிக்கொண்டு, “என்னுண்டவனுகிய குமார பகவானே! நின்னையே பல பாக்களானும் பாடக்கடவேன்: அருணகிரிநாதர் பெயர் வைத்தே பிரபந்தம் முடிக்கக் கடவேன்: அவர் வாக்குப் போலவும் எனக்கு வாக்குண்டாக வேண்டு”மென்று கனிசிந்தித்துக் கைகூப்பி நிற்ப, உடனே தம்மை யறியாமலே தமது வாக்கிற் “கங்கையைச் சடையிற் பரித்து” எனவெழுந்த விசேட மங்கல மொழித்தொடரை ஆரம்பமாகக் கொண்ட பாட்டைப்பாடி அவ்வேட்டி லெழுதி முடித்தனர்”

அப்பாட்டே இந்நூலின் முதலில் “அமரர்கோ” என்னுந் தலைப்புடன் தெய்வ வணக்கத்திற்குப் பின்னர் வைக்கப்பட்டுளது. சுவாமிகள் குமாரக்கடவுளைப் பாடத் தொடங்கிய வரலாறு, அவரே இயற்றியுள்ள **ஸ்ரீமத் - குமாரசுவாமியத்துத் திருவருட்** செயன் ஞாபகத்தில்—

“நல்வி நயவரர் பெருமவென் னறிவே நவிர மிவர்பெரும் பாமவென் னுயிரே
கல்வி பயினல நீத்திள மையிலோர் கரிசில் வெள்ளியி னுதயநின் மீது
பல்க விதைநனி பாடிட வருள்செம் பறம்பன் பெயரும்வைப் பேனென வெணிநான்
சொல்க விதையது கங்கையென் மொழியிற் றெடங்கு மங்கல முணர்ந்துபின்
[மகிழ்ந்தேன்

பாடி யேயறி யாவெளி யேன்வாய் பாட லுன்கிரு பையெனவு நினைந்தேன்
நேடி யேயறி யாதவென் னினைவு நினைநி னைந்திடல் கருதியு மகிழ்ந்தேன்
பாட லோர்சத மாயபின் றேவைப் பனவன் மாதவன் சயதச மியிலுன்
பீட ருமஞ்ஞநல்கவென் னிதயம் பிடித்த துங்குக நினதரு ளன்றோ."

என்ற பாடல்களானும், கி. பி. 1905-ற் பதிப்பிக்கப்பட்ட சிறுநூற்றிரட்டிலுள்ள ஞான வாக்கியமென்னும் நூல் முடிந்தவிடத்தே—

"குஹப்ரஹ்மத்தினது திருவருட் டூண்டுதலானே அதி யிளமைப் பருவத்திற் றானே குஹேசனை நாம் பாடித் துதிக்க வேண்டுமென நினைத்த வளவிலே தம்மை யறி யாமற் றமது வாக்கில் "கங்கையைச் சடையிற் பரித்து" எனவெழுந்த மங்கல மொழித்தொடரைத் தொடக்கமாகக் கொண்டுளதும், குமரகுருதாச சுவாமிகள் பாட லெனு மொரு நூலிலே தெய்வ வணக்கத்திற்குப் பின்னர் வைக்கப்பட்டுளதுமான "அமரர்கோ" வெனுந் திருப்பதிகம் பாடியருளிய பின்"

எனவரும் வசத்தானும் அறியலாம்.

'அமரர்கோ' என்னும் பிரதமப்பிரபந்தம் பிரார்த்தனையாயிருத்தலின் வணக்கச்செய் யுளும் இருத்தல்வேண்டும் என்னும் முறைபற்றி, "அறிவினுக் கறிவான பொருளை" என்றற் றொடக்கத்துத் தெய்வவணக்கச் செய்யுளொரு மூன்றும் பின்னர் சுவாமி களால் பாடப்பட்டு நூலின் முதற்கண் வைக்கப்பட்டன.

குமரகுருதாச சுவாமிகள் பாடல் என்னும் இந்நூல் 1263 பாடல்களாலாகிய 74 பிரபந்தங்களையுடையது. இவற்றுள் 'அமரர்கோ' முதலாவது. 'திருவுருமலைக் கோமகன்' 74-வது. கடவுள் வணக்கப் பாக்களையுஞ் சேர்க்க, இதிலுள்ள திருப்பாடல் களின் மொத்தம் 1266 ஆகும். இவற்றுட் சில, தலங்களைச் சுட்டியெழுந்தவை. எஞ் சியவெல்லாம் பல்வேறு அரும்பெரும் பொருளை விளக்கி, பாடுவோர் அறிவையும் அன் பையும் வளர்க்கவல்ல பொதுப்பாடல்கள். இந்நூலில் காணப்படும் கண்ணிகளிற் சிலவும், 'சமாதான சங்கீதமும்', இன்னன பிறவும் ஒருமுறை கேட்டாரையும் அங்ஙனே தம் வயப்படுத்திவிடும் இயல்பின. இதில் இறுதிப் பிரபந்தமாயுள்ள "திருவுருமலைக் கோமகன்" என்பது பஞ்சவிம்சதியதிக சதபங்கியா யமைந்துள்ளது. அறுபத்து நான்கு சீருடைய கலைச்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தமாயெழும் இவ்வொரு செய் யுளே 21 வஞ்சி விருத்தங்காளகவும், 24 வஞ்சித்துறைகளாகவும், 3 தாவு கொச்சகங் களாகவும், 14 கலி விருத்தங்களாகவும், 14 கலிநிலைத்துறைகளாகவும், 3 கட்டளைக்கலித் துறைகளாகவும், 4 வெண்பாக்களாகவும், ஒரு நிலைமண்டில ஆசிரியப்பாவாகவும், 22 அறு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தங்களாகவும், 12 எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத் தங்களாகவும், 4 எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தங்களாகவும், இரண்டு ஒன்பதின் சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்களாகவும் கூடிய மொத்தம் 125 பாக்களாய் விரிந்து பொருள் பயப்பது பெருவியப்பைத் தருகின்றது.

ஐம்முகச்சிவனைத் தாயுமான சுவாமிகள் பாடித் துதித்ததுபோலவே நம் சுவாமி களும் அறுமுகச் சிவனைப் போற்றிப் பகர்ந்த பனுவல் இது என்று கொள்ளற்குப் போதிய சான்றுகள் இந்நூலை ஊன்றிப் படிப்போர்க்கு விளங்காமற்போகா. புத்தப்புதிய கருத்துக்கள் அமைந்த பாடல்கள் எண்ணிறந்தன இந்நூலில் காணப்படும். சுவாமிகள் வடமொழி தென்மொழிக் கலைகளைத் தமது நுண்ணறிவுகொண்டு ஆராய்ந்து உண்மை காணும் பரந்த நோக்கமுஞ் சிறந்த போற்றலுமுடைய முருகனடியாராதலின், இஃ தொக்குமென்க.

குமாரக்கடவுள் திருவருட் பேற்றால் பாடப்பெற்று அவருக்கே அர்ப்பணஞ் செய்யப்பெற்ற இவ்வருநூலை மெய்யன்போடு நாடோறும் நியமத்துடன் ஓதுவோருக்கு அறுமுகச் சிவனாரது அருட்பான்மை பெருகுமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

இத்தகைய பெருமை வாய்ந்த முதல்மண்டலமாகிய இதனோடு சேர்க்கப்பட்டுள்ள 'திருவலங்கற்றிரட்டு' என்னும் நூல் இரண்டாவது மண்டலமாய் இலங்குவது.

முருகவேளுக்குரிய பாமாலைத் தொகுதியாய் ஒளிரும் 'திருவலங்கற்றிரட்டு' இரண்டு கண்டங்களாய் வகுக்கப்பட்டுள்ளது. முதற் கண்டத்தில் காப்புந் தௌத்தியமு மாக எழுந்த 21 செய்யுள்களோடு, 'திருவருளடிமைப் பிரார்த்தனை' முதல் 'திருக் கந்தர் திருப்பல்லாண்டு' ஈறாகத் திகழும் பதிகங்கள் 58 (580 பாக்கள்). இவற் றுள் 491 பாக்கள் சுவாமிகள் இல்லற நெறியிலிருந்த காலத்தே பாடப்பெற்றவை; எஞ்சிய 110-ம் துறவடைந்த பின்னர் இயற்றப்பட்டவை. இப்பதிகங்களியாவும் தேவா ரங்களிற் காணப்படும் பண்டைத் தமிழ்ப்பண்களா னியன்ற இன்னிசைப் பாக்களாகும். சிவமூர்த்தியைப் பாடி மகிழ்தற்குப் பண்சுமந்த தேவாரப் பாசுரங்களமைந்தாங்கு, குக மூர்த்தியைப் போற்றுதற்கு அப்பண் கொண்டியலுமிப் பதிகங்கள் வாய்ந்தமை சாலப் பொருத்த முடைத்தென்க.

சுவாமிகள் திருவலங்கற்றிரட்டின் முதற்கண்டம் பாடுதற்குக் காரணராயிருந்தவர் அடிகளின் சீடருள் ஒருவராகிய திரு. L. D. முத்துக்கருப்ப பிள்ளையாவர். இவ்விவரம் சுவாமிகள் சரித்திரத்தில் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளது :

"பாம்பன் சீடர்களுள் L. D. முத்துக்கருப்ப பிள்ளை, கல்வியறிவுடையவராயும், உத்தியோகத்தி விருப்பவராயு மிருந்தார். அவர், குமரகுருதாச சுவாமிகள் பாடலுள் "நவரத்தின மீக்கூற்று" முதலிய குறிப்புடைச் சந்தப்பாட்டுக்களைப் பார்த்துவிட்டு, இவ்விதமாக இறைவனைப் பாடித் துதிப்பதாயின் அவை, எளிதாக யாவரும் பாடவும் பொருளறியவும் இயையாதனவாமே; திருஞான சம்பந்தர் முதலியோர் பாடியருளிய பாட்டுக்களை இக்காலத்தே பலரும் எளிதாகவே பாடுகின்றனர். அவ்விதமாக முருக நாதன்மீது சுவாமிகளும் பாடுவதாயின் அவை, என்போல்வார் பலருக்கும் பயன்படுவன வாமே என்றுரைத்ததை அங்கீகரித்த வாறாகவே ஆசிரியர், திருவலங்கற்றிரட்டு முதற் கண்டத்தைப் பாடியருளினர்."

இக்கண்டத்துக் காப்பும் தௌத்தியமும் 1892-ம் ஆண்டில் இயற்றப்பட்டன. அக் காலத்தில் சுவாமிகட்கு வயது சுமார் 40. இம்முதற்கண்டம் நந்தன ஆண்டு மார்கழித்திங் கள் உ௪-க்கும் சார்வரி ஆண்டு புரட்டாசித்திங்கள் க௮-க்கு மிடைப்பட்ட காலத்தில் பாடப்பட்டதென்னுமுண்மை ஒவ்வொரு பதிகத்தினிறுதியிலும் குறித்திருக்கும் தேதியி னால் வெளியாகின்றது.

இப்பனுவலை யோதுமுறையைச் சுவாமிகளே "பாடுமுறை" என்னுந் தலைப்பின் கீழ் உரைத்தருளியுள்ளார்கள். ஓதற்பயனுவது இதுவென்று பின்வரும் காசியாத்தி ரைச் செய்யுள் குறிக்கும் :—

> "பதக்கண்டா பண்பா வலங்கற் றிரட்டின்
> முதற்கண்டம் பாடு முருகோன்—பதக்கண்டாம்
> இன்புனது கண்ணுறுமா றேதி லருளோக்கும்
> அன்பருநின் முன்வருகு வார்."

திருவலங்கற்றிரட்டின் இரண்டாங்கண்டம் 'பல் சந்தப்பரிமளம்' என்னும் மறு பெயருடையது. இது, வெள்ளியல், ஆசிரியவியல், கலியியல், வஞ்சியியல் என்னும்

நாற்பெரும் பிரிவுகளை யுடைத்தாய், ஒவ்வொன்றிலும் அவ்வப்பிரிவினங்களையுங் கொண்டு மிளிர்வது. இதில், 'நேரிசை வெண்பா' முதல் 'வாயுறை வாழ்த்து மருட்பா'; ஈறாகப் பல்வேறு வகைப் பாக்கட்கு மெடுத்துக்காட்டுக்களாக 532 பாக்கள் அடங்கியுள் ளன. இவையாவும் முருகவேள் மீதே பாடப்பட்டவை என்பது சொல்லாமே யமையும்.

இக்கண்டம், சுவாமிகள் திருவாளர் ந. சுப்பிரமணியப் பிள்ளையவர்கள் வேண்டுகோட் கிசைந்து 1893-ம் ஆண்டு திருவனந்தபுரம் சென்று தங்கியிருந்தபோது, பாடப்பட்டது. அவ்வூரில் சுவாமிகள் ஒரு மேல்வீட்டில் தனித்திருந்து இருபத்திரண்டு நாட்களுக்குள் யாப்பிலக்கணக் கடலைக் குடித்துக் கவிமேகமா யெழுந்தகாலை, பல்சந்தப் பரிமளமாகிய இந்நூலைப் பாடச் சுவாமிகட்கு மனவெழுச்சி தோன்றியது. இது விஜய ஆண்டில், புரட்டாசி மாசத்துப் பூர்வபக்ஷத்து ஏகாதசிக்கு முன்னரே பாடி முடிக்கப்பட்டதென்க. சுவாமிகள் சரித்திரத்தில் குறித்துள்ளபடி, இந்நூல், "யாப்பிலக்கண இலக்கியங்களிற் காணப்படுகின்ற சந்தேகமெல்லாம் நிவர்த்திக்கு நிமித்தமும், சந்தபேதங்களையும் எதுகை மோனை முதலிய நயம்பிழையாது சித்திரகவிகள் நடைபெறுதலையு முணர்த்து நிமித்தமும், செவ்வேள் கிருபையே உய்தி பெறுவார்க்கெல்லா முயிர்த்துணை யென் பதை யுபதேசிக்கு நிமித்தமுமாகப் பாடப்பட்ட பெருநூலென்னலாம். இன்றுகாறும் இத்திறநூலொன்று வெளிப்பட்டதின் றெனவு முரைக்கலாம்." இந்நூலி னியல்பையும் பயனையும் சுவாமிகள் தமது 'காசியாத்திரை'யில் பின்வருமாறு விளக்கியுள்ளார்கள்.

> "யாப்பி னிலக்கணமும் யாத்த விலக்கியமும்
> யாப்பொலிபல் சித்திரமு நச்சியல்போய்—மூப்போ
> தலங்கற் றிரட்டினிரண் டாங்கண்டம் பாருன்
> விலங்கைத் தரித்து விடும்."

இத்துணைச் சிறப்பினவாகிய திருவலங்கற்றிரட்டும், குமரகுருதாச சுவாமிகள் பாட லும் பல ஆண்டுகளுக்குமுன் அச்சிடப்பட்டன. பிரதிகள் கிடைப்பதரிதாவது கருதி, சுவாமிகள் தமது ஜீவிய காலத்திலேயே இவ்விரு நூல்களையும் ஒன்றாகச் சேர்த்துக் கண்கவர் வனப்பினோடு இரண்டாம் பதிப்பாக அச்சிடத் தொடங்கினார்கள். அச்சு வேலை ௬௩-ம் பாரம் வரையில் சுவாமிகள் பார்வையிலேயே நடந்து வந்தது. சுவாமி கள் (30-5-29) சமாதி நிலையெய்தியபின்னர், அவர்களால் காணப்பட்ட மஹாதேஜோ மண்டலம் என்னும் பெயரிய சபையினரால் பதிப்பிக்கப்பட்டு முற்றுப்பெற்றது. முருக வேளிடத் தன்புள்ள தமிழரனைவரும் பொதுவாகவும், சுவாமிகள் அடியார்கள் சிறப்பாக வும் அவர்கட்கு நன்றி செலுத்துங் கடப்பாடுடையர். செஞ்சொற்புனை மாலை சிறக்க வணிந்து அருளும் பண்பினனாகிய செவ்வேட் பரமன், இவ்வழகிய நூல் பன்னெடுங் காலம் பாரில் பயனோடு திகழத் திருவருள் பாலிப்பானென்று நம்புகிறேன்.

மதுராந்தகம்,
11—8—30.

ச. சச்சிதானந்தன்

## முதல் மண்டலத்துப்

# பிரபந்தவகராதி.

# இரண்டாம் மண்டலத்து முதற் கண்டப

# பதிகவகராதி.



## பகற்பண்.

காந்தாரம், பியந்தைக்காந்தாரம், காந்தாரபஞ்சமம், பஞ்சமம், நட்டபாடை, நட்டராகம், தக்கேசி, சாதாரி, புறநீர்மை, பழம்பஞ்சுரம், இந்தளம், கௌசிகம். ஆ ௧௨.

## இராப்பண்.

கொல்லி, கொல்லிக்கௌவாணம், தக்கராகம், சீகாமரம், வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி. ஆ ௬.

## பொதுப்பண்.

திருத்தாண்டகம், யாழ்மூரி. ... ... ... ... ... ... ஆ ௨

ஆ பண் ௨௦

## இரண்டாமண்டலத்து இரண்டாங்கண்டச்

# செய்யுட்பெயரட்டவணை.



---

## இரண்டாங்கண்டத்துள்ள

# விசேடச் செய்யுளட்டவணை.

இந்நூலச்சிடும் பொருட்டு முன்பணமாக அளித்த

## சிவநேயத் திருவாளர் பெயர்கள்

| | ரூபா |
|---|---|
| தி. தி. குப்புசாமி செட்டியார் ... ... | 90 |
| சோதிடம் - பு. சின்னசாமி பிள்ளை ... | 90 |
| C. S. மதுரை முதலியார் ... ... | 90 |
| காளி. சண்முகம் செட்டியார் ... ... | 60 |
| கந்தசாமி தேசிகர் ... ... ... | 50 |
| பு. மு. காளத்தி செட்டியார் ... ... | 30 |
| P. ஜகந்நாத முதலியார் ... ... | 30 |
| பல்லாவரம் - நாகரத்தின முதலியார் K. ... | 30 |
| இரத்தினசபாபதி முதலியார் C. M. ... | 15 |
| T. வேங்கடாசல முதலியார் ... ... | 15 |
| ச. நடேச முதலியார் ... ... | 15 |
| மீனாக்ஷிசுந்தர முதலியார் C. ... ... | 15 |
| முருகன் தலயாத்திரை சங்கத்தார் ... | 15 |
| T. குருசாமி முதலியார் ... ... | 15 |
| ஆக | 560 |

சிவமயம்

குஹப்ரஹ்மணேநம ஃ

திருச்சிற்றம்பலம்.

முதன்மண்டலமாகிய

# குமரகுருதாசசுவாமிகள் பாடல்.

## தெய்வ வணக்கம்.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அறிவினுக் கறிவான பொருளேயடி கட்கருளு
மானந்த போதநிதியை
அத்துவித நிச்சய வகண்டவே காகார
மானசின் மயவாரியைக்
குறிதிரி பிலாதசிவ யோகபரி பூரணக்
கூர்ப்பினைக் குருபரத்தைக்
குழவுமுது கிழமையின் றிலககோ சரசிற்சு
கோதய விலாசவெளியைத்
துறவரிரு தயகடையை யம்பரம தேசெனச்
சுடருமா னந்தவடிவைச்
சுத்தபர தத்துவச் சுடரைச் சுயம்புவைத்
துரியவோங் காரமுதலை

---

க. அடிகள் = முனிவர்.

ஆநந்தம் என்னும் வடகிளவி தமிழ் வழக்கிற்கியைய "ஆனந்தம்" என வரையப் பட்டது; இதுவே யேற்புடைத்து. என்னை? (ஜ்ஞாநம்—) ஞாநம், மநஸ், மநம், வசநம், மாநம், உபமாநம், ப்ரதாநம் என்னும் வட கிளவிகள் ஞானம், மனம், வசனம், மானம், உவமானம், பிரதானமென வரையப்படுகின்றன வாகலின். பிறவுமன்ன,

நிறைசரத நிட்கள நிராகநிரு நாமபர
நிட்டையி னிலாவுதிருவை
நித்திய சுவானுபவ முற்றவயி லடிகளை
நிரந்தரமு ளெஞ்சில்வைப்பாம்.

நின்மல நிராமய புராணபர தாரக
நிரம்பர நிராகாரமாய்
நிர்க்குண நிராகுல நிராசன நிராகூச
நிட்பிரபஞ் சப்பிரமமாய்ச்
சன்மநிகை மரணமின் றண்டபிண்டப் பெயர்கொள்
சங்கங்க ளிற்கலாவிச்
சச்சிதா னந்தசிவ சிற்ககன மாய்நித்த
சருவவல் லபமுள்ளதாய்த்
தன்மகிரு பாகர விலாசசுக சாகர
சதாசிவ மகேசவடிவாய்ச்
சதுர்மறைசொல் வேதாந்த சித்தாந்த நிலையிலெழு
சமரச சுபாவமுடிபாய்
நன்மவுன ரறிவின்மெய் யறிவாகி விரிவாகி
நாளுஞ் சிறந்துதிகழும்
ஞாட்பா றெழுத்திறைக் கடிமையென விதயமுண்
ணண்ணியஞ் சலிசெய்குவாம்.

தொல்லையில் வாதவூ ரடிகளொரு பெயர்புரஞ்
சொல்லவொண் ணமுதலெனச்
சொற்றபர மாய்மும் மறைக்கிதய மாயுள்ள
தூவரிக ளுக்குரிமையாய்
ஒல்லைமறை யின்பனுவல் பன்னுமா ருதார
வுடலையும் பிராணனென்றே
ஓதாவி தன்னையும் பொலமெனும் பொருளையு
மொருங்கே கவர்ந்தொன்றைநல்
கெல்லையொன் றில்பரம பதியாகி யதர்வத்தி
லெசுரிலெழு பஞ்சருத்ரம்

---

க. அடிகள் = ஈசன்.

ங. ஒல்லை = பழமை.

பஞ்சருத்ரம் = அதர்வணவேதத்தைச் சார்ந்த அதர்வசிரம், அதர்வசிகை, எசுர் வேதத்தைச் சார்ந்த கைவல்லியம், சுவேதாசுவதரம், காலாக்கினி ருத்திரம் என்னும் உபநிடதங்கள். இவைகள் வைதிக சைவத்தை யினிதுவிளக்கும்.

என்றறிவ் யோபநிட தங்களறை கின்றசிவ
மென்னவெவ ருந்தொழுவளர்
தில்லையம் பொதிநடக் களேகணு யாறென்று
செப்புபொறி கட்கணங்காய்த்
தேகிக ளுளக்குகை தொறுமுள்ள தாயுள்ள
தெய்வமணி யைப்பணிகுவாம். (ந)

---

“அமரர்கோ” என்னும் பிரதமப் பிரபந்தம், பிரார்த்தனையா யிருத்தலின் வணக்கச் செய்யுளு மிருத்தல் வேண்டுமென்பது நுதலி “அறிவினுக்கறிவான பொருளே” என்றற் றொடக்கத்து இத் தெய்வவணக்கச் செய்யு ளொருமூன்றுங் கூறப்பட்டனவாம். இப்படிக் கூறினமை, திருத்தணிகைத் தலபரியந்தமுள்ள ௪00 - பாட்டிற்கும் பின்னென்றே யுணரவுள்ளது. விவரம்— தெய்வமணங்கமழும் ஆசிரியருடைய **பெருஞ் சரித்திரத்திலே** காணலாம்.

---

# க. அமரர்கோ.

---

கங்கையைச் சடையிற் பரித்துமறி மழுவங்
கரத்திற் றரித்துருத்ராங்
காட்டுழைவ யதளசைத் தணிமன்றி லாடுகங்
காளற் கபின்னமாய
சங்கரி சடாதாரி சருவாணி கல்யாணி
தற்பரி பவானிதந்த
தந்திமுக னோடுமற் றைந்துபெயர் நீர்மையுந்
தன்னகத் துளதெய்வமே
மங்கையர்த மின்பெனுந் துன்பினை விரும்புமட
மார்க்கத்தை விட்டதீதர்
வாழ்வுக்கும் வாழ்வாய வாழ்வினை யளிக்குமுன்
மலரடி தியானிக்கவும்
அங்கையினி னெல்லியங் கனியெனத் திருவருளை
யடையவுங் கருணைநல்காய்
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே. (க)

---

ந. பொதி = அம்பலம் = பொது.

க. மடம் = மடமை.

மந்தரத் தாலமிர்த மகரால யந்தனை
மதித்தகான் மெய்யின்மாயம்
மருவுவன மாலிசோ தரியான வட்குரிய
வாமந் தனைக்கொடுத்துச்
சிந்துரக் குடிலந் தயங்கவரு ணடமிடு
திருக்கண் ணுதற்குமதலாய்
தீவினை தவிர்த்தருடி திக்கொருவ ரிலையெனச்
சேவடியை நம்பிநவிரம்
உந்துனபி தானமனு வோதிநிலை மீதிலே
யோடியா டித்திரிந்தும்
உள்ளத்தி லேவைத்த வெண்ணத்தொ ரெள்ளேனு
மொத்துவர வில்லையென்றென்
அந்தரங் கத்திலே யாரூத புண்ணுற்
றழுங்குமெற் கார்தஞ்சமே
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே.

கஞ்சமலர் வதனத்தின் மஞ்சணில வக்களைக்
காவிவிழி சூழ்ந்துசுழலக்
கலவையணி செண்டம மிரண்டுநிமி ரச்செய்ய
கைக்கங்க ணங்கடிகழ
அஞ்சமென் னத்தெருவி னின்றுலா வித்தினமு
மாட்பிடித் திடுகணிகையர்
ஆசைகொண் டலைபுமிவ் வாபாச நாய்தனை
யணைத்தருள் கொடுக்கவேண்டும்
தஞ்சமென் றடைகின்ற வுயிர்களுக் காதரவு
தந்திரட் சிக்கவென்று
சாற்றியுள வேதாகமச்சஞ்ச யங்களிற்
சாரதர மாகவுள்ள
அஞ்செழுத் தாறெழுத் துக்கிறைவ வாதிநடு
வந்தமில் லாதபரமே
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர் கோவே.

---

உ. நவிரம் = மயில்.

ந. சஞ்சயம் = கூட்டம். ஸஞ்சயம் என்பது வடசொல்.

## க. அமரர்கோ.

சனகாதி நால்வர்க் குரைத்தமுறை போற்பரா
சார்மக்க ளாறுபேர்க்கும்
தண்ணார் பரங்கிரிக் கண்ணே தனித்துநற்
சதுர்வேத வுச்சிமுடிவை
வினைதீர்த் துணர்த்துவா னருண்மௌன குருவென்ன
வீற்றிருந் தைந்துறுப்பான்
விளக்கியருள் பாலித்த தண்ணளியை யாரறிவர்
மெய்யன்ப ரன்றியந்தக்
கனமான காரியந் தமியேற்கும் வேண்டியே
கைகுவித் திடுமென்னையுன்
கைவிடா நட்புவந் தென்றைக்கு மேவுமோ
காதற் கியைந்தகண்ணே
அனகமெய்ஞ் ஞானவா னந்தமுகி லேயென்ற
னந்தரங் கக்களிப்பே
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே.

படிறற்ற வாகமம் பகர்பொருளோர் மூன்றனுட்
பசுவினை யனாதியாகப்
பந்தித்த பாசமுட னப்பசுவு மாசற்ற
பதியுடைய செயலின்றியே
முடிவாக வாயினுங் குறைவாக வாயினு
முரண்கொண் டியங்குங்கொலோ
மூடமுறு பாசஞா னந்தானும் விடயத்தின்
முயலுவ தலாதுன்னுடை
அடிதேடி நிற்குமோ பசுஞான முந்தன்னை
யறியுமோ கடினமின்றுன்
அருளான பதிஞானம் யாவையு முணர்த்திமெய்
யானந்த வாழ்வுநல்கும்
அடிமுடி குறிக்கவொண் ணாவைய வதனையிவ்
வடிமைக் கிரங்கியருடி
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே.

மூவர்மறை யாகம புராணேதி காசாதி
முனிவருங் கணநாதரும்
முப்பத்து முக்கோடி தேவரும் பணியுநின்
முக்கியபத வாரிசத்தைக்

கேவல மயக்கவெளி யேன்பணிய வோதரங்
　　கிஞ்சித்து மில்லைநின்றுட்
கிருபைகொண் டுன்பதம் பெறல்சுலப மென்றுனைக்
　　கிட்டினே னிட்டம்வைத்துத்
தீவிர தரப்பெரிய கருணைசெய் தளியரிய
　　திவ்வியமெய்ஞ் ஞானமௌன
சிவராஜ யோகனே தவராஜ ராஜனே
　　செப்பரிய முத்திமுதலே
ஆவியர் சுவாமியே யருணகிரி நாதனுக்
　　கருடந்த குருநாதனே
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
　　தாதியே யமரர்கோவே. (சா)

---

ஆசிரியர், இளமைப் பருவத்திற்றானே ஒரு சுக்கிரவாரத்திலே அதிகாலையிலே மூன்று தென்னந் தோப்புக்களைப் பார்வையிடுமாறு கிழக்குத் திசை நோக்கிச் சென்றனர். முதற்கணுள்ள தோப்புவாயிலினுழைந்தார். ஆங்குத் தமக்கு முன்னே தந்தையார் உட்சென்றிருத்தலை அறிந்துகொண்டு வாயிலடியிலேயே நின்றுவிட்டார். அஞ்ஞான்று கையிலிருக்கிற சஷ்டி கவசத்தை விரித்து இதன் ஆக்கியோர் யாவர்? என்பதைக் கவனித்தார். தேவராய சுவாமிகளென வறிந்தார். இவ்வாறு ஆண்டவனை யானும் பாடக்கடவேனென்னுந் துணிபு தம்முள்ளே துண்ணெனத்தோன்ற, உடனே வடக்கு முகமாய் நின்று செவ்வேளைச் சிந்தித்து வந்தனித்து ஆயிடைக்கிடைத்த ஓலையை எடாக்கிக்கொண்டவுடன் சூரியோதய மாதலறிந்து இது நல்ல வேளையென மதித்தவராய் “என்னாண்டவனாகிய குமார பகவானே! பாடியே யறியாத யான் நின்னைப் பல பாக்களானும் பாடக் கடவேன். அருணகிரிநாதர் பெயர் வைத்தே பிரபந்தம் முடிக்கக்கடவேன். அவர் வாக்குப் போலவும் எனக்கு வாக்குண்டாகும்படி அருடி” யென்று சிந்தித்துக் கைகூப்பினவராய் நின்றார். உடனே தம்மை யறியாமலே தமது வாக்கிற் “கங்கையைச் சடையிற்பரித்து” எனவெழுந்த விசேட மங்கல மொழித்தொடரை ஆரம்பமாகக் கொண்ட பாட்டைப்பாடி அவ்வேட்டி லெழுத்தாணி கொண்டெழுதி முடித்தார். விஸ்தார விவரம்—சரித்திரத்திலும் **ஸ்ரீமத் - குமாரசுவாமியத்திலுங்** கண்ணுறலாம்.

# உ. திருப்பரங்கிரி.

ஆதியிடை யீறெனுங் காலங் கடந்ததா
யகிலமுக் குணாதீதமாய்
அத்துவித சைதன்னிய சுத்தபர தத்துவ
வசஞ்சல விலாசவெளியாய்
நீதியாய் நிறைகருணை யூறுசுக வாரியாய்
நிட்களா னந்தசிவமாய்
நின்றபர தெய்வமே தொண்டர்தொழு சைவனே
நின்னாம மந்த்ரமொருகால்
ஓதினெண் ணம்போலெவ் விடயமும் விநாடியி
லொதுங்காது கூடுமெனுநூல்
ஓகையா லத்தைநா னுணரு மோதியு
முளக்கவலை யோய்ந்ததில்லை
தீதிலோ யிதனையிப் பிறவியின் பயனென்று
தெளிவனோ யாதுநினைவேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. (க)

ஆணவ மலத்தினி லமிழ்ந்திய பசுக்களை
யனாதந் தன்னகத்தே
ஐக்கியங் கோடற் கருந்தொழில்க ளைந்துநனி
யாற்றுமைம் முகனாகிநீ
மானுட னவின்றநல் லாகமத் துள்ளபடி
வளர்சீவ காருண்ணியம்
வந்திடி னடங்காத வீச்சுவர பத்திதான்
மருவுமதன் மேன்மந்தர்கள்
காணரிய பாசவை ராக்கியமுண் டாமஙன்
ககனமொடு புவனமெங்கும்
கரையின்றி நிறைவான பரமமெய்ஞ் ஞானமது
கண்ணெதி ருதிக்குமென்று
சேனுடைய சேனாடர் மோனர்மே தாவியோர்
சென்றநெறி யெற்குமளியாய்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. (உ)

---

க. மந்த்ரம்—வடநூன்முடிபு.

கூடா ரெனக்கணித மில்லுயிர் வதஞ்செய்த
கொடியபவ முங்கிறிகளும்
குற்சிதக் குழுவாய தீங்குபல வும்மருட்
குன்றே நினைத்தொழுதபின்
ஊடாடு மோதினமும் வாதாடு மோசற்று
முணர்வழித் திடவல்லநோய்
ஓயா தடர்ந்தெனுயிர் போகாத வணமிவ
ணுளுற்றுமுள வென்னையென்னை
வாடாத மேத்திய வியோமப்பிர காசமே
மௌனமெய்ஞ் ஞானநெறியை
வாழ்விக்கு மானந்த வெள்ளமே யெளியனுண்
மனமா சறுத்துவினைகள்
தேடா திருக்கவுஞ் சீரடி யிருக்கவுந்
திருவரு ளளிக்கவேண்டும்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. (௩)

மங்கள விலாசவுஞ் செம்பொனடி தனையிங்ஙன்
மனதிரங் கித்தருவையோ
மாயக்கண் வலைவீசி மோகத் தமிழ்த்துவிலை
மாதர்கட் கொப்பிப்பையோ
எங்கும் பிரகாசமுள வன்பர்பத மலர்காண
வென்றழைத் துச்செல்வையோ
எறவிட் டேணியை யெடுப்பது கடுப்பவெனை
யிடைவழியி லேவிடுவையோ
அங்கமெல் லாநொந்து வம்பிலலை யாதபடி
யதிவிரைவி லருடருவையோ
ஆவிவெளி யோடும்வரை நேடியழு தலையென்ன
வாட்டுவித் தருடருவையோ
செங்குவளை மஞ்சரிகொண் மொய்ம்புவளர் மூர்த்தியே
சிறியனொரு சிறிதுமறியேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. (௪)

கட்டநற் பாளித மணிந்துகொள வம்பணி
கதம்பகத் தூரியென்றும்
கனதனங் களிவிடுங் கச்சைபொற் சரிகைமே
கலைகள்பா வாடையென்றும்

இட்டமுள வெங்கள்குல தேவதைக் குச்சிறப்
பிடவிரும் பணியமென்றும்
எத்தியுள கைப்பொரு டனைப்பறித் தெக்கதியு
மில்லா தலைந்துமடிய
விட்டுவிடும் வித்தமட மங்கையர் நவங்களை
விரும்பிநா னுழலாவணம்
வித்தகக் கடலே விவேகப்பிர காசமே
வீவற்ற கருணைவிண்ணே
சிட்டர்பரி பாலனே யிட்டமுட னென்னையுன்
றிருவடி மதர்ப்பில்லையாய்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. (௫)

கருமவழி யாய்வருஞ் சனனவே தனையோ
கலக்கங் களிற்கொடிதெனல்
கட்டாகு மதுவோவென் ஞாபகத் திப்போது
காணவெளி வருவதின்று
வெருவில்வெரு வென்னவினி வரவுள்ள கொடுமரண
வேதனைக் கேயென்மனம்
மெத்தப் பயந்துகவல் கின்றதிவ் விடயத்தின்
மேதினியி லுதவிசெய்ய
ஒருவரா லாகுங்கொ லென்னைய வுன்னையே
யுள்ளபடி நனிநம்பினேன்
உள்குமடி யார்பக்ஷ மாயுள்ள வுனதுதிரு
வுள்ளத்தி லெனையும்வைத்துத்
திருவருட் செலவினி னடத்திவிடு தலைகொடாய்
தெய்வமணி யானசிவமே
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. (௬)

ஏதமின் மறைக்கப் புறத்ததாய் மனவாக்
கிறப்பினி லெழும்புநிறைவாய்
எண்ணரிய பொருள்களா யல்லாத முதலா
யிருந்ததை யிருந்தவண்ணம்
போதமலி வாலறிய வென்றறு வருக்கன்று
புரையற்ற மௌனியாகிப்
புகலாம லேபுகன் றிட்ட திரு வருளினைப்
புந்தியிற் சிந்தைசெய்யின்

மேதினியி லெவருக்கு நித்தநெறி கூடாது
வியன்மௌன மந்த்ரகுருவே
வித்தகக் கடலே விகாசசை தன்னியமே
விமலமே யுன்றிருவடிச்
சீதமென் சென்னியிற் படியுமொரு நாள்வந்து
சேரவிங் கென்றுகாண்பேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே.

அச்சரியி னேமிபோ லச்சுழன் றிடுபிறவி
யார்கலி கடந்துவிண்வாழ்
அமரர்புகழ் நின்பதத் திருவளரும் வாழ்வையே
யடைதல்சுக மென்றகத்தில்
இச்சைமிக வைத்தனு தினந்தொடர்பு செய்யுமிவ்
வேழைக் கிரங்கியின்பம்
ஈயாத நிலைமையை யடிக்கடி நினைந்தைய
வின்னமு மிடுக்கணேசெய்
கச்சணி முலைச்சியர்கண் மோகத்து ளாகியவர்
கடைவாயில் காத்திருந்து
கைப்பொரு ளிழந்துழன் றெய்த்தபின் னிச்சடங்
கம்பலைப் படர்கெழீஇச்
சிச்சைக்கு ளாமோ வெனப்பதறி நெஞ்சந்
திடுக்கிட் டழுங்குகிறதே
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே.

நஞ்சினுங் கொடிதாய வைந்தலரி வாளிதா
ணாடோறு மென்னகத்தே
நடலைமலர் பொழிதலா னுளமுழுது நொந்தியா
னைந்துநைந் தேமெலியவும்
துஞ்சுபொழு துண்ணிலையி லுண்டாகு மஞ்ஞான
சொப்பனத் தால்வெருளவும்
துஞ்சுத லொழிந்தபின் வாய்மதம் பேசிச்
சுவாமியை மறந்துழலவும்
சஞ்சலம் விளைக்குமிக லாமய மனேகமொரு
தடையின்றி வாதிக்கவும்

அ. சிகிச்சை சிச்சையென மரீஇயிற்று.

தன்னகங் கண்டதன் றுன்னரு மகிழ்ச்சியொரு
சற்றுநுகர் வுற்றதுண்டோ
செஞ்சொன்மொழி பயிலுமின் னமிர்தப்பிர வாகமே
சித்தம்வைத் தருடியருடி
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. (௯)

வெள்ளறுகு ளான்விண்டு விதியண்ட ரனைவரும்
விறப்புழுவ லோடுபணிய
வேதமுனி வோர்புகழ வெள்ளிமலை யமருமலை
வில்லிக் கரும்பொருள்சொன
வள்ளலே யென்கவலை வாடவொரு தந்திரம்
வருக்கவரும் விமலவித்தே
மருமலர் கதம்பகத் தாரியணி பணிபந்த
வன்னவே டகமிலைந்த
கள்ளிக டருங்காம வெறியேறி வீணுய
காலங் கழித்திடாது
கருணைபுரி பதமலர்க ளுளமிசை யிருக்கக்
கருத்தொன்று நல்கியருளாய்
தெள்ளறிஞ னருணகிரி யுள்ளத்தி லொழியாது
தித்திக்கு மின்பரசமே
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவானந்தமே. (க0)

---

க0. வெள்ளறுகுளான் = இந்திரன். அறுகு யாளி யாகலின் யாளிபோலக் கையும் வன்மையுமுடைய வெள்ளையானை வெள்ளறுகெனப் படுவதாயிற்று.

ஏடகம் = துகில்.

# ௩. திருச்செந்தில்.

காரொத்த குழலிலே மேரொத்த முலையிலே
கஞ்சமலர் வதனத்திலே
கன்னனிகர் மொழியிலே கயலனைய விழியிலே
கமழ்கின்ற வாடைதனிலே
சீரற்ற மனதைச் செலுத்தியஙன் வருதுன்பு
தெரியா திதேசுகமெனச்
சிக்கியின மலைவனே தெருடரு விரத்தியைச்
சிந்தைசெய் தாளாவனே
கூருற்ற குசலரொடு கூடியினி துய்வனே
கோளர்வழி நின்றுழல்வனே
கூர்த்தவுணர் வில்லாத வேழையறி யேனெனைக்
கொள்ளவுள நீகருணையால்
ஈரத்தி ரங்கொடுத் தாசறுத் தருளுநா
ளெந்தநாள் சொல்லியருளே
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே.

கருப்பையுழை யதியற்ப சுக்கிலந் தங்கவது
கதழ்வாகி மதிபத்திலோர்
களனிலா விளவலாய் வந்துதித் துற்றவர்கள்
கனகமணி யணிகளிட்டு
விருப்புவகை யொடுவளர்க் கச்சடம் வளர்ந்துமரு
மீக்கொண்டு மாதர்புழையில்
விழுந்துகிழ மடியுற் றயர்ந்துயிர் பிரிந்தபினர்
மெல்லிய ரரற்றவுரியோர்
உரப்புள பிணப்பறை சிறப்பொடு முழக்கியெரி
யுண்ணுநிலை சேர்த்துவசுவிட்
டேதவொரு பிடிபூதி யாகுமிது வேயிந்த
வுலகவாழ் வையவிதனை

க. 'மந்திரம்' "மந்த்ரம்" என மரீஇயிற்று. வீடென்பது பொருள்.

உ. பூதி=தாள்; "பூதியுந் தாளும் புழுதியும்" என்பது பிங்கலநிகண்டு.

இருட்டுமன முள்ளார் மதித்துனை யெணுமென்ற
னெண்ணமுமவ் வாறுசெலுமோ
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. (உ)

மூரசகே தனனனும கேதனன் சகதேவன்
முனைபொங்கு தண்டவீமன்
மொய்ந்நகுல னெனுமைவர் தூதனு யெண்ணறு
முனைந்தோரை முடிவுசெய்தோற்
குரிமையுட னுபமந்யர் செய்தசிவ தீக்கைவகை
யுணராத மக்கண்மேனுள்
உவகையொடு பரமனுர் வடநிழலி னுல்வர்க்
குரைத்ததே முத்திமுடிவாம்
அருணெறி யெனத்தெளிய வல்லுநர் கொலோவந்த
வறிவையே யென்சம்மதத்
தறிவுநெறி யாய்க்கொள்ள வருளினை யதேயிரண்
டற்றவத் துவிதநிலையாய்
இரிபற விலங்குசன் மார்க்கநல னுமதனை
யேயெனக் கருளல்வேண்டும்
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. (௩)

காலமொரு மூன்றினும் பொன்றாத சத்தாய
கர்த்தவ்விய மென்னுமுன்னைக்
கனவினுங் காணாத மைந்தர்மறை முடிவின்
கருத்தைப் படித்தளவிலே
மேலவர்க டொழுபிரம நாமென நினைத்தகம்
விளம்பியரு ணெறியைவிட்டு
வியனற்ற புன்றொழில் விடாதவிழி பதிதராய்
விசுவத் துழன்றுகெடுவார்
சீலமுள தெய்வமே யந்நடவை யென்னருகு
சேரவொரு சிறிதுமொப்பேன்
தெய்வசுக நிட்டையி லுயர்ந்தொன் றிரண்டெனுஞ்
செப்பற நிலைக்கவென்னல்
ஏனுமினி யேனுமென நனிதுணிந் துய்யநா
னெண்ணினே னவணமருள்வாய்
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. (௪)

---

௩. மொய் = போர்க்களம்.

பிரிவற விளங்கருளை யடையாமலெங்குநிறை
பிரமத்தை யடைவதாகப்
பேசுபவர் பேச்சுக் கனுத்துணையு மொத்துப்
பிதற்றவென் னெஞ்சமிசையா
தரியதிரு வருள்வரி னளக்கர்நகை யேதுற்ற
வறியாமை யேதுதிப்போ
டழிவேது மெலிவேது பழியேதிவ் வதிருய்ய
மன்பிலா ரறிவர்கொல்லோ
ஒருநிமிட மேனுமுள் ளுருகிநின் பாணிற்க
வுரனிலா ரமரரெனினும்
உன்னடிமை நாமொருவிதத்திலு மதிக்கிலே
னுனைநினைவர் சிறியரெனினும்
இருடிகளெனக்கருதி யவரடி வணங்குவே
னெனையடிமை கொண்டபரமே
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே.

கண்ணுங் கருத்துமறி யாதபொரு ளாகவுங்
கண்டமி லாதகண்ட
ககனமா கவுநிறைந் திடையறு துள்ளநீ
கண்டிதப் பட்டவுடலில்
நுண்ணுணர் விலாதுசிற் றுணர்வாய் விளங்குயிர்க
ளுணக்கறிந் தவைகடம்மை
நுங்கறிவு கொடுதெளிந் தருளிலே கூடியொரு
ஞானமில் லானந்தமாம்
விண்ணிடை யுலாவியெமை யடைகுவீ ரம்முறைமை
விவரிக்க வறிதிரென்று
மெய்யான திருமேனி யிலகவுரு வங்கொண்டு
மெய்யருள் பெருக்கியருளும்
எண்ணமுண ராதபுன் மதத்தருரு விலையென்பர்
யாங்களுனை விடுவதுண்டோ
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே.

கண்டபொரு டன்னிலுங் காணாத பொருளிலுங்
கரையில்விண் ணிடையுமெங்கும்
கலியற நிறைந்தகண் டாகார வலிகார
கருணைவா ருதிநிலவி

விண்டலமு மண்டலமும் வந்திக்க வுளநீ
விழுக்கருணை யின்பெருக்கால்
வேதத்தில் வெளியிட்ட விக்கிரக வழிநீ
விளங்குவதை யிலையென்பதும்
அண்டர்முத லெழுவகை யுயிர்க்குழுவை யுந்தனு
ளடக்கியாள் சருவவலிமை
அயர்விலா துளவுனக் குருவெடுக் குந்திறமை
யணுவுமொல் லாதென்பதும்
எண்டிகை யினுந்தகுதி யற்றசொல் லாய்முடியு
மென்பதற் காசங்கையோ
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. (எ)

பலநறு மலர்த்தொடை சமர்ப்பித் தருங்கனிகள்
பலகார வர்க்கமசனம்
படைத்தினிய தேங்கா யுடைத்துரிய பூசனம்
பண்ணினவர் கட்குமட்டும்
கலகலென வணிகெஞ்கிழி குமிலமிட வந்துநீ
கருணைசெய் தருள்வையென்றும்
கண்டவிட னெல்லா நினைந்துகலு ழன்பரைக்
கருதா திருப்பையென்றும்
உலகமிசை யொருநூ லிருந்துவரை யறையிட்
டுரைப்பதின் றுள்ளன்பெனு
ஓதுமொரு கண்ணியி லகண்டபர மதுசிக்க
லுறுதியெனு நூல்களதனால்
இலகுதிரு வடியருளி லெனதெதி ரெழுந்தருளி
யென்னைநீ வைத்தன்முறையே
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே.

காலனை யுதைத்துவிதி முடிகொய்து மலரெய்த
காமரா சனையெரித்துக்
கலைமதியொ டரியண்ட ரெவரையும் வெகுண்டமுக்
கண்ணனொரு பாதியென்னும்
மூலகா ரணிசருவ லோகரட் சகிதுழாய்
முடிமகா விஷ்ணுபகினி
முக்கோண சக்கரி சடக்கரி பருப்பதி
முகைப்பய சருந்திமகிழுஞ்

சீலமே யண்டநிரை வைக்கின்ற பரவெளித்
திட்பமும் விரிந்துசூழுஞ்
சித்தவெளி தன்னிலே நானுள்ள நிலைமையுந்
தெற்றென வுணர்ந்ததீதம்
ஏலவே யெய்தாத தாழ்வா லுதித்தவெற்
றினிவரா நெறியையருளாய்
இஞ்சிவளை மந்த்ரவலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே.

திரளாய திரவியப் பிரபுவை யடுத்தெளிஞர்
சீவனஞ் செய்யுமுறைபோல்
தேவாதி தேவனெனு முனைநா னடுத்தெனது
சிந்தையி னலக்கணெல்லாம்
அரைநொடியி லேயவித் தத்துவித முத்திநிறை
வடையவென் றுறுதிகொண்டேன்
அறையுமிம் முறையிலொரு நீயுநா னுந்தொந்த
வாட்டியனும் பூத்தியனுமென்
றுரையிடற் கோரைய மின்றுன தியற்கையின்
னுவகையென் கண்ணில்வளர
ஒருகிருபை புரிதியரு ளருணகிரி புகழ்நீ
வுபநிடத முனிவர்முதலே
இரவுபக லற்றபர வெளியிலெக் காலமு
மிருக்குமின் பப்பெருக்கே
இஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே.

---

க0. ஆட்டியன் = செல்வன். "ஆட்ய:" என்பது வடசொல்.

பூத்தியன் = அடியவன் = வேலைக்காரன். இந்தப்பூத்தியன் "ப்ருத்ய:" எ
னும் வடமொழி விகாரமாம்.

# ச. திருப்பழநி மலை.

ஆழிசூல வும்புவி யெலாமொளிசெய் விண்ணின்மணி
யனையமணி முடியிலங்க
அகலுள்வட வரையைச் சடாலென்ன மோதிடற்
கானமொய்ம் பணிதுலங்க
நாழியொ ரரைக்குணிசி சரருயிர் முருக்குமொரு
நலிவில்வடி வேல்விளங்க
நடுவற்ற வினைப் பிசாசுகள் பிரேதங்க
ணடைவிட் டொளங்கலங்க
வேழமிவ ரிந்திராதி திசைநாதர் தவநாதர்
வெருவுற்று னடிவணங்க
விண்டலமு மண்டலமு மசைவுற்று நிலைபிசகி
மேருகிரி யுங்குலுங்க
ஊழிமுடி வெனநவிர மேழுமுதல் வாவென்ற
னூறுகெட வென்றுவருவாய்
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. (க)

கண்ணேகண் மணியே கதிக்குரிய ஞானமே
கருணையே கருணைரசமே
கருவினிற் கருவே தொழும்பனே னிதயவொண்
கமலமே கமலமணமே
விண்ணே விண்ணொளியேநல் வேதவே தாந்தமே
மேதக வெறுக்கையரசே
வித்தார மானபுவ னப்பரப் பெங்கணும்
வியாபித்து நிற்குநிறைவே
தண்ணேறு நின்னடியை நண்ணாத பாவிபொய்
சாலவுஞ் சொற்றபாவி
தக்கோ ரிடத்துறவு பண்ணாத பாவிவெகு
தவறுக ளிழைத்தபாவி
உண்மை ரிலாதபடு பாவிநா னுன்னரு
ளுறுதுய்ய விடனுமுண்டோ
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. (உ)

---

க. அகலுள் — அகலம்; சூடாமணிநிகண்டு காண்க.

எத்தனை படித்தாலும் வஞ்சனை பொறாமைதா
மென்னைவிட் டகலவிலையே
இதமாக வெவ்வளவு சொன்னாலு மடமன
திணங்கிநின் றுருகவிலையே
பத்திநெறி யார்நட்பு மெய்தவிலை யினியென்ன
பண்ணுவே னின்கடைக்கண்
பார்வையென் பக்கல்வரு மேல்வம்பு போமின்பு
பற்றுமெண் கண்ணனெஞ்சஞ்
சுத்தம தடைந்தபி னவற்குரிய நிருமிதத்
தொழினல்கு திவ்வியவயனே
சுகுர்தவருள் வாரியே தூய்மன வெளிக்குளே
சுடருமா னந்தவடிவே
உத்தமத் திற்கெலா முத்தம விலாசமா
யுள்ளவொரு பெரியபொருளே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே.

நாட்டுப் படர்ப்பிணிகள் சோற்றுக் குரம்மையை
நசிப்பதோ சங்கையில்லை
நாளாகு மேலருட் காளாவ னோவென்று
நடலையோ கொஞ்சமில்லை
கோட்டுக் குசத்திரதி கொண்கனலர் சொரிகின்ற
கொடுமையோ மெத்தமெத்த
கூறுமித் துயரெலா மிச்சிறுவ னெவ்விதங்
கொண்டுதெளி வானென்னவுன்
தாட்டிக வுளஞ்சிறிது கருதிடா தோவடியர்
தாபஞ் செகுக்கும்வள்ளால்
சரதவைச் சுரியசம் பன்னபரி பூரணத்
தண்ணருட் பெருவாரியே
ஓட்டிற் பெரும்பலி யெடுத்துண்ட வொருவற்
குரைத்தமா மந்திரகுருவே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே.

நெடியவுவர் சூழுமிப் பெரியநில தனிலுன்
னிஜாநந்த மடையநல்லோர்
நெக்குருகு பத்தியோ டெண்ணில்பல் காலநிலை
நின்றவ ருரைத்தநெறியிற்

---

ஙி. நெக்கு=கனிவு.

கொடியமன தைத்திருத் தித்தவஞ் செய்கிறார்
கொங்கைமின் னார்நிதம்பக்
குழியிலே விழுநமக் கெந்தவா றதுவந்து
கூடுமென் றுள்கியுள்கிப்
பிடிபட்ட வுழையெனக் குழையுமென் னெஞ்சைநின்
பெரியதிரு வுள்ளமறியும்
பேயினுங் கடையனே னெனினுமுனை நம்பெனைப்
பீடையி னிறுத்தன்முறையோ
உடலினுக் குயிராகி யுயிரினுக் கறிவாகி
யொளிர்கின்ற பரமபதியே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. (ரு)

சந்ததமு மிகையற விளங்குபர சிவயோக
தண்டா யுதப்பிரமமே
தண்ணளியை நாடுநர்க் கின்னமுத சாகரத்
தாரையைப் பொழிமாரியே
எந்தையே யருளரு ளெனக்கதறி னேன்மன
திரங்கிலை யில்லையினிமேல்
எப்படி யரந்தைபொய்த் தின்புவந் தணையுமென்
றிதயமிக் கயர்கின்றதே
வந்தநா டொட்டிங் கிழைத்துள்ள தீமைபெரு
மலைபோ லிருப்பினும்வெளி
மணிமுன்ன ரேயிமக் குலமழிதல் போலழிய
வந்துநீ யுண்மைகூற
உந்தியிடை நின்றுன்னை யடையுமா திருவுளத்
தொல்லையொ ரெணங்கொளாயோ
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்காரகுருநாதனே. (சு)

கருப்பையி லிராநின்ற வுயிர்தனக் குப்போன
கங்கிரம மாயளித்தும்
கல்லினுட் டங்குதே ரைக்குரிமை யாயவா
காரநித முங்கொடுத்தும்
திரப்படு சினைக்குணவு தேடியங் குதவியுந்
திதிசெய்நிழ லுள்ளவுன்றன்

சு. உந்தி=தேர்த்தட்டு; நெஞ்சமாகிய தேர்த்தட்டு என்க. நிழல்=குளிர்ச்சி; கிருபை யென்னலாம். குளிர்ச்சியென்பதை ஏகாவேதுகையிற் காணலாம்.

சேவடிக ளைத்தொழுஞ் சீவனை யிரட்சகஞ்
செய்யாது விடுவைகொல்லோ
விருப்புள ரகத்திடை வதிந்துதிமி ரம்போழும்
விருணமெய்ஞ் ஞானயோக
வித்தார வாழ்வுதந் தெக்காலு மழியாத
வீடுபெறு மாறுகங்கை
உருப்பட விடாதிந்த வுருவோடு முடிவுசெய
வுள்குமெம் பெரியபொருளே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே.

கணையன்ன தாரைவிழி கொடுமெள்ள நோக்கிக்
கருத்தைக் கெடுத்தெவரையும்
கமழ்மஞ்ச வணைமீ திருத்தியின் னுரைதந்து
காமா கமப்படிக்குக்
கணைவளைகள் கலகலென வுபயகர மலர்கொண்டு
கைச்சரச வரிசைபலவுங்
காட்டிவத னத்தோடு வதனம்வைத் தினியநற்
கனியென்ன வுடல்சுவைத்துப்
பணையம் பறித்தவுடன் மனைவிட் டகற்றும்
பகட்டிகளி னட்பொரீஇப்
பரமான நின்னையே நினையுமொரு நெஞ்சமென்
பாணிமிர வருடியாணர்
உணர்வற்ற பதகருக் குதவாத தெய்வமே
யோதரிய வேதமுதலே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே.

அல்லேறு முகிலொன்று நின்றோ ரரைக்கடிகை
யாசார மாரிபெயினும்
ஆயிரங் கிரணங்க ளவிரநிமை நோம்வின்
ணனலிகனை லைச்செய்யினும்
வல்லாண்மை தெவ்வுரும்வங் கூழிமைப் போதெங்கு
மல்கிவிற லாவீசினும்

---

எ. கங்கை = பிரமதேவனுடைய கை; கம் = பிரமன்.
அ. கணையன்ன தாரைவிழி = அம்புபோன்ற கூரியகண்;
கூ. ஆசாரம் = விடாமழை; வடசொல்.

வாரிதிகள் கிஞ்சித்து முனைகொளினு மிப்பெரிய
வையக மிருக்குமோவிங்
கெல்லாமு னுக்கிணைக் குள்ளா யிருந்தவை
யிருக்கின்ற பேருதவியை
எண்ணும னன்னடவை நண்ணும னுன்னடிக
ளெந்நாளு முன்னுதிதே
உல்லாச மென்றுலக மயலினுழி தருமண்ணை
யோயானும் யாவுமுணர்வோய்
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. (௯)

உலகிலெச் செல்வமுந் தவவிழுப் பத்தினு
லுண்டாகு முன்பினுக
உறவுள்ள துன்பெலா நீதிமு னநீதிபோ
லொழியுமென் றிறைவனுல்கள்
சொலும்வண்மை யானுமற் றுத்தியனு பவமெனச்
சொல்லளவை யானுமந்தத்
துகளறு தவத்தினின் றுஞ்செல்வ மிலையென்று
துணிவதுந் தவமானது
நலனற்ற பொய்யுரை வியர்ப்பிவைக ளாலழிவு
நண்ணுமென வுய்த்துணர்வதும்
நாணுளு நற்றவத் துயர்வதுந் தவமுள்ள
நல்லவர்க் கேயுண்டிநாள்
உலைகின்ற வெற்குமவ் வூழுள்ள தோசொலா
யுரனருண கிரியடிகளே
உலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்காரகுருநாதனே. (௧௦)

---

௯. இருத்தல்=ஈதல்; "இருத்தலே செருத்தல் வீழ்த்த லிரித்தலோ டழைத்த வீதல்" என்னும் ககரவேதுகை.
மண்ணை=பேய்.
௧௦. வியர்ப்பு=சினம்.

# ரு. திருவேரகம்.

---

சீர்மல்கு வாதுளச் சுருதிநவல் வண்ணஞ்
சிறப்புள்ள பிரதமமகா
சிருட்டியின் மகேசுர ருளக்கமல மதினின்றோர்
திவ்வியபிர மக்குழவியாய்
ஏர்மல்கு தேவர்தொழ வெளிவந்தவ் வீசுரர்க்
கினியசுத னாய்நின்றமேல்
இடையிடை மகாவிற லுருத்திரர்பெரு மானை
விழைக்கின்ற வெகுவினோதச்
சார்மல் கவாந்தர சிருட்டியிற் சீகண்டர்
தன்குமா னென்னவந்து
சத்யசன் மார்க்கவடி யாரைப் புரந்தருள்
சதாசிவப் பொருளேதுரால்
வேர்மல் ககங்கார விடபியா நிற்குமெனை
மெய்யடியில் வைக்கநினைதி
வீரமுள் தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே.

தந்திர மிழற்றுசிவ சாதாக்கி யமுநற்
சதாசிவமு மீசானமாய்த்
தாவறு மமூர்த்திசா தாக்கியமு மீசனுஞ்
சத்தியோ சாதமுகமாய்
வந்தனைகொண் மூர்த்திசா தாக்கியமும் பிரமீச
னுந்தளிம வாமமுகமாய்
மாசுதீர் கர்த்திருசா தாக்கியமு மீசுரனும்
வளர்தென் னகோரமுகமாய்
இந்திரக் கன்மசா தாக்கியமு மீசான
விசையனுந் தற்புருடமாய்
இகலின்மா சாதாக்கி யமுமந்த மூர்த்தியு
மியைந்தவொ ரதோவதனமாய்

---

க. சீகண்டர் = ஸ்ரீகண்ட பரமசிவனார். இவரே பிரதம சிருஷ்டியில் "மகேசுரர்" எனப்பட்டார். இவரைச் சம்புமகேசுரரெனல் வேண்டும்.

துரால் = துச்சம்; பிங்கலநிகண்டு காண்க.

விடபி = விருக்ஷம்; வடசொல்.

உ. மாசாதாக்கியமென்றது, சிவதாதான்மிய சிற்சக்தியிற் பத்திலொருகூறு வலியுள்ள சக்திசம்பந்தமாய மஹாசாதாக்கியத்தை ஆம்.

விந்தைதர நீவடிவு கொண்டமுறை யுயிர்களின்
மேல்வைத்த கருணையன்றோ
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே. (உ)

பெரிதாய புவனகா ரியநிமித் தங்கிரியை
பேதற்ற ஞானமிச்சை
பிரபாவ வாதியம் பரையென்னு நாமம்
பிறங்கைந்து சத்திகளுடன்
அரிதாய சிற்சத்தி கூடியொ ருருகுமிவ்
வாறுமே யுனதங்கமாய்
அவிராளி யறியாத வாதிகட் குன்றன்மை
யறிவதற் கெளிதோவழா
உரிமைகெழு ஞானமு மூலப்பற்ற கிரியையு
முறங்குயிர்கள் கண்ணில்வளர்வான்
உணர்வுகிளர் தெய்வானை வள்ளியெனு மிருவரையு
முபயபக் கத்தமர்த்தி
விரிவாய கருணையொ டிருக்குமென் னப்பவென்
விண்ணப்ப மங்கிகரியாய்
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே. (௩)

எவ்வுயிரு மெம்முயிரி னுளவென்னு முண்மைதனை
யாவரு முணர்ந்துய்யுமா
றிகல்பெற்ற விசயன்கை வில்லடியி னூனுநல்
லெழிலுற்ற வரிமர்த்தனன்
வவ்விய வணிப்பிரம் படியானு மறிவித்த
மாதேவ னைபெரியோன்
மலவுயிர்த் தொகைகளுக் குரியவனு பவநன்கு
மல்கவென் றுமையைவாம
சவ்வியத் தைக்கியஞ் செய்தனனம் முறைமையுன்
சண்முகத் தொன்றுகவே
சார்ந்துநிற் கக்கொண்ட கோலநிலை யோராத
சதியர்க்கு மெற்குமிந்நாள்

௪. சவ்வியம் = இடப்பக்கம்; 'ஸவ்யம்' வடசொல்.

வெவ்வினை விவாதவிளை வெத்தனைகொ லெத்தனைகொல்
வித்தகப் பத்தர்பதியே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே.

எம்முடைய வடிவினிற் புராதனக் கோலமே
யிக்குழவி யாயதென்றும்
எமக்குமிம் மூர்த்திக்கு மெக்காலு மொருபேத
மின்றிந்த மூர்த்திதன்னைத்
தம்முடைய புந்தியிற் கருதிநனி போற்றினோர்
தாழ்வற்ற சீருமறிவும்
சாயுச்சிய பதவியும் பெற்றுய்வ ரென்றும்ச்
சம்புவே வாய்மலர்ந்தன்
றும்மென்னு மக்கரத் தாலுமை யெனப்பெய
ருறும்பரைக் குரைசெய்ததை
ஓதுமுயர் காந்தமுமி வுண்மையுண ராதவர்க்
கோதிலிதை யென்விவாத
வெம்மையற் றுண்மையுணர் வாம்விபுத ரறிகின்ற
மெய்ப்பரஞ் சோதிவடிவே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே.

கோதற்ற நிருவாண தீக்கையின் மூப்பிளமை
கொள்ளமுறை யில்லைபொல்லாக்
கோணைதெறு மந்தவுயர் தீக்கையிம் மூர்த்திமுன்
கோடலெளி தாகுமென்று
தீதுற்ற வுயிர்கட் குணர்த்திடு நிமித்தமுஞ்
செறியருளின் மேனுவன்ற
செயனனி விருத்தியுற வென்றுமுக் கட்பரன்
சிஷ்யபா வஞ்செய்தவோர்
நீதத்தை யுணராத வுணர்வுமுனை யறியுமோ
நிகரற்ற வின்பவன்பே
நித்தபரி பூரண வகண்டசிவ நிட்டையி
னிலாவேக பரமசாம
வேதத்தி லேசுப்பிர மணியோ மெனக்கிளரு
மெய்ம்மொழிக் குரியபொருளே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே.

எங்கணு மிருந்துமறை வாயபர வத்துவை
யென்றுதன் னனுபவத்தில்
எய்தவொரு வன்கூடி யறிவனோ வப்பொழு
தெழும்புமா னந்தவடிவே
சங்கரன் சுதனென சிவசுப்பிர மணியபிர
சந்நமென் றறிவாறிஞர்
சாற்றுமிப் பொருணிட்க ளாதீத வுண்மையைச்
சாருமென நானுமறிவேன்
மங்கள குணாளகுக வித்திர்வை பற்றியிலை
மறைகா யெனக்கணித்து
வழுத்துவ தலாதுன்னை நூதன மெனப்பன்ன
வாயில்லை சிறுவரையுமால்
வெங்கணா வச்சிர சழுங்கநட மாடுசிகி
மேனிலவு மாணிக்கமே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே. (எ)

பலநிறக் கோக்களின் பால்களெல் லாநிறப்
பண்பினி லேகமாகப்
பார்க்கின்ற தேய்ப்பநற் சைவத்தின் மூர்த்திகள்
பலருளா ரெனினுமுண்மை
கலையாவொர் நீர்மையை யுணர்ந்துமுன் கிருபையைக்
கௌமார சமயமென்னக்
கழறுவார் பேதப் படுத்தியிங் கப்படிக்
கழறினூஉ மென்னசைவ
நிலைகுறையு மோவைந்து மாறுமோன் றென்றுள்ள
நேர்குறையு மோசொன்னவா
நிஜநிலையி லென்னைவாழ் விக்கவரு தெய்வமே
நிபிடவின் பப்பிழம்பே
மெலியாத தத்வசிவ ஞானிக ளகந்தோறு
மிளிர்பாநு சோதிவடிவே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே. (அ)

சத்தாய தானே யசத்தா மசித்தினுஞ்
சதசத் தெனுஞ்சித்தினும்
தகைவற்ற வத்துவித சத்தத்
தன்மையா நிற்கு நிறைவே

முத்தனே வினைமுகை துமிக்கவுள சித்தனே
மோனவா னந்தமுகிலே
முத்தொழில் களுக்குரிய கத்தனே யென்சன்ன
மூலகளைய வருமத்தனே
சித்தநிலை யறியாத சிறியனுக் கந்தநிலை
சித்திக்க வறிவுணர்த்திச்
சிற்ககன வட்டத்தி லேமறைந் தம்பனே
தெவுளுமே னிலையளித்தாள்
வித்தைப் பெருங்கட லகத்திய னகத்தினிமிர்
வித்தக விலாசவிண்ணே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே.

மின்னெறியு மணியோக நிறைமௌலி யாறினும்
விளங்குபிர காசமல்க
வீரமுள வாருவணி பளபளென மின்னியுயர்
விண்மணெங் கும்பிறங்க
அன்னமென் னடைபயிலெ னன்னையிரு வருமினிய
வன்புகெழு மொழிகள் பன்ன
அருணகிரி முனிகண்டு பூசித்த வடிகளி
லனந்தகிண் கிணிகளலற
வன்னமயின் மீதிவர்ந் தென்னெடிய குறைதீரும்
வரநல்க நீவரவினம்
வைகலோ வாரமோ மாதமோ வருடமோ
வயசுமுடி வோவறிகிலேன்
மின்னனந் தங்கோடி யென்னநடு வெளியிலெழு
மெய்ஞ்ஞான வாதிக்கமே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே.

---

௬௦. யோகம் = உயர்ச்சி ; ககரவேதுகை காண்க.

## ௬. திருக்குன்றுதோருடல்.

ஞாலத் துதித்தம்மை யம்மஞ் சுவைத்தபினு
ஞமிக் கயின்றவாய்மை
நவிலுமோ ரகலியம் போல்வளர்ந் தறிவான
நலமேது மறியாவெனக்
காலத் தமாலத்தி லேதுயின் றோனுமறை
யயனும் புகழ்ந்தவுன்சே
வடியோன் றலாதுபிற தெய்வந் தொழாமன
தளித்தவருள் போலின்னுமென்
காலத்தை வாளா கழிக்கா ததீதசிவ
கைவல்லிய மருவவருளாய்
கண்ணிணைக் கெட்டாத விண்ணென விரிந்துமெய்க்
கண்ணுளர் காணுமாறு
மாலைத் துணங்கறலு நீமத் திவாவுமின்
மகாநிட்டை நிலையில்வருவோய்
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. (௧)

ஆச்சரிய வுலகங்க ளத்தனையு முண்டுசெய்
தங்கிங் கெனுதவண்ணம்
அகண்டமா நின்றுமுக் காலுமழி வற்றச்
தாயுள்ள பரமபதியே
தீச்செய றண்ணர்துளோர் தேடுகுரு மணியே
சிறந்தவளி கொடுவந்துநீ
செங்கழைச் சாறோ கனிந்தமுக் கனியோர்
திரண்டகண் டோவமுதமோ
காய்ச்சியற வற்றிய பயத்திலின் சக்கரை
கலந்துசெய் துள்ளபாகோ
கட்டிமக ரந்தமோ வென்னவொரு மொழிசொலக்
கருணையி னுணர்ந்ததனைநான்

---

௧. அகலியம் = விருக்ஷம்.
துணங்கறல் = இருள். நீமம் = ஒளி.

மாச்சிறுகு விபுலைவாழ் வைத்தள்ளி விழிமூடி
மௌனியாய் வாழ்வதெந்நாள்
மங்காத வின்பர்செறி குன்றுதோ றுடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே.

அப்புமிலை சடையனன் பர்க்கினிய வன்பநின்
னடியவர்க் கெளியவுன்பே
ரானந்த நடனவடி யிச்சையோ மிகவெனக்
கங்ஙனே வஞ்சநெஞ்சம்
செப்பொன் றெழுப்புமுன மெண்ணிலா விடயங்கள்
சிந்தித்து மலைகிறதிதைத்
தேற்றியென் வலிகொண்டு மாற்றிவிட் டானுநற்
செங்கதிர் மறைந்துகங்குல்
கப்பியபி னுண்டுசய னிக்குமப் போழ்தென்
கருத்தழிய மதிமருண்டு
கண்டனவுங் காணாத னவுமாம் விகாரங்கள்
காணிலைம யோயவிலையே
மப்பற்ற கூவலர்கண் மனதுகுடி கொண்டநீ
வந்துசரி பண்ணவேண்டும்
மங்காத வின்பர்செறி குன்றுதோ றுடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே.

நிலையாத விக்காய முயிரோ டிருக்கும்வரை
நெடியபிர பஞ்சவெறியால்
நீதிகிஞ் சித்துமின் றனியாய மேதேட
நேருமென் றிச்சரீரம்
தொலையவொரு தந்திரம் பண்ணவென் றுனுமென்
சொல்லுக் கடங்காமனம்
துடித்துவா திக்கிறது பிறிதொரு நினைப்பேழு
தோற்றத்தி னுட்டுப்புடைத்
தலைவனம் பாலபயம் வைத்துமா னவயோனி
தனினுழைத் தெனைநினையெனுத்
தந்தவுட னீங்குமெனி னெந்தவுடல் வாய்க்குமோ
சரியன்றி தென்கின்றது

---

ந. கூவலர்கள் = உலகை வென்றவர்கள் ; கூ = பூமி.
௯. அப்பு = தூய்மை.

மலைவில்குக சம்புவா மூனைம்பு வோருமிம்
மாதிரி மயங்கன்முறையோ
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. (௪)

அல்லிருளை யொத்தவள கக்கொப்பி லேயணிபு
மணியிலே பணியிலேமை
யஞ்சனக் கீற்றிலே கிஞ்சுக வுதட்டிலே
யம்பகப் பார்வைதனிலே
பல்லிலே சக்கரைச் சொல்லிலே வட்டப்
பறம்பிலே கண்டையிட்ட
பட்டுவட் டத்திலே பட்டையரை ஞாணிலே
பாதசா லக்குழகிலே
கல்லனைய மனமுங் கரைந்திட நடந்துகை
காட்டிப் பகட்டறனிலே
கதுமெனவெ னெஞ்சுசென் றனைமறந் திழிநகைக்
கடலிடை யழுங்கனலமோ
மல்லையுற் றனுதின மனத்தையுன் பானன்கு
வைக்கவரு டந்துகோடி
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. (௫)

வண்ணமுடை யொருத்தரும் பாலமரர் வலியெலா
மக்கினமடை யப்பண்ணியும்
மழுமிருக முழுவைய தண் மதகரிப் போர்வைபிறை
வாரியர வந்தரித்தும்
விண்ணவ ரலக்கணற வென்றுபெரு முந்நகரம்
வேவமுறு வல்விளைத்தும்
வேதனரி யுந்தேடி யறிவரிய பேரொளி
விரித்துமுள வொருவன்முன்னே
தண்ணவக் குடையனின் றலர்விடுத் தானெனுஞ்
சரிதமிவ் வுலகிலுளதேற்
சருகனைய வெற்கந்த மதனஞ்சு வன்கொலுன்
றண்ணளி கிடைக்குமாயின்
மண்ணவரும் விண்ணவரு மென்வய மெனச்சொல்ல
வாயுண்டு வாழ்வுமுண்டே
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. (௬)

---

௫. கொப்பு = மயிர்முடி.

௬. தண்ணவக்குடையன் = சந்திரனைக் குடையாகக்கொள் காமதேவன்.

சூலம்விதி விகாரவுரு வின்றியெவை யுங்கண்டு
கொள்சருவ சாட்சியாகிக்
கோவர ரெவர்க்குமிறை யாயேக் கழுத்தமுளர்
கொள்கைக்கு மோர்குரவனுய்க்
கலிவிஞ்சு கலியுகந் தனினுமங் காமகிமை
காட்டுமொரு கர்த்தவ்வியமாய்க்
கவிஞெடு விளங்கியுள வென்பரம தந்தையே
கருளெல்லு முனையுள்ளிநான்
மெலிநீர்மை யைச்சிறிது மறியாத மக்கள்போல்
விய னுள்ள மினுமிருப்பின்
மெய்யடிமை யாகிநா னுய்யுநிலை மேவநல்
விரத்தியுந் தானெய்துமோ
மலினமன மானதுந் துலையொத்து நிற்குமோ
மாயுமே வீணிலந்தோ
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே.

ஆர்கலிக ணீர்சுவற வசலவன் சிலேதுகள்க
ளாகியா காசமூச
அண்டபகி ரண்டமெனு முண்டைகள் குலுங்கவிற
லட்டமத கரியிரட்டப்
பார்முழுது மொருதலைப் பாரமா கக்கொண்ட
பவனரா சேந்திரனெளியப்
பலபலென விண்மீன முதிரத் தயித்திய
பதாதியிறை நெஞ்சமஞ்ச
ஏர்மல்கு நெடியசதம் வீசிப் பறக்குமயி
லேறுங் குமாரவீர
என்றைக் கெழுந்தருளி வருவையோ வென்றலையி
லிணையடிப் பூவையிட்டு
வார்நிலையி லெந்நாளு மெம்மடிமை நீயெனு
வாய்மலர்ந் தமுதுநல்க
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே.

---

அ. ஆர்கலிகள் = கடல்கள்.
இரட்ட = ஒலிக்க.
சதம் = இறகு.

நாலாறு தீக்குணமு மாயாத வன்மனதி
னூலே விளைந்தவிடலை
நல்லருட் பார்வையெனு மழைபொழிந் ததிலென்னை
நனையவிட்டுக் கழுவியன்
பாலே யணைத்துநின் பாலே யிருத்திமெய்ப்
பாலைப் புகட்டியந்தப்
பாலினது மகிமையிற் போதங் குளிர்ந்துபொற்
பண்பேறி யுற்றதேகங்
கோலா சலம்போல வேதிமிர வைக்குமொரு
கொள்கையெனை யென்றுகுறுகும்
கோதற்ற செல்வச் சிரோரத்தின மேவைத்த
குறியில்விரி யறிவுவெளியில்
வாலாமை யின்றிப்பிர காசித்து நிற்பவர்கண்
மருவுபே ரின்பவைப்பே
மங்காத வின்பர்செறி குன்றுதோ றுடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. (௯)

மின்னாயி னும்வந்து வந்தவ ணொளித்திடும்
விடக்குட லொரீஇயாவி
வெளியேறின் மீண்டுமதி லேவருவ தின்றிதனை
மெய்யென் றிருந்துசௌரி
தன்னாணை யின்படி பிடிக்கவுட் பட்டுறுவல்
சானிலையி னுழலவோ
சராகவுல கினரிவன் பேயனோ பித்தனோ
சனியன் பிடித்தவுயிரோ
எந்நாளு மறிவற்ற பேதையோ வென்றிகழ
வெம்பிரா னுன்னைநாடி
இகத்தைத் துறந்துதுற வறவிருஞ் செல்வத்
திருக்கவரு ளாய்கொல்விபுதர்
மன்னார் குழாமடி கணுளதிரு வருணகிரி
மனதுக் கியைந்தகுருவே
மங்காத வின்பர்செறி குன்றுதோ றுடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. (௧௦)

---

௯. நாலாறு தீக்குணம் = பத்து வகைப்பட்ட தீய குணம் :— அவை — பொய் சொல்லல், கோட் சொல்லல், கோபித்துச் சொல்லல், பயனில் சொல்லலெனும் வாக்கின் தீக்குணம் ௪ - ம், களவாடப்போதல், வறிதே தொழிற்செய்தல், கொலைசெய்தலெனும் காயத் தீக்குணம் ௩ - ம், கொலை நினைக்கை, காமப்பற்று, ஆசையெனும் மனத் தீக்குணம் ௩ - ம் ஆம்.

விடல் = குற்றம் ; " விடலை " குற்றத்தை ; " மிறையும் பிழையும் விடலுந் தாரிலும் " என்பது பிங்கலநிகண்டு.

# ௭. திருச்சோலைமலை.

பரியேற நினையொருவன் முதுகேற வலியற்ற
பண்புபோ லுன்பதத்தைப்
பார்க்கவதி மோகுற்றம் மார்க்கநெறி யறியாது
பலவித நினைந்துருப்ப
எரியின்மெழு கெனவுருகு கின்றே னதற்கொர்தடை
யிலைகொலோ நின்கணுன்னை
ஏழைபங் காளனென் றோதுமுறை மைக்குநீ
யென்னவகை சொல்வைபெரிய
பரிவொடு திருக்கரத் தாலெனை யணைத்தெனது
பருவர லகற்றியருளாய்
பாரப் பணாமகுட சேடனைச் சிறுவிரற்
பணியா மிலைந்தகரிய
சரியலம் பிகையருட் டொண்டர்கற் கண்டெனுஞ்
சுகவருட் கருணாலமே
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே.

பேசரிய நிர்க்குணப் பிரமமென் றோதிடுற்
பெரிதான வண்டநிரையைப்
பிறப்பித் திரட்சித் தழிக்கின்ற பெற்றிகள்
பேசச் சரிப்படாவொண்
தேசுடைய சகுணமென் றோதிடின் விகாரங்கள்
சேருமத னான்மயங்கார்
செல்வமெனு மத்துவித முத்தியொன் றுண்டெனச்
செப்பச் சரிப்படாதோ
நேசிற வுரைக்குமிவ் விருதிறத் துட்பகுதி
யின்குணமதே சகுணமஃ
தின்னிலையை நிகமநிர்க் குணமென்ற தாகுமிதை
யேயீச னெண்குணமெனுஞ்
சூசனைசொல் சைவநூ லும்பகர்ந் திடுமெனத்
துணியுமெற் கிருதெய்வமோ
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே.

---

க. உருப்பம் = வெம்மை; பி - நிகண்டு காண்க.
பருவரல் = துன்பம்; சே - திவாகரம் காண்க.

எத்தனை வகைத்தூய வொளிகளொரு சேரினுமொ
ரிரவியா காவன்னணம்
எவ்வளவு புத்தேள்க ளிவ்வுல கிருப்பினு
மிழுக்கில்சிவ சத்தத்தினால்
அத்துவித குகமுழக் கத்தினு லிலகுனக்
கணுவுமிணை யாகாவெனற்
காசங்கை யெட்டுணையு மில்லையது போலுன்ற
னருண்மொழி வரங்கண் மந்த்ரம்
நித்தநிலை மைக்கோவி னீள்புண்ணி யஞ்செல்வ
நெறிஞான நிலையுமென்று
நிதானிக்க வல்லுநரு னருண்ஞானி கட்கெந்
நிலத்திருடி முனிவரேனைத்
தொத்தருஞ் சமமெனச் சொல்வரோ வத்தகைய
சொத்துவ மெனக்கும்வருமோ
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. (௩)

கோடரம் போலொன்றி லேயிருந் தொன்றிற்
குதித்துழி தருஞ்சிந்தையேன்
குதிகொளக் கோடரம் யாதொன்று பற்றுமொரு
கொள்கைபோ லென்றனிதய
பீடத் துளவுனைப் பற்றிப் பிடித்தபிடி
பிறழாது நிற்கவறியேன்
பெண்டுகள் புலம்பல்போ லேபுலம் பிடவிப்
பிதற்றுமட் டுங்கற்றுளேன்
நேடரிய நின்றிரு வுளத்திவனு நமையே
நினைக்கின்ற பிராணியென்று
நிதானித் தனுக்கிரகித் தான்மட்டு முய்யுநெறி
நிகழுநின் கிருபையாதோ
சூடக மடந்தைமய னஞ்சென வகன்றவர்
சுவாமியா யுள்ளபெரியோய்
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. (௪)

---

௩. மந்த்ரம்—மந்த்ரம் என்னும் வடசொற் பிரயோகமே.
சொத்துவம் = உரிமை.
௪. கோடரம் = குரங்கு.
சூடகம் = கைவளை.

அநிருத புரத்தினைத் தனதுடைமை யாநம்பி
யபலமா மூலகநடையை
அநுபவஞ் செய்துசுக மடையலா மென்றுநா
ளவம்விடுத் திறுதிநாளிற்
பணியிரவி முன்னின்ற பண்புறழ வந்தவன்
பரிசனமு மணிலாது
பரிபூர ணாநந்த ஞானப்பிர வாகப்
பரப்பாமு னடிநாடுபு
தனியே யிருந்திரும் பொத்தவென் னெஞ்சமது
சலரூப மாய்க்கரைந்து
சடமாய மெய்விதிர் விதிர்க்கக் குழைந்துகட்
டண்ணீர் பெருக்கெடுக்கத்
தொனிசெய்யு நாத்தழு தழுக்கநல் லன்பிலே
சொக்கிக் கிடக்கவருடி
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே.

கொடுமைநோ லாமைவந் தணுகா தகற்றுநற்
குணமெனுங் கோடிசுற்றிக்
குவலயம் புகழுநின் றிருவடிகண் மறவாத
கொள்கையங் கியையணிந்துன்
அடியரெவ ருக்குநா னடிமையெனு மானந்த
மாமங்க வத்திரம்பூண்
டந்தணர் சதாகால மாநனி விரும்புமரு
ளாயமுண் டாசுகட்டிப்
படர்மோன மென்னுநெற் றித்திலக மிட்டரிய
பாவனச் சோடுதொட்டுப்
பகைஞரெவருங்கண்டு வெருவுறத் துறவைப்
பாக்கியக் கோல்பிடித்துச்
சுடர்பரவு மேலூர் விலாசகோ சுத்திலே
சுற்றிநான் வருவதென்றோ
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே.

---

ரு. அநிருதம் = பொய்; அந்ருதம் என்னும் வடமொழி விகாரம்.

௬. திலதம். இது திலகம் எனவுஞ் சொல்லப்படுகிறது.

அலைகடலி லுய்யுயிரை யெண்ணினும் விண்ணிலே
யடருடுக் களையெண்ணினும்
அகிலநுண் மணல்களைக் கணிதமது செயினுமே
பூாழியளவைச்சொல்லினும்
நிலையான வுலகம் படைத்தகா லெல்லையை
நிதானிக் கினும்புடவிமேல்
நெட்டுட விழுந்தவரை யோதினு மிழக்கவினி
நிற்பர்தொகை கண்டறையினும்
புலராத தீவினைய ரெய்தியம தண்டனைப்
பொலிவையொரு கணிதமிடினும்
புலன்வழி புகுந்துதிரி தருமனக் கள்வனின்
போக்கைக் குணிக்கொணுதே
தொலையாத வாணவ வனத்தையரு ளெரிகொண்டு
சுட்டுத் தகிக்குமழலே
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. (எ)

மாமேவு ஞானம் பயந்தமக வேடவை
மாதவத் துப்பனினது
மலரடி பணிந்துகுற மகளழ குளாளென்ன
மதர்மனங் கனிவுற்றுநீ
காமேவி வெற்பிலுறை கானவ னுருக்கொண்டு
கதிர்செறி தினைப்புனத்திற்
கன்னியர் சிகாமணி வனப்பையிரு கண்ணினுங்
கண்டுமயல் பொங்கியின்பச்
சீமேவு சிவயோகி வடிவொன் றெடுத்துத்
திருட்டுத் தனங்கள்செய்து
திருமண முடித்தவரு ளாக்கச் சிறப்பையெவர்
சிந்தித்து வாழவறிவார்
தூமேவு தொண்டரறி வாரதனை யிப்பெரிய
தோஷிக்கு மென்றருளுவாய்
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. (அ)

---

அ. இப்பாடலிலுள்ள செய்திகள் தமிழ்க் கந்தபுராணத்தின் வழி வந்தன. இச் சரித்திர வுண்மை இப்படித்தானே? என்றையுறுவார்க்கு உண்மை இற்றெனை உணர்த்துவான் "திருமண முடித்த வருளாக்கச் சிறப்பை யெவர் சிந்தித்து வாழவறி வார்" என்றெதிர்த்துக்கூறி நின்றரென்க. விஸ்தார விவரம்—ஆசிரியாருளிய ௬ - வது மண்டலமாகிய ஸ்ரீமத் - குமாரசுவாமியத்திலே தினைப்புனத் திருவிளையாடலிலே கண்டுகொளளலாம்.

## குமரகுருதாசசுவாமிகள் பாடல்.

தொந்தபந் தத்தினை யகைத்தவறி ஞர்க்கினிது
சுடரொரு சிவக்கொழுந்தே
தொலையாத வுற்பவப் பிணிதொலைய வெதிர்வந்து
தோன்றுமரு மாமருந்தே
அந்தமடி யற்றசிற் பரவெளியி னிகழுமோ
ரகமினிக் குங்கரும்பே
அன்பர்க ளுளப்பதும மலர்நடுவி லூறுமின்
னளியருந் திடுசுரும்பே
எந்தெந்த நெறியிடை யிறங்கிவழி பட்டவரு
மீடேற வருவிருந்தே
இடைவிடா துன்னுநா னெண்ணியெண் ணிச்சித
டெனுங்குரு டொழிந்துகண்டே
தொந்தரை யிலாதசுக முஞ்சுகா தீதமுஞ்
சொந்தமென நிற்கவந்தாள்
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே.

தக்கோர்கள் சந்ததமு முழுகுசிவ கங்கையிற்
றலைமுழுகி யுள்ளூறிலே
தகையாக மலர்திவ்விய மலர்களை யெடுத்தரிய
தலமெனும் புலியூரிலுன்
பொக்கமி லடிக்கணெழி லர்ச்சனை புரிந்தெமது
புந்தியி னினைந்தவெண்ணம்
போலநிறை வேறிநல் லானந்த மன்னமாமுள்
புரிவதினி யென்றுபுகலாய்
சக்கிரதரன் முதலான புத்தேளிர் சுகர்வாமர்
தசரத விராமன்மொய்ப்பு
தங்குமுசு குந்தனுஞ் சங்கமுனி யெல்லாருஞ்
சாலவந் தித்ததே
துக்கமண வாதபர தத்வப்ர காசமே
சுத்தவெண் குணவத்துவே
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே.

---

௧௦. தத்வப்ரகாசம்—வடநூன் முடிபு

# அ. திருவிராமேச்சுரம்.

---

திருவளர் சதாசிவ சொரூபமா யவிர்கின்ற
சிவலிங்க வடிவத்தையென்
திட்டிகண் டிடுபோது நங்கடவு ளீதென்று
சிந்தனைசெய் தைந்துமுகமோ
டுருவள ரதோமுகமு மாகநனி பாவித்தே
னுள்ளநடு வினுமமர்த்தி
உபயமின் றேகமா நோக்குமென் னோக்கறிந்
துள்குமா றருள்செய்வையேல்
அருளினை வியந்துகவி பாடுவே னாடுவே
னாவிது விசித்திரமென்பேன்
ஆனந்த மானந்த மென்றுகுதி போடுவே
னன்பர்காள் வம்மினென்பேன்
மருமலர் வனத்திலுறை முனிவர்வள் ளலருள்
வராவிடி னியாதுசெய்வேன்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. (க)

தந்தையுந் தாயுஞ் சகோதரங் களுநல்ல
தயவாக விங்கிருந்தேன்
சடமதை விடுத்தியம னுயிர்வலித் தேகெல்லை
சற்றுமுத வாராயிடை
எந்தையெனு நீயுதவு வாயல்ல வோவுன்னை
யெப்படி மறந்திருப்பேன்
இடரீயு முன்வினைத் தொடர்பான் மறக்கினுமெ
னிதயத் திருந்துதூண்டி
வெந்தழற் சருகெனச் செய்தந்த வினையையும்
விதேககை வல்லியவாழ்வாம்
வீடுபெற ஞானபர யோகினி னிறுத்தலுன்
மேலுள்ள கடமையன்றோ
மந்தமதி யுயிர்களுக் கருளுமா றின்பவருள்
வடிவான பெரியபொருளே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. (உ)

கம்மியர்கள் செய்யுருக் களிலுஞ் சுயம்புலிங்
கங்களிலு மாமனுவிலுங்
கயிலாச கிரியிலும் பகிரண்ட வெளியிலுங்
கனவிந்து நாதத்திலும்
மும்மவுன நிபுணர்க ளிணைப்பிலு மருவன்பர்
மொய்கொண்ட பேரவையிலும்
முளரிரவி மதியிலும் பசுவென்னு முயிரிலு
முயங்கிநீ நிற்பையெனினுஞ்
சும்மா விராமலே சும்மா விருக்குமொரு
சுத்தநிலை தன்னிலெற்குத்
தொடர்போ டெழுந்தருளி யெங்குநிறை வாயுள்ள
சூக்கத்தை யறிவித்தரு
மம்மர்க ளெலாமறப் புரிதிமெய் யறிவான
மதர்மழைப் பெருவாரியே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே.

அயனரி வலாரிக ளடைந்தபவுள் செல்லா
மடங்காத வுன்பவுள்சிலே
அற்பபா கங்களென் றறைகின்ற மெய்ந்நூ
லறிந்துறுதி கொண்டதமியேன்
சுயம்பிரகா சத்தே சடர்ந்தசத தளகமல
சோபிதச் சரணங்களைத்
துதிபண்ணி யாளாக லாமென் றுரைதஞ்
சொல்வதெல் லாமறியுநீ
உயர்கிரிக் கல்லென்ன வுள்ளமது காட்டினு
னுய்யும்வகை யுண்டோவிதற்
கொருஞாய நீயே பணிக்கிலெற் கனுகூல
மொழியா துதிக்குமன்றோ
வயவான வல்லலிற் படியாம லடியானை
வம்மினென் றெதிரழைப்போய்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே.

---

௪. பவுள்சு. இது 'பவுஷு' எனத் திருப்புகழிலும், 'பவிசு' எனத் தாயுமானவர் பாடலிலும் வழங்கப்படுவதாயிற்று; சம்பத்தென்னும் பொருளுடைத்து. ஆசிரியருடைய ௪ - வது மண்டலத்தைச் சார்ந்த திருத்தொண்டையர் குறிப்பொன்றில் இச்சொன்னிலையும் விவரமுமறிக.

வயா—வயவெனக் குறுகியது. வயா = ஆசை.

வெடிதருங் கொடியகுண வீணரொடு பொருதுவெகு
வீரவா தம்புகலவும்
வேசைகொ ளுலுத்தர்குவி கூட்டத்தி லேகூடி
மிறைமிஞ்சு பழிகொள்ளவுங்
கொடிதரும் பிணிகளனு தினமுமென் னுடறனைக்
கொள்ளைகொண் டுண்டுமிகவுங்
கூழெனும் பொருளின்மேல் வேணவா வுற்றுழல்
குரங்கினுங் கேடாகவுந்
துடியிடை மடந்தையர்கண் மோகவா ரிதியிலே
தோயவு மிருந்தேனலாற்
சுவாமியரு ளானந்தம் வேட்டகோ ராத்திரந்
தொழுநன் கிருந்தேனிலை
மடியறு மகாஞான தேசிகா னந்தவிவை
மன்னித் தளாவியருள்வாய்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. (௫)

கத்தியுங் கருதியும் பாடியுந் தேடியுங்
கண்டபடி தண்டனிட்டுங்
கண்ணீர் வடித்துமுயிர் நிலையொடுக் கியுமென்
கருத்துமுற் றுதுபற்றிச்
சித்தஞ் சலித்துனை விடாமற் பிடித்தபிடி
செவ்வனே நிற்கநீ தான்
செய்தகரு ணைக்குமா றின்றெனினு மெனையே
திருட்டற்ற நின்னடிமையாப்
பத்ததியொ டேகை யடைத்தே னடைத்தேன்வி
பாதமுத லடைதலந்தம்
பண்ணுகுற் றேவல்களை யிட்டருடி யினியெனது
பாழ்த்தநெஞ் சானாயினேன்
மத்தியி லேதேனுமிறை செயினுமன் னிப்பதுன்
மாட்சிமைக் குரியகடனே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. (௬)

௫. வெடி=அச்சம்.

௬. மிறை=குற்றம்; நிகண்டுகள் காண்க.

பரமனருண் மொழியாய ரௌரவச் சுருதியின்
பனிரண்டு சூத்திரத்தைப்
பற்றியுள தென்மொழிச் சிவஞான போதநற்
பனுவற் பொருட்கியைந்த
திருவுந்தி யார்நெஞ்சு விடுதூது சிவஞான
சித்தியார் மெய்விளக்கம்
திருவருட் பயனுண்மை நெறிவிளக் கம்புகழ்
சிறந்தவிரு பாவிருபது
சரதநுவல் பஃறொடை கொடிக்கவி சிவப்பிரகா
சம்வினு வெண்பாவுரன்
தருகளிற் றுப்படி நிராகரண மெனுமினிய
சைவசித் தாந்தநூல்கள்
மரபாய் விளக்குநெறி தெளிவே மயக்கன்று
மனம்வைத்தம் முடிவையருள்வாய்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே.

மூத்தமிழ்க் காதலார் சீகாழி மாமுனி
முதுக்குறைவு விஞ்சுமப்பர்
முருகுகிளை ராரூரர் திருவாத வூரார்
முடங்குகடி யொன்பதின்மர்
தத்துவத் தெளிவுடைய பட்டினத் தடிகளுயர்
தகைகொண்ட வருணகிரியார்
தாவில்சிவ வாக்கியர் தவம்பெருகு திருமூலர்
தாயுமா னவரென்பவர்
சுத்தமுறு வேதாந்த சித்தாந்த சமரச
சுபாவமா யமுதநெறியாய்ச்
சொற்றவுயர் வாக்குகளு மென்சம்ம தத்திலுள
துணிபுக் கியைந்ததுணிபே
மத்தமுடை யென்னைநீ யத்துணிபின் மாறாது
வைத்தருள வேண்டுமென்றே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. (அ)

---

எ. இப்பாட்டில் வரு செய்திகள்—இனிய சைவ சித்தாந்தமிவையெனும் புத்தகங்க ளெழுதினோர் கூறியவாறே கூறிக்கொண்டதும், அவற்றுள் வீடாவீட நியாயமாகக் கொள்ளத்தக்கன கொள்ளலாமென்றோதியதுங் காணப்படுகின்றன. என்னை? "மரபாய் விளக்கு நெறி தெளிவே மயக்கன்று" என்றாராகலின். ஆகவே மரபல்லாதது தள்ளப் படுவதென்னலாம். **வேத வியாசத்தில்** இவர் கூறியவைகளும் இந்நியாயம் பிடித்தே என்க.

பங்கயம் போனல்ல விழிதா னிருப்பினும்
பகலவன் வெளிச்சமின்றிப்
பார்ப்பதுண் டோவொன்றை யன்னணம் பார்க்குமது
பக்கலெதி ருற்றபொருளே
அங்கமொடு நோக்குமே யல்லாது தன்வடிவை
யறியுமோ தன்றனுவுளே
அறிவா யிருந்தம்பர் நோக்கியுள வுயிர்தனையு
மறியுமோ வையவிந்தச்
சங்கிரக மாகவே மண்ணுயிர்க டம்மையுந்
தலைவனையு மறியாதெதிர்
சந்தித்த பொருளறியு மாறலும் விழியாடி
தன்முன் னறிந்துகொளல்போல்
மங்காத வுன்னருட் கண்ணாடி முன்முதல்கண்
மறையாது கண்டுகொளலாம்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. (௯)

கல்லினு மிரும்பினுங் கடுவயிர வாயினுங்
காசினியி னுருரிக்கக்
கற்றவர்கள் வந்தாலு மென்மனக் கல்லினைக்
கண்டுபின் னிடுவரந்தோ
சொல்லரிய நின்சரண பங்கேச மக்கலிற்
சுகமாக மலருங்கொலோ
துகளற்ற வொருகருணை புரியினு னுய்யும்வகை
தோன்றுமிஞ் ஞாலவாழ்வு
நில்லா தெனக்கருதி முதனூ லுரைக்குநெறி
நிஜமென் றுணர்ந்தனுதினம்
நேசித்த வாருணியு நிஜவருணை முனிவனு
நிரம்பவர் தித்தபெரிய
வல்லப மிருந்தவோர் சிதாகாச ராசவென்
மனவெம்பல் காதியருளாய்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. (௧௦)

---

௯. விழியாடி = கண்ணாடி.
௧௦. வாருணி = கடலைக்குடித்த அகஸ்தியர்.

# கூ. திருப்புலியூர்.

அறிவான வருளுக்கு மொருபெரிய பொருளா
யகண்டமா யந்தமில்லா
ஆனந்த வாரமா யுள்ளநீ விரிவாய
வகிலகா ரியநிமித்தம்
வறிதிலா வைந்துமுக மாறுமுக மாகுய்
மகாசத்தி யாகிநின்றாய்
வழியடிமை யானசுரர் நரர்துயர் செருக்கவெவ்
வளவுவடி வேலகொண்டனை
குறியாத வொருகுறிக் குண்ணிற்க வறிவுக்
குளிர்ச்சியை யெனக்கிருப்பான்
குருவடிவு கொண்டுவர வெண்ணிறு யில்லையே
குற்சித வனந்தைமோக
வெறிநூ றியோகதை வல்லியசன் மயஞான
வீரப்பிர தாபவரசே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே.

ஆதார மின்னது நிராதார மின்னதென்
றற்பமுந் தெரிவலியிலா
அசடரு மெனைப்பற்றி வசைபேசி யென்னியதை
யறியுமே நின்றிருவுளம்
வாதாடி வாதாடி யிரையுமென் மேனண்பு
வைத்தவர்கள் கண்ணின்முன்னே
மகிமைபெற் றுன்கிணக னுய்ய வருடிநன்
மாமறைக் கொடியுயர்த்த
வேதா விரிக்கரும் பிரணவப் பொருள்சொல்லும்
வித்வசா மர்த்தியநிபுண
விசததா ளிப்பிரிய விரதநம் புக்கினிய
விமலவின் பக்குழியமே

---

க. வாரம் = கடல்.
இருத்தல் = கொடுத்தல்; ககரவெதுகை காண்க.
மீளி = வலி.

உ. கிணகன் = அடிமை.
விசதம் = வெண்மை; வடசொல்.
குழியம் = திரட்சி.

மீதானர் குடியையீ டேற்றிய பிரானே
விசித்திரமயி லூருமுருகே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே. (௨)

புனுகுசவ் வாதுபூ சிக்கொள வெனச்சென்று
புழுதிபூ சிக்கொண்டது
போலவுனை யண்டிநா ளாய தன்மையைப்
புகலவுண் ணுமிநனே
மனமான கல்லினைத் தோணிவடி வாக்கியதை
மாண்புசா திருவடியிலே
வார்த்துய்ய மாற்றொன்று நாந்தா மறிந்திலோ
மாசிலா வவனுமறியான்
எனநா னினைத்துவிட வென்றாலு மிவ்வுலக
மீந்தபர னேமுடிப்பான்
எனவாகு மிலைநாம் விரும்புநிலை யறியா
னெனப்படா வெனினுமொருவர்
வினவாமல் யாவுமறி வாய்மற் றெவிதமென
விளம்புவே னின்கருத்தை
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே. (௩)

என்றைக்கு னருள்வந்து கூடுமோ கூடுமோ
வென்றுளந் தளருமெளியேன்
இதயந் தெரிந்தநீ குழகந் தயங்குவடி
விலகவென் னருகுகுறுகி
இன்றைக்கு னெண்ணநிறை வேறிற்றெ மன்பநிற்
கினியென்ன தாழ்வெனுங்கீர்
எப்பொழுது கண்டுகளி மீக்கொள்ளு வேனைய
விகபர மிரண்டினுக்கும்
ஒன்றாக நின்றருளு மொருதெய்வ மேசொலா
வுரையொன்றி னுள்ளபொருளே
ஓதரிய மெய்ஞ்ஞான பானுவே யருணெறிக்
குதவாத ஷட்பகையையும்

௩. தோணி=சேறு ; ணகரவேதுகை காண்க.

வென்றிகொண் டிலகன்ப ராதிக்க வின்பே
விவேகயோ கானந்தமே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே.

எண்ணியவொ ரெண்ணங்கை கூடாமை யுள்ளியென்
னெண்ணமினி யேதுவருமோ
என்றுமிக வுந்திகைக் கின்றதே குறையெலா
மெவ்வள வியம்பியுமினங்
கண்ணிலா னென்னவெனை வைத்தாய் படித்ததுங்
கருதினது மென்னபயனே
காலமெல் லாம்வறிதி லேகழித் துப்புறங்
காடடைந் திட்டமேலோ
தண்ணளி பெருக்கியெனை யாளநீ போகிருய்
சாதவருண் மார்க்கத்திலே
சாமுன்ன மேமுத்தி சொலவில்லை யோவெனது
சைவசித் தாந்தமுதலே
விண்ணவர்கள் பணிபரா னந்தகுரு வேயாதி
விந்துநா தாதீதனே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே.

சலிலநா ரச்செறி வொதுக்கினவை யிருகரந்
தட்டுமுன் கூடுமந்தத்
தன்மையினு மதிவிரைவு கொண்டுருவி நீருள்ள
சஞ்சலக் குப்பைநாளும்
மலிகின்ற வன்றிம்மி யுங்குன்ற வில்லையே
மலவிருளி னுணிருந்து
மாதவஞ் செய்யவிட மாமோ விளக்கின்றி
மையிருளி லுள்ளபொருளை
உலகிலெவ ரறிவருன் னருளலா தேவர்மெய்
யுத்தியோ கத்துயர்ந்தார்
உயர்கருணை செய்துகவ லட்டிடா யருணகிரி
யுள்ளத் தமர்ந்தகுருவே
மெலிவினல் ஷட்சமய தேவாகி யவைகட்கு
மேலாகி நின்றநிறைவே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே.

---

௩. சலிலம் = நீர். நாரம் = நீர்ப்பாசி.

# ௧௦. திருவருணை.

---

**வே**லைசூ ழிஞ்ஞால வாழ்வொரு துரும்பென்று
மேலான வறிவைநாடி
வெற்புயர் சுரத்தேகி விளைகந்த மூலமுதிர்
மென்சரு கயின்றெல்விலும்
மாலையிலு நிற்குநிலை பிசகா தெடுத்தமெய்
வருந்தவழி பட்டுநாளும்
வாழ்பவர்க ளிருதயங் குடிகொண்ட தெய்வமே
மாடுவீ டென்றுநேடிச்
சேலைதொடர் மகளிர்படு குழிதனில் விழுந்தன்று
செய்தபல் கறியுமமுதும்
திருத்திகர மாகமுப் போதும் புசித்தறிவு
திரிதர வுழன்றுதுயிலிக்
காலநின் னருள்பெறுவ தேதெனை மலைக்குமென்
கவலெந்த வாறுபாறும்
கருணையடி யவர்பாவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. (௧)

**வா**க்குமன தாலளப் பரியவுனை நேசிக்கு
மார்க்கங்க ளோவனந்த
வகையவைபு ளுள்ளீர மின்றா னருந்தரிலும்
வாழுயிர் சவட்டுவழுவுந்
தேக்குவெறி யுண்ணிழிவு நற்சீவன் முத்தியைச்
சேர்ந்தபின் விதேகமுத்தி
சேருமுறை சொல்லாது செத்தபின் முத்தியது
சேரலா மென்றுசொல்லும்
போக்குவர வானவிழி முத்திமுடி வுகளும்
பொருந்தியுள மார்க்கங்களைப்
புந்தியிற் சிறிதுநா னங்கிகரி யேன்முன்
புகன்றவை முரண்படாமற்

---

க. "சேலை தொடர்" என்பதைத் தொடர்சேலை என மாறுக. ஒன்றன்பினொன்றாகத் தொடர்ந்துவரு சீரை யென்பது பொருளென்க.

உ. தேக்கு = தித்திப்பு; "தீமும் மதுரமும் தேமும் தேக்கும்" என்பது **சே - திவாகரம்.**

காக்கின்ற சைவசித் தாந்தமொன் றேயென்
கருத்துக் கிசைந்தநெறிகாண்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. (உ)

இவ்வுலகு மேலுலகு கீழுலகு பகிரண்ட
வெல்லைகளி னுஞ்சனித்த
எப்பொருளி னும்பெருகி நிற்பதா கச்சுருதி
யெல்லா மியம்புமிடியாற்
பவ்வமது சூழ்ந்த வசுமதியி லென்றிட்டி
பட்டவரை பகலுமல்லும்
பார்த்துனைக் காணுவொர் பித்தம் பிடித்தென்ன
பணுவோ மெனச்சலவுகால்
செவ்வனே நின்னுடை யகத்தின்க ணேக்கென்று
தேற்றிநுண் ணறிவுதந்து
சிந்தனைக் கெட்டாம லெங்ஙன மொளித்தனை
சிதாகாச பரதெய்வமே
கவ்வையற் றவ்விடங் கண்டுன் விபூதியென்
கண்ணே யிருக்கவருளாய்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. (௩)

நீரிழிவு குட்டமதி சாரங் கிராணிசுர
நீங்கா வகட்டுவலிகண்
ணீழல்படு வன்கொடிய சன்னிகுன் மம்பனேய்
நெஞ்சிருமல் காசமூலம்
சீரிழிய வடர்வாதம் வெட்டைவிளர் சோகைபுண்
டீராத பிணிபலவுமுன்
திருநாம மந்திரஞ் செப்பினச் செவ்வியே
செயலற்று வீயுமதனை
மாரிபோ னனியுச் சரித்துப் பழிச்செனது
மனமாரி வீயவிலையே
மலிகின்ற காளிதச் செம்புறழ வுயிர்களின்
மதிதனை மறைத்தபாசக்

---

௨. "மனமாரி" எனுந்தொடரில் மாரி=நோய்.

காரிரு ளுறக்குமெய்ச் சோதியே யெனையுங்
கடைக்கணித் தருளநினையாய்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. (ச)

திரைகடலி னிமிழ்முரச மதியவொண் குடையிளந்
தென்றலந் தேர்கதலிமீன்
தீயொழுகு கன்னன்முனி நாரியளி யோதையெழில்
சேர்பகழி யாலம்வரியார்
பரபிருத மெக்காள மிரதமுறி புட்கரம்
பணைநகில முளகோமளப்
பாவையர்க டந்திரஞ் சூழ்வோன் வசந்தன்ரதி
பாரியென வுள்ளமோகன்
பிரதிதின மும்பெரிய போராடி யென்றனற்
பெற்றியைப் பிரமைசெய்து
பித்தம் பிடித்தநாய் போலவே யயர்கின்ற
பிசகைநீ கண்டியாத
காரணந் தனைப்பன்ன வேண்டுமென் றேவடிமை
காதலித் திட்டவண்ணம்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. (ரு)

வெள்ளைமலி வெள்ளைமிலை வெள்ளைவிடை வள்ளலுடை
வெள்ளைமலை ளெள்ளலாய
விபூதியெல் லாமருளு மபிராமி சிவகாமி
விதரணச் சித்திபலவும்
உள்ளநல சித்தர்கண மெல்லாமு மடிமையே
யோங்கார வுருவமுற்றிவ்
வுலகினி லுலாவுமுயிர் முத்தரொடு பத்தர்களு
முன்னடிமை யன்றிவேறே
வள்ளிபுனை வள்ளிசுர குஞ்சரி மனோகரா
மதர்வருண கிரிபுங்கவா

---

ரு. முனி = வில்.
அளியோதை = வண்டிளொலி.
ஆலம் = பூ.
இரதமுறி = தாழைமடல். புட்காம் = வாள்; டகரவேதுகை காண்க.
தந்திரம் = சேனை,

வாசா மகோசர விலாசகரு ணாலயவென்
மனதிடை நிமிர்ந்தபொல்லாக்
கள்ளவலி காதியுய ருள்ளந் தனைத்தந்து
கரிலற்ற நிலையில்லையாய்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே.

---

## கக. திருக்குமரகோட்டம்.

---

நீரகங் கொண்டவா வர்த்தமிக் கணியா
நெருங்கித் தவழ்ந்துலாவா
நிற்கும் பரங்கிரியு மம்பணங் கந்தியிலை
நீள்கேளி குலைகள்சாய்க்கக்
கோரகைகண் முதலிய பதங்கங்க ளுளுங்
குலாவவுள செந்தினகருங்
குயிலரிய தகுதியோ ருறைபழநி மலையுங்
குளிர்ந்தசெங் கமலமவிழும்
ஏரகமு முயர்குன்று தோறுட னும்புவன
மெங்கும் புகழ்ந்துபரவ
இலகுமொரு சோலைமலை யுந்தமிய னேனெஞ்ச
மென்றுநீ குடியிருந்து
கூரனு னந்தபுத் தாளினன் றேவுனைக்
கூடினே னென்றுவப்பேன்
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
கோட்டம தமர்ந்தகுகனே.

உற்றவுட னீர்மையா லுன்றனக் கடிமையென்
றுள்ளிநற் பணிபுரியவும்
உலவிவரு சீவனெனு நீர்மையான் மலைவற்ற
வுனதமிச மாநின்றுசீர்
பெற்றுயவு மத்துவித மெனுநீர்மை யாலே
பிரித்திரண் டொன்றெனுது

---

க. அம்பணம்=வாழை ; "கதலி யம்பணம்" என்பது பிங்கலநிகண்டு.
கந்தி=கமுகு.
கேளி=தெங்கு ; சே - திவாகரம் காண்க. கோரகை = குயில்.
கூரம்=அழுக்காறு=பொறாமை.

பேசரிய சின்முத்தி ரைத்துணிவி னிற்கவும்
　　பேதையே னுகியருளான்
முற்றும்பொழு தன்றோ வெனக்குள வியாபார
　　மூலந் துமிக்கவெங்கண்
முதன்ஞான வெய்யோ னுதித்தா னென்பறை
　　முழக்குவேன் யாருமறியக்
குற்றமில் சதானந்த சிற்சபையி னிர்த்தமிடு
　　குழகா வனுதிமழவா
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
　　கோட்டம தமர்ந்தகுகனே.　　(உ)

புலன்வென்ற சிவயோக வாட்டியர்க ளுறழ்விற்
　　பொதிந்துவெளி யாகின்றநீ
புன்பத்தி யொல்லுநர் கடைத்தேற வானிப்
　　புவிப்புலத் தங்கங்கெழில்
இலகிடு திருக்கோவில் கொண்டுற்ற கருணைதனை
　　யெண்ணியோ சிக்கினிங்கே
எவருக்கு னருளுறு தென்னலா மிப்பெரிய
　　வீரத்தி லன்னியன்போல்
விலகுவது நான்மட்டு மெந்தவித மெவ்விதமு
　　மேவுவது திண்ணமன்றோ
விசேடமண் ணுதிபர நாதபரி யந்தமா
　　விரியுமுப் பத்தாறினுங்
குலமற வளாவியவை கட்குமப் பானிலவு
　　கோதற்ற பரமபதியே
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
　　கோட்டம தமர்ந்தகுகனே.　　(௩)

ஒருகொம்பி லேயிருந் தொருகொம்பி லேல்தாவி
　　யுழல்கின்ற வானரம்போல்
ஒன்றினை நினைந்துமற் றொன்றினைக் கருதுமன
　　மோயுமா றமலயோகம்
புரிகின்ற நிலைமையிற் கருவிகர ணங்களைப்
　　பொன்றிட விழைத்தனருளிற்

---

௩. பொதிதல் = விம்முதல்; "பொதிதல் வீக்கம்" என்பது சூ - நிகண்டு. குலம் = கூட்டம்.

பொலிந்துநின் னோடுபுண ராதுநா முதலென்று
புந்தியற் பழுமடங்கா
மருள்கொண்டு சுழல்கின்ற வம்பர்வழி வீண்வேறு
மார்க்கமு மெனக்குவேண்டா
மாறாத சிவராச யோகத்தி லென்மன
மடங்கவரு டந்துகோடி
குருமணி யெவர்க்குங் குருத்துவ மளிக்குமொரு
குருவே குமாரகுருவே
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
கோட்டம தமர்ந்தகுகனே.

பாசத் தமிழ்ந்திய பசுக்களி னிமித்தமருள்
பாலித்து நூல்களருள்பு
பண்ணியுங் காட்டியவோர் புண்ணியகுரு மூர்த்திநின்
பழநெறியை மீறியேயித்
தேசத்தி லிழிதொழில் கொடுங்காதை புரிகுநர்
திருந்துநடை கொண்டுளார்பாற்
சிக்குறு பொறுமைகொண் டுயர்நூ லருத்தங்கள்
செய்கைக் கிணங்கவேறு
பேசியவ் விதிகளைத் தம்வழி நடத்தவுள
பேயருக் கெய்துகதியைப்
பிரிவுசெய் தோதவோ நஞ்சமுத மாகப்
பிறங்குங்கொ லெந்தநாளும்
கோசிகம் புகழுநின் னிணைவழு வாவழி
கொடுத்தியென் னையரசே
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
கோட்டம தமர்ந்தகுகனே.

சீவஞா னக்கிரியை களைமறைத் துளவாம
தேவராது திரோதசத்தி
சிறிதுமா றியபோது மர்த்தபா கந்தணைந்
திடுபோது மற்பபாகம்
ஓவுறு தெஞ்சிநின் றிடுபோது முயிர்கட்
குயர்ந்தசத் தினிபாதமாய்

௬. கோசிகம் = சாமவேதம் ; சகரவேதுகை காண்க.

ஓதுகுறி யுண்டாகு மென்றுமிரு கேந்திர
முரைக்கின்ற விவரத்திலே
பாவியே னுக்கேது மிலைகொலோ நின்னருட்
பவுள்சினை யவாவியொன்றும்
பலியாது வறியனு நிற்கவோ விப்பெரிய
பாழுருவம் வந்ததென்று
கூவியிங் கழுமெனக் கார்தஞ்ச மாமோகை
கூரருண கிரியீசனே
கூற்றமனுயி ருண்டபார மேட்டிகூத னென்குமர
கோட்டம தமர்ந்தருகனே. (கூ)

---

ஆசிரியர், குடும்பத்திருக்குங்கால் காஞ்சிபுரத்தை யடைந்து ஆடிசன்பேட்டைச் சத்திரங்களுள் ஒன்றிற் பத்து நாள்களுக்கு அதிகமாக வைகியிருந்து ஊருக்குப் புறப்பட ஆரம்பித்துச் சத்திரத்தின் தலைவாயிலைக் கடந்து வீதியை மிதித்தனர். மிதித்திடலும், தலையில் வெள்ளை முண்டாசும் அரையிலும் மற்றுடம்பிலும் வெண்ணிற ஆடையும் அங்கியு மணிந்துகொண்டு கிழக்கிருந்து மேற்கு நோக்கி வரூஉம் ௩௦, ௩௫ - வயதுடைச் செவ்வுடம்பினரொருவர், இவரைநோக்கி நீர் எவ்வூரென்று கேட்டார். இவர் யான் தென் தேசம் என்றார். அவர் இங்கே வந்த காரியம் யாது? என வினவினர். இவர் தெய்வ தரிசனமே என்றார். அவர் குமரகோட்டம் தரிசித்ததுண்டா? எனக்கேட்டனர். இவர் அஃதியாண்டுளது? என வினவினர். அவர் காட்டுவேன் வருக என்று கூறி மேற்குநோக்கிச் சென்று உடன் வந்த இவரை நோக்கி இதோ கொடிமரம்: இதுவே குமரகோட்டம் என்று சுட்டிக்காட்டினர். இவரும் அதுகண்டு காட்டினவரைத் தேடினர். அவர் காணப்படவில்லை. கவலையோடு திருக்கோயிலை வலம்வந்து திருமுன்னின்று காட்டவந்த கருணையங்கடலே! பாடிய பிரபந்த மொங் கையிலில்லையெனக் கண்ணீருகுத்து விரைந்து போந்து புகைபண்டியிலேறினர். அக்கணமே அப்பண்டியும் புறப்படலாயிற்று. இத்திவ்விய சரித விஸ்தாரம் அடிகள் **சரித்திரத்தும், ஸ்ரீமத் - குமார சுவாமியத்துங் கண்ணுறலாம்.** துறவியான பின்னே குமரகோட்டந் தரிசித்தஞான்று இப்பிரபந்தம் அங்கே படித்துக் காட்டப்பட்டதென்னலாம்.

---

கூ. மிருகேந்திரம் = மிருகேந்திராகம ஞானபாதத்தின் பஞ்சகிருத்தியப் பிரகரணம் அ - வது சுலோகம்.

தஞ்சம் = பற்றுக்கோடு; "தஞ்சமே யெளிமை......பற்றுக்கோடு மாமே" என்பது ஏகாரவேதுகை.

ஓகை — உவகை = மகிழ்ச்சி; கை விகுதிபெற்ற தொழிற்பெயர்.

# கஉ. திருத்தணிகை.

பேசரிய வேதங்க ளாகமம் புராணங்கள்
பிரமமிரு திகளுமொண்மை
பெருகுகம லாசனக் கலைமகளு மசலையிற்
பேர்பெற்ற கவிஞரெல்லாம்
ஆசையுட னுள்பரி யந்தநின தமைதிமா
பயரா தெடுத்துறையினும்
அணுவினுக் கொட்டுமோ மனதினுக் கெட்டுமோ
வந்தோ சிறுத்தநெஞ்சார்
தாசன் புகழ்ந்ததைப் பாடுவது மெங்ஙனே
சருவதா ரகதெய்வமே
சச்சிதா னந்தசிவ சைதன்னிய மேசமய
சஞ்சீவி யேசந்ததச்
சூசிகெழு நின்னருளி னுய்ய வொருகருணை
துரிதத்தி லீதியீதி
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பிலுறை
சுப்பிரமணி யப்பிரமமே.

நெஞ்சுழை நினைப்பவர் களுக்கெலா முதவியா
நின்றலக் கண்டவிர்த்து
நித்தபரி பூரண னந்தவாழ் வொன்றையே
நேயமா கக்கொடுத்துக்
கஞ்சமலர் யோனிகரு மத்திடை விடாதினிய
கருணையருள் வள்ளலென்னுக்
கருதிநிதம் வாடுமடி யேற்கிங்கொ ராதரவு
கனவினு மிலாமைபற்றிப்
பஞ்சையென வெண்ணியோ பரிபாக மெய்தாத
பண்பதனை யெண்ணியோநீ
பராமுகஞ் செய்வதா யெண்ணுவே னப்பனே
பக்ஷமெப் படியும்வேண்டும்

---

க. "சுசி" சூசி என எதுகை நோக்கி நீண்டது.
மதர்ப்பு = களிப்பு.

உ. பராமுகம் = திரும்பிய முகம்: பராங் முகம் என்னும் வடமொழி விகாரம்.

துஞ்சுபர தத்துவ விலாசவிண் ணேதொண்டர்
சுத்தநெஞ் சுற்றதிருவே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பினுறை
சுப்பிரமணி யப்பிரமமே. (௨)

ஆதிமுத லாகவுனை யண்டியென் னுள்ளமதை
யறிவித்து நின்றநிலையும்
அதன்பின்னர் நான்பட்ட வவதியா விக்கேர
மறிவித்து நிற்குநிலையும்
பேதமில் பெரியைநீ யறிவையே யித்யாதி
பெற்றிகளு நின்செயலினாற்
பெற்றே னெனாதுபிற கடவுளர்கள் செயலெனப்
பேசுவனோ வுன்கருணை தான்
வாதனையி னின்னுமெனை வைக்குமென் றூலிறையும்
வாழ்வதுண் டோவென்மனு
வம்பிலே போமோ வழக்காடி யெப்படியும்
வாங்குவே னன்னியாயம்
சோதிகட் கெல்லாமொர் சோதியே யப்பெருஞ்
சோதிநடு வானபொருளே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பினுறை
சுப்பிரமணி யப்பிரமமே. (௩)

இருக்காதி மறையாக மம்புரா ணாதிமுறை
யென்பனவு மவைகள்பன்னும்
எழிலான திரிமூர்த்தி யாதிபல தேவுமவ
ரெங்குமொளிர் பிரமம்வருணம்
பெருக்கான வாசார புண்ணியம் பூசனை
பிதிர்க்கடன் சரியையாதி
பேதமா மந்திரங் கொல்லாமை பூனுண்டு
பிழையாமை யென்பனவுமிப்
பொருப்பேறு முலகெங்கு முண்டோ வெனச்சிறுமை
புகலுவோ ராவுடம்பின்
புலமெங்கு முதிரமுஞ் சிறுமடியி னல்லார்கள்
புரிவொடுண் ணமிழ்தமும்போற்
சுருக்கமுள விப்பூமி மேலென்று மனுமுனிவர்
சொற்றநடு வோர்கிலாரே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பினுறை
சுப்பிரமணி யப்பிரமமே. (௪)

நாடோறு மீரைந்து கதலியோ னிக்கென்னு
நாலைந் திணைக்குனித்து
நடலைமலர் தூவலா லெட்டுநிகர் சடுவைநா
ளுடிமன மாறிநாலின்
கூடா வுலர்ந்தேழி னில்லாது நலிகின்ற
கோட்டாலை யிரியவருடி
கூளிகெழு நாலரையொ டரையிருந் தசைசூலி
கோமக ளனத்திகழ்ந்து
வாடாத தொடாரட வோரிரண் டொருவன்
வாமம்வதி பன்னிருகணுள்
மகிமைமலி பதினொரு முனிக்குவண் டமிழருளும்
வரதவொன் றினையுகைத்தோய்
தூடோணி யாடவலர் தூயோன் றிரண்டுமுனி
துதிசெய்த வடிகளரசே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பிலுறை
சுப்பிரமணி யப்பிரமமே.

என்னைநீ பணியென் றெனக்கறிவு தந்தநா
ளெந்தநா ளந்தநாடோட்
டிந்தநாள் வரையுமுன் றன்னையே கூவினே
னெவனென வுசாவினுயின்
றுன்னுடைய சமுகத்தி லேனுமென் குறையெடுத்
தோதிவதி லறியவெனினும்.
உரியவர்க ளில்லையெளி யேன்மிக மயங்கிட
வொளித்தவிட முந்தெரிகிலேன்
இந்நிலந் தன்னிலே நின்னறிவு கொண்டவர்க
ளெவரையுங் கண்டிறைஞ்சி
இன்னநடை யின்னபடி யென்றுணர வென்றானு
மிதுவரையி லுங்கண்டிலேன்
சொன்னமொழி விபலமா குங்கொலோ வருணகிரி
சுவாமியே சுகநேமியே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பிலுறை
சுப்பிரமணி யப்பிரமமே.

| | |
|---|---|
| ஆகப்பிரபந்தம் பன்னிரண்டிலும்போந்த திருப்பாடல் — | ௧௦௦ |
| தெய்வ வணக்கச் செய்யுள் | ௩ |
| ஆகத் திருப்பாடல் | ௧௦௩ |

---

ரு. சடு = ஆறு.

## கரு. திருமகள்.

விரிகடற் றிரைமணல் கொழிக்குமஞ் செந்திலில்
விரிஞ்சனிந் திரனாதியோர்
விருப்புற்ற படிபூசை செய்தவுட னுங்கட்கு
வேண்டும்வர மருள்வலென்றுத்
திருவாய் மலர்ந்தபோழ் துன்னடியை மறவாத
செல்வமே யருள்கென்றவர்
செய்தவிண் ணப்பமே யெனதுவிண் ணப்பமுந்
திருவுளத் தெனையடைக்கும்
புரிவான பேரருள் புரிந்தெனைக் கோடியென்
போதம்விளை யாதநிலையிற்
பூரண வியோமமா நிறைவான தெய்வமே
பொறிகரண மென்பவைகளுக்
கரியதுரி யாதீத வறிவுச் சுகானந்த
வாழியே யன்பர் மன்னே
அளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. (க)

கண்ணொன்று பார்க்கக் கருத்தொன்று நேடிடக்
கையொன்று செய்யவுரைகொள்
காதொன்று கேட்கநடு நாவொன்று பேசநின்
கழலிணை மறந்துபூசை
பண்ணிற் பயன்படா தென்றுல கியம்பினும்
பழுதறு பதார்த்தங்களைப்
பரமனுக் கென்றீவ திற்சிறிது புண்ணியம்
பரிவொடெய் தாதோவென
எண்ணியது செய்யவெனி னும்பத்தி வேண்டுமதை
யெய்திடின் விதுப்புவிட்ட
எழிலாய யோகமே யாகுமப் பத்தியு
மெனக்குச் சிறக்கவிலையால்
அண்ணலே யென்பூசை யெவ்வழியி னுமுனக்
கானதா கக்களிப்பேன்
அளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. (உ)

---

உ. விதுப்பு = விரைவு. விதுப்புவிட்ட = விரைவு நீங்கிய; ஒழுங்கான எனும் பொருளுடைத்து. விதுப்பு=நடுக்கம் எனக் குறிஞ்சிப்பாட்டுக் கூறவுள்ளது.

## குமரகுருதாசசுவாமிகள் பாடல்.

மங்கல சிவாகம முரைக்கின்ற படிதாச
மார்க்கத் திலேகுறித்த
வடிவினின் மறைந்திருந் தும்புத்திர நெறியினன்
மந்திர வுருப்பெருக்கால்
தங்காத கடைதவிற் பொறியென விளங்கியுஞ்
சகசசக மார்க்கமதனில்
தண்சுரை பிதுக்குழி யிறங்குபால் போலவுந்
தாவில்சன் மார்க்கமதனிற்
பங்கமி லிளங்கன் றினைப்பூர்வ வீற்றுப்
பசுத்தா னணைத்தணைத்துப்
பரிவொடு நினைத்தபோ தெல்லா மருத்துமொரு
பண்பெனவு நீயருள்வதில்
அங்கத மிலாதசன் மார்க்கவின் பேயெற்
களித்தியென் றிசையமுதே
அளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே.

ஞானமில் லாதுகதி சேரொணா தென்றந்த
ஞானத்தை யெய்துபருவம்
நாலென்ன வகுத்தநிரை யிற்சரியை கிரியையினு
நாசிவரு வாசியருகல்
சானித யோகிலும் வரும்பத விடம்பெறச்
சம்மத மிலாதுஞான
சாயுச்சிய சத்தியபர முத்தியை விரும்புவோர்
தரணியாள் செல்வத்தையும்
வானவர்கள் பேற்றையும் பிரமனார் வாழ்வையும்
வைகுந்த வாக்கத்தையும்
மருவநினை வாரோ மடங்கல்சிறு தேரையை
வலிக்குமோ பசிமல்கினும்
ஆணியில் லாத்தவப் பரமுத்தி தன்னையே
யடையவென் றுனையடைந்தேன்
அளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே.

---

௪. நிகதம்=ஒலி; "சப்தேநிநாத (நி-நஃ) நிகத" என்னும் நிகண்டு—அமர
ஸிம்ஹம்

விண்ணிலொளிர் கோணிலை கணித்துப் பலாபலன்
விளம்பிப் பிழைத்திடுதொழில்
வித்துவத் திறமைகொண் டிலகிலெவர் பேரினும்
விநோதமுள பாடல்பாடி
எண்ணற்ற புளுகரா யுய்கின்ற தொழில்சுகுர்த
மிதிலென மருந்துவஞ்செய்
தின்புற்று வாழ்தொழி லிழிந்தலோ கங்களை
யிலங்கரும் பொன்னெனச்செய்
துண்ணுதொழி லாலம்ப யோகத்தி னூற்சித்
துளுற்றிநா ளட்டிடுதொழில்
உணர்வின்மா யாவிதொழி லெல்லா மவாவுற்
றுழன்றுதிரி பேய்க்கோலமாம்
அண்ணரிய நின்னருள் விரும்பறி வுளாருமிவ்
வலைதொழில்க ணச்சுவாரோ
அளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. (ரு)

தனியே யிருந்துகண் மூடியைம் புலவழித்
தடமடைத் துள்ளியங்குஞ்
சதுர்வித மனுதிகர ணங்களை யொடுக்கியொரு
சமநிலையி னின்றுனருளிற்
கனிவுற் றிராதபுன் மதியனே னெனினுமுன்
கருணைப்பிர தாபமகிமை
கழறுநன் னூல்களின் சம்மதப் படிநிதங்
கத்துவதை விட்டதுண்டோ
புனிதமொடு கேட்டவர்கள் கண்டவர்கள் பாலிலுன்
புகழினை மதித்துவிரிவாய்ப்
போதித்து மகிழ்முறைமை நீத்ததுண் டோநீ
புறம்பென் றெனைக்கழிக்க
அனிமாலி னஞ்சனிப் பற்றபர தெய்வமே
யருணகிரி புகழண்ணலே
அளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. (சு)

---

சு. ஆனி "அனி" எனக்குறுகிற்று; கேடு எனும் பொருளுடைத்து.
மாலினம்=மயக்கமும், அதன் இனமாக வுள்ளனவும்.

ஏமனை யுறுக்குநல் லோர்ப்பிகல் கடைப்பிடி
யெனுங்குண மிரண்டிரண்டும்
எய்திநீ ருணசை யிரண்டுமின் றுண்ணியல்பு
மிடையிட்டு வாய்மொழிதலும்
பூமிதனில் வெப்பமொடு தட்பம் பொறுத்தலும்
புதுமணம் விரும்பாமையும்
புடைவரை யறுத்துறையு மாதனத் தமர்தலும்
பொருவறு தவத்தங்கமாம்
தேமல ரடித்தொண்ட ரிவைகளை மதித்துறுவர்
சிறியனே னுறுவதென்றோ
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே.

பத்தைப் பெருக்குவா ரெட்டொன்றை மூடுவார்
பதினறி னொருபாதியிற்
பாயாது கட்டுவா ரேழைவலி பண்ணுவார்
பகையாறை யுந்துறப்பார்
சத்தமுத லைந்தையு மடக்குவார் நான்கைத்
தகைந்தொன் றிரண்டைவெல்வார்
தாவற விரண்டையுங் கூட்டுவா ரொன்றையே
சாருவார் தலையிலேறி
எத்தலமு மங்ஙனே பார்ப்பா ருதிப்புநொறி
யெல்லாநி னருளின்செயல்
என்றுபெரி துஞ்சிந்தை பூரிப்பர் நிபுணரிவ்
வேழையே னென்கொடுய்வேன்
சித்தனே யுத்துவித் முத்தனே நித்தனே
தேசுமிக் கார்கத்தனே
திருநீடு-பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே.

அங்கமது பழுதென்ன வுருமாறி யெச்செயலு
மற்றவரை யொப்பவருவார்
ஐந்துதல நீண்டுமற் றைந்துதல மிருதுவா
யாறிட முயர்ந்துசெவ்வி

---

௬. பத்து=நற்குணம் பத்து. விவரம்:—மெய்யுரை, நல்வார்த்தை, இனியவையியம்பல், பயன்படுவசொலல் எனும் வாக்கினற்குணம் ௪ம் கோயில்வலம்வரல், தவம்புரிதல், தானஞ்செயல் எனுங் காயநற்குணம் ௩ம் அருணினைவு, அவாவறுத்தல், தவப்பற்று எனும் மனநற்குணம் ௩ம் ஆம்.

## ௧௪. திருக்கயிலாசமலை.

தங்கவோ ரேழிடஞ் சிந்தூரம் போனிறந்
தாவிரண் டொன்றுகுறுகிச்
சாருமொரு மூவிடம் விசாலமா மூன்றிடந்
தாழலட் சணமதாக
எங்கும்வரு வாரோது மறிகிலர் போலவு
மிருப்பார்கள் யாவுமறைவார்.
இதயத்தி லன்பிலா வெருமைகட் கருள்செயா
ரிதமான வர்க்கருளுவார்
செங்கமல பாதமூரு கையநின் னன்பரவர்
தெரிசன மெனக்குமெனவோ
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. (௭)

காட்டிலு நலங்கிளரு நாட்டிலு மிருப்பார்கள்
ககனநிலை யிலுமிருப்பார்
கருதரிய வத்துவொடு சேரவென் றுடறனைக்
கருதார்கள் கற்பமுண்பார்
ஓட்டிலுங் கையிலும் பொற்பாச னத்திலு
முளங்கனிந் துண்டுமகிழ்வார்
ஒன்றுமுண் ணாமலு மிருப்பார்க ணல்லுலவை
யுண்பார்க ளமுதமுண்பார்
தாட்டிகரை யெளிமைப் படுத்துவார் தாபந்தர்
தமையரச ராக்கிவைப்பார்
தையலரை வேண்டுவார் தள்ளியும் பேசுவார்
தாவிவே றுடலு நுழைவார்
தேட்டமுள யாவும் படைப்பாரு னருளுள்ளார்
சிறியனே னென்கொடுய்வேன்
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. (௮)

தண்டிகையி லேறுவார் தரைமிசை நடப்பார்
தளங்கள்புடை சூழவருவார்
தனியாயு நிற்பார் தராதரங் கெட்டுத்
தயங்குபவர் போலுழலுவார்
சண்டித் தனஞ்செய்து தெருவிற் கிடப்பார்
சதானந்த மாயாடுவார்

---

அ. பாசனம் = உண்கலம்.

தரையினிற் றுயிலுவா ரணையிற் படுப்பார்
சமாதியிலு மினிதிருப்பார்
அண்டமெல் லாமொடியி லேசுற்று வார்பின்னு
மசையாமெவார் நிலையினிற்பார்
அசலபுவ னத்தையங் கையிலே காட்டுவா
ரங்கே யடக்கிவிடுவார்
தெண்டிரைக் கடல்சுலா முலகினின் சீடரவர்
சித்தளவை கூறுபவரார்
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. (௯)

பருவமொரு மூன்றனையு மாறுவார் விண்ணிற்
பறப்பார்த முடன்மறைப்பார்
பகலையிர வாக்குவா ரிரவுபக லாக்குவார்
பார்ப்பரிய பரமாணுவைப்
பெருமுண்ட மாக்குவா ரதனையணு வாக்குவார்
பின்னுமுன் னுஞ்செல்லுவார்
பீதகத் தட்டையோ டாகவனை வாரதைப்
பீதக மெனப்பண்ணுவார்
அருமையா மெண்கட்ட சித்தியுங் கண்டுள
மடங்கிமெய்ஞ் ஞானபீடத்
தமர்ந்துனது பதநலஞ் சேருவார் நின்சீட
ரருளிலேன் யாதுசெய்வேன்
தெருள்ருண கிரிநாதன் மௌனமென வென்றுறை
திருப்புகழ் துணைத்துசெவியோய்
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. (௧0)

---

௧0. "பருவமொரு மூன்று" என்றதன் பொருள்—பாலத்தன்மை, தருணத்தன்மை, விருத்தத்தன்மை எனவாம்.
பீதகம்=பொன்.

# ௧௫. சண்முகானந்தசிவம்.

புவனனிற் கிரணமுள் ளதுபோலு மப்புவிற்
றட்பம திருத்தல்போலுஞ்
சலரகித மலரகித வவிரோத வவிகார
சாலம்ப ரகிதசத்திய
அவிதவே காகார தத்துவா தீதமா
யவிர்பரப் பிரமமதனில்
அநாதியா யொருசத்தி யுண்டதனை யருளென்று
மளவிலா ஞானமென்றும்
உவமான மில்பிரம கிரணமென் றுஞ்சுருதி
யோதுமிதை யேயம்மையென்
றுரைதருவ ரப்பெரிய பிரமத்தை யப்பனெனு
மொருசிவ னெனத்தெரிப்பார்
தவமருவு விழுமியோ ரவ்வம்மை யப்பரைத்
தனியனே னறிவதென்றோ
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே. (௧)

ஞானமி லசேதனப் பிரபஞ்ச வுற்பன்ன
நந்தாதி காரணமெனு
நவின்மாயை யைத்துணைக் காரண மெனுந்தனது
நல்லருளி னுடைத்தும்
ஊனமி னிமித்தகா ரணமாக வுஞ்சொற்ற
வுபயகா ரணமுந்தனை
ஒழித்திலா நிலைமையா லவைகட்கு முதலென
வுரைக்குமொர் சிரேட்டமதனுன்
மானமறு மூலகா ரணமாக வுங்கிஞ்ச
மதியுடைப் புற்கலரெலாம்
மலரடிக் கனவரத மடிமையா கவுமன்னு
மாதேவ வருள்கென்னுமா
தானவிரு தயமேதை யர்க்கினிய நீயெனைத்
தந்துட் கலந்துகோடி
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே. (௨)

---

௨. ஆதிகாரணம்—முதற்காரணம். இதனைக் குடத்துக்கு மண்போல உபாதானமென்ப.

அருளான சிவசத்தி தனிலாயி ரத்திலொன்
றுயபரை யோடுநின்றே
ரைந்துதொழி லப்பரம வுள்ளத் தடைப்பதையு
மப்பரையி லாயிரத்தோர்
பிரிவான வாதியொடு நின்றுதனை நீப்பினும்
பிரிவற வியாபித்திடு
பெற்றியையு மவ்வாதி தனிலாயி ரத்தொன்று
பேசவுள விச்சையொடுநின்
றுருவான வடிவைப் பிரேரிக்கு நிரையையடு
முரைத்தவிச் சையிலாயிரத்
தொன்றுய வறிவினின் றறிவருளு நிலையையு
முணர்த்தறிவி லத்துணைக்கிர்
தரவான கிரியைநின் றயருமைந் தொழிலையுந்
தனியனே னறிவதென்றோ
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே.

பரைமுதற் கிரியைவரை யுளவைந்து சத்திசம்
பந்தத்தி னுலழுக்கில்
பரமாயை தன்னின்முறை யேயனு சிருதையம்
பரவியா பினிவியோமை
கரைவிரி யனந்தைந லனுதையென் பரநாத
கலைகணனி வந்தவைகளாற்
காரியப் படுமபர நாதகலை யைந்தையுங்
கறையற்ற சூக்குமைமுதல்
உரைதருமொ ரைந்துபர விந்துகலை யானடை
யுயர்ந்திடு நிவிர்த்தியாதி
ஓதபர விந்துவின் கலைகளோ ரைந்தையு
முணர்த்துமரு ணெறியினின்று

ச. அபரநாதகலையைந்தாவன—ஊர்த்துவ்கை, மோசிகை, ரோசிகை, தீபிகை, இந்திகை எனவாம்.

சூக்குமை, அதிசூக்குமை, மிருதை, அமிருதை, வியாபினி எனுமைந்துமே பர விந்துகலை ஆம்.

நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை எனுமைந்துமே அபர விந்துகலை ஆம். இவற்றுள் சாந்தியதீதையைப் பராசத்திக்கும், சாந்தியை ஆதிசத்திக்கு மெனுமுறையாய் அவரோகணக கிரமமாகக் கொள்க.

தரையிலினி துய்கின்ற விழுமியோர் தன்மையித்
தாசற்கும் வருவதெந்நாள்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே. (௪)

தத்தென்னும் வசனமது துவமென்னும் வசனநீ
தத்துவ விரண்டுபொருளுஞ்
சார்தலா னுயென்னு மசியென்று குருசொலுஞ்
சாரதவே தாந்தமொழியை
வித்தக விவேகிக ளுணர்ந்து மாயாமோக
விளைவென்னு மனதடக்கி
விவேகமே பிரமவடி வென்றதை யறிந்துயும்
விதேககை வல்லியவின்பை
நத்திமுது சஞ்சிதமொ டாகாமி யத்தையு
நசித்தெய்து மாளியாக
நாளிலே தொலைபிரா ரத்தமது தீரும்வரை
ஞானியா வாழ்வரன்றோ
சத்தான கடவுளே யத்தகைய வாழ்வைநீ
தரவென்று கண்டுமகிழ்வேன்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே. (௫)

சருவசங் காரகா லத்துஞ் சிதாபாசர்
தம்மியல் புணர்ந்திடாமல்
தண்ணிய வசுத்தமா யாகார ணத்திலே
தங்கல்கா ரணகேவலம்
சருவவுல குஞ்சிருட் டித்துவரு காலுயிர்கள்
சதுர்யோனி புக்குமரண
சனனங்க ளோயாது கொண்டுழலல் காரண
சகலமச் சகலமதிலே
கருமமல பரிபாக விருவினையி னெப்புநீ
கண்டகா லத்தவைகளைக்
காருண்ணிய மெய்க்குரவ னுகவந் தருளிற்
கடாக்ஷித்து மலமறுத்துத்

---

௫. நத்தி = விரும்பி. ஆளி = ஒழுங்கு.

கருமஙியிர் தன்னடியில் வைத்தவுயர் சுத்தமிது
தானே யெனக்கும்வேண்டும்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே.

பாகசா லைப்பண்ட மெவ்வள விருப்பினும்
பாவகத் தீமுதன்மைபோற்
பரகதி பெறற்காய பத்திதவ யோகாதி
பலதொழி லிருந்தாலுமோர்
தோகமு மிலாநல் விவேகபதி ஞானவொண்
சோதியே முதன்மையிதனைத்
தொடராத பத்திவை ராக்கியமு மிருவகைத்
தொடர்பையே மருவுமதனல்
ஆகுநெறி யுய்த்துணர்ந் தறிவைப் பிடித்தபிடி
யாகநனி பற்றவெங்கள்
அத்தனு முன்னிரு பதத்துணையை யுற்றே
யனுரதஞ் சாதிக்குமா
தாகமுள மேதாவி யோர்நெறியி லென்னைநீ
சந்தத நிறீஇயருளாய்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே.

பற்றற் றிருத்தலே பிறவாத பேறென்று
பரமனரு ளூற்றுவாழாப்
பாடுடைய துறவிகட் கெங்ஙனந் தம்மறிவு
பரிபூர ணத்தையெய்தும்
முற்றத் துறந்ததிரு வாதவூ ரார்மூவர்
மூலர்வெண் காடர்கிரியார்
முதுவள்ள ருயுமா னவராதி பெரியோர்கண்
முதல்வன் றனைப்பிடித்துத்
தெற்றுற்ற முத்திநிலை சேர்ந்ததையு மிவ்வுலகு
செவ்வெனத் தெரியுமன்றே
செய்கரும யக்கியாதி பொதுவல்ல பத்தியுந்
தெளிவுமே பொதுவாமிதைச்
சற்றுநா னணவாம னிற்பதென் றுலுனது
தாசர்பே றண்ணுவேனே
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே.

---

அ. வள்ளல் = கண்ணுடைய வள்ளல். இவர் ஒழிவிலொடுக்க நூலார்.

பெருந்துறவி லேறினும் பத்திவை ராக்கியம்
பிசகா திருக்கவேண்டும்
பிறழாத பிரமநிட் டானுபவ நாளும்
பிறங்கநனி புரியவேண்டும்
கருதுமிந் நெறியற்ற ஆகமது பூரணங்
காணாது கண்ணப்பனார்
கனிவுற்ற பத்தியா லேயாறு நாளிற்
கருப்புகா வீடுபெற்றார்
அருந்தவ முளார்பலரு மதுகொண்டு நல்வீ
டடைந்ததும் பிராமாணியம்
ஆதலருட் டனிகொண் டுபாசனை மூர்த்தியரு
ளாலெவரு முத்திபெறலாம்
தருமகுண தெய்வமே தயவுசெய் தென்னையுன்
றாசர்களி லேணிறுத்தாய்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே. (கூ)

துயரார் புறப்பற் றறுதவர்க் குள்விழைவு
தொலையாது தொலையுமாயிற்
சுத்தவீ டடைவதுஞ் சத்திய மசத்தியந்
துவ்வாத துறவெய்துபு
முயனிலையி லெய்தறிவு பொன்னிற் பதித்துள்ள
முழுமணியை யொக்குமாதர்
மூசிவளை யில்லறத் தெய்துபே ரறிவா
முதுக்குறை விரும்பின்மணியாம்
இயலிவ் விரண்டறிவும் வழிபடுதெய் வத்தினுடை
யிணையடித் தகவுகொண்டே
ஏற்றுய்ய வேண்டுமில் லாவிடி லவம்போ
மெனுந்துணிவி னிற்குமெற்குன்
றயவிரங் காவிடின் வருங்கதி யெதோசோண
சயிலநா மத்தனரசே
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா னந்தசிவமே. (கo)

---

கo. மூசுதல்=மொய்த்தல்.
முதுக்குறைவு=பேரறிவு; நூ - நிகண்டு, சே - திவாகரம் என்பன காண்க.

# கக. நிட்களானந்தகுகன்.

நின்னுடையி ராச்சியமோ நித்யத்துவ கைவல்லிய
நிதமார னந்துதிக்கும்
நின்னுடைய நாமமோ சீவர்களை முத்தியி
னிறுத்திடு மகாமந்திரம்
நின்னுடைய வடிவமோ வதிரேக மறைதந்திர
நெடியகலை யாதிபுணர்வு
நின்னுடைய சஸ்திரமோ விருளிக லறுக்குமிக
னீடுமெய்ஞ் ஞானசத்தி
நின்னுடைய வாகன மதோமாயை துவசமோ
நிழனிலவு மூர்த்தமாயை
நின்னுடைய வுருவத்தி லணிகின்ற பொருள்களோ
நிமிர்சீவ செல்வமூலம்
நின்னுடைய விடவல மமர்ந்தவிரு சத்தியோ
நிஜஞான நிகரில்கிரியை
நின்னுடைய வடிநினைவர் வறிதடைவ தெங்ஙனே
நிட்களா னந்தகுகனே.

பரமநின் வடிவையென் பூழ்திவிழி காணாத
பழுதுள்ள தேனுமீளம்
பயிலோதை கேட்டுமணி யொன்றம்ப ருண்டென்று
படுநிச்ச யங்கோடல்போல்
விரிககன வெளியிலே கதிர்மதி யுடுக்களுமிவ்
விபுலத்தொர் வித்திலெண்ணில்
விளைவும்வெள் ளென்புதசை பொலிவிக்கிர கத்தில்
விசித்திர மாகவைந்து
கருவிகளு முட்சொப்ப னத்துருவு மாகநனி
காண்கின்ற குறிகளாலோர்
கத்தனுண் டெனுநிச்ச யங்கொண்ட நானுமிக்
காசினி விரும்பிமுடிவில்

---

க. சுத்த மாயையின் அதோபாகம் "அதோ மாயை" எனவும், ஊர்த்துவபாகம் "ஊர்த்த மாயை" எனவுங் கூறப்பட்டன.

உ. பூழ்தி = தசை, ஊன்; பி - நிகண்டு காண்க.

நிரயவதி காரமற லிக்குமுன் னேழைபோ
னிற்பனோ வொப்பிலாத
நிமலபரி பூரணப் பிரமப்பிர காசமே
நிட்களா னந்தகுகனே. (உ)

வறிஞனொரு வன்செல்வ வந்தனா வதுகண்டு
மாவழுக் காறுகொள்வோர்
மாதவ மிலாவொருவ னத்தவந் தனினூறு
மல்குவது கண்டன்னவா
றறிவினின் மதித்தழுக் காறுகொண் டவ்விரத
மயர்வதற் குள்ளபடியே
ஆதரங் கொள்கிலா ரிதனைநுண் ணுணர்வுளோ
ராயினிதின் மட்டுமேதோ
செறிவுறுவன் மோசமொன் றுண்டென்ன வறிவரித்
தீர்வையை யுணர்ந்துமினிநான்
தேயவிவ காரத்தி னிற்பதெப் படிசொலாய்
சிந்தித்த வாதிறம்பா
நெறிகொடுத் தருளின்ப மீதூர வருடியென்
னெஞ்சகுடி கொண்டபொருளே
நினைவினுக் கெட்டாத நிலையிடை விளங்கமல
நிட்களா னந்தகுகனே. (௩)

தேவார பாராய ணம்பணிச் சிலர்தொண்டு
செய்துசிலர் பத்திமையுடன்
சிவசரித் திரமதே கேட்டனு தினஞ்சிலர்
திருந்துசிவ விரதமெல்லாம்
ஆவலொ டிழைத்துட றுறந்துசிலர் மாயக்கி
யாதிகள் குயிற்றிச்சிலர்
அன்பருக் குத்தொண்டு செய்துசிலர் மானதம
தாகவந் தித்துச்சிலர்
பாவினம் பாடிப் புகழ்ந்துசிலர் மந்திரம்
பரவிச் செபித்துச்சிலர்
பர்னிற விபூதியிற் பேரன்பு கொண்டுசிலர்
படர்கா லடக்கிச்சிலர்

---

௩. செல்வ அந்தன் = செல்வம் மிக்கவன்.

நீவரிய மும்மல மிகந்துகுரு வருளொடியி
னின்றசிலர் கதியெய்திய
நிலைமைக ளனைத்துமுன் பேரருள் விலாசமே
நிட்களா னந்தகுகனே.

இந்தவுல கஞ்சதுர்ப் பூதங்க ளன்றியிறை
யென்பதிலை யென்றமேனுள்
இசைத்தவுல காயதப் பாவிபெண் போகமே
யின்பமா முத்தியென்றன்
தந்துபுகல் புத்தரைங் கந்தநா சத்தையுஞ்
சமணர்முக் குணவோய்வையுந்
தகையில்பிர பாகர ரிருங்கன்ம வொழிவையுஞ்
சமமதத் தவருருவையும்
பந்தபா ஷாணமா மார்க்கிகளு ளழிவையும்
பாற்கரிய ருயிரழிவையும்
பாடுகிளர் சங்கிராந்த நெறியர்கர ணந்திரிபு
பட்டசிவ கரணத்தையும்
நிந்தையில் லாதபர முத்தியென் றூர்களவை
நிறைவாய கதியல்லவே
நிஜானந்த மானவுனை யடைகின்ற கதிநிறைவு
நிட்களா னந்தகுகனே.

எடுத்ததா லத்தினை விடுத்தரிய பரகதியை
யெய்துநெறி யுண்டென்பதற்
கேனுதி மெய்ப்பொருளர் பெருமிழலை யார்கரி
யெடுத்ததா லத்தொடருடான்
அடுத்தமுத முற்றதற் காரூரர் சோதியி
லடைந்ததற் கமணசிங்கம்
அமலலிங் கத்துழி யடைந்ததற் காளரைய
ராக்கைவே றுயதற்கு
நடித்ததிரு நந்தனர் சாட்சிமுத் தாவரமு
ஞாலமிசை வீழாமலே
ஞானவெளி யுற்றதற் கேசில்சுகர் வாதவூர்
நாயனர் கரியாமுப

௯. நீவரிய—நீவல்=தடவல்; இங்கே துடைத்தல் என்பது பொருள். இகந்து=கடந்து.

௧. இத்திருப்பாடலில் வருமுடிபுகள்—அவரவர் சரித்திரங்களை நம்பிய ஞான்று கூறிக் கொண்டவைகளா மென்க.

நிடத்தின்முடி வானவெம் பெருமவினை களிலுனை
நினைக்குமெற் கேதுவருமோ
நித்ததக ராலய சிதானந்த சோதியே
நிட்களா னந்தகுருகனே. (௬)

காமமுத லியவிடுத லியமமவ் வாசனை
கதிக்கா தகற்றனியமம்
காசினிரு பாதிகம தாபுறைத லாதனங்
கடமடா திகளைமெய்யாக்
காமுறு மனத்தையிரு தயகுகேச சயமதிற்
கட்டுவது பிராணயமம்
கட்டுநிலை யிற்றுய ரிலாதுணர்வை நேடல்சூழ
கப்பிரத் தியாகாரநல்
நேமமொடு பரமென்று முன்கணுயர் மனதினை
நிறுத்துவது நிமிர்தாரணை
நிஜரூப மாயுன்னை நாடுத றியானமோர்
நேர்மையொ டகம்புறத்தும்
நேமமின் றொளியாக நிற்பது சமாதியென
நிச்சயஞ் செய்புநெறிநான்
நின்றுய்ய வொருநீ கடைக்கணித் தருள்செயாய்
நிட்களா னந்தகுருகனே. (எ)

சம்பவ விநாசமா மலிகன்ம மாமலத்
தனையெனும் பாசமெல்லாந்
தத்துவப் பிரதான வறிவான சோதியது
சவிசெய்ய வங்ஙன்மறையும்
செம்பிலே புளியிடப் பிரகாச மாகுமது
தினமுமிழை யாதுவிட்டாற்
செறிகா ளிதம்பின்னு மூறுமன் றோவிச்
சிரேணிபோ னித்தவெண்ண
மும்பிசகு றுநிட்டை யும்புரித னன்றம்பர்
முதிர்சுத்தி செய்தசெம்பு
மூடமுக் கென்றுமே றுதிலகல் போலுறழ்வு
முற்றிற் கெடாதியங்கும்
நிம்பமுண் ணுதுபே ரின்பமுண வெண்ணுவார்
நெஞ்சுணர்ந் தருள்பெருமவென்
நெஞ்சையு முணர்ந்துநான் வேண்டுறழ் வளித்தருடி
நிட்களா னந்தகுருகனே. (அ)

தேகாதி பிரபஞ்ச மாம்புறப் பற்றையுந்
தேகத்தி னுட்டேகமாச்
செறிகின்ற கரணாதி யாமகப் பற்றையுந்
திட்டமா விட்டவர்க்குப்
போகாத துக்கப் பிறப்பென்னும் விதைகளைப்
பொய்யாது நல்குகன்ம
பூருகத் திற்குவே ரறுதல்வே ளாண்மையே
பொய்யின்றி மெய்யாகிய
யோகேறி னோர்க்குமி லபிக்கின்ற பண்பிதே
யுன்னடிய னேனவைகளை
யூகித் துணர்ந்தற விடுத்தரு வானந்த
வோகையெய் தாதொழிவனோ
நீகாச மில்பரம வென்றுயர் தகித்திட
நெருப்பான தெய்வமுதலே
நித்தபரி பூரண வகண்டதத் துவபோத
நிட்களா னந்தகுகனே.

பலபுருடர் போகத்தை நச்சுபொது மாதெனப்
பலதேவ லோகபோகப்
பரிவைநச் சாதுகற் புடையபெண் ணொப்பவொரு
பரகதியை நச்சியிச்சை
திலமளவு மில்லாம லாங்கார மதனிற்
செனித்தூதை யைப்போலவே
திரிதரா நின்றசுழன் மனதினை யடக்கிவரு
திமிரம் பிளந்தருளினால்
இலகியரு ளறிவிக்க வறிவிழி மலர்ந்துனை
யிடையரு மற்கண்டுகொண்
டெந்நாளும் வாழ்வதே நல்லுத்தி யில்லுத்தி
யேதுக்கு நித்திரையினும்
நிலவுமுணர் வொன்றுமே துஞ்சா திருப்பதெது
நிச்சய மறிந்துமெந்தாய்
நிறைகருணை யருணகிரி புகழ்பெரிய தெய்வமே
நிட்களா னந்தகுகனே.

---

கூ. பூருகம் = மரம் ; சூடாமணிநிகண்டு காண்க. நீகாசம் = ஒப்பு ; (நீகாஶ꞉ நீகாசஃ அமரஸிம்ஹமெனும் நிகண்டு காண்க.

கo. ஊதை = காற்று. உத்தி - யுக்தி என்னும் வடமொழி விகாரம் ; யோசனை யென்னும் பொருண்மைத்து.

# கஎ. சரவணபவானந்தன்.

பரதார நசையா லிராவண்ன் பட்டனன்
பற்றிய துவேஷமதனாற்
பாறிறு னிரணியன் படர்காம முற்றிறப்
பண்ணிறு னரகாசுரன்
மருவிய குரோதத்தி னாலே பகாசுரன்
மடிந்தன னுலோபமதனுன்
மாண்டன னகித்துவசன் மோகமொன் ருலிரா
மன்றந்தை சென்றுன்மதப்
பிரமையிற் கார்த்தவீ ரியனுயி ரிழந்தனன்
பிழைமலி பொருமையொன்ருற்
பீடுகெழு சிசுபால னுள்ளாவி பொன்றினன்
பேசிவை யெலாமுள்ளவென்
சரிதையே தாமோ வெனத்துரால் கூறெனது
தாபமென் றிரியுமெந்தாய்
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
சரவண பவானந்தனே. (க)

தனக்குவரு கின்றதுயர் பிறருக்கும் வரவென்று
சந்தத நினைந்தவருனைட்
சன்சட மிழந்தா னதேவிதம் பிறர்சுகஞ்
சார்வதோ வென்னுமியல்பின்
மனமிஞ்சி யொருபுண்ட ரீகவசு தேவனு
மடிந்தன னிடம்பமொன்ருல்
வாழ்விழந் தானம்ப ரீடனிவ ணெற்கெவர்ச
மானமென் னுங்குணத்தாற்
கனமுள சலந்தரா சுரனுயிர் துறந்தனன்
கதழ்வகங் காரமதனுற்
கறுவுமது கைடவ ரழிந்தனர் வரத்தொடு
கதித்தபல மும்பெருத்தும்

---

க. மோகம்=தான்றேடியபொருளில் அதிக விசுவாசசித்தம்.

மதம்=ஐசுவரியத்தா லாணவம்படைத்துக் கிருத்தியாகிருத்தியந் தெரியாது நடக்குங் குணம்.

துவேஷம்=தனக்கொருவர்செய்த தீங்குச்குப் பதிற்றீங்கு செய்யுங் குணம்.

காமம்=தனதானியாதிகளை மேன்மேலுந் தேடுங் குணம்.

தனகற்ற விக்குண மெலாமுள்ள வெற்குனது
சரணமெப் படியெய்துமோ
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
சரவண பவானந்தனே.

பசிதாக மொழிபொருட் டன்னபா னாதிகள்
பட்சித்து மாந்திவிடுகை
பண்ணுமல சலவாதை யென்னும்விட யத்தகம்
பற்றிடுத லிச்சையென்றும்
உசிதவரு னூலிலும் பரமபதி பாலினு
முரன்கொள்விசு வாசமொன்றே
உயர்பத்தி யென்றுமன வாக்குட லொருங்குபட்
டுற்றநற் கருமங்களே
நிசமருவு பரமவை ராக்கியமென் றுந்தவர்
நிகழ்த்துமொரு மூன்றிவிச்சை
நிறைகதி யளிப்பதிலை மற்றிரண் டானுமந்
நெறியைத் தொடர்ந்துகொளலாம்
தசயா திரத்தினு நிறைந்தபெரி யோயிதைத்
தமியேனு மணுவதென்றோ
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
சரவண பவானந்தனே.

மகமிக வியற்றினோர் சுதமகன் பதிசேர்வர்
மறுவில்கோ தானமிட்டோர்
மருவுவார் கோலோகம் வைராக்கி யப்பேறு
வைகுண்ட மாருமன்பின்
விகலமறு பத்திக் கரும்பிரம லோகம்வரும்
விஞ்சுசகு ணத்தினுக்கு
விமலனது சாலோக மணமவுன நிட்டைக்கு
மிளிருந் தபோலோகமெய்
புகலொரு விரத்திக்கு ரூபமா மாசில்குரு
போதைக்கு சுற்சமீபம்
பூர்த்திஞா னத்தினுக் கசிமுத்தி யென்றறிஞர்
போதிப்ப ரொன்றிலேனுந்

உ. தன் கது "தனகு" என வாயிற்று. கதுதல் = மனமகிழ்தல்.
ரு. மாதிரம் = திசை.

தருதியா நிற்கவொல் லாவேழை யேனுனது
தாடஞ்ச மெனநம்பினேன்
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
சரவண பவானந்தனே. (௪)

தலையா னடத்தல்கோ தானஞ் சதாசிவ
சரித்திரங் கானடையிடந்
தாவிப் பறப்பதுயர் சிவபூஜை வாயுகதி
தகவன்பர் பூஜைகுருமுன்
னிலைமனோ கதியெனு முன்னோர் நிகழ்த்தாளி
நேரெனத் தெரிதலாலே
நீநிமல பரமகுரு வாய்வந்து நானிற்கு
நிலைதாற் காமுபாயம்
மலைவான புந்தியுழி யறிகிலேன் மற்றொருவர்
வந்துவழி காட்டவுமிலை
வாரிதிகள் போலுள்ள நிகமாக மங்களும்
வழுத்துவ தனந்தபேதம்
தலைவனு முனைநம்பு நானிங்ங னென்செய்கே
னந்தோ தயாநேயமே
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
சரவண பவானந்தனே. (௫)

துர்ச்சங்க வர்ச்சித முதற்றலம் விவேகநுவல்
சுவடிகள் பயின்றுபழகல்
றுவிநில முவேடனை துமித்திடுதன் மூன்றெனச்
சொலுநில முணர்ச்சிமலர்தல்
பொற்புறுஞ் சதுர்நிலம் பிசிமறுத் தேதவம்
புரிதலைந் தாவதுநிலம்
போதநிகழ் திரிபுடி யவித்தத்து விதமதர்வு
பூப்பதா றுவதுநிலம்
தற்பர சிவானந்த வத்துநிலை நின்றவா
தானுநின் றிடுவதேழாந்
தலமென வுணர்ந்தநா னேழென்னு நிலைனயே
சாருமா றுனைநம்பினேன்
சற்சனர்க ளடிகளே யத்தையடை வழியைநீ
தாவென்று கண்டுவப்பேன்
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
சரவண பவானந்தனே. (௬)

உத்தம மகாமந் திரஞ்செபித் ததனிஜ
 முணர்ந்துமெய்த் தத்துவத்தில்
உள்ளம்வைக் கின்றமந் திரயோக மந்திரந்
 தொடுபிரா ணயாமமும்
நித்தனுஞ் செய்பரிச யோகமந் திரமின்றி
 நிலையாய தத்துவத்தில்
நெஞ்சமொன் றிடுபாவ யோகமுட லுலகெலா
 நேரின்றி மறையவிண்போற்
சித்தமிசை நன்குபா வித்திடு மபாவம்
 செகத்தைநினை யாதகத்திற்
சிவனையுன் னிடுமகா யோகமெனு வைவகை
 தெரிக்கின்ற ஞானயோகிற்
சத்துவவு னருளின்றி நானிற்க வல்லனோ
 சற்றுமச் சத்தியளியாய்
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
 சரவண பவானந்தனே.

நாமரூ பச்சகத் திந்திரிய விடயமா
 ணுடிந்திரி யங்கள்கரணம்
நான்கிற்கும் விடயமிந் நான்குமுணர் சீவற்கு
 நண்ணுவிட யஞ்சிவனும்
சேமமுயர் சீவசாட் சிக்குவிட யம்மது
 சிறந்தவறி விற்குவிடயம்
தெள்ளறி வெனுஞ்சேத னம்பிரம சைதன்னிய
 தெய்வத் தினுக்குவிடயம்
ஆமந்த வொருதெய்வ மொன்றிற்கும் விடயமா
 காதென்னு முப்பொருளிலே
அடங்கலா லாகமத் தீறறைபு மாறுனை
 யளர்வியுய விங்கெண்ணினேன்
தாமதஞ் செய்யாது கோடலுன் கடமையே
 சைவசம யச்செல்வமே
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
 சரவண பவானந்தனே.

துக்கமது தொலையவென் னிற்றேக மெனவுள்ள
 தொக்குமுத லொழியவேண்டும்
தொக்குமுத லொழியவென் னிற்சருவ கன்மமுந்

விக்கினப் படவெனி னிராகத் துவேஷாதி
வீடலுற வேண்டுமவை தாம்
வீடவென் னிற்றுராபி மானந் தொலைந்துகெட
வேண்டுமது போகவென்னிற்
பொக்கவபி வேகமது பொன்றலுற வேண்டுமது
பொன்றவெனி னஞ்ஞானவல்
போயொழிய வேண்டுமது போகவெனி ஞன்மசுக
போதமது திக்கவேண்டும்
தக்கபுக ழுடையவென் னப்பவிதை நானினிச்
சார்வதுன் னருடுறந்தோ
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
சரவண பவானந்தனே. (௯)

பிறப்பிறப் பென்பவை தரும்பல விருப்பொடு
பிணக்கார் வெறுப்பகன்று
பேதக வழக்குஞ் சழக்குங் கடந்துட்
பிணைந்தவிருண் மலமகன்று
விறப்பென்னு மச்சமு மகிழ்ச்சியு மகன்றுயிர்
விளங்குதரி சனமகன்று
மேல்கீழ் புறஞ்சிறிது பெரிதுநீ ளங்காலம்
வினையிரண் டொன்றெனுது
துறக்கமே லோர்புகழ் வியோமபரி பூரண
சுகப்பிரம மாமுன்றொடு
தோயுநா ளெந்நா ளெந்நா ளெந்நா ரேமோ
சொல்லியரு ளல்லலணையிற்
சறுக்கிநிதம் வீழ்கிறே னுளருண கிரியெந்தை
சாமியே யருணைமியே
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்னியாச
சரவண பவானந்தனே. (கo)

---

௬. இராகம், துவேஷம், இடம்பம், அகங்காரம் முதலியவைகளையே "இராகத் துவேஷாதி" என்றாரென்க. இராகம் = பரதாரகமன விருப்பம். துவேஷம் = பிறர் செய்த தீமைகருதி அதுபோன்றதை அவர்க்குத் தானுஞ்செய்யொரு தன்மை. இடம்பம் = பிறர்கண்டு புகழுமாறு பொருந்தாதளிக்குந் தானம் முதலியன. அகங்

# கஅ. ஆனந்த முகில்.

அன்னங் கொடுத்தவர்கண் முன்னநோ கச்சொன்ன
வனியாய மோவுணவிலே
ஆலமிட் டுக்கொலை புரிந்தபவ மோபெரிய
வடிகளை மறந்தவகமோ
தன்னையே பெரிதென வறைந்தவதி பாவமோ
சவைகளில் வழக்கோரமாச்
சாற்றிய வனீதமோ பொய்ச்சத்தி யஞ்செய்த
தாழ்வோ வனேகவுயிரைத்
தின்றதுரி தங்களோ திவ்வியகுண தெய்வம்வாழ்
சினகர மழித்தசெடியோ
திரிகரண சுத்தமில் லாதுமா மந்த்ரஞ்
செபித்தபிச கோவந்தனை
முன்னேற வொட்டாம லாணைபுரி கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. (க)

அண்டினவ ருக்கின்ன றந்தவ றேதுன்பி
லாதரித் திட்டவர்களுக்
கல்லகண் டஞ்செய்த கொடுமையோ நின்னடிக
ளடிவணங் காதவகமோ
சண்டாளர் தொடர்பினை விரும்பிய பிறந்தையோ
சாலப்பொய் சொற்றபிசகோ
சத்திரஞ் சாலைக ளழித்தபா தகமோ
சலத்திற் புணர்ந்ததவறோ
பண்டாய மறைகளைப் பழிசொன்ன பாவமோ
பகலிற் புணர்ந்தபுகரோ
பதிவிரத மல்குமட மகளிரைக் காதலிற்
படரும்வினை யோவந்தனை
மூண்டாள ளுக்கிமுறி யடிமைகொள் கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. (உ)

---

க. செடி = பாவம்.

உ. பிறந்தை = பிறப்பு ; இங்கே தோற்றுவாய் என்க.

சித்தநிலை மாறினோர் பொருள்கொண்ட குற்றமோ
தெய்வவிகழ் செய்தசெடியோ
சிசுவதை விருத்தியோ திருடிய கொழிப்போ
சிவாகம மிகழ்ந்ததீதோ
சத்தியச் சைவர்ப் பழித்தபிழை யோபரம
தன்மம்விற் றுண்டதவறோ
தான்சாக நஞ்சுண்ட தோடமோ சண்டாளர்
சாதிவினை செய்தகோதோ
சூத்திரஞ் செய்வாரை மெச்சிய பிறந்தையோ
கூலிகள் குறைத்தகுறையோ
கோபத்தை யேசதா நேசித்த பாவமோ
குடிகெட னைபயனோ
முத்திநெறி கூடாம லெனைவளைக் கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. (௩.)

வேதியரை நிந்தித்த தவறோ விவேகரற
வேட்கையை மறுத்தமறமோ
மெய்யன்பர் புரிவிழும நோன்புகட் கிடையூறு
விளையவினை செய்தபிறையோ
சூதகப் பெண்களைத் தொட்டகுறை யோதெய்வ
தூடணங் கேட்டபிசகோ
சொன்னசொற் றவறாது நடவாத தோடமோ
சூதுவழி நின்றபலனோ
பாதகத் தொழின்மூல மாடகந் தேடியுள
பாவமோ பாவியின்கைப்
பலியுண்ட பழுதோ சதாகால மாயெனைப்
படர்துயர்க் கடலமிழ்த்தி
மூதறி வுதிக்காம லாணையிடு கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. (௪)

படிகமுத வாலோபி யாகிவந் தோரகடு
பற்றவைத் துண்டபவமோ
படர்கொடி மரஞ்செடிகள் வட்கலுற வெட்டிப்
பலக்கே டிழைத்தபலனோ

௫. படிகம்=பிச்சை; பிங்கலநிகண்டிற் காண்க.

மடிநழுவு மின்கண்மேன் மனம்வைத்த மறமோவுன்
மாணடி மறந்தவடுவோ
மகத்தாய நிற்குமற் றொருதேவை யிணைசொன்ன
வழுவோ பொருட்பெண்டுகள்
கடிதடங் காணிமென வுள்ளிமனை விளைவிட்ட
கன்மமோ கருணையற்ற
கதைகளுக் கேசெவி கொடுத்தகறை யோவெனைக்
காமரோ டத்திருத்தி
முடிவில்கவ லைக்கலியின் மீதலைக் கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. (௭)

கள்ளுண்டு தள்ளாடி நின்றமதி மோசமோ
கஞ்சாவு மபினும்வெறியுங்
கைகண்ட கற்பமென வுண்டமதி கேடோ
கணக்கில்வஞ் சித்தகசடோ
பள்ளர்க ளெனத்தினம் வதஞ்செய்து புன்பிசித
பக்ஷணம் பணியபவமோ
பக்ஷமது பாராட்டி வைத்தபிறர் சொத்தைமறு
படியில்லை யென்றபழுதோ
உள்ளொன்றும் வெளியொன்று மாய்க்குத்தி ரம்பேசி
யூதியம் விழைந்தகரிலோ
உன்னுடைய தளிகளி லசுத்தம் புரிந்தடிக
ளுரைமீறி நின்றபிழையோ
முள்ளுமுள் ளாயெனை வடிக்கின்ற தேபரம
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. (௮)

பிரியலர்க் கிரிபாய பிழையோ பிதாவன்னை
பெண்டமர் மனக்கொதிப்போ
பெரியபொரு ளனுமுன்னை யிலையென்ற களுடமோ
பேயடிமை யானபுரையோ
பரதார விச்சையின் பலனோ துணைத்துரோக
பாவமோ குருசாபமோ

௭. காமர் = விருப்பம்; சே - திவாகரம் காண்க.

பத்திநெறி யாளர்ப் பிழைத்தபிழை யோநீதி
பல்கவகி லத்தையாளும்
அரசன்மனை குருவண்ணன் மாதுலன் றேவிகளை
யணையவுன் னியதீமையோ
அந்தணர்க் கிடுவதா யுறுதிமொழி செய்தவா
றளியா வரிப்போவெனை
முரணாய துன்பினுழை வித்தலைக் கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. (எ)

நாவிதர்வண் ணார்கூலி நல்காத பீடையோ
நங்கையர்கள் கொங்கைகண்மேல்
நயனங்க ளைச்செல்ல விட்டபிழை யோவிரத
நாளிற் பிணைந்ததீதோ
பாவலர்கள் சாபமோ பரமவுன் கோபமோ
பத்தர்கண் மனத்தாபமோ
பாலுண்டு புள்ளுவஞ் செய்தபழி யோதிவ்விய
பதிபூசை விட்டகுறையோ
கோவதை புரிந்தமா கொடுமையோ கன்றுகள்
குடிக்கின்ற பால்கறந்த
குற்றமோ விதவையைத் தொட்டவழு வோநல்ல
கொள்கைநிமி ராமலென்னை
மூவிழும மானகெபி யுட்டள்ளு கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா னந்தமுகிலே. (அ)

புனிதர்நெஞ் சங்கலுழ வசைசொன்ன கலுடமோ
பொய்ந்நூ றெரித்தபுரையோ
புருடர்மண மங்கைகளை மித்திரபே தஞ்செய்த
புகரோ பணத்தவாவால்
அணியாய நெஞ்சமுற் றலைகஞ் சுருக்கிவிற்
றகவோகை கொண்டவகமோ
அரன்விண்டு முதலியோர் நிலயநீர் நிலைகளி
லசுத்தம திழைத்தமறமோ

எ. அரிப்பு=குற்றம்; சூ - நிகண்டு காண்க.

சனிபோ லெனைத்தொட் டலைக்கின்ற தேகினது
தண்ணளியை யுள்கொளுமல்
தண்டமிழ்க் குறுமுனி பகீரத னிராகவன்
றண்டுமுனி வரன்வாசுகி
முனிவர்சுர ரெவ்வரு மிறைஞ்சுபது மச்சரண
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமோ னந்தமுகிலே.

சுத்தமா நல்லறிவு தோன்றாத பாதகன்
றுதைபொய் யுளேனென்னினுஞ்
சொல்லுறுதி யில்லாத பொல்லாத வஞ்சகன்
சூதக விநாசனெனினும்
பத்திநெறி பழகாத பாமரன் கொடுமையே
பண்ணுமுழு மட்டியெனினும்
பழிபாவம் யாவுமொன் ருகக் குழீஇயவொர்
பருவுரு வுளேனென்னினும்
எத்தனை சழக்கின னிழைத்திருந் தானுநா
னின்னுமறி யாதுசெயினும்
எப்படியு மாதரித் திம்முரு ளிகைத்துநீ
யெனையாள லுன்பரங்காண்
முத்திமுத லேபுகழ் படித்தகோ ளுடுமறை
முடிவான கர்த்தவ்வியமே
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமோ னந்தமுகிலே.

---

## கக. குகப்பிரமம்.

---

அண்டபகி ரண்டங்க ளைத்தம் வயப்பட
வடக்கியெதி ராளியிலராய்
அரிபோல நெடுநா ளிருந்தரசு செய்தபே
ரரசர்பெரு வாழ்வுமமுதம்
உண்டதே வர்க்குரிய கோனுய் விளங்கொருவ
னுத்தியு நிலைப்புறுமல்

---

கO. துதைதல் = செறிவு, மிடைதல்; நெருக்கமுமாம்.
க. "உத்தி" இதன் பொருள்—கசு, கO - ன் குறிப்புரையி லுளது.

ஒழிந்தவிவ ரத்தைப் புராதன புராணங்க
ளோதுண்மை கண்டிருந்துந்
தண்டிகைக ளும்பல்க ளுகைத்துவெகு ஜம்பமொடு
தாணியி லிருந்தவர்களுந்
தலம்விட் டலங்கோல மாயதை யறிந்துஞ்
சதாமாசை யாசைதனிலே
மண்டிமன மடிகின்ற மாயமென் சொல்லுவேன்
மனமாசு போழுமெந்தாய்
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. (க)

உன்னருள் பெருமலிவ் வுலகினி லிருக்கும்வரை
யொழியுமோ தீயசெய்கை
ஒழிவதின் ருெழிவதின் றுடுபதிக் கலைபோல
வொன்றினுக் கொன்றுமேலாய்
மன்னியே நாளுக்கு நாளாய் வளர்ந்தாதன்
மறலிகை யாயபின்னும்
வரும்பிறவி தோறுமதி புன்கணை தந்துநனி
வாதிக்க வல்லதன்ருே
அன்னைகுரு தெய்வமா யுள்ளமுதல் வாவிந்த
வவதிக்கு ளெனைவிடாதிவ்
வம்புவியு மாசினியு முன்ருச னென்னவோ
ரபிதான மேதையீதி
மன்னுயி ரனைத்தையு மணைத்தா தரிக்குமொரு
வள்ளலே நல்லவுறவே
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. (உ)

உள்ளன் புளார்மிக்க வசைபேசி யேசிடினு
முன்செவிக் கின்பமேயவ்
வுள்ளன் பிலாரமித துதிகளைச் சொல்லினு
முனக்கரு வருப்பாதருெட்
டெள்ளளவு முள்ளன்பி லாதவென் றுதியுனக்
கேறுமோ விழியுமோவென்
றேங்குகிற தேமனந் தேம்புகிற தேதின
மிரக்கமுற் றென்றுபிறிதோர்

---

க. உம்பல்=யானை.
ஜம்பம்=இடம்பம்.

கள்ளமன தைக்களைந் துள்ளன் புறச்செய்து
காதலா கக்கலப்பாய்
கத்தனே நித்தனே சித்தனே சுத்தனே
கதிகருது வோரெவர்க்கும்
வள்ளலே மெய்யன்ப ருள்ளமுத வெள்ளமே
மங்காத மணிவிளக்கே
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே.

காயா புரித்திமிர கானத்தி னுளுநிமிர்
கபடப்புன் மேய்ந்துதினமுங்
காமத் தடாகத்து நீர்குடித் துயர்வெருட்
கடுவழி திரிந்துலாவித்
தேயாது வளர்பஞ்ச வண்ணவசு வத்திற்
சிறந்தவை ராக்கியமெனுஞ்
சேணநா லங்கவடி யென்பன சுமத்தித்
திறம்பியெவ் வாற்றினுஞ்
சாயாது புத்தியங் கடிவாளம் வாயிற்
றறிப்பித் திவர்ந்துமௌனச்
சவுக்கா லடித்துசித மேலூர் நடைக்கணே
சலசலென நானடத்தி
மாயாத சிற்சபையி னடுவே குதித்துன்
மலர்ப்பதங் காண்பதென்றோ
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே.

ஆசைப் பிசாசென்னு மனதையொரு மந்திரத்
தசையாது கட்டிநல்ல
அறிவதனை யொட்டியே பதுமா தனத்திடை
யமர்ந்துநடு நாடிபற்றி
ஏசற்ற வாதார தேவதைக ளத்தனையு
மிதவோடு தரிசித்தவண்
எந்தாய் பராசக்தி யருள்கொண்டு மூலத்
தெழுந்தகுண் டலிசத்திதான்
இசைதரு மாறுகீழ் மேலாக வுள்ளதுளை
யொன்பானு நனியடைத்துள்
ஒருவழிப் பட்டரிய கண்டங் கடந்தமுத
மூண்டுமிளிர் வாயில்வழியாய்

வாசமுட னேசென் றகண்டமதை யெய்துசக
மார்க்கம தெனக்குமாமோ
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. (ரு)

இரவிலுட லயர்வுபடு நித்திரையி லுறுகன
வெவற்றிலு முனைப்புகழ்வதொன்
றில்லாத வெவ்வளவு விபரீத வேடிக்கை
யேற்றியென் னிருதயத்திற்
பரவவினை புரிகின்ற மனதைநா னேசவோ
பாழ்த்தவம் மனதையங்ஙன்
பண்ணினவ ரார்கொலென் றாகிக்கி னீயெனப்
பகரவிட னுண்டாமதைக்
கருதியுன் மீதுகுறை கூறவோ வெங்கணுங்
கருதருஞ் செயலெவைக்கும்
காரணமு மாயதற் கப்புற மெனச்சொலொரு
காரணமு மாகநிற்கும்
வரைவிலா வுன்னையுங் குறைகூற வெப்படியென்
மனதினிது சம்மதிக்கும்
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. (சு)

அகிலமிசை வதிதருஞ் சருவவுயிர் களுமிந்த
வவனிதனின் முன்பிறுகை
ஆசைமலி விற்றேடி யுளவினை யிரண்டினையு
மனுபவித் துத்தீருதல்
இகமறுமை களிலுமுண் டெனமறை யுரைத்தபடி
யாம்பாவ மீட்டினமையால்
இன்று வெனுங்கருங் கடலிலே வீழ்ந்தன
மெனக்கருத வெனினுநாளும்
புகழ்ந்துனை நினைந்திட்ட புண்ணிய மெனுந்தோணி
பொள்ளென வெடுக்கவுளதாற்
புரையற்ற கரைசேர லாமென்ற நிச்சயம்
பொய்யா துதிப்பதன்றி
மகிமையருண் முன்வினைக ளிலையென்ற தீர்வையென்
மனதைவிட் டகலவிலையே
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. (எ)

## குமரகுருதாசசுவாமிகள் பாடல்.

சிங்கார மாருன்ன தக்கோபு ரத்தினது
சிகரத்தி லடைதுகளையுங்
திடமுடை நெடுங்கடலை யேறிநா றிப்புதுமை
திகழவே செய்யலாமொண்
சங்கூரு மாழ்வாவி வதியையமா னவர்செய்
சமர்த்தினுல் வெளியேற்றலாம்
தலைதனை யளாவியொரு மிதமில்குப் பைக்குவடு
தரையினின் றிடினுமதனைச்
சங்கார மாக்கவெரி மூட்டலா மென்பெசந்
தசைகளா லேசமைந்த
சரீரத்தி லுளவழுக் கத்தனையும் வெப்புறு
சலம்பெய்து கழுவியிடலாம்
மங்காத வாபாச மனமாசை நீக்கவொரு
வழியில்லை யுனையன்றியே
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே.

பொறையென்னு நற்பசும் பயிர்கருக் கிடுமனற்
பூடென்னு நோனுமையைப்
பொருந்தாத பெரியோர் சரண்பேணு மாதரம்
புந்தியிற் கொண்டவெற்குக்
குறைவிறுதி யெத்துணையு மில்பெரிய வின்பவருள்
கூர்ந்துமெய் யறிவினின்று
குருமொழி யுணர்த்தியசி பதகதியு நல்குமொரு
குருதெய்வ மதுவேயெனு
மறைமுறை யிசைத்தவண முதல்வழி கொடுத்துநடு
வழியினீ யென்னைவிட்டு
மறைகின்ற காரண மியாதோ வறிந்திலேன்
மயலற விளக்கியருளாய்
மறையவனு மிறையவனு மரியமரை யிதலையனு
மனதிடை யவாவின்பமே
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே.

---

அ. எசம் = சிறுநரம்பு; "ஸ்நஸா" எனும் வடமொழி விகாரமாம்.

கூ. நோனுமை = பொறுமை.

ஆதரம் = ஆசை.

பொய்வாழ்வு வையகம் பொய்யென் றடங்கவென்
புரைமன தடங்கிநிட்டை
புரியவொரு காலத்து நனிகண்டி லேனெனது
புதையிடை யிருந்துநிமிரும்
மெய்வாய் கணாதியிந் திரியங்க ளெல்லாம்
விரும்பியென் சம்மதத்தை
மேவியோ தூங்குகின் றனவிவை யனைத்துக்கு
மேலாய துட்டமனது
செய்கைவிட் டுள்ளடங் கித்துரிய நித்திரை
செயுங்கொலோ செய்திடற்குச்
செய்யுமொரு தந்திரஞ் செய்யவென் றுனுநான்
செய்யும்வகை யேதுமறியேன்
மையல்கொண் டருணகிரி வந்தித்த கடவுளே
மயறபுத் தென்னையாளாய்
மதிவளரு மிதயமரை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. (௧0)

# ௨0. பூரணாநந்தகுகன்.

காணமுயர் மணிகொடு வனைந்தமுடி தன்னைக்
கரோடிமுடி யிற்றரித்தோர்
கண்டனைக டண்டனைகள் செய்துபுவி யாவையுங்
கைவயம் பண்ணினாலும்
ஊனுருசி பல்குமறு சுவையொடு நுகர்ந்துவிள
ரூறித் தடித்தயாக்கை
ஒளியெழி றிளைக்கின்ற தருணமங் கையர்மைய
லுற்றுமென் பஞ்சுபெய்த
சேணமிசை யுயர்திண்டு தலையணை பொருந்தவஞ்
சிறுமிகளொ டாடலாடித்
தெவிட்டாத வானந்த மீதெனச் சிந்திப்பர்
தேகத்தை நைக்குநிழல்கள்

---

௧. காணம்=பொன்.

கரோடிமுடி=சிரசு ; கரோடி=சிரசின் அஸ்தி ; நிகண்டு - அமரஸிம்ஹம்
ரண்க.

பூணியல்பு போக்கியுயிர் போகா திருப்பர்கொல்
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே.

ஆசிலா நன்னிருவி கற்பச் சமாதியை
யடைந்துபே ரானந்தமாம்
அமுதுண் டிழுக்காத பேறுபெற வேதனையி
லாவாச னாக்ஷயமொடு
நாசமின் மனோநாச முந்துணிசெய் தத்துவஞ்
ஞானமும் வேண்டுமென்று
நவிலரிய வேதாந்த நூல்கிளக் கிடுதலா
னவைக ளைப்பொருந்தித்
தேசுகிள ருன்றணைச் சேரநீ பெரியவருள்
செய்தியொரு செயிருமில்லாச்
சின்மய விலாசமே யென்மனதி லூறுநற்
றேனே யதீதரென்றும்
பூசைபுரி பரமகா ருணியப் பிழம்பே
புராதனா தீதவெளியே
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே.

சுழல்கதலி போலவே யுழல்கின்ற மனதைச்
சுவாபப் படுத்தியநனே
சும்மா விருப்பதரி தரிதென வசிட்டமுனி
சொன்னதா வாசிட்டநூல்
கழறுவதி னானுமன் னணநல்ல கல்விமுறை
கற்றுச் சதாநிட்டையே
கருதியவொர் தாயுமா னவர்சொன்ன தானுபிக்
காசினியி லெவருமதிலே
பழகமுடி யாதென வபக்குவர்கள் பின்னிடைவர்
பகருள வறிந்தநானுன்
படர்கருணை வலியினதை யெவ்விதத் தும்வசம்
பண்ணாது விடுவதுண்டோ
பொழிகின்ற தண்ணளிக் கொண்டலே யின்பப்
பொருப்பே யபேதவுணர்வே
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே.

தேயநனி துவளுறுத லீரரும் பப்பணந்
தேடிவெகு பாடுபட்டுச்
செத்தபிற குறுமனுர்க் கொருசிறிது முதவாத
தேவிமக வுறவுகண்மேல்
தாயவளி மிக்குவைத் திட்டுநினை விட்டுமா
தாபத்தி லேயுழன்று
தனுவினிற் பிணியுற்று விரிபாய லொட்டிவன
றருமனதி காரத்தினால்
ஆயவிவ் வுலகைத் தணந்தபின் னிரயத்தி
லாழுவா ரறிவில்லிகள்
அச்சமு மயக்கறிவு மிச்சையு மழுக்காறு
மாங்கார வாபாசமும்
போயின வெனச்சிந்தை மகிழ்வார்க ணெறிகருது
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே. (ச)

அண்ணனின் மனதினுக் கருவருப் பாயுள
வலாபக் கொடும்பாடலை
அமையுமிசை யிற்பாடு பொழுதுதன் றலைதனை
யசைத்துவெண் முறுவறெரியக்
கண்ணைமே லேசெருகி யிதழ்வா யிழித்துநிமிர்
காயநடு நனிகுலுக்கிக்
கரமசைத் தத்தம் பிடித்துட் களிக்குங்
கசட்டுப் பெரும்பாவியை
நண்ணியுற வாடியிசை கேட்பவரு மேபாவ
நாடுவா ரவருடம்பை
நசிக்கவரு சன்னியி னிழுப்பென வலைக்கவது
நசைஇக்க ணுற்றகண்ணைப்
புண்ணென் றுரைத்திடவு மாசங்கை யென்கொலோ
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே. (ரு)

மங்கள குணுளமுரு கையவுன் பெரியவருண்
மல்கத் துறந்தபெரியோர்
வரிற்சென் றழைக்கலா மிருசரண் பணியலாம்
வட்டத்தின் மேல்வைக்கலாம்

ச. தேயம்=உடல்; பி - நிகண்டு காண்க.

அங்கழலி லம்புதம் பெய்யலா மெய்யெலா
மலர்கொண் டருச்சிக்கலாம்
அரும்புகை கொடுக்கலா மஞ்சோதி காட்டலா
மாசிகூ றிப்புகழலாம்
சங்கையோ டின்னமுத மேந்தலா மண்ணிலே
சற்சங்க நீத்தகுடிலச்
சதியாளர் பெருமூட ரவநிந்தை யினர்மோகர்
சற்சனர்கள் போலமுதிய
புங்கவர்க ளூலமேன் மைக்குவா யாலே
புலம்புநர்க் கிவைகளாமோ
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே.

நில்லாத யாக்கையினை நின்கருணை யான்விட்டு
நிலைகொள்ளும் யோகிதன்னை
நீதமே குடிகொண்ட நீதிபர னென்னலா
நித்தியா னந்தனெனலாம்
உல்லாச சற்காரிய சம்பன்ன னென்னலா
மோதரிய வள்ளலெனலாம்
உலகமுழு துங்கட்டி யாளிறைவ னென்னலா
மோவாத செல்வனெனலாம்
சல்லாப சகசசம் போகியென லாமதி
தயாளகுண சீலனெனலாம்
சதியாளர் பொருள்கவர் பொருட்டவர்க் கிங்கெனுரு
தடையின் றளப்பிலாத
புல்லறிவி னற்றுதிகள் சொல்வரிழி புல்லரே
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா னந்தகுகனே.

மெய்யான வாறெழுத் துண்மையை யுணர்ந்தொளி
வெளிகண்ட வருளாளனை
வேளைப் பழித்தவழ காயதுரை யென்னலாம்
வித்தைக்கு வித்தென்னலாம்
தெய்வமதி திமிர்திவ்விய குருவென்ன லாமிக்க
சீர்பெருகு தன்மனெனலாம்

---

ச. குடிலம் = வஞ்சம்.

திருமகள் விலாசமுத லாளியென லாம்வண்மை
திகழ்சார்வ பூமனெனலாம்
தொய்யாத தோள்வலிச் சதுரனென லாமின்மை
தொடாராத பிரபுவெனலாம்
தோமில்பர பாக்கியச் சாமியென லாநலுந்
துய்யநெறி யாளனெனலாம்
பொய்யான காமிகட் கிம்மொழிகள் சொல்லவோ
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரண னந்தகுகனே. (அ)

மூலமுத லாதார மாறிற்கு மேனிற்கு
மூதண்ட வெளிகண்டமா
மோனசன காதியரை யொத்துளார் தம்மையே
முற்றும்விட் டவரென்னலாம்
சீலசிவ ராச்சிய மகத்துக்க ளென்லாம்வி
சேடசிற் கண்ணரெனலாம்
தேடரிய நம்பரம குருதெய்வ மெனலாமெய்
திகழ்பெரிய வறிஞரெனலாம்
காலமொரு மூன்றுமுணர் போதரென லாநல்ல
கடவுள்கர்த் தவ்வியமெனலாம்
களிபெருகு பரமுத்த ரென்னலா மிடிமையிற்
காவியுடை வீக்கிமிக்கோர்
போலப் பிதற்றிவரு வார்க்கிவைகள் சொல்லவோ
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரண னந்தகுகனே. (௯)

இனியவட மொழியமுத முண்டுதென் மொழிவார
மென்றகட லைக்குடித்தோ
ரிணையிலா வுன்சரிதை கூறும்வலி கொண்டன்பி
லேறுமொரு கச்சியப்பர்
மனதிடை வதிந்தபொரு ளோவீணை நாரதன்
மனக்கவ றபுத்தபதியே

௪0. "ஊரி லான்குணங் குறியிலான் செயலிலா னுரைக்கும்
பேரி லானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரி லானுயிர்க் கடவுளா யென்னுளே நின்றான்."

என்பது முதலிய நறும்பாட்டுக்களுங் கச்சியப்பர் கந்தபுராணத்திற் காணப்படல் கருதி,

மாணு றெழுத்துச்ச ரிப்பவர் நினைப்பினை
மதித்தரு ளருட்பரவையே
கனிமலர்க டந்தம்பர் நளிர்நிழல் செய்யருங்
கானமார் மலயமுனிவன்
கருதுமொரு கடவுளே கருணைபெரு கருணகிரி
கவிகளி லமர்ந்தபரம
புனிதனே குமரகுரு தாசனென வெற்குமொரு
புகழ்தந்த வாபுணர்ந்தாள்
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணு னந்தகுகனே.

---

## ௨க. குந்துகால்.

---

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தந்தனன தந்ததான

அம்புதநி றைந்துவிரி வெண்டிரையு லம்புவிழு
மம்பெருகு குந்துகாவில்
அந்தணர்வி ரும்புமலர் தந்திடும ரம்பலவ
டர்ந்திடவ ளம்பொயாத
பம்பரமு றழ்ந்தவிர்கு ரும்பைகட ருஞ்சிறு
பசுந்தழைசெ றிந்தகேளி
பம்பிநிழ றந்திடவ மைந்தகளி யின்ருணை
படுஞ்சடைநி லந்துழாவச்

---

" அன்பிலேறுமொரு கச்சியப்பர் மனதிடை வதிந்தபொருளே " என்னும் லீடாலீட நியாயந் தழுவுகின்ற இந்நூலாசிரியர் கூறிக்கொள்வாராயினர். இதுகொண்டு அப்புராணக்கூற்றனைத்தும் அங்கீகரித்தார் இவரென்றல் கூடாது. என்னை? சேவியற் வுறாஉவில் அப்புராணத்தார் கொள்கைகளை யெடுத்துக் கண்டித்தனராகலின். குமாரசுவாமியின் மகிமைகளை இனிதுணர்த்தும் ஸ்ரீமத் - குமாரசுவாமியம் என்னுமொரு காவியம் ௬ - வது மண்டலமாக இவ்வாசிரியாருளிச் செய்தமையும் அதுபற்றியே யெனற்கு ஐயமொரு சிறிது மின்றே.

க. அம்பு + உதம் = அம்புதம்; சங்கு பயக்கும் நீரொனும் பொருண்மைத்து. அம்பு = சங்கு; நிகண்டு - நாநார்க்கவர்க்கங் காண்க. உதம் = நீர் - ௨-நிகண்டு காண்க

செம்புநிற வம்பரம ணிந்துகர மொன்றிலொரு
தெண்டதுவி ளங்கவாசச்
செங்கழலி லொண்குறடி லங்கவளி யன்பர்க
டினந்தினமி றைஞ்சிவாழச்
சம்ப்ரமமு டன்றிகழ ருந்தவணி ரும்பரம
சங்கரிப யந்தசூர
சண்டன்முரு கன்குமர னென்றுதொழு கின்றவர்கள்
சஞ்சலம கன்றுபோகும். (க)

தன்னத்த தத்ததன தன்னத்த தத்ததன
தன்னத்த தந்ததான

கம்மற்சி மிக்கிமிலை மென்மெய்ப்ப ரத்தையர்கள்
கண்மைக்க கன்றுமோக
கன்மப்ப வக்கவையை யுண்மைப்ப தத்திறைமை
கண்ணிச்சி றந்தவீர
அம்மைக்க டுத்தலையி னுன்னித்த றிக்குமுர
மண்ணிக்க டிந்தருத
அந்நிற்க மெய்ப்பரம நன்மைப்ப யிர்ச்செயுந
லன்மக்கள் வந்துசேரும்
செம்மைச்சி வப்பிதழி மென்முட் கடுக்கைபுனை
தென்மொய்த்த குந்துகாலில்
சின்முத்தி ரைக்கரமு டன்மத்த கச்சடைநி
லன்முட்ட நின்றதேவை
இம்மைக்க ணூற்றிறுதி யின்முற்ற ளிக்குமிறை
யெம்மைக்கொ ளந்தகாரி
யின்மைத்து ணிக்குமுரு கென்னத்து திப்பர்துய
ரெண்ணிப்ப றந்துபோகும். (உ)

தனதனன தானதன தனதனன தானதன
தனதனன தானதனன

அமரர்களை யேவல்கொள வதிவலிமை சானிருத
ரறவொர்கணை யேவும்விறலோன்
அனலியின மீளிதவ வியன்மருவி ராகவன
தணையெனுமொர் சேதுவிடையே

---

உ. கடுத்தலை = வாள்; சே – திவாகரம், பி – நிகண்டுங் காண்க.

விமலவிரை மாமலர்க ளவிழுமடர் காநிறையும்
விரதர்குவி காவினரிதீர்
விசதமலி நீருருவ முழுதுநனி தோயவெழில்
விளைவிரத வேடமொடுவாழ்
சுமவதன மாமுனியை யரிமருக வேன்முருக
சுரர்நரர்கண் மாதவர்கடாந்
தொழுமிளிரு நீலனும வியிலிவரு மீசவறு
சுடருமொரு சோதிவடிவாக்
குமரகுரு தாசனிதம் வழிபடுசு ரேசசிவ
குருபரசு வாமியெனவே
குணமொடுச தாநணுகி யடிபரவு மானுடர்கள்
குறைகடுகி யோடியிடுமே.

தனதாந்த தந்தன தனதாந்த தந்தன
தனதாந்த தந்ததான

முடிபூண்ட மண்டலீ கருமாண்டொ ழும்பருன்
முடைமாந்து கின்றபேயின்
முகையாங்க ணங்களோ டுருண்மாந்து ரும்பையார்
முனியாண்டி யும்பனுனும்
அடியாம்ப தங்களே தொழவூங்க லர்ந்தபூ
வணிவேய்ந்தி லங்குவேணி
யதுதான்று லங்கவே யணிசான்ற செங்கைமீ
தடல்சேர்ந்த தண்டமோடு
வடிவேய்ந்த வண்டுபா டடர்பூங்க டஞ்சதா
வளர்பாம்ப னென்றதீவுள்
மடனீண்ட கந்தகே தகையீந்து சம்புமா
மணலோங்கு குந்துகாவிற்
குடியாண்ட மர்ந்ததே வனையாம்ப லந்தனர்
குழைநான்ற கொன்றைசூடுங்
குழகார்ந்த வொண்கணாள் பொருள்சேர்ந்த னென்றுளே
கொளுநமாண்பர் துன்புபோகும்.

௫. குந்துகாலென்பது காலெனத் தலைக்குறை விகாரமாயிற்று.
௬. ஊங்கு = மிகுதி. கடம் = காடு.
கேதகை = தாழை.
ஆம்பல் = யானை; ஆகுபெயராய் அதன்கோவிற் காயிற்று

உப்பேறு சிந்துத்தி ரைத்தூவல் விஞ்சிப்பொ
றொப்பாய்ம லிங்கெதங்குமா
ஒப்பேறு மண்டிட்டு றச்சேத ரங்கிற்க
ணுட்காவி ருங்குந்துகால்
எப்போது நன்குற்றி டக்காவல் கொண்டத்த
வெஃகோடி யங்கும்பிரான்
எட்டேறு பந்தக்கு ழுப்பாற வன்பர்க்கு
ளெக்கால முந்தங்குவோன்
அப்பாவு சந்தத்தி லிப்பாவி ளம்பிக்கொ
ளத்தாவெ னுங்கந்தவேள்
அஃகாத வின்பத்த ருட்டேவ னென்றுட்கொ
ளச்சோடி றைஞ்சன்புளோர்
தப்பாது துன்பற்றி மிழ்ப்பாவி னஞ்சொற்ற
தக்கோனு ரங்கண்டரோ
சற்போத சம்பத்து மெய்ப்போக மும்பெற்றார்
சத்தாவ ரிங்கங்குமே. (ரு)

---

முருகப்பெருமானையே பாடு நியமம்பூண்ட இந்நூலாசிரியர்க்கு இளமையிற் றிரமிடம் பயிற்றுவித்த வுபாத்தியாயராய முனியாண்டியாபிள்ளையவர்கள் தாம்பூஜிக் கின்ற முனியையே முருகெனப் பாடவேண்டுமென்ற வேண்டுகோட்காக அவர் இவ் வைந்து செய்யுளையும் இளமையிற் பாடியருளினரென வறிக.

பொருளுஞ் சந்தமுஞ் சிறந்த இவ்வைந்து பாடல்களையுங் கருதிய அவ்வூரி லுள்ளாருட் பலர், இந்நாடு தோன்றிய காலந்தொட்டு இக்காலங்காறும் இங்கொரு புலமையோர் இவரைப்போலத் தோன்றினரென்றற்கும், இளமையிலேயே ஆன்ம லாபம் விரும்பி நின்றாரெனற்கும் யாதானும் ஓராதாரவில்லை யாகலின், இவர் செய்கை வியக்கற்பாலதே யென்று பேசிக்கொள்வாராயினர்.

---

ரு. சேது = சேதுவாகிய திருவணையில்,

அரங்கிற்கு = கடற்கரையை,

அண் உள் கா = அண்ணிய சோலையுள் எனப்பொருள் கொள்க; கு - உருபை ஐ - உருபாகத் திரித்துக்கொள்க.

அரங்கு (ரங்க) ரங்கம் என்னும் வடமொழி விகாரமாம். ரங்கம் ஒலியுடைக் கடலுக்கிலக்கணையாம். உரிய பொருளை விட்டு அதன் சம்பந்தியை யுணர்த்துவதை இலக்கணை யென்ப. "குமரகுருதாசர்" என்னுஞ் சிறப்புப்பெயர் வாய்ந்த இந்நூலா சிரியர்க்கு இருமுதுகுரவராய தந்தை தாயரா லிடப்பட்ட பிள்ளைத் திருநாமம் "அப்பாவு" ஆகலின் அஃதிங்குக் கூறப்படுவதாயிற்று. அச்சிறப்புப் பெயர் போந்த விவரம் அடிகள் திவ்விய சரித்திரத் தறியற்பாற்று.

இமிழ்ப்பா = ஒலிப்பா = திருப்புகழ்ச் சந்தப்பா.

# ௨௨. கதிரேசன்.

---

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அன்னை தந்தையுனை யன்றி யிப்புவியி
லாரை யும்புகற னீதியோ
அந்த ணற்கரிய பிரண வப்பொரு
ளகத்தி யற்கருளொ ரடிகளே
தன்ன கந்தனை யறிந்து நாடுநர்
தமைப்பு ரக்குமரு ளிறைவனே
தற்ப ரிக்கினிய புத்ர னேயமல
சிற்ப ரக்ககன வட்டமே
என்னை யாளுமுறை பன்னி மேவுமுனை
யென்று கூடினனி வாழுவேன்
ஏக னேபரம யோக னேயுலக
மெங்கு மல்குபரப் பிரமமே
கன்னி வந்தமனம் வென்ற பேதநிலை
கண்டு ளாரடையு மின்பமே
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னைகதி ரேசனே.

அணிகி ளர்ந்தபரி பக்கு வத்திலொழி
யாண வக்கருளு மாக்கைநல்
கவத ரந்தகு பிரேர கப்படுமுன்
வங்க மாகவுள கன்மமும்
பணிகெ ழுந்துவி மலத்தி னர்சகலர்
படிவ மாயுறு மசுத்தமும்
படிறின் ஞானகல ருடல்பி ரேரக
மெனச்சொ லும்பரம மாயையும்
துணிமல் குன்னையறி யாவ ணந்திரைசெய்
தொழில்வி ளைத்திடு திரோதையும்

---

௧. கல் நிவந்தமனம் = கல்லென வளர்ந்த மனம்.

கதிரையீசன் என்பது "கதிரேசன்" என மரீஇ வழங்கப்படுவ தாயிற்று. கதிரை = கதிர்காமம்; இலங்கைத்தீவி லுள்ளது.

௨. அசுத்தம் = அசுத்தமாயை.

தொல்லை யைந்துகளை யாமி வற்றுளிரு
தொழில்பு ரிந்திடு திரோதைதான்
கணித மில்லுனை விரும்பு வாரிருள்
கடத்து மெற்குமருள் செயவருள்
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னைகதி ரேசனே. (உ)

நாச மெய்துசட மேய்ப்ப வாதனையு
நாதன் செய்புதுவ தாவெணி
நவில ருங்கரும சனன மில்லையென
நவிலும் வாதிகளிவ் வுலகிலே
ஆசி னல்லவய வங்க ளாகவு
மலக்க ணரவைகள் பழுதுமாய்
அமைய வந்தமுறை மைக்கு மூலம
தறைந்தி டார்புவியின் மாண்டுளார்
ஈச னணைசெலு நரக சொர்க்கநிலை
யெய்தி மீளுவதை யில்லையென்
றியம்பி னலெளிது வலிதி லாதநடு
வாமெ னுந்துணிவு மோர்கிலார்
காசி னிக்கணிவர் நடையை நின்னடியர்
கருது வார்கொலோர் கனவினும்
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னைகதி ரேசனே. (௩)

எப்பொ ருட்குமிறை நீயெ னக்கருதி
யெந்த வேளையு மிறைஞ்சிடும்
என்னை நீதவற விட்டி டிற்புவியி
லென்ன மேன்மையுள னுண்டெனக்
கொப்ப ருதநவ சித்தர் சந்ததமு
முன்ன னேக்கியதி ரேகமே
உறும னந்தவித மாய சித்திக
ளுவந்த ளித்தகிரு பேசனே
அப்ப னேசரத முத்த னேகயிலை
யத்த னேயரு ணிருத்தனே
அன்பர் கட்கழிவி லின்ப நல்குபர
மாத்த னேயுனது ளாட்பருட்

கப்ப லேறுபு பிறப்பெ னுங்கடல்
கடக்க வோர்கருணை செய்குதி
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னுனகதி ரேசனே.

கூடம் வெஞ்சின முலோப மென்னுமதி
கோது காய்த்திடு பலாசியைக்
குடில மோகவலர் வாளி யானுலவு
குற்சிதம் பெருகு பாத்தியைக்
கீட மொய்த்தளை யிடங்க ரைக்கொடிய
கிருது நாய்வதி யரங்கினைக்
கிருபை யென்னுமுய ரருளி னுக்கயல்செய்
கேத வூற்றெழு மசும்பினை
ஏட லற்றவறி வீனர் நாளுநிலை
யென்றி ருந்துகடை நாளிலே
இன்னன் மேவியுரி சட்டை தன்னையிவ
ணென்ன தென்றினு மிருப்பனோ
காட கத்திரையை யூட றுத்துனது
களியி லுய்யவருள் செய்குதி
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னுனகதி ரேசனே.

மிடிபொ றுத்தசமு சார வல்லலில்
விழுந்த ழுங்கிமன நோயினுன்
வெய்ய வேதனை யடைந்து மாமிச
விழுப்ப டர்ந்தமல வாக்கையிற்
குடியி ருந்தவர்க ணிலைக லைந்துரிய
கூடி மூப்பினும் வினைப்படிக்
கும்பி பாகமெனு நிரய மண்மியஞர்
கொள்ள நேரிடு மெனுவுன
தடிப ணிந்துகுறை கூறி நிற்குமெனை
யாத ரித்தருள வேண்டுமால்

---

ரு. கூடம்=வஞ்சம். பலாசி=மரம்; பலாசீ - வடசொல்.
பாத்தி=சிறுசெய்.
இடங்கர்=நீர்ச்சால், குடம்.
கிருது=செருக்கு. அரங்கு=மனே விகற்பம்.
ஏடல்=குறிப்பு, நினைவு.

அறிவி னுக்கறிவு மாய னந்தமறை
யறிவ தற்கரிய பெரிதுமாய்க்
கடிய ரத்தமணி யுருவு மாயிலகு
கரவி லார்கள்குல தெய்வமே
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னுனகதி ரேசனே. (சு)

என்று மீறில்கதி சொல்லு நான்மறையு
ளௌசுரெ னும்பழைய மறையிலே
இசைய நின்றுநவில் பிருக தாரணிய
மெனும்வி சேடவுப நிடதவாக்
கொன்றி லேயுளப டிக்கிம் மேதினியி
லுய்ப்பி ராணிகளி லெவரெவர்
உள்ளு ளேயெவண மெவண மெண்ணிடுவ
ருறுவ ரேயவண மவணமால்
குன்ற லற்றநினை யறிவி லாதமடர்
குறைவெ னக்கருதி மாண்டனர்
கூறு மென்கணுமவ் வாறு சூழுணர்வு
குறுகு மோவடிமை கொண்டபின்
கன்றெ னக்கதறி நின்ற வர்க்கருள்செய்
கபிலை யேகருணை வள்ளலே
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னுனகதி ரேசனே. (எ)

அங்கி மேலினி திருக்க வுஞ்சிருண
மாய தைச்சுவண மாக்கவும்
அகில முட்குழி யகழ்ந்தி ருக்கவு
மனந்த லோடுண வொழிக்கவும்
மங்குல் விண்ணிடை நடக்க வும்படன
மாக வெம்முறையு நுவலவும்
வான தீதர்களை யேவல் கொள்ளவு
மலிந்த சித்திக ளுளார்களும்
பங்க மற்றவெளி கண்டு கொள்வர்கொல்
பதம்ப ணிந்தருள் படைத்தவர்
பார்த்தி டற்கருமை யல்ல வேயெனது
பரிவி லூறினிய வமிர்தமே

அ. சிருணம் "சிருணம்" எனக்குறுகிற்று. சிருணம்=செம்பு; பி - நிகண்டு
காண்க.

கங்கு லெல்லென விலாவ கண்டசுக
 ககன மேககன வட்டமே
காம நாசர்குரு நாத னேயமரர்
 கர்த்த ஞானகதி ரேசனே.

வறுமை யென்றொர்பிணி யிற்பி ணங்கிமன
 மறுகி வாடுவ தலாதுழல்
மனது சித்திர விளக்கெ னச்சமைய
 மாத்தி ரைப்பொழுது மறிகிலேன்
சிறுவ னைச்சிறி தணைக்க வென்றுனரு
 திருவு ளத்தினி திருந்திடிற்
சித்த மிப்படி மயங்கு மோபுரையில்
 செல்வ மென்னையு மொறுக்குமோ
அறிஞர் தம்மிரு தயச்ச ரோசவளி
 யதைய ருந்திமகிழ் தும்பியே
அதுவி தென்றுகரு தாத டங்குபிர
 மானு பூதியி லனுபதம்
கறையி லாதில கஞ்சு யேயெனரு
 கரிச றுத்தருள்செய் தெய்வமே
காம நாசர்குரு நாத னேயமரர்
 கர்த்த ஞானகதி ரேசனே.

அஞ்சு ரும்புவிழு முண்ட கக்குரவ
 னப்ப னுக்கிளைய சேயெனும்
ஐங்க ணைக்கிழவன் வந்து லாவுமக
 மான விச்சட மெடுத்துநான்
பஞ்ச ரப்பறவை போல வீதறுதி
 பட்ட பங்கமது போறுமால்
பாவ நாசமெனு நின்வி ழிப்பரிசு
 பற்றி யென்றனைக ளாயுள
பஞ்ச பாசமு மறுத்தெ னைப்பெரிய
 பார்வை கொண்டுதரி சித்தவண்
பரம ஞானயறிந்த ளாவிமிதை
 பாற்று மார்க்கமினி வேண்டுமீ

க. மறுகல் = சுழலல்
 சரோசம் = தாமரை ; ௬ - நிகண்டு காண்க.
௧0. பஞ்சபாச விவரம் — இப்பத்துத் திருப்பாடலுள் உ - ஆந்திருப்பாடலிலறிக.

கஞ்ச வீயடியி னருளி னின்றுபுகழ்
கழறி னோற்கருள் புரிந்துளோய்
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னுனகதி ரேசனே. (௧o)

---

## உரு. சரவணபவன்.

---

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இந்துள மாமலர் சந்தத மணிபர
மேந்த்ர ஷடாநநமின்
இலகு துவாதச ஹஸ்த சரோருக
வேரல ரம்பகமா
மந்திர வேலவ சுந்தர சேகர
மண்டல குண்டலகோ
மாகதர் புகழ்கிரு பாகர சீதர
மாலரி சோதரியின்
மைந்த குணாலய வண்டர் செனுபதி
மங்கல மஞ்சிதநன்
மாதவர் சேதன காரண பூரண
மான்மக ளன்பகுக
கந்த பராபர சந்திர நூபுர
கண்டக ரந்தகவெண்
காடுறை வோர்குரு நாத வெனக்கருள்
கனசர வணபவனே. (௧)

மிக்க சுவேத விடைக்கட வுட்கு
விருப்புடை யேணமலே
மெச்சிடு வர்க்கருள் சித்ர விசித்ர
விலாச சதாவிசத
முக்க ணுருத்திரை யற்புத வித்தக
முக்ய வுமைக்கினிய

---

௧. பரமேந்த்ர—வடநூன் முடிபு.
சரோருகம்=தாமரை.
மஞ்சித—மஞ்சு+இத எனப்பிரித்துக் கொள்க. மஞ்சு=அழகு. இதம்=உரிமை.
௨. விசதம்=வெண்மை; இஃதிங்கே தூய்மையை யுணர்த்தும்.

முருக வரைக்குற மகண்மரு வத்தமுன்
முதலவ வித்துருமச்
செக்கர் நிறப்பத முத்தைய சத்திய
செச்சை மணக்குமெழிற்
சிந்துர வடிவ சிகாவள வாகன
சிற்பர தற்பரசேய்
உக்க விலோதன நித்யகல் யாணமெய்
யோக தயாளகுண
ஒப்பறு விறலயி லிறைவ வெனக்கரு
ளொருசர வணபவனே.

பங்கய வம்பகி ப்ண்டு மனோன்மனி
பந்து முகைக்கெளரி
பரம சொரூபி விலாச வுலாச
பராபரை யாதிசிவ
சங்கரி சங்கரி தங்கை மணந்தரு
தாரணி காபாலி
தருண சகாய குணங்கெழு நாரி
சதாநட ஞனந்தி
புங்கவி யம்பிகை யின்ப சுமங்கலை
புன்க ணிலாயுவதி
புதுமல ரணிசிவை தனய பகோதய
பூரண வாரணசீர்
தங்கிய கிண்கிணி தண்டை சிலம்பு
சதங்கை முழங்குமிரு
சரண வெனக்கரு ளிகபர நாயக
சயசர வணபவனே.

செங்கனி வாய்வரை மங்கை செளந்தரி
திங்க ளியங்குமதி
சித்ர நகைச்சிவ சத்தி பருப்பதி
செப்பு முகைக்குமரி
மங்குலின் விஞ்சிய கொந்தள வம்பிகை
மஞ்சுள மாமகிஷ

---

உ. குறமகள் மருவத்த=(மணவினையாற்றலிற்) குறமகள் காம்பொருந்திய கா முடையாய்.

உக்கம்—(உஷ °) உத்கம் என்பதன் விகாரம்; பொருள் அக்கினி எனவாம். விலோதனம்=கொடி.

ந. பகோதய என்பதில் (ஸம °) பகம்=ஞானம்.

மர்த்தனி நிர்த்தனி பத்மினி சற்குணி
மன்னு பணுபரணி
துங்க துரந்தரி யிங்கித மங்கள
சுந்தரி வாமிமகா
சுத்த மெய்ஞ்ஞான சொரூபி பவானி
சுதந்தரி முதன்மாதா
எங்கு நிறைந்த நிரந்தரி நந்தன
வென்ற னுயிர்த்துணைவ
இருடிக ளோத சுரேச வெனக்கரு
ளிடுசர வணபவனே. (ச)

சேம நலங்கிளர் சாமளை கோமளை
சீலி மகாநூலி
செல்வ ஹிமாசல செல்வி யகாரி
சிகாத வகோரிநறுங்
கோமள கும்ப பயோதர சண்டிகை
கோல வராகிசுத
கோடி ரவிப்ரபை வீசு முடிப்பர
குடிலை யருட்புவனை
மாமலம் வெந்தழி யீம மிருந்திடு
மாதரி யெண்டோளி
மயிலை விழிக்கரு ளாகரி நந்தன
மால்பிர மர்க்கரிய
சாமி யெனுஞ்சய வீர வரோதய
சமய சகாயவருட்
சாகர மாமொரு நாத வெனக்கரு
டருசர வணபவனே. (ரு)

பாம்பணி யந்தரி யந்தர வும்பர்
படர்ந்து வணங்கமரி
பாமக ளுஞ்சுக சீமக ளும்விரி
பார்மக ளும்புகழுஞ்
சாம்பவி யெண்குணி யோங்குபு ராந்தகி
சந்தத கல்யாணி

ரு. சண்டிகை=காளி; இங்கே சிவசத்திக்காயிற்று. காளி பெயர் துர்க்கை பெயர் காணுந்தோறும் இப்பொருள் கோடலே மரபாம்,

தாதகி சண்பக மாலிகை புனைகுண
சாலி மகாகுலி
காம்பர விந்த வயற்றரு தந்தைம
காகடல் வண்ணனரிக்
கண்ண னெனுந்திரு விண்டு சகோதரி
காதல வோமுருக
தேம்பொலி நீப வலங்கன் மிலைந்திடு
செந்திறன் மொய்ம்பவருஞ்
சேகர சேகர தேவ வெனக்கருள்
சிவசர வணபவனே.

ஆகவ வீர நிசாசர யூக
மழுங்கி மடிந்திடவும்
ஆதவ னம்புலி நாகம் வசுந்தரை
யாவு நலங்கொளவும்
மாகர் வணங்கு திகம்பரி திரிபுரை
வண்டன வழுதுணவும்
மலைவிலி தந்த மகாசுக சுந்தர
மைந்த மகாமௌன
யோக கிருபாகர சாகர தேசிக
வோவிய வேலவநல்
லொண்மை மிகுஞ்சிவ சம்பிரம சங்கர
வொளிர்பதி னெண்கண்ண
ஏக பராபர சீவ தயாபர
வென்று மிளங்குமர
என்னுயிர் நாயக மாகிய மாமயி
லிவர்சர வணபவனே.

குழவி விதுக்கிடை நம்ப னறும்புனல்
கொன்றை யணிந்தசிவன்
குஞ்சித பாத னெனுஞ்சபை நாதன்மு
குந்த னவாமுசித
அழகொழு குங்குக சாரச லோசன
னை வருந்தமனும்
அறைமறை வாணியி னோர்வல நான்முக
வந்தண னும்புகழுந்

அ. சாரசம் = தாமரை; ஸாரஸம் வடசொல்.

கழலயி ராணி யனுமய வாரணி
காரணி நாரணியொண்
கைலையை யாள்சிவ காமி சுகேசுரி
கான்முளை யாயமரர்
தொழுவுள சண்முக தேவ கிராதர்
சுவாமி யெனப்பணியுஞ்
சோதி நிலாவு சொரூப வெனக்கருள்
சுகசர வணபவனே. (அ)

ஏர்பெரு குந்தட லங்கையை யாளு
மிராவண காதகன்வல்
விகல்கெட வேயடர் கீசக சேனையொ
டேகிய ரகுராமன்
பார்புகழ் பஞ்சவர் நேச சகாயகோ
பால பிரான்மருக
படாறு கசமுக னுரனிமிர் சிவகண
பதியிறை மகனுயி
சீர்வளர் பருவத வர்த்தனி நந்தன
சிவபிர ணவசாமி
சிவசம யவுறுவர் கருது மஹேச
சிலம்பல றுஞ்சரண
நீர்நில மாருத மாதிர மழலுயிர்
நிலவிருள் வளிகளிடை
நிறைசரு வேச குமார வெனக்கரு
ணிஜசர வணபவனே. (௯)

ஓதிம மேசில் பிகஞ்சிவ றூதுண
மொகர மூலாவுவளம்
உயரோர் சிவேதை மலைக்குறு முனிவ
னுவந்து பணிந்தபத
நாத வுபாசகர் நேச கிருபாகர
நாயக மாமௌன
ஞான நிதான சதாசிவ தாரக
நாயகி மாதேவி

---

௧௦. ஓதிமம்=அன்னம். பிகம்=குயில்.
சிவல்=சிவலென்னும் பறவை. தூதுணம்=புறா.
ஓகரம்=மயில்.
சிவேதைமலை=தென்மலை ; சிவேதை=தெற்கு.

காதல பாதல பூதல மீதல
காரண மாயையுமுதால்
கருணை மலர்ச்சிவி னருணை கிரிக்கொரு
கதியருள் சிற்கடவுள்
பூத சைந்ய புராண புராதன
போத விலாசவருட்
போக சமாச விசாக வெனக்கருள்
புரிசர வணபவனே.

---

ஆகப்பிரபந்தம் இருபத்து மூன்றினும் போந்த திருப்பாடல் — உ0௧
தெய்வணக்கச் செய்யுள் ரு
ஆகத் திருப்பாடல் உ0௬

---

## உச. நவரத்தினமீக்கூற்று.

---

சந்தப்பா.

தந்தன தானன தந்தன தானத்
தந்தன தானன் தான தான
தந்தன தானன தந்தன தானத்
தந்தன தானன தான தான—தன தான

இந்துப கீரதி தங்கிய வேணிக்
குன்றவி லானருள் பாலா சீலா
இந்திரை யாளனெ னுந்திரு மாலிற்
கின்புள மாமரு மானே தேனே மயிலேற
இந்துள மாலையி லங்கிடு மார்புக்
கந்தகிர் பேசவி சாகா நாகா
எங்குநி லாவிட னந்தர தேசுக்
குண்டல மாமறை மூலா சாலா வடிவே
அந்தமி லாதவ சுந்தரை மீதிற்
றெருந்தரை யேதரு தீதே றுதே
ஐம்பொறி சேர்மன மிஞ்சவி டாதுட்
கொண்டவர் காணும காபோ தாறு புரப

---

௧0. பூதசைந்யம்—வடநூன் முடிபு. சைந்யம்=சேனை.
௧. வசுந்தரை=மண்ணுலகு.

அம்புய யோனிய ருந்தொழில் பேணிக்
கொண்டவ னேமதி நாதா நீதா
அம்புநி சாசரர் கும்புகண் மாளத்
திண்படை யேவிய வீரா தீரா வெளியேனுன்
இந்திய வாதைகண் மண்டுத லானற்
சிந்தனை வாடுபு கூகூ கூகூ
என்றுக ணீர்விட லுன்பெரு நீர்மைக்
கொன்றும ரோவைய வாவா வாவா விரைவாயே
எங்கணு மேயது ரந்தர மேதைத்
துங்கப ராபர வேதா தாதா
என்குரு வேயரு ளன்பர்ச தாநச்
சின்குரு வேபர மாயா வீயா நெடுவாழ்வோய்
சந்தத நீயெனு ணின்றுகெ டாவப்
பந்தமெ லாநனி தீதீ தீதீ
சம்புச தாசிவ வம்பர மீபொற்
செங்கழன் மாமலர் தாதா தாதா சருவேசா
சங்கரி யாயிநி கம்பரி காமர்ச்
சுந்தரி மாலினி சேயா தூயா
தண்டமிழ் மாமுனி கும்பிடு கோலப்
பங்கய பாதப கேசா வீசா விறையோனே. (க)

தனதன தானத் தனத்த தனதன
தனதன தானத் தனத்த தனதன
தனதன தானத் தனத்த தனதன—தனதானு

அறுமுடி மேவத் தரித்த முடிகளொ
டலர்முக மாறிற் சொலிக்கு மொளியையும்
அழகுள காதிற் றொடுத்த குழையையு மணிமார்மேல்
அனலி நிலாவைப் பழித்த புணியையு
மளிவிழு வாசக் கடப்ப வரியையும்
அயில்வடி வேல்கைப் பரித்த வெழிலையு மரைமீதார்
செறிமணி யாரச் சரப்பெ ருமையையும்
விரைகமழ் தாளிற் றொனிக்கு மரவொடு
கிகிணிசை நேருற் றிருக்கு மியலையு மொருபாலே

---

க. மாலினி=காளி.

உ. கடப்பஅரி=கடப்பமலர்மாலை. அரி மாலையென்பதை ரகரவேதுகையிற் காண்க.

அரவு=சிலம்பு.

சிலைநுத லாள்வச் சிரத்தன் மகளையும்
ஒருபுற மேனற் குறத்தி தனையுமொர்
தெருளொடு காணக் கிடைக்கு நெறியினி — னடவாமே
மறுநெறி யாளர்க் குரித்து மிகவுள
மடர்சொ லுலாசப் பிதற்ற லிடையுழல்
மனமதை வீணிற் செலுத்தி யனுதின — நிலையாமோர்
வழிதெரி யாமற் சகத்து வெறியெனும்
இருவினை யாசைப் பரப்பு ளினும்விழ
வலைதனை வீசிப் பிணிக்க விறனம — னுகமாய
முறியவ னாகித் திகைத்தி டுதலல
தடியவ னாகிப் பிழைத்தி டுதலெனும்
முடிவறி யாமற் பதைக்கு மெளியன — திடர்தீராய்
முகிலன கூரற் படைத்த வுமையவள்
திரிபுரை கானக் குசத்தி கரமமர்
முருகசரோசப் பதத்து விமலவெ — மிறையோனே. (உ)

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன—தனதான

நெடியவெ ழுநரலை கொதிகொள வுமலைகள்
கடகட கடெனநி லமிசைவி ழவுமவ
னியுநப முமுழல வுமசுரர் பரிகரி — தவிடாயே
நிகழும முலனவி கிரணமு மூதுமறை
யநிறைய வுமமரர் சயசய வெனவவ
நிசெர ரலறியு ளுயிர்விட வுமொரயில் — கொடுவீறு
கொடியக ரிமுகவன் வரைமுக னுரமுள
வரிமுக னசுரரி னரசனொ டவனடர்
குலமுழு வதுமற நிமிடமு ளமர்தரு — மொருவீர

உ. கூரல்=பெண்மயிர். குரால் என்றுங் கூறுப.
காணம்=வாசனை. “காடுங் கந்தமுங் கானென மொழிப” என்று பிங்கல
நிகண்டு கூறுதலானே “கான்” எனவுஞ் சொல்லப்படுகின்றது.
௩. கரிமுகவன்=தாரகாசுரன்.
வரைமுகன்=மலைவடிவ கிரௌஞ்சன்.
அரிமுகன்=சிங்கமுகன்.

குளிரல ரடவிசெ றிவரைத னிலுறைகு
 றவர்மக டணையருள் விரகொடு மருவிய
 குமரகு ருபரச ரவணப வருகவ னகநாதா
படியிடை யனுதின மறநெறி யொழுகியு
 னிருசர ணிணையவு மருளது பெறவும்வி
 பலநினை வொழியவு மருள்புரி கிறவிதி யறியாயோ
 பகவதி மதுபதி விமலைய மலைதிரி
 புரைபரை புவனைக வுரிகும ரிபதுமை
 பயிரவி யருமறை தொழுசிவை மரகத வயிராணி
அடிகள்ச னனிபிர யுதரவி யொளிவிடு
 கயிலைம லையில்வளர் சடையரன் மனமகிழ்
 அரியவு மைமுருக னெனுமிமை யவர்பணி பரமேசா
 அகிலம திலலையு மவலம னதையுள
 வடியனு னையறியும் வகையையு ணரவினி
 அருள்புரி யருள்புரி யெழிலுறு மறுமுக விறையோனே. (ரு)

தனன தந்தன தானன தந்தன
 தனன தந்தன தானன தந்தன
 தனன தந்தன தானன தந்தன—தனதானு

உசித வம்பல வாணர்வி ரும்புப
 கவதி யம்பிகை மாலினி மங்கள
 உமைப ரம்பரை யாமளை சங்கரி சகன்மாதா
 ஒளிரி ருங்குய வாரியை யந்தரி
 யமலை குண்டலி தேவிதி கம்பரி
 ஒசிம ருங்குடை நாரிம தங்கியின் மருமானே
கசமு கந்திகழ் சோணித வைங்கர
 முடைய வன்றுணை வாவெகு சுந்தர
 கனக குண்டல சீதள சண்முக சகதீசா

---

ரு. "விரகொடு மருவிய" என்னுந் தொடர் அத்துவைத உபாயத்தோடு உடங்கியைந்து நின்ற என்னும் பொருளைத்தரும். விரகு=உபாயம் என்பதைப் பொருந ராற்றுப்படை கOஅ - ஆமடியி னுரையிற் காணலாம்.

சனனி=தாய்.

பிரயுதம்=பத்துலக்ஷம்.

சு. மதங்கி=காளி. மாதங்கி யென்றுஞ் சொல்லப்படுகிறது.

மருமான்=மகன்; ஆ - நிகண்டு காண்க.

ககன வும்பர்கண் மேயுவ ரந்தைக
டொலைய வெஞ்சின மாயவண் மைந்தர்கள்
கடக கங்கண மோடவர் வன்கைகள் — பொடியாய
நிசித வெஞ்சர வாளிசொ ரிந்தொரு
நொடியில் வென்றவ னேயரு ளென்றுனை
நினையு மன்பினெ நாளுமி றைஞ்செனை — மகினோடே
நிதம ளிந்திட ரேதரு கின்றதி
தகல வின்றொரு பாயமி டும்படி
நினைவ ணங்கின னேயிது சங்கதி — யறியாடே
பசியெ ழுந்தழு தானத ருந்திட
மிகுப யங்கர மோகொளு மென்றனை
பலவ கந்தைகள் யாவுமி ரிந்தற — வருடாா
பலகு ரங்கிகள் போலொளி ருந்திரு
முகந றுங்குற மாதைம ணந்தருள்
பரவ வெங்கணு மாகநி றைந்தவெ — மிறையோனே

தனனதன தனனதன தனதந்த தத்தனன
தனனதன தனனதன தனதந்த தத்தனன
தனனதன தனனதன தனதந்த தத்தனன — தனதான

கரியகுழன் மிசையலர்கண் மிகவுந்த ரித்துபய
செவிகளிடை நறியசெவி மலர்நன்க மர்த்தியளி
கமதிலொளி பெருகுசிறு திலகங்க ளிட்டுமுகை — யுரமேலே
கனகனக பணியணிக ளவையுங்கி டக்கவிரு
கரமருவு வளைகள்கல கலவென்றொ லிக்கவரி
கலசமெயி றுயர்சிகரி களைவென்று முட்டுமிரு — முலைவாரா
சரிகைகளி னரிகள்பள பளவென்றி மைக்கவரை
தனில்கலையி ரதனமணி கிரணந்த ரச்சிறிய
சரணமிசை பரிபுரப ரியகஞ்சொ லிக்கநெடு — மறுகூடே
சபரவிரு விழியசிய யிலினுங்க திக்கநகை
களின்மறுவி லரிநறிய தாளம்பி றக்கவன
சமலர்முக மதிவினிய குழகங்கு திக்கவிடை — துடிபோலே
தெரியவிள வனமனைய நடைகொண்டு தக்கபயி
லதுவிளைய வுலவுகையின் மயறந்தெ வர்க்குமனு
தினமனையு முறைமையுழி யுளசெம்பொ னத்தனையும் — வருமாதே

௨. குரங்கிகள் = சந்திரர்கள்.

௫. பரிபுரம் = பாதகிங்கிணி. பரியகம் = காற்சரி.

செயும்வகைபல் பணியளவில் விசனங்கொ டுக்கவுள
பழிமனதை யுடைமகளிர் சுகநஞ்செ னக்கருது
தெளிவையினி நினதடிமை பெறவுன்றி ருக்கருணை யதுதாராய்
அரியதிரு வரிவிதியு மமரங்தொ டுத்தபொழு
தரைநொடியி லருணகிரி வடிவொன்றெ டுத்தசடை
அரனுடைய விடமருவு முமைசங்க ரிக்கினிய முருகோனே
அசுரருர நெறிவுபட நடனஞ்செய் நற்பசிய
தழைஞமலி தனிலிவரு மகளங்க சித்தனென
அடிபுகழு மடியவரை யுளநின் றளிக்குமரு ளிறையோனே. (ரு)

தாந்த தந்தன தாந்த தந்தன
தாந்த தந்தன தாந்த தந்தன
தாந்த தந்தன தாந்த தந்தன—தனதான

நீண்ட சம்பம கேந்தி ரன்களை
யோங்கு மங்கமெ லாம்ப கம்பெற
நேர்ந்த துந்துணி சான்ற சந்திர னொளிதானே
நீங்கி யஞ்சன மாங்க ருங்கறை
சார்ந்த துங்கடல் சூழ்ந்த லங்கையில்
நீண்ட சண்டையி னுண்ட கண்டக னடியோடே
மாண்ட துங்கபி வேந்த னெஞ்சிலெ
லோன்கு லன்களை பாய்ந்த துங்குண
வாஞ்சை மிஞ்சிய பாண்டு மைந்தர்கள் பகைராசா
மாய்ந்த துந்தவர் நோன்ற செந்தவ
மோய்ந்த துங்கடி யாங்கு மும்புகள்
தோய்ந்த கொங்கையர் வீம்பி னென்றிருண் மலநூறோர்
ஆண்ட வன்கழல் சேர்ந்த தொண்டர்க
டேர்ந்த றைந்ததை யோர்ந்து கொண்டவென்
ஆந்த ரங்கநி ஜாம்பு ஜந்தனில் வளர்தேவே
ஆழ்ந்த தண்கடல் போன்ற கங்கையி
னீந்தி வந்தகி லாண்ட மெங்கணும்
ஆண்ட ருந்தவர் வேண்டு சங்கரி யுடையோர்வார்

---

சு. முன்னைப்போல் வருத்துமியல்புடை அரக்கர் கண்டகர் எனப்பட்டனர்; கண்டகம்=முள்.

பூண்ட தின்சுதை மாந்தி யிந்துளம்
வேய்ந்து புங்கவர் வேண்டல் கண்டொளிர்
பூங்க ரந்தனின் ஞாங்கர் கொண்டடு களனூடே
போந்தெ திர்ந்தவர் சாய்ந்தி றும்படி
காய்ந்த கந்தசு ரேந்த்ர நின்கழல்
பூண்ப தந்தர வேண்டு மெங்குல விறையோனே. (௬)

தானன தானத் தனத்த தந்தன
தானன தானத் தனத்த தந்தன
தானன தானத் தனத்த தந்தன—தனதான

பூவையர் மோடுற் றிருக்க வுந்தட
மாகிய தாலத் துதிக்க வும்பல
பூடண மேலிற் றரிக்க வுந்தவழ் சிலபோதே
போளியு ளுவைப் புசிக்க வுந்துக
ளேறிடு தூசைத் தொடுக்க வுஞ்சிறு
போதக ரோடெக் களிக்க வும்புவி நடைகூடா
மேவிய சோரித் துவக்கெ லும்புள
பூதிய மோடிப் பெருக்க வுஞ்செழு
மேதைக ளூறித் தடிக்க வும்பொது மகள்வீடாம்
வீதியி ராவிற் கிடக்க வுந்தெளி
வாளிகள் காணிற் சிரிக்க வும்பொரு
வேள்சர மார்பைத் துளைக்க வும்பெரு மயலாமா
ஆவலின் மாதர்க் கலக்க வும்பிதிர்
தேடிய காசைத் தொலைக்க வுங்குடி
யார்பல ரேசிப் பழிக்க வும்பின குரியோர்தாம்
ஆடவ டேடிப் பிணிக்க வுஞ்சமு
சாரமு ளாடித் திகைக்க வும்படர்
ஆமய மீறிக் குறைக்க வுங்கடை சியிலேமா
தீவிர மாகக் கணிச்சி யந்தக
னுதனை நாடிப் பிடிக்க வும்புதை
தீமுது கானிற் படுக்க வுங்கரு நுழையாமே
சீதள நாரைத் துதிக்க வுஞ்சுக
வாரியை வாரிக் குடிக்க வும்புகழ்
சேரரு டாசிற் சபைக்க டம்பவெ மிறையோனே. (எ)

தத்தத் தத்தன தத்தன தந்தன
தத்தத் தத்தன தத்தன தந்தன
தத்தத் தத்தன தத்தன தந்தன—தனதான

தட்டச் சக்கிரி யைப்புனை சங்கரர்
பக்கத் தூற்றிணை யற்றொளி ரம்பிகை
சத்துச் சத்திப ருப்பதி தந்தநன் முருகோனே
தத்தித் தத்திதி தத்தத திங்கண
தத்தித் தத்திதி தத்தத திங்கண
தத்தித் தத்திதி தத்தன வென்றெழு னடமேதான்
எட்டுத் திக்குந டித்தசி கண்டியி
லெக்கிப் புத்தமு தக்கனி யென்பது
தொட்டுப் பொற்புவி சுற்றிய சம்ப்ரம சகதீசா
எற்கைச் சத்திபி டித்தசு ரன்கக
னத்துக் குப்பைகண் முற்றுமொ ழிந்திட
இட்டப் பத்தர்த ழைத்திட வந்தசண் முகதேவே
சுட்டுக் கொட்டைப ரப்பியி லங்கையொர்
பத்துச் சிரமு டித்தலை யன்றிரள்
சுற்றத் தைக்களை விட்டடல் கொண்டவன் மருமானே
துக்கத் தைத்தெறு பொற்கிரி செந்தில்வ
ளத்தைப் பெற்றுயர் பொற்புறு குன்றுகள்
சொர்க்கத் துக்கண னைத்துமி ருந்துள குருநாதா
பட்டுப் பட்டமு ளைத்திடு மங்கமெ
டுத்துப் பெற்றப லத்தினை யண்டர்வி
பத்துச் செற்றுள சித்தம றிந்தது மிலையோமா
பக்கத் தைப்பெறு மிச்சைம லிந்தவெ
னைச்சுத் தத்துழி வைத்தரு ளன்பர்கள்
பத்திக் குட்படு பெற்றிகொ ளெண்குண விறையோனே. (அ)

தனதன தானந் தனதன தனதன
தனதன தானந் தனதன தனதன
தனதன தானந் தனதன தனதன—தனதான

நவமணி யார்சந் திரவரி புனைபத
முடையகு காசுந் தரவுர மதிலதி
நறைசொரி நீபம் புரள்சுர பதியெனும் வடிவேலா

---

அ. தட்டம்=பாம்பின் நச்சுப்பல். சக்கிரி = பாம்பு.
மருமான்=மருமகன்; பி - நிகண்டு காண்க.

க. சந்திரவரி என்பதிலே சந்திரம்=பொன்.
அரி=சிலம்பினுட் பருக்கைக்கல்; ஆகுபெயராய்ச் சிலம்பிற்காயிற்று.

நறுமமு தோர்சந் ததமடி பணிமுத
லவமறை யாவுந் துதிபணு மொருபதி
நடனவு லாசம் பெருகிடு மவையமர் — நடநாத
எவர்தொழு தானுந் திருவரு டருமிக
பரகுரு வேகுன் றவர்மகண் மகிழ்வுற
எழின்மயி லேறுஞ் சரவண பவசிவ — சுகதேவ
எனையொரு போதும் பிரிவற விருளென
வுறைமலம் யாவுங் கெடுகெடு கெடுகெடு
இகலிடர் யாவுஞ் சுடுசுடு சுடுசுடு — மலைவாய
கவலைகள் யாவும் பொடிபொடி பொடிபொடி
தொடர்பவம் யாவுந் தடுதடு தடுதடு
கமழ்பத நாளுங் கொடுகொடு கொடுகொடு — பரிவாலே
கனைகடல் சூழும் புவியிலு னடியவ
ரிருதய மேவும் பரமசின் மயமிகு
கடிமண நாறுங் குழன்மலை மகளுமை — முதன்மாது
சிவையணி யார்சங் கரிபயி ரவிதிரி
புரைபரை மீனங் கணிமர கதவலி
சிலைநுத லாரம் பிகைபுடை யொருதிரு — முருகோலே
திசைமுக னுர்தங் கெருவம ழியவுயர்
பிரணவ மாகும் பொருளைவி னவனக
சிறுமையி லாவின் பருணகி ரிபுகழ் — பிறையோனே. (க

---

# உரு. உட்பகையொழிக்கமனு.

---

நாற்பத்தெண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அங்கமுடை யங்கதே சத்திலள வற்றவறி
வானந்த வாரிகவியும்
அனுதியா யுளதிரு வனந்தபுரம் வதிதந்
ததீதமணி மௌலிசூடி.
அல்லலை யொழித்தினிய வமிழ்தத்தை யூட்டுநிலை
யறனெனுங் கோல்பிடித்துள்
அறிவரும் பேரருளி னுலிலகு மொருசுத்த
வரியா சனத்தினிதிருந்
தண்டாடி பரவிடவு மன்பாக மகிழ்வுறவு
மன்பைவா னெனவளர்த்தி

அசலமென வுளபுவன மெங்கணு நிலாவுதண்
ணளிவிழி களைப்பரப்பி
அரசது புரிந்திடும் பரமசிவ சண்முகா
னந்தவற் புதவிலாச
அத்துவித பூரணப் பரமரா சாதிரு
வடிச்சமூ கத்தினுக்குச்
சங்கைகொ ளவித்தைமா நகரிடை வசிக்குஞ்
சதாசிவ மதத்திலுபய
தசவயதி னுட்படப் பாவெனுங் குமரகுரு
தாசனென் போனியன்ற
சாட்டாங்க தண்டன் சமர்ப்பித் தனேகதுதி
தந்தகத் தினும்வணங்கிச்
சரதமா யெழுதிந்த மனுவென்னை யென்னிற்
சதாநா னிருந்துவந்த
தலத்தைக் கடந்துசஞ் சலநகரை யெய்தியதி
சங்கடப் பட்டதற்பின்
சரியில்லை யிங்கிருப் பதுநமக் கென்றெந்
தலத்தினைக் குறுகியெளியேன்
தயைகிளரு மருளோயர் தயவுசிறு வரைகொடத்
தலமே யிருந்துகொண்டு
சந்ததமு முறைவதற் கீச்சுவர பத்திமைத்
தம்பத்தை நாட்டியதன்மீ
மங்காத பாசவை ராக்கியவளை போட்டுநிறை
மதியெனுங் கூரைவேய்ந்து
வருகின்ற வமையத்தி னுட்டயன் மருங்குகளில்
வாசமது செய்துவந்த
வஞ்சக மிகுந்தகா மத்தேவ னொருவனிழி
மகனுய முனிவனொருவன்
வன்னெஞ் சுலோபநா யக்கனொரு வன்பொரு
மதச்சேர்வை காரனொருவன்
வசைகொண்மோ காசாரி யொருவனுத வாதபொறை
மங்கப்ப பிள்ளையொருவன்
மாணுதி வருடத்தி னைந்தா றெனப்பகர்
மகாசட்ட திட்டங்களை

---

க. உபயதசம் = இரண்டுதசம் = இருபது.

மதியாது வந்தவர்க டெட்டநட் டாருடன்
வளைந்துசின் னுபின்னமா
வாய்பேசு முன்னரே பெய்த்துன்னை யாரடா
மனைகட்ட விட்டவரெனுக்
கங்குகரை யில்லா வலாபப் பெருந்திரைக்
கடலிலே யெனையமிழ்த்திக்
கரையேற வொட்டாதம் முனிவனவ் வாழ்கடற்
கரையருகிருந்துகொண்டு
கையோடு கையறைந் ததரங் கடித்துவிழி
கள்சிவந் திடவிழித்துக்
காட்டிவா தவிடுபொடி யாக்குவ லெனுஞ்செவ்வி
கடவுளர் திருக்கருணையாற்
கண்ணினுக் கெட்டாம லோடிவந் தேன்விறற்
கசடரை விடாதழைத்துக்
கழறியுள சட்டப் படிக்குநிமிர் நீதியொரு
கடுகளவும் விலகாமலே
கண்டித்து ஞாயங் கொடுத்தெனது கண்ணினுள
கம்பலை யொதுங்கியிரியக்
கருணை கடாக்ஷவரு ளாலெந்த நாளுநனி
காக்கப் பிரார்த்திக்தனே.

---

## உகூ. பெரும்பேறு.

இருபத்துநான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவளர் பரங்கிரி திருச்செந்தி லஞ்சோலை
திருவேர கம்பழநிமா
திரங்குன்று தோறுட லென்றனைப் பயம்பாழ்
சேர்திருத் தணிகைபொதிகை
சித்தர்மலை கந்தகிரி திருவேங்க டஞ்சிறிய
திருமலை விராலியோங்கல்
திருவுரு விலங்கல்ராஜி தாசலங் கழுகோதி
சிவசயிலம் வேள்வியசலம்

---

க. சின்னுபின்னம் என்னுந் தொடரைச் சின்ன அபின்னம் எனப் பிரித்து குள + ஆம்பல் = குளாம்பல் எனப்புணர்ந்தவாறு சின்னுபின்ன மெனப்புணர்ந்து தமிழ்நூன்முடிபாம். சின்னம் = அடையாளம், அபின்னம் = ஒன்றியிராமை எனு பொருள் காண்புழி உருத்தெரியொண்ணுது கேடிழைத்தமை கொள்ளப்படும்.
க. பொதிகை = பொதியம் என்பதன் சிதைவு.

மருவளரு மேருகிரி சிசயில நீலகிரி
மயிலநா கஞ்சிகண்டி
மலைகொல்லி மலைபன்றி மலையருண கிரியென்னு
மலைபுள்ளி ருக்கும்வேளூர்
வள்ளியூர் குமரகோட் டங்கொடும ளூர்கதிரை
மகிமைசால் சமராபுரி
வனப்பே றிலஞ்சிந லரிப்பா டுடுப்பைநகர்
மதுகைவே லூரெண்கணூர்
குருவள ரரும்பூண்டி நன்செய்நிமிர் மேட்டுக்
குடித்தலந் தில்லைமுதலாங்
கோவில்களி லும்பரம பத்தர்களி னிருதய
குசேசயங் களினுமுறைவாய்
குயிலரிய வண்டங்க ளெங்கணு மிருப்பாய்
குணித்துப் பிரிக்கவரிதாய்க்
குடிலங்க ளுக்குமொரு குடிலமென நிற்பாய்
குரங்குவா ரெண்ணுவண்ணம்
அருவளரு முள்ளத்து ளேயுணர்ந் தருளுவா
யடியனென் றுன்புதபுத
ஆற்றுநின் பேருளத் துள்கா திருப்பினு
னுரிட முரைப்பனெந்தாய்
அயில்வேலு மாண்டலைத் துவசமு மலங்கவென்
னம்மைதெய் வானைவல்லி
அருகிருந் தருளமா மயிலுகைத் தெதிரில்வந்
தருள்பெரும் பேற்றுமுருகே. (க)

---

# உஎ. உள்ளூர்ச்சிவசுப்பிரமணியர்சதகம்.

---

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவேறும் வேதநவி லொருவர்குரு வேநந்தி
தெளியவுரை தந்தகுருவே
சிவமகிமை நாரதற் கோதுகுரு வேபொதிகை
திகழ்முனிக் கருள்செய்குருவே

---

க. குசேசயம்=தாமரை; சூ - நிகண்டும், அமரஸிம்ஹமும் காண்க.
குடிலம்=ஆகாயம்.
குரங்குதல்=தாழ்தல்.

கருதரிய வொருசொல்லை யாறுபெயர் பக்குவங்
கண்டன்று சொற்றகுருவே
கங்குல்பக லற்றபே ரின்பவீ டடையரா
கவனுக் குரைத்தகுருவே
இருளற வெனைச்சுக முனிக்கருள்செய் குருவேயெ
னிதயத் தமர்ந்தகுருவே
ஏதிலுணர் வுயர்வாம தேவர்குரு வேயுலக
மெங்குமவிர் கின்றகுருவே
திருவுள முவந்தருள் புரிந்தென்னை யாளரோ
திக்கிக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

ஆக்கைக்கு மாவிக்கு மாதார மாயிருந்
தாட்டுவிக் கின்றசிவமே
அறிவினுக் கறிவா யிருந்ததனை யறிவிக்க
வறிவா யியங்குசிவமே
வாக்குக்கு மனதுக்கு மெட்டாத வத்துவித
வத்துவா யுள்ளசிவமே
வளர்பிறவி யாழ்கடல் கடக்குநர் களுக்குறுதி
மல்குபுணை யாகுசிவமே
சூக்குமங் கட்குமொரு சூக்கும மெனப்பனுவல்
சொல்லழிவி லாதசிவமே
தொல்லைவினை யாவுந் துமித்துமதி யமுதச்
சுகானந்த வீடெய்துவான்
சீக்கிர மெனைத்தடுத் தடிமைகொண் டாளரோ
திக்கிக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

ஞானமறு பேரண்ட பகிரண்ட மெங்கணு
மலிந்துள விலாசவொளியே
மாசையெகுடு வலிகடிந் கருணைநிதி யினின்றுளார்
வழிபட் டடைந்தவொளியே

க. சலதி = கடல்.
உள்ளூர் = அறிவிருக்குந்தலம்.

ஞானிகள் புலத்திறையு மனுகாம லிருள்போழு
ஞானவா னந்தவொளியே
நலிவில்பே ரின்பவீ டென்றும்பிர காசிக்க
நாணூரு நிலவுமொளியே
ஊனரம் பென்புரு வினுக்குள்வதி தருமுயிர்க
ளுண்ணிலை யி லொளிருமொளியே
உற்றுணர வரியவிழி யாயவொளி யேயென்ற
னுள்ளத்தை நேர்படுத்தித்
தேனிற் சிறந்ததிரு வருளளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௩)

போதவெளி யாயுள்ள நாதநிலை மேலொளிசெய்
பொருவறு சுயஞ்சோதியே
பூதப்ர பஞ்சநிலை யெங்கணு நிறைந்தபரி
பூரண வியன்சோதியே
கோதில்சிவ ராசயோ கத்திருவர் முன்னர்க்
குதிக்குஞ் செழுஞ்சோதியே
குன்றாத பேரின்ப மன்றக மிலங்குமொரு
கோலப் பரஞ்சோதியே
மூதறி வெனுங்கடலின் மூழ்கறிஞர் போதத்தை
மூசிமின் னுஞ்சோதியே
மூடவடி யேன்மூல விருளிரிய வென்னுளூ
முயங்குசெம் பொற்சோதியே
தீதிலா னந்தமா வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௪)

அண்டமெனு முண்டைபல வருள்வெளியில் வைத்தகண்
டாகார மானபொருளே
அளவற்ற பெரியவெளி பெரியவெளி யென்றறிஞ
ரறையுமொரு பெரியபொருளே
பண்டுநான் மறையந்த மாகத் திகழ்ந்துமுப்
பாழ்கடந் துள்ளபொருளே

௪. பூதப்ரபஞ்சம்=வடநூன்முடிவு.

பல்லுரு விலுங்கலந் தறிவின ரறியப்
படாதவியல் புடையபொருளே
தொண்டர்க ளகப்புலங் குடிகொடெந் நாளுமொரு
துணையின் றியங்குபொருளே
துரியமெய்ஞ் ஞானப் பெருஞ்சோதி யாயேழை
துயர்தூற வந்தபொருளே
செண்டுமுகை யார்மையல் சீத்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

மூத்தர்க டெவிட்டப் புசித்துக் களிக்குநிஜ
மோனவா னந்தவமுதே
முப்பாழ் கடந்துளவொர் சிற்பர நபத்தினடு
மூலத்து நல்லவமுதே
பத்திமையர் பத்திவயி ராக்கிய நிலைக்குமா
பண்ணுநிலை யின்பவமுதே
பவக்கவி கடக்கவுள் வலித்துத் துறந்தவர்
பசிக்கெடுத் துண்ணுமமுதே
நித்தமுனை நினையுமென் புத்திகரு துற்றபடி
நிலையின்றி யோடுநெஞ்சை
நேர்பட நடத்தியைம் பொறிகளை யடக்குமொரு
நெறிநின் றெனைத்தெரிந்துன்
சித்தொடுங் கூடியினி துய்யவெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

நில்லாத பிரபஞ்ச வாழ்விலுழ லாருள
நிறைந்தநித் தியானந்தமே
நிட்டையின் மனோலயங் கண்டபொழு தாச்சிமே
னிற்குநித் தியானந்தமே
பொல்லாத மனமருட் டுன்பினை யெருக்குசிவ
போதநித் தியானந்தமே
புகலரிய பதிஞான கதிநாடு நர்க்கருள்
புரங்குநித் தியானந்தமே

கூ, நபம்—ஆகாயம்; நூ - நிகண்டு காண்க.

பல்லா யிரங்கோடி யண்டங்க ளெங்கணும்
பரவுநித் தியானந்தமே
பத்தனென தெண்ணக் குறிப்பினை யறிந்தினிப்
பருவரல்க ளுள்ளநெறியிற்
செல்லாது செய்துனக் காளாக வாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (எ)

ஆதார மாறிற்கு மாதார மாயிருந்
தரசுபுரி கின்றவரசே
அண்டவெளி தன்னிலே யானந்த நிர்த்தமி
டகண்டசிவ யோகவரசே
மாதா பிதாவாக நின்றெனை யிரக்ஷித்து
மதியதர் கொடுத்தவரசே
மானுபி மானவச டறவன்பர் பக்கலருள்
வருஷிக்கு முகிலினரசே
சூதா முடங்குகா திடுமொரு மருந்தைச்
சுறுக்கினி லுரைக்குமரசே
தோற்றமே ழையும்வகுத் தாளுமர சேதொண்டர்
தோத்திர மதிக்குமரசே
தீதான செயிர்துமித் தென்னைநீ யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அ)

ஈரே ழுலோகமெல் லாம்வகுத் திடையின்றி
யேகநிறை வானபரமே
எளியனை யணைத்தழிவி லாதவனு பூதிதர
வீசனு மருவுபரமே
தீராத கோசபா சப்பின்ன லைத்தொண்டர்
சேதித் தறிந்தபரமே
செப்பரிய பேரின்ப வாரியிறை யாமன்னு
சின்மயா னந்தபரமே

அ. முடங்கு=நோய்; சே - திவாகரம் காண்க.

கூ. ஒன்று சொன்னபடி யொன்று சொல்லாதுள்ள புத்தகப் பந்தச் சிக்கினைக் "கோசபாசப்பின்னல்" என்றார். கோசம்=புத்தகம்.

பேரூர் குலங்குடி பிறப்பிறப் பென்பவைகள்
பேசவிசை யாதபரமே
பிண்டநீ டண்டபந் தங்கடந் தான்பதம்
பெற்றுமுட் டாதசெல்வச்
சீரோ டிருக்கவருள் செய்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

மூக்குண மிலாதசட் குணசாசு வதயோக
முதல்வனா யுள்ளவிறையே
மும்மலங் களுமிலா நின்மல நிராகார
மோனவருண் மூலவிறையே
மிக்களி யுளர்க்கமுத நற்கனியை நல்கருள்
விருக்கமா மன்னுமிறையே
வேதங்க டேடிமுடி வறியாத வற்புத
விலாசப்பிர காசவிறையே
துக்கசுக மொட்டுணர்வு முற்பவ மயக்கமுந்
தொடரா வதீதவிறையே
துவிதத்தை நீக்கியத் துவிதத்தி னினைநெஞ்சர்
தோயின்பி னிற்குமிறையே
திக்கொன் றிலாவென்னை யாதரித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

ஆதித்தர் கடவுளா யவிர்பொருளை யாலம்ப
மற்றுண்மை யுற்றபொருளை
அபிதான வபிதேய நீத்தவொரு பொருளையெனை
யன்பாய் வளர்த்தபொருளை
நாதத்தி னந்தமா யுளபொருளை யிதயத்தி
னடுவே யமர்ந்தபொருளை
ஞானவா னாநிறைந் தெங்குமுள பொருளையென்
னட்புக் குகந்தபொருளை
வாதத்தி னாலளவி டற்கரிய பொருளையென்
மனுவிற் கிரங்குபொருளை
வழியடிய வர்க்கண்மை நொதுமலர்க் கதிதூர
மாகநின் றுள்ளபொருளைச்

சீதத் திருப்பரிவி னல்கியெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கக)

சகலபுத் தேள்களு மிறைஞ்சிப் பழிச்சுஞ்
சதானந்த நாயகத்தைச்
சருவபரி பூரண வளாத சிதாகாச
சபைநடன நாயகத்தைச்
சகமாயை மருவாத மௌனமெய்ஞ் ஞானிகளி
தயமேவு நாயகத்தைச்
சந்தேகர் நெஞ்சினில் லாதசிவ ஞானே
தயப்பிரம நாயகத்தைச்
அகரவுயி ரைப்போல விகபர மிரண்டிலு
மளாவியவிர் நாயகத்தை
அறிவதற் கெண்ணினே னறிவுதந் தறிவித்
தருட்பரவை யிடையமிழ்த்தித்
திகழுநின் சேவடியில் வதியவைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கஉ)

அடியுநடு முடியுமற் றறிவரிய பெரிதா
யலங்கும் பராபரத்தை
அருவுமற் றுருவுமற் றருவுருவு மற்றெவையு
மறியும் பராபரத்தை
மிடியுமருண் மடியுமற் றதுவிது வெனார்கண்
விளங்கும் பராபரத்தை
மிறைகுறைக ளின்றிச் சிதாகாச மௌனமின்னி
விரியும் பராபரத்தைக்
குடியுமரில் வெருவுமற் றெனைநசைஇ யென்னுட்
குதிக்கும் பராபரத்தைக்
கொடியனே னுணராது குவலய மயக்கினனி
குலைகிறேன் குலையாமலே
திடவருளி னின்றுணர வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கங)

ஓங்கார சத்தத்தி னுதவடி வாகியுள்
ளுமையா நிற்குமொன்றை
ஊமையெனு மாமோன முடிவான பொருளா
யுறங்கா திருக்குமொன்றை
ஆங்கார நோயினை யறுத்தபெரி யோரறிவி
லனுதினம் விளங்குமொன்றை
ஆபாச மிறையுமில் லாதபர வெளிமுழு
தளாவிநிறை வானவொன்றைத்
தூங்காத பக்குவர்க் கருள்செய்ய விறைவடிவு
தூய்மையிற் கொள்ளுமொன்றைத்
தூகளற்ற திவ்வியதே சோமயா னந்தவொளி
சுடர்பருதி யாயவொன்றைத்
தீங்கேறி யுழலெனக் கினிதுதவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

அவலநுவ லபலமுஞ் சபலமுஞ் சலனமு
மசஞ்சலமு மில்லாததை
ஆசையு நிராசையு மடர்ந்தரு மிடம்பமு
மழுக்காறு மில்லாததைத்
துவிதவுரை யேகவுரை கூறுபவர் வாதமுஞ்
சூனியமு மில்லாததைச்
சுத்தமு மசுத்தமுந் துக்கமு மகிழ்ச்சியுஞ்
சுட்டுணர்வு மில்லாததை
அவனெனலு மவளெனலு மவரெனலு மதுவெனலு
மவையெனலு மில்லாததை
அறியாத சிறியே னறிந்துய்ய நின்னையே
யண்டினே னகிலமெனையுஞ்
சிவமா முனக்குரிய தொண்டனென வாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

பொய்யாத தாரகப் பொருளா யிருந்தருள்
புரிந்திடு சதாசிவத்தைப்
போதத்தி னிடைநின் றுணர்ச்சிதரு மின்றபரி
பூரண சதாசிவத்தை

கஙி. அவலம்=நோய்: ɪ௫ - திகண்டு காண்

மெய்யான வானந்த நிர்த்தன விருஞ்சபை
விளங்கொரு சதாசிவத்தை
வித்தவெளி யென்னவிட னற்றுநிலை யுற்றெங்கு
மேவிய சதாசிவத்தை
நையா வகண்டபதி ஞானச் சுயஞ்சோதி
நடுவவிர் சதாசிவத்தை
நாடா தளப்பிலக நாடிமதி கெட்டகடை
நாயனே னின்னுமதனைச்
செய்யாது னிருபதந் தொழுவேவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (க௬)

மாசற்ற வுள்ளூர் வெளித்தெருவி லேபொங்கி
வழியுளா னமுதத்தை
மாயைக் கடற்குளமி ழாதவ ரெடுத்துண்ணு
மதுரளா னமுதத்தை
ஆசைக் கசப்பினை யடித்துத் துரத்திடு
மதிதளா னமுதத்தை
அன்பர்க ளகப்புலங் கங்குகரை யில்லா
தலம்புளா னமுதத்தை
மாசொட்டு மரணசன னங்களை யறக்களைய
வல்லளா னமுதத்தை
மனமகிழ்ந் தேயெனக் கூட்டியூட் டிப்பொலா
மலவிரு ளொலாமிரித்துத்
தேசுற்ற செம்பொற் பதங்கொடுத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (க௭)

இவ்வள வெனச்சொலற் கமையா தெனுமறை
யியம்புஞ் சுகோதயத்தை
என்றைக்கு வருமோ வெனவப்பி யாசிகளு
ளெண்ணுஞ் சுகோதயத்தைக்
கவ்வையொடு தெவ்வமு மிலாதபதி நிட்டையிற்
காணெரு சுகோதயத்தைக்

க௬. அகம் = பாவம்.
க௭. கங்கு = வரம்பின்பக்கம் ; பி - நிகண்டு காண்க.
க௮. தெவ்வம் - தெவ் = பகை ; அம் = சாரியை.

கறையற்ற வருவமன நற்சீவன் முத்தருட்
கனியுஞ் சுகோதயத்தை
ஒவ்வருவ மனமுமில் பரமுத்த ரிடையறு
துறையுஞ் சுகோதயத்தை
உன்னருளின் வலிகொண்டு பெறவென்று கருதினே
னுள்ளுவந் தருளினாலுஞ்
செவ்விய திருக்கழற் காளாக வாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

அட்டாங்க நிட்டையிலு மெட்டாத வத்துவெனு
மத்துவித சின்மயத்தை
ஆனந்த மேயியல்ப தாயகண் டாகார
மானசிவ சின்மயத்தைத்
தட்டாத சுத்தவெளி தன்னினிறை வானசிவ
சாயுச்சிய சின்மயத்தைத்
தானென்ப தின்றியது தானென் றுணர்ந்தவுயிர்
சார்பரம சின்மயத்தைக்
கிட்டாத மட்டியைக் கிட்டவர வொட்டாத
கேடற்ற சின்மயத்தைக்
கிருபையண வாவறிய னேனறிய வென்றுனது
கிருபையை யவாவுகின்றேன்
சிட்டனிவ னெனவந்தவ் வாறுசெய் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கக

இறப்புறு பிறப்பின்றி யென்றுமொரு சீர்கொண்ட
வேகபரி பூரணத்தை
எத்துணை விகாரமு மிலாவமல வறிவா
யிலங்குபரி பூரணத்தை

---

கக. அத்துவிதம் என்பது "அத்வைதம்" என்னும் வடமொழி மரூஉ ஆம். இதன பொருள்—உதாரணத்தோடு பெரிதும் விஸ்தரித்துக் கூறப்படுதலை இந்நூலாசிரியருளிய ௩-வது மண்டலத்தைச் சார்ந்த **பரிபூரணானந்த போதத்தின்** பதிபசுபாச யதார்த்த விளக்கப்படலத்துத் கக ஆம் செய்யுளுரையிலும், **சுத்தாத்வைதநிர்ணயத்திலும்** கண்டுகொள்ளலாம். விஸ்தரிப்பு மிகப்பெரிதாகலின் ஈண்டு எத்துணைச் சுருக்கமாகவும் கூறுதல் கூடாது. இந்நூலுள் இவ்வத்துவிதம் யாண்டு யாண்டு வருகின்றதோ ஆண்டு ஆண்டும் ஆசிரியர் கூறிய மேலைப்பொருளே கொள்ற்பாலது.

அறப்பொரு ளருட்பொருள் விரும்புவா ருள்ளுணர்ந்
தருள்செய்பரி பூரணத்தை
அறிஞர்தங் கண்ணே யறிந்தத்து விதமென்
றடைந்தபரி பூரணத்தைக்
குறிப்பினு மதிப்பினு மடங்காத வொருதன்மை
கொண்டபரி பூரணத்தைக்
கோதில்வே தாந்தசித் தாந்தசம ரசநிபுணர்
கூறுபரி பூரணத்தைச்
சிறப்புட னளாவிநான் வாழநீ யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (உ0)

நிலமென்று நீரென்று மனலென்றும் வளியென்றும்
நிறையுமா காயமென்றும்
நிதமென் றும்பரிச மென்றுமுரு வென்றுமறு
நீர்மைநவி விரசமென்றும்
நலிகந்த மென்றுமொலி வாக்கென்று நிலைமீ
நடக்கின்ற பாதமென்றும்
நல்கவுள காமென்று மலவிசர்க் கஞ்செய்யு
நாளவிந் திரியமென்றும்
நிலவுசுக் கிலம்விடு முபத்தமென் றுந்தொனி
நிகழ்ச்சியறி சுருதியென்றும்
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளித்
திலகமலி யுன்னடிப் போதில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (உக)

நொக்கதென் றுந்துணிகொள் சக்குவென் றுஞ்சுவைக
டுய்க்கின்ற தாலுவென்றும்
தூர்க்கந்த நற்கந்த மறிநாடி யென்றுங்கை
தொட்டுழலு மனமதென்றும்

உக. நிதம் = ஒலி; வடசொல். கங, ச - ன் குறிப்புரை காண்க.
திலகம்=உச்சித்திலகம்; இது மிக்க சிவப்புடைத்து.

உஉ. சக்கு=கண். (चक्षु) சக்ஷுஸ் எனும் வடமொழிச் சிதைவாகலின், குற்றுகரம் புணர்ந்திலது.

தக்கபடி நிச்சயஞ் செய்புத்தி யென்றும்யோ
சனைபணுஞ் சித்தமென்றும்
தன்னக மெழுப்பிடு மகங்கார மென்றுமிவை
தருகின்ற பகுதியென்றும்
நிக்கிரக மாகாத வாணவத் தைச்சிறிது
நீக்குமொரு கருவியென்றும்
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளித்
திக்கற்ற வென்னையுன் னடியில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (உஉ

கலையிலே தோன்றிஞா னத்தினை யெழுப்பரிய
கரும்த்து வித்தையென்றும்
கருமவவ் வித்தையி லுதித்திச்சை யின்செயல்
களைத்தரு மராகமென்றும்
கலையொடு பிறந்துகரு மப்பலனை யுள்ளநாள்
காறுமீ நியதியென்றும்
காலமென் றுங்கலா தியினின் றெழும்பியிரு
கன்மறுகர் புருடனென்றும்
நிலைகொண்மோ கினிமாயை யென்றுமைங் கூறுக
நிகழ்சுத்த மாயையென்றும்
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சிலைமதன் செயனறு வடியில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (உ௩

சுத்தமா மாயையின் றோற்றமோ ரைந்தில்வினை
சோர்சுத்த வித்தையென்றும்
தொழிலேறி ஞானங் குறைந்ததத் துவமெனச்
சொல்லுமீச் சுவரமென்றும்
உத்தமக் கிரியையு முயர்ந்தவறி வுஞ்சதா
வொத்தவொரு தத்வமென்றும்

உஉ. ஒரு கருவி—கலை எனவாம்.

ஓவாத கிரியையா யுளசத்தி யென்றுமே
லுணர்வுள்ள சிவமதென்றும்
நித்திய மகாமாயை யென்னும்விந் துவிலே
நிலாவுசிவம் வருவதென்றும்
நிற்குநிர லறியநினை நித்தனு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சித்திர மலர்ச்சரண வாழ்வில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (உச)

சுத்தமை யசுத்தசுத் தாசுத்த முதல்களிற்
றொழிலைந்து மருள்வலிகொடு
சோர்வறச் செயவருவ நான்குருவ நான்கொன்று
தொந்தமா வுளவென்றுமால்
எத்தலங் களிலுமத் தொழில்கள்செய றன்மையினி
லெங்குநிறை வாகியென்றும்
எதிராகு முன்னிலையி லிச்சைஞா னங்கிரியை
யென்னுமொரு மூன்றினென்றும்
நித்தம் படர்க்கையிற் பத்தெனப் பகர்வதொடு
நிகழைந் திடத்துமென்றும்
நிற்குநிர லறியநினை நித்தனு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
செத்திலடி யார்திருவில் வைத்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (உரு)

பற்றிடு மனுதிகர ணங்களை யெழுத்துக்கள்
பரிவொடு நடத்துமென்றும்
பலமுடை யெழுத்துக்க ளைத்தலைவ ரேதொழிற்
படநடத் திடுவரென்றும்

உரு. பத்து=மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம், அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் என்பனவாம்.

ஐந்திடம்=பிரமன், விஷ்ணு, உருத்திரன், மயேசுரன், சதாசிவன் என்பனவாம்.

சேத்து - "செத்து" எனக்குறுகிற்று; ஒப்பு எனும் பொருண்மைத்து. "சேத்தென் கிளவி கருத்தோ டொப்பே" என்பது சே - திவாகரம். ஒப்பில்லாத அடியார் திரு என்பார் "செத்தில் அடியார்திரு" என்றார்.

சொற்றவத் தலைவர்களை யிச்சைஞா னங்கிரியை
சோர்வற நடத்துமென்றும்
துகளிலம் மூன்றுமே லாதிபரை களுமரிய
துரியவரு ளின்களென்றும்
நெற்றிமே னின்றுவெளி கண்டுளார் தெளிநா
னிகழ்த்துசரி தப்படிக்கு
நிற்குநிர லறியநினை நித்தனு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சிற்றறிஞ ரறியாத திருவில்லைத் தாளரோ
சித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

ஆணவ மறைப்புள்ள விஞ்ஞான கலருளே
யணுசதா சிவரென்றுமா
அட்டவித் தேசுர ரிப்பற்ற வேழ்கோடி
யருண்மகா மந்திரரென்றும்
மாணுடைப் பிரளயா கலருளீ ரெண்மர்கண்
வயங்கி ருருத்திரரென்றும்
வண்மையுந் திண்மையு மமைந்தவுரு விற்றேசு
மல்குசத ருத்திரரென்றும்

---

௨௭. "விஞ்ஞானகலருள் அணு சதாசிவர்" எனப்பட்டது — ஒரு மலமுடைய இச்சதாசிவரையும் ஆள்வோனுள நின்மல சம்புசதாசிவ னுளனென்பதை நிறுவி நிற்பதாயிற்று. அச்சதாசிவனே உமாபதியென்பதும், அவனே சுப்பிரமணியனென்பதும் இந்நூலாசிரியர் துணிபாகலின் உரிய பிரமாணங்களை ஆசிரியாருளிய திருப்பா வாகிய ௫-வது மண்டலத்தின் கடவுள் வணக்கச் செய்யுள்களி னுரைகளில் இனிது கண்டுகொளலாம்.

அட்டவித்தேசுரர் = அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகருத்திரர், சீகண்டர், ஏகநேத்திரர், திரிமூர்த்தி, சிகண்டி யென்பவராவர். இவர்கள் ஈசுர தத்துவ வாசிகளெனவுங் கூறப்படுவர். எழ்கோடி மகாமந்திரர் = ஈசுர தத்துவ வாசிகளுட் குறைந்த பக்குவமுடையார்.

"பிரளயாகலருள் ஈரெண்மர்" "ஈருருத்திரர்" என்றமையின் இருமலத்தினராய உருத்திரர் பதினெட்டுப் பெயரெனல் கொளக்கிடக்கின்றது. அவர் சீகண்டர், வீரபத்திரர், பிரகிருதி மத்தகவுருத்திரர் எண்மர், கலை மத்தகவுருத்திரர் எண்மராவர். சதருத்திரர் = நூறு உருத்திரர். இச்சீகண்ட ருத்திரரையே உமாபதியெனக் கொண்ட சைவசித்தாந்தி யென்பார் கொள்கை, சிவத்துரோகமென நனி கண்டிக்க எடுத்துக்கொண்டவாறும், முக்கியப்பிரமாணம் முதலிய நியாயமெல்லாம் அந்த ௫-வது மண்டலத்தி னுரைகளி லறியக்கிடக்கின்றன. ஈங்கு விளக்கா விடாவெல்லாம் அங்கக்

நீணிலச் சகலருட் பிரமன்மா லாதியா
நிகழுயி ரனந்தமென்றும்
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சேணமரர் பரசுநின் னடியில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (உஎ)

செம்பிற் களிம்பரிசி யிற்றவிடு போலவே
செறியொரு களங்கமென்றும்
சிதைவின்மா யையினின்று சிட்டியிற் புத்தியைச்
சேர்பழங் கன்மமென்றும்
அம்பார கன்மமே சஞ்சித பிராரத்த
வாகாமி யங்களென்றும்
அதிர்த்தவிரு மலமன்றி மாயையெனு மோர்மல
மசுத்தமொடு சுத்தமென்றும்
நிம்பமுட னின்பமுஞ் செய்யாதி சத்தியென
நிகழுந் திரோதையென்றும்
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சிம்புமரி யங்கழற் றிருவில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (உஅ)

கிஞ்சிஞ் ஞென்றினுங் கூடா திருப்பதே
கேவல வவத்தையென்றும்
கிளர்தத்து வங்களோ டேகூடி நிற்பதே
கேடற்ற சகலமென்றும்
துஞ்சாது துஞ்சியச் சகலகே வலமற்ற
துறையண்ணல் சுத்தமென்றும்

---

திருப்பா கூறு ஆம் பத்தின் குறிப்புரைகளி லறியலாம். விஞ்ஞானகலருள் ஒருவராய் வித்தியேசுரருள் ஒருவராய் மேலே போந்துள்ள "சீகண்டர்" யாவரென்பதுபற்றிச் சைவசித்தாந்தியென்பாரு ளெவரும் திறம்பலில்லாது தெளிவாக வுரைத்தமை ஏற்படவில்லை. சகலர்=மும்மலத்தார்.

உஅ. சிம்புதல்=சிலம்புதல் என்பதன் சிதைவு.

உகூ. கிஞ்சிஞ்ஞன்=சிற்றறிவன்=சீவான்மா.

சுத்தவருள் கொடுதனைக் கண்டபிற கருளிலே
தோய்தல்பரை போகமென்றும்
நெஞ்சற்ற வறிவாகி யருளினுட் பொருளண்ணா
னிலையென்று நூல்கள்சொலுமா
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
செஞ்சரண மலர்களுக் கடிமையா வாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

பூதமுத னாதம்வரை யாறு றெனுஞ்சடப்
பொருளுக் கதீதமென்றும்
போக்கொடு வரத்துமில் லாதவொரு பூரணப்
பொருளாக வுள்ளதென்றும்
சீதமொடு தாபமும் பகைமையொடு கேண்மையுந்
திரிபுலைவு மற்றதென்றும்
சிறுமையொடு பெருமையுஞ் சிந்தைநிர்ச் சிந்தையுஞ்
செயிருமில் யதார்த்தமென்றும்
நீதமறை யெல்லா மிழற்றுவது போலறிவு
நிபுணருஞ் சொல்வரதிலே
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சீதவா ரிச்வடித் திருவில்லைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

காசாசை கொண்டே கலங்குகிற தோஷிநற்
கல்விகல் லாததோஷி
கற்றோர் களைக்கண்டு பணியாத தோஷிகெடு
கயவருற வுற்றதோஷி
ஆசார மொருசிறிது மில்லாத தோஷிமண்
ணாசையே கொண்டதோஷி
ஆசானை நிந்தித்த தோஷியரை நிமிடமு
மறத்தைநினை யாததோஷி

---

ஙக. தோஷத்தையுடையவன் தோஷி. தோஷம் = குற்றம்.

பேசாத பேச்சினைப் பேசிடுந் தோஷிவசை
பேசப் பிறந்ததோஷி
பீடுடைய வீடுபெற வுள்கினே னெந்தைநின்
பெரியதிரு வுளமகிழ்ந்து
தேசோ மயானந்த வாழ்வுதந் தாளரோ
திக்கிக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௩க)

எல்லா மறிந்தவ ரெனைப்போல வுலகின்மிசை
யெவரென் றறைந்ததோஷி
எந்நேர முங்குடும் பக்கவலை கொண்டங்கு
மிங்குமலை கின்றதோஷி
உல்லாச வீணர்கதை சொல்லியதி லேகட்
டுரைத்துச் சிரித்ததோஷி
ஊனுடலை வலியகற் கோட்டையா வெண்ணிநல்
லுணர்வற்று நின்றதோஷி
நல்லார்கள் பொல்லார்க ளெல்லார்கள் பாலும்வெறி
நாய்போல் விழுந்ததோஷி
நல்லவழி கூடும் படிக்குள்கி னேனிந்த
ஞாலத் துயர்க்கடற்குள்
செல்லா திழுத்தனைத் தன்பினு லாளரோ
திக்திக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௩உ)

வஞ்சிநிக ருக்கமட மங்கையர்க ளின்பமே
மாவின்ப மென்றதோஷி
வாய்க்குருசி யாகப் புசிப்பதே பேரின்ப
வாழ்வென நினைத்ததோஷி
கஞ்சுளி யணிந்துடற் கண்டைமடி புனைவதே
கண்டபல னென்றதோஷி
கந்தகத் தூரிபரி மளவத்தர் திமிர்வதே
கைகண்ட தென்றதோஷி
அஞ்சலின் றிவ்வுலக வுத்தியி லிருப்பதே
யரியபே றென்றதோஷி

---

௩௩. உக்கம்=இடை ; ௬ - நிகண்டு காண்க.

அகடவிக டம்புரிந் துய்வதே யென்றைக்கு
மானந்த மென்றதோஷி
செஞ்சரண மடையவென வுள்கினே னுளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

பொருவற்ற தெய்வமெனல் பொய்யென்ற தோஷியறி
பூதமெய் யென்றதோஷி
புரிவினைப் பிறவியெனல் பொய்யென்ற தோஷியுயிர்
புதிதுமெய் யென்றதோஷி
மருளிலா வறிவுநெறி பொய்யென்ற தோஷிசக
மார்க்கமெய் யென்றதோஷி
மங்காத முத்தியெனல் பொய்யென்ற தோஷியுயிர்
மாய்தன்மெய் யென்றதோஷி
துரியாது வேதகலை பொய்யென்ற தோஷியென்
சொற்கண்மெய் யென்றதோஷி
தோன்றியழி கின்றநிலை மேலறிய வென்றே
தொடர்ந்தே னயர்ந்தவினைகள்
திருவருளி னுலிரிய வன்புசெய் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

வேதாக மங்களல் லாதபுன் கதைகளை
விரும்பிப் படித்ததோஷி
வேசையர்க ளாசைகொண் டாசையை யழித்துள்ள
வெட்கமுங் கெட்டதோஷி
மாதரார் மிதுனித்த மார்க்கவகை சொலிவீணர்
மகிழ்கான் மகிழ்ந்ததோஷி
வாசமலர் கொண்டையிற் சூடித் தெருத்தோறு
மதிகெட் டலைந்ததோஷி
கோதுறுங் குத்திரம் புரிவோ ரெவர்க்குமொரு
குருவா யிருந்ததோஷி
குறைவற்ற கைவல்லிய முறவுள்கி னேனெண்

தீதெலா மோட்டிவழி காட்டியெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௩௫)

வையத்து மாந்தரை யடக்கிநாம் வாழவென
மந்திரங் கற்றதோஷி
மதிகேளறி யுட்குதித் தொருவரறி யாதுகர
வடமிக விழைத்ததோஷி
ஐயோ வெனுவலற வகதிக ளகம்புக்
கதட்டிப் பறித்ததோஷி
ஆருக்கு மஞ்சாத மிண்டனு கத்திரிந்
தறிவழகு கெட்டதோஷி
பொய்யிற் பிழைக்குநர்கள் செய்கைக் கிணங்கியே
புகழ்சிறிது மற்றதோஷி
பூரணா னந்தநிலை யுறவுள்கி னேனினிப்
பொய்யாத குற்றேவலூன்
செய்யும் படிக்குநனி செய்தென்று மாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௩௬)

பேய்களைப் பூசைசெய் ததுவிதுசெய் வேனென்று
பேசித் திரிந்ததோஷி
பெரியோர்க ளுரனீதி சொல்லியிற் புலியினது
பெற்றியே கொண்டதோஷி
வாய்மதம் பேசியா காவல் விடும்பரொடு
வழிநடந் திட்டதோஷி
வாங்கிய கடன்கொடா மல்வழக் கிட்டதனை
வாங்கவிலை யென்றதோஷி
தாய்தந்தை முதலியோர் தமையிகழ்ந் தொழியாத
சஞ்சலங் கொண்டதோஷி
தருமத்தை விற்றுண்ட தோஷிநா னுகலிற்
றகவுடைய வருள்பெருக்கிச்
சேயென வணைத்தா தரித்தருளி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௩௭)

நன்னெறியி னின்றுபணி கின்றவடி யார்சொத்தை
நட்டமது செய்ததோஷி
நாடோறு நாய்போ லலைந்துபொரு ளாசையா
ளுளைக் கழித்ததோஷி
தன்னிலைமை தனைநினைந் தெந்நேர முந்திவ்விய
சஞ்சல மிலாததோஷி
தவமிழைப் போர்களை யிழைக்கவொட் டாமற்
றடுத்துமகிழ் வுற்றதோஷி
கன்னியர் குழுக்கண்டு கைவீசி நடைதந்து
காதலொடு சென்றதோஷி
கருணைவிண் ணுனந்த முறவுள்கி னேனினது
கழன்முண்ட கத்தையெனது
சென்னியிற் சூட்டுவித் தடிமைகொண் டாளரோ
சித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

எங்கண்மத முங்கண்மத மென்றுபல திறவாத
மிட்டறிவை விட்டதோஷி
இதுதெய்வ மதுதெய்வ மென்றுநிலை கொள்ளாம
லீடழிந் திட்டதோஷி
கொங்கைநிமிர் மங்கையரை யுற்றுற்று நோக்கிவிழி
குருடுபட் டுள்ளதோஷி
குடிகார ரோடுகட் கூடிக் குடித்துக்
குலாவித் திரிந்ததோஷி
கங்குல்பக லுள்ளீர மின்றியுயிர் வதைசெய்து
கறிசமைத் துண்டதோஷி
காவலரை வஞ்சித்த தோஷிநா ளுகலிற்
கருணைகொண் டமுதர்புகழுஞ்
செங்கழன் மதர்ப்பினை யளித்தென்று மாளரோ
சித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

துட்டத் தனங்கட்கு வித்தான தோஷிநர
துதிசதா செய்ததோஷி
சுந்தரி களைப்புணர வசியமது தேடித்
துரும்பா மெலிந்ததோஷி

கட்டுக் கடங்காத பட்டிமா டொப்பவே
கண்டபடி சென்றதோஷி
காலிகளின் மேலிருஞ் சுமைவைத் தடித்துண்டு
கருணையை யிழந்ததோஷி
மட்டற்ற மித்தைகளை வட்டிக் களித்துநிதம்
வர்த்தக மிழைத்ததோஷி
மாகதி பெறற்காய நெறிதன்னை நேடினேன்
மனமுவந் தருள்வழியில்வாழ்
சிட்டனிவ னென்றுதிரு வடிகொடுத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (சഠ)

எவ்வுயிரு மறிவென் றிராதவ் வுயிர்க்கெலா
மெமனு யிருந்ததுட்டன்
எனக்கீ டுளோருல கிருப்பரோ வென்றிக
லியம்பிய பொலாததுட்டன்
ஒவ்வாத செயல்களுக் கொவ்வாத மக்களையு
மொவ்வவே செய்ததுட்டன்
ஊரார்கள் சொத்தின்மே லாசையுற் றிதமோச
வுரைபல வுரைத்ததுட்டன்
அவ்வியர்க ணையமுற் றங்காடி நாய்போ
லலைந்துபுக ழுற்றதுட்டன்
அத்தனை யிகழ்ந்திட்ட துட்டனு றுதலா
லமலவன் பைப்பெருக்கித்
திவ்விய சதானந்த வீடளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (சக)

வேதநிஜ நூலீறு கேட்டிவை வெறுஞ்சொலென
விட்டுலகி னின்றதுட்டன்
வித்துவா னெனென்று கவிதைபல பாடியே
வீணு டொலைத்ததுட்டன்
வாதவினை யாற்பிரபு வாவே னெனுவுலகை
மதியாம னின்றதுட்டன்

---

சக. அவ்வியம் = மனக்கோட்டம் (=அழுக்காறு) என்பது பி - நிகண்டு. அவ்வியமுடையார் "அவ்வியர்கள்" எனப்பட்டமை காரணக்குறி.

வாலிப ருடன்கூடி யரியான் கோயில்களில்
வனிதைமயல் கொண்டதுட்டன்
பாதகஞ் செய்யப் படாதென்று சொல்லியப்
பாதகஞ் செய்ததுட்டன்
பங்காளி வஞ்சகத் துட்டனு னுகலிற்
பரமவன் பைப்பெருக்கிச்
சேதகப் பாதச் செருக்களித் தாளரோ
திக்திக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

பொருணட்பி லாசையுற் றதிகார வவைகளிற்
பொய்யுரை புகன்றதுட்டன்
புண்ணியஞ் செய்கிறே னென்றுபிறர் காணப்
பொருந்தா தளித்ததுட்டன்
ஒருவரு நமக்குநிக ராகாரெ னுன்மத்த
மோயாது கொண்டதுட்டன்
உல்லாச வுடையுடீஇ யெல்லாரும் வீணனென்
றுன்னிட நடந்ததுட்டன்
குருவைப் பணிந்துபொரு ளறியாத துட்டனிடு
கூலிகள் குறைத்ததுட்டன்
குல்லையபி னுண்மருட் டுட்டனு னுகலிற்
குறைவிலன் பைப்பெருக்கித்
திருவளரு மடிமதர்வு வீடளித் தாளரோ
திக்திக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

நல்லமணி தன்போ லியம்பியுள் ளுக்குளே
நஞ்சா யிருந்ததுட்டன்
ஞாயத் தலத்திலே பக்ஷபா தம்பேசி
ஞாயங் கெடுத்ததுட்டன்
எல்லினு மிருட்டினுங் கள்ளத் தனத்தையே
யிதயத்தில் வைத்ததுட்டன்
ஏழைக் கிரக்கமுற் றையமிடு வோர்களை
யிடாததடை தந்ததுட்டன்

௨௩. குல்லை=கஞ்சா; பி - நிகண்டு காண்க.

புல்லறி வுளாரைச் சினேகித் தடாதவனு
போகத்தில் வீழ்ந்ததுட்டன்
புண்ணியம தில்லாத துட்டனு னுகலிற்
புரணவன் பைப்பெருக்கிச்
செல்லொணு நெறிதடுத் தடியளித் தாளரோ
திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (சச)

போய்வருத லோராத நாய்போல வுண்பதே
புத்தியென வோதுதுட்டன்
புறணிபே சிப்பேசி யொருவர்க்கு மாகாத்
புல்லர்கட் கானதுட்டன்
பேய்களுக் கடிமையாய் நின்சரண நாடாது
பேயா வுழன்றதுட்டன்
பிறருக்கு நமதுதுயர் வரவென்று கருதிடும்
பெற்றிநனி கொண்டதுட்டன்
நோய்வந்த காலையிற் பேய்களைக் கும்பிட்டு
நோன்மையை மறந்ததுட்டன்
நோலாமை மிக்குடைய துட்டனு னுதலா
னுகைவிலன் பைப்பெருக்கித்
தீயிற் புகார்பெற்ற வடியளித் தாளரோ
திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (சரு)

கனவாட கப்புதைய‌ல் பெறவென்று கோவிலிற்
காலைமா லையும்வணங்கிக்
கருதிய படிக்கது வாராதபோ திதுவெழுங்
கல்லென் றுரைத்ததுட்டன்
மனைமகா ரிகுளைகளை மனநோவ விட்டுமறு
மனைதேடி நின்றதுட்டன்
மறநடைய ரைப்புகழ்ந் தவரிடம் பொருள்பலவும்
வாங்கிமகிழ் வுற்றதுட்டன்
மனதின்ன தறிவின்ன தென்றினி துணர்ந்துநல்
வழியினட வாததுட்டன்
மாதவரை வைதுள்ள துட்டனு னுகலின்
வண்மையன் பைப்பெருக்கித்

தினமுநின் சேவடி யிருக்கவின் ருளரோ
　　தித்திக்கு முத்திமுதலே
　தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
　　சிவசுப்பிர மணியதேவே.

வந்தவரை வம்பினென் றழையாத துட்டனுயர்
　　மறையோரை வைததுட்டன்
　மடவிதவை யைக்கூடி யுண்டாய கருவினை
　　மருந்தா லழித்ததுட்டன்
நந்தன மடந்தட மழித்திட்ட துட்டனன்
　　னட்பைப் பகைத்ததுட்டன்
　நவிலுரையி லேதவறு காணினுஞ் சொன்னதே
　　ஞாயமென் றோதுதுட்டன்
சொந்தமில் லாததைச் சொந்தமஃது செயவெனத்
　　தொந்தரைகள் செய்ததுட்டன்
　சோரர்தஞ் சொத்துண்ட துட்டனு னுகவிற்
　　றுகளிலன் பைப்பெருக்கிச்
சிந்தாத செல்வமது தந்தென்று மாளரோ
　　தித்திக்கு முத்திமுதலே
　தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
　　சிவசுப்பிர மணியதேவே.

ஞானநூ லின்படி நடக்கமன மில்லாமன்
　　ஞானமே தென்றதுட்டன்
　நரசன்ம மாப்பிறந் தெவரறிந் தாரெனு
　　நல்லவரை யெள்குதுட்டன்
ஞானவா னவர்கள் சாகா திருந்தார்கொ
　　னவிலுவீ ரென்றதுட்டன்
　நன்னருயர் தேவால யச்சொத்தை விற்றுண்டு
　　நல்குரவு நண்ணுதுட்டன்
ஞானமுனி போலவே பொய்வேட மிட்டன்பர்
　　நற்பொருள் கவர்ந்ததுட்டன்
　நடையைக் குறைத்திட்ட துட்டனு னுகவி
　　னலங்கொளன் பைப்பெருக்கித்
தேனினு மினிக்குமமு தம்பருக் தாளரோ
　　தித்திக்கு முத்திமுதலே
　தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
　　சிவசுப்பிர மணியதேவே.

---

சஅ. நல்குரவு=தரித்திரம்.

முதலைக் கனவினுங் காணாது முதலாளு
முதலாளி யென்றதுட்டன்
முன்னொன்று பின்னொன்று பேசியே சிக்கெட்ட
மூதேவி யாயதுட்டன்
உதவிபுரி கின்றவர்க் கவதிபுரி துட்டனாயு
முயிர்களை வதைத்ததுட்டன்
உற்றபிணி தீர்த்தவர்க் கோதிய படிக்கொன்று
முதவா தலைத்ததுட்டன்
இதவான நீதிக ளியம்புநூ லர்த்தத்தை
யேற்றபடி சொற்றதுட்டன்
எரிமூட்டி யிறுமாந்த துட்டனா னகவி
னியாணரன் பைப்பெருக்கிச்
சிதமருவு நின்சரண வாழ்வளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௪௯)

ஏசறு மனோநாச சகநிட்டை புரிவோ
ரிருக்கையை யழித்ததுட்டன்
இல்லாத விடயத்தை யுண்டென்னு முறுதிமுறி
யெழுதிக் கொடுத்ததுட்டன்
தேசிகனை வஞ்சித்த துட்டன்மனு வென்கின்ற
சீர்மையில் லாததுட்டன்
செய்வதெல் லாஞ்செய்து தெய்வமே யிப்படிச்
செய்தையே யென்றதுட்டன்
ஆசில்பதி விரதையை யடியென்ற துட்டனின்
னருளைப் பழித்ததுட்டன்
ஆணிலும் பெண்ணிலுந் துட்டனா னகவி
னகண்டவன் பைப்பெருக்கித்
தேசுடைய வுன்சரண வின்பளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௫௰)

௩௧ - முதல் இந்த ௫௰ வரையுள்ள இருபது பாட்டுக்களிலுங் கூறப்பட்ட குற்றங்கள் பலவுள் இந்நூல் பாடவந்த பிறப்பில் நூலாசிரியர் சிலசெய்து பலசெய்யாதிருப்பினுஞ் செய்யாத பலவற்றை முன்னைய பிறப்புக்களிற் செய்திருக்கலாமெனும் அனுமானத் தாபனமாகவும், குயின்ற குற்றங்களைப் பிறருமறிந்து செய்தலொழிந்து நன்னெறியி னடக்க வறிவுறுத்தொரு நற்போதகமாகவும் மேலைப் பாடல்களி லவைகளை விளக்கி யருளினரென இங்ஙனம் பொருள்கோடல் வேண்டும். ஆனந்தமுகிலெனும் பத்தில் ஐயவினாவாக வரும் ஓகாரங்களும் இவ்வனுமானத் தாபனத்தை யுறுதிப்படுத்தும். பேய் களைத் தொழுங் குற்றமில்லா நூலர் அதனையுங் கூறிக்கொண்டனரே. இன்னனபல்ல.

வந்தவழி யெந்தவழி யென்றுணர வோர்நிலையின்
மனநிற்ற லெக்காலமோ
மருளற்ற திருவரு ளலாதுநிலை யிலையென்ற
மதிபெறுவ தெக்காலமோ
சந்ததமு மனமடக் குஞ்சாத கங்கொடு
தவம்புரிவ தெக்காலமோ
சவிமன்று ளானந்த நடைகண்டு மகிழ்தொண்டர்
சார்புறுவ தெக்காலமோ
மந்தமதி யாளர்கட் கெட்டாத சிவசமய
வாழ்வடைவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
செந்திருக் கமலவடி யருணிறுவி யாளவோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

பகிர்முக மனத்தையுள் வலிக்கின்ற பூரகம்
பயிறலினி யெக்காலமோ
பாழாகு மனதையுட் பந்தகஞ் செய்புகும்
பகமேவ லெக்காலமோ
ககனகும் பகநின்று வெளிவிடு மிரேசகங்
கண்டுயர்வ தெக்காலமோ
கண்ணினுக் குக்கண் ணெனத்திகழு மறிவான
கண்பெறுவ தெக்காலமோ
மகிமையுள பெரியபொரு ளெங்கணு மிருக்கின்ற
மாபறிவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
திகிறபு திருச்சரண வருணிறுவி யாளவோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

---

௫௧. "சவிமன்று ளானந்தநடை" என்றது பற்றி நிகழ்ந்துள்ள நூல்—இ வாசிரியாருளிய ௩-வது மண்டலத்தைச் சார்ந்த தகாரலயாரகசியமும், அதனுள யாகிய சதானந்த சாகரமுமாம். மூலம் உரை முழுதும் அவ்வொன்றனையே விள வெழுந்த சுப்பிரமணிய பரத்துவபோதகப் பெருநூலென்க. இதனையறியாதார் சிதம் வுண்மையை நன்கறிந்தவராகார்.

தங்கா தெழுந்துநா லங்குலங் கழிவதைத்
 தடைபுரிவ தெக்காலமோ
சலனமில் லாதநீ பத்தையொத் துள்ளூனே
 சாதிப்ப தெக்காலமோ
கங்கா ஜலம்போல வேயுருகி யென்னுருக்
 கண்டறிவ தெக்காலமோ
கன்மமல மெல்லா மொரீஇயொரு திருவருட்
 கன்மமுற லெக்காலமோ
மங்காத மதியமிழ்த முண்டுமற் றுண்பதை
 மறந்தமர்வ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
 மயங்குமென் முன்புவந்து
சிங்காத பெரியதிரு வருணிறுவி யாளரோ
 தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
 சிவசுப்பிர மணியதேவே. (ருங)

சருவவல் லமைபுடைத் தனியரு ளெனுஞ்சூர்
 தடியவெழ லெக்காலமோ
தனியே யிருந்துவிழி மூடவோ ருறுதியெழு
 தருகால மெக்காலமோ
பொருபுல னெலாமொருவி யறியாத புதுவிடம்
 புக்கணைவ தெக்காலமோ
புரையற்ற சதுர்வேத முடிபாக நிற்குமொரு
 பொருளறிவ தெக்காலமோ
வருதலும் போதலு மிலாதவொரு பெருவாழ்வு
 மருவிடுவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
 மயங்குமென் முன்புவந்து
திருவளர் பரப்பிரம வருணிறுவி யாளரோ
 தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
 சிவசுப்பிர மணியதேவே. (ருச)

கைதவந் திமிரா தகந்தையை யடக்கக்
 கருத்துறுவ தெக்காலமோ
கண்டவிட னெல்லா முனைத்தொழு திருக்குமொரு
 களியெய்த லெக்காலமோ

ருரு. கைதவம்=வஞ்சகம்; வடசொல்,

ஐயுணர்வு மெற்குளே யைக்கியப் பட்டறிஞ
ஞநிற்ப தெக்காலமோ
ஆசற்ற பரிபூர ஞானந்தமாயுள்ள
வறிவறிவ தெக்காலமோ
மையிருண் மலக்கட் டறுத்தவடி யாருற்ற
வாழ்வடைவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
தெய்வங்கள் சூழ்தெய்வ வருணிறுவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

பேராசை யில்லாவொர் பேராசை கொண்டுற்ற
பேதெற்ற லெக்காலமோ
பெருமையில் லாதவொரு பெருமைகொண் டறிவற்ற
பெருமைவிட லெக்காலமோ
போராடு மறுவரைப் போராடி வென்றரிய
புகழ்பெறுவ தெக்காலமோ
பொறிமயங் காமலைம் பொறியையு மொடுக்கியுட்
போக்கறிவ தெக்காலமோ
வாராத கம்பலைகள் வரினுமென் மனநனி
மகிழ்ந்துய்வ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
சீராரு நிஜமோத வருணிறுவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

பாடும் படிக்குப் பதம்பெற வரும்பாடு
படநினைவ தெக்காலமோ
பாவையர்க ணேயமொரு போதுமுத வாதெனும்
பண்பணைவ தெக்காலமோ
ஆடுமர வைப்பிடித் தாடாது கூண்டிட்டை
யடைத்திடுவ தெக்காலமோ
அன்மேனி யந்தகன் செயலெனக் கயலென
வடங்கியுற லெக்காலமோ

மாடுதே டித்தேடி யலையாது நின்சரண
வாழ்வெய்த லெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
தேடரிய சிற்கசன வருணிறுவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (ருஎ)

காற்றுக் கயிற்றினின் றுடும்பப் பாவைபொய்க்
கனவாத லெக்காலமோ
காயகற் பங்குளிகை தேடியலை யாதுசிவ
கற்பமுண லெக்காலமோ
தோற்றங்கள் யாவையும் விரித்துச் சுருக்குகிற
சூதறிவ தெக்காலமோ
சொல்லரிய வாறத்து வாவுங் கடக்குமொரு
தொழிலேற லெக்காலமோ
மாற்றமி லதீதசிவ ஞானநிலை யாளரடி
வந்திப்ப தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
சீற்றமறு மன்பர்கரு தருணிறுவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (ருஅ)

காமாதி களைவிட் டிருக்குமிய மத்திற்
கருத்துறுவ தெக்காலமோ
கருத்திலெழு வாசனை யடக்கலெனு நியமநிலை
கைக்கொள்வ தெக்காலமோ
பேமா முபாதியோ ரேழுமில் லாதனம்
பெற்றமர்வ தெக்காலமோ

---

ருஅ. ஆறத்துவா = ஆறுவழி. அவை—மந்திரம், பதம், வர்ணம், புவனம், தத்துவம், கலை யென்பனவாம். விவரம் தகராலயரகசிய வுரையுழைக் கண்டு கொள்ளலாம்.

ருகூ. உபாதி ஓரேழு = பொய்யை மெய்யெனும் அஞ்ஞானம், பொய்கூறல், அயர்வு, மூர்ச்சை, ஆசையை மறைத்தல், பிறவுயிர்களை வருத்துமெண்ணம், அச்சம் என்பனவாம்.

# குமரகுருதாசசுவாமிகள் பாடல்.

பிராணபந் தனமாகு மனநிரோ தனநன்கு
பேணியுற லெக்காலமோ
மாமா சறும்படி பிரத்தியா காரநிலை
மன்னிடுவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தினை
மயங்குமென் முன்புவந்து
சீமே வதீதர்கரு தருணிறுவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (௫

விடயவா தனைகெடுத் துன்னரிய தாரணையின்
மேவியிட லெக்காலமோ
மிளிர்கந்த தெய்வத்தை முன்னொரு தியானத்தில்
விரிகின்ற தெக்காலமோ
தடையற்ற சுகநிருவி கற்பச் சமாதியிற்
சயனிப்ப தெக்காலமோ
சைவசன் மார்க்கமுடி வுற்றோ மெனுங்களி
தலைக்கேற லெக்காலமோ
வடகயிலை தென்கயிலை யிறைவரா சீர்வாதம்
வந்தணைவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தினை
மயங்குமென் முன்புவந்து
திடஞான நிலையான வருணிறுவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

தாணுநிழல் கொண்டதிரு நந்திதரு நன்னெறி
தனக்குநா னியைவதென்றோ
சனற்குமர முனிசத்திய ஞானதரி சனிபரஞ்
சவியுண்மை யுணர்வதென்றோ
மாணுடைய மெய்கண்ட தேவர்பே ரருணந்தி
வளர்கருணை யெய்தலென்றோ
மறைஞான தேசிக ருமாபதி சிவாசாரி
மார்க்கமதி பெறுவதென்றோ

ஊணசை துறந்தரு ணமச்சிவா யப்பிரபு
வுற்றவழி நண்ணலென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
சேணமுதர் பேணரிய தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கக)

சற்குணர் தொழுஞ்சிவப் பிரகாச சித்தரது
தண்ணளி பொருந்தலென்றோ
தகைநமச் சிவாயரரு ளுளசிவப் பிரகாசர்
தங்கிருபை சேர்வதென்றோ
நற்கலைச் சிறுமுனிவர் திருவருட் டுணையென்னு
ணலியாது நிமிர்வதென்றோ
ஞானவருண் ஞானசம் பந்தர்வா கீசர்பத
நாடிநனி நிற்பதென்றோ
உற்பவ மொழிந்தவன் றொண்டர்தங் கருணைக்
குரித்தாய் நிலைப்பதென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
சிற்சபையி னிர்த்தமிடு தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கஉ)

---

மெய்கண்
கக. திருநந்திதேவர், சனற்குமரர், சத்தியஞான தரிசனி, பரஞ்சவி, மெய்கண்டார், அருணந்தி, மறைஞான குரு, உமாபதி, நமச்சிவாய ரென்பார்வழி வந்ததாகக் கூறப்படு இலிகிதங்களுள் "நன்னெறியும்," "உண்மையும்," "வளர் கருணையும்," "நெறிப்பட்ட மதியும்," "நயம்பொருந்திய வழியும்" உள்ளனவற்றையே லீடா லீடநியாயத்தால் ஆசிரியர் அங்கீகரித்தமை இப்பாட்டிற் காணப்படுகின்றது. இதனால் அல்லனவும் அங்கீகரித்தார் என்றல் கூடாது. இனி வருஞ் செய்யுள்களிலுள்ள அங்கீகாரங்கட்கும் இந்நியாயங் கோடற்பாலதாம். ஒவ்வொருவர் கொள்கைகளுள்ளும் யாது பேதமிருப்பினும் இறைவன் திருநாமத்தை யுச்சரித்து அவனை முன்னி நின்ற சிவனடியாராகலின் சிவனுக்குங் குமாரனுக்கும் பேதமின்றெனுந் துணிபு ஆசிரியர்மாட் டுளதாகலின் அன்னோர் பெயர்களை மேம்பாடுடைமையி லெடுத்துக்கொண்டு நியாயங் கூற வந்தாரென்பதும் இங்கே குறிப்பாக வுணரக்கிடக்கின்றது. செய்யுள் கச - ல் "உய்யுநெறி நின்ற வடியாரெவரும்" என்றமையும் இக்குறிப்பை ஆதரிக்குமே.
கரு - ஆம் பிரபந்த முதற்பாட்டும் இங்குக் கவனிக்கற்பாற்றே.

பரமுத்த ஞானதிரு வாதவூ ரன்சென்ற
பாதையைத் தெரிவதென்றோ
பட்டினத் துப்பிள்ளை பத்திரகிரி யார்நின்ற
பண்பையினி துணர்வதென்றோ
திருவுளத் திற்கினிய வருணகிரி நக்கீரர்
சென்றநெறி சேர்வதென்றோ
சேக்கிழார் நம்பியதி ராவடிகள் கல்லாடர்
திருநெறியி னிற்பதென்றோ
உரவிளம் பெருமா னாறுங்கபிலர் நற்பரண
ருற்றநடை பற்றலென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
தெரிவரிய வறிவான தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூஎ)

வையந் துறந்தசிவ வாக்கியர் குறட்புலவர்
மாணருள் விரும்பலென்றோ
வண்மைகெழு தாயுமா னவரருட் கண்ணுமுடைய
வள்ளலருள் கொள்ளலென்றோ
சைவபா டியநீல கண்டரர தத்தரொரு
சம்புவரு ளுறுவதென்றோ
சாரா வணிக்குரு மணித்திரய தேசிகர்
தடங்கருணை மேவலென்றோ
உய்யுநெறி நின்றவடி யாரெவரு மென்னுடைய
வுள்ளத்து ளொளிர்வதென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
தெய்வங்கள் புகழருட் டெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூ௭

கூஎ. சிவனடியாருடைய பத்திமை சரித்திர மென்பன பகரும் ஆக்க அ
"திருநெறி" எனப்பட்டது.

சென்றதையும் வருவதையு முன்னுவொ ருறுதியென்
சிந்தையின் முளைப்பதென்றோ
தெய்வமெனு மொருபித் தனாதங் கொண்டன்பர்
செயல்பேணி நிற்பதென்றோ
கன்றுகற் றுவகன் றுலென்ன நின்றுனைக்
கருதினு னழுவதென்றோ
கையைப் பிடித்துன்றன் மெய்ம்மைப் பதிக்குக்
கடத்திநீ போவதென்றோ
ஒன்றிற்கு மஞ்சற்க வென்றுநீ சொல்லுமோ
ருறுதியுரை கேட்பதென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனல்
சென்றுவரு மனூரிலார் தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (சுரு)

மதபேத வம்புகளு மானுபி மானமு
மறந்தறிவை நேடலென்றோ
மனைவியுந் தமருமலை புனலிலெழு குமிழியென
மனதுறுதி கோடலென்றோ
இதயவெளி நடுவான பொருளைச் சதாகால
மிதயத்தில் வைப்பதென்றோ
இருவினைத் தொடர்பில்வரு முடலைக் கடந்தெண்ணு
மௌனமற் றிருப்பதென்றோ
உததிபோன் மெய்ஞ்ஞான வெள்ளமது பொங்கவதி
னுழைமூழ்கி மகிழ்வதென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனல்
சிதடறி யாதபர தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (சுசு)

கோவில்வா விகணல்கு பலனுக்கு மேனல்கொர்
கோவிலுண் ணுழைவதென்றோ
கொடிசெடி மரத்தலர்கள் கொய்யாம லமைதியங்
குசுமமே கோடலென்றோ

சேவொளிரு நின்னடியி லதனையர்ச் சித்தெனது
சிந்தைகளி கூர்வதென்றோ
திருவாய் மலர்ந்தெமக் கடிமைநீ யென்றநீன்
செப்பியருள் புரிவதென்றோ
ஓவிய வுருப்போல வாயிடை யிருந்துநா
னுன்னொடு விராவலென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
சீவர்கள் பழிச்சுபர தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூ

பொற்புறு சிவானந்த பூமியி லிருக்குமோர்
புதையலை யெடுப்பதென்றோ
புகரற்ற பூரணதி லேகியஞ் செய்துமுப்
போதும் புசிப்பதென்றோ
விற்புருவ விழிசிவந் திடலகிரி யேறியவ்
விழிசெருகி நிற்பதென்றோ
விசமநின் மலசங்க ரகிதநிர்க் குணபரம
வெளியிற் படுப்பதென்றோ
உற்பவப் பிணிதணந் திடையறு வானந்த
வுண்மையொ டளாவலென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
சிற்பர விலாசகுக தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூஅ)

நாமரூ பங்களின் றெங்குநிறை யறிவையே
நாடிநா னழிவதென்றோ
நாற்றச் சரீரத்தை வாட்டித் தவத்தையே
நாளுநனி யீட்டலென்றோ
காமிகட் காகாத வத்துவித பூரணங்
கரிசற்று மிளிர்வதென்றோ
கருதிய படிக்குனது கருணைமுகி லென்னைக்
கவிந்துபொழி கின்றதென்றோ

ஊமர்போ லேயிருந் தெதிலுமது வென்றுகண்
டொன்றாக நிற்பதென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
தேமலர்ச் சரணன்பர் தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (சுகூ)

ஆசற்ற சின்முத்தி ரைக்குறியி லொன்றிரண்
டாகாம னிற்பதென்றோ
அங்ஙன மனோநாச நிலைவந்து கைகூடி
யசைவற் றிருப்பதென்றோ
பாசவிரு ளாமிரவு பாறவெளி வருகின்ற
பரிதிதரி சிப்பதென்றோ
பகலிர விலாதசுய நிலைமையிது வாமெனும்
பரிசுநன் குணர்வதென்றோ
ஓசைமணி மண்டப நடுக்கணுற் றங்குள்ள
வுண்மைகண் டேறலென்றோ
உயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
தேசுமிக் குடையபர தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (எ0)

சிங்கலி லதீதசிவ சாதுசங் கத்தினைச்
சேரவருள் புரியொணாதோ
சிவயோக மன்றிமற் றெல்லா மயக்கென்று
தேறவருள் புரியொணாதோ
பங்கமில் லாதவொ ரருட்சத்தி யென்னுளே
பதியவருள் புரியொணாதோ
பார்க்குமிட னெல்லா நிறைந்தசத் தென்னவே
பார்க்கவருள் புரியொணாதோ
இங்கென்று மங்கென்று மில்லாம லெங்கணு
மிருக்கவருள் புரியொணாதோ
என்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துத்

திங்கணிகர் போதநனி யுண்டென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

ஓவுத லிலாதநுலை யொத்தசத் தினிபாக
முறவொரருள் புரியொணாதோ
ஓயாத கவலைகளு முதவாத செய்கைகளு
மோயவருள் புரியொணாதோ
சாவனோ வுய்வனோ வென்றுநினை சஞ்சலந்
தணியவருள் புரியொணாதோ
தத்துவ சமூகந் தணந்தென்னை யறிமதி
தழைக்கவருள் புரியொணாதோ
ஏவமி லெனக்கறிவ தாகிற்கு முன்னறிவை
யெய்தவருள் புரியொணாதோ
என்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துத்
தீவிர மறுக்குநிலை வைத்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (எஉ)

கறைநெஞ் சுளார்சிறிது கருதுமா கருதாது
கருதவருள் புரியொணாதோ
கங்குல்பக லாகவந் நாட்டமா நின்றனைக்
காணவருள் புரியொணாதோ
குறையாத பேரின்ப வெள்ளம் படிந்துளே
குளிரவருள் புரியொணாதோ
கூறரிய சுகநல்கு பெருவாழ்வை நான்கொள்ளை
கொள்ளவருள் புரியொணாதோ
இறைமைசால் கண்ணுடைய வள்ளல்குரு சொனவண
மிருக்கவருள் புரியொணாதோ
என்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்

---

எஉ. எவ்வம் என்பதன் நீட்டல் விகாரமே "ஏவம்" துக்கமெனும் பொருளுடைத்து ; பி - நிகண்டு காண்க.

தீவிரம் = சுடுகை ; தீவ்ரம் என்பது வடசொல்.

சிறுமையணு காநிலை நிற்இயெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (எங)

மிணுமிணு வெனுமணி யுருட்டலில் வாராதென்று
மிஞ்சவருள் புரியொணாதோ
மேனுடி நினைதல்போ தாதென நிரோதனம்
விளக்கவருள் புரியொணாதோ
துணியகல் சுழுத்தியிற் சுகமில்லை யெனவுனித்
துணியவருள் புரியொணாதோ
துலைதூர மோவென்று மலையாது வழிகண்டு
தொடரவருள் புரியொணாதோ
இணையற்ற துரியா திதத்திலே சும்மா
விருக்கவருள் புரியொணாதோ
என்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துத்
திணியுச்ச வருணிலை நிற்இயெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (எச)

பத்திவயி ராக்கியப் பெட்டியா வென்னுளம்
படியவருள் புரியொணாதோ
பரமாணு பூதிப்பிர வாகமென் முன்னரே
பாயவருள் புரியொணாதோ
சித்தர்க ளுலாவுநற் சதுரகிரி வெளியிலே
திரியவருள் புரியொணாதோ
தேசுமிக வுந்தரும் பொதியா சலத்துளே
செல்லவருள் புரியொணாதோ
எத்திசையு நின்றுனது சித்தையறி யும்படிக்
கேற்றியருள் புரியொணாதோ
என்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
செத்திலா முத்தியி னிற்இயெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (எரு)

எரு. செத்து - யாதென்பதை உரு ஆம் பாடற் குறிப்புரையிற் கூறியாயிற்று.

# குமரகுருதாசசுவாமிகள் பாடல்.

சாமமறை வாக்கிய மதிற்றெரும்ப தப்பொரு
டனைக்கொளருள் புரியொணுதோ
தகைமைசர் றத்பதப் பொருணணி புணர்ந்துணர்வு
தங்கவருள் புரியொணுதோ
மாமகிமை யுளவசி பதப்பொரு ளுணர்ந்துபயின்
மார்க்கமருள் புரியொணுதோ
வழுத்தந்த முத்திறமு நின்னருளி லாமென
மதிக்கவருள் புரியொணுதோ
ஈமநிலை சேர்முன்ன ரீமநிலை யைக்கண்
டிருக்கவருள் புரியொணுதோ
என்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
சேமநிலை யைக்கொடுத் தென்றுமெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளுரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

தொம்பதந் தன்னிலா காமியத் தின்வலி
சுருங்கவருள் புரியொணுதோ
துகளற்ற தத்பதந் தன்னிலே சஞ்சிதந்
தொலையவருள் புரியொணுதோ
அம்பதத் தசியிற் பிராரத் துவப்பெருமை
யழியவருள் புரியொணுதோ
அதிர்த்தமுத னடுவிலே யாணவமு மாமையா
மடங்கவருள் புரியொணுதோ
இம்பர்விடு கிறகடையி லேகன்ம வன்மல
மிறக்கவருள் புரியொணுதோ
என்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
செம்பரம முத்தியி னிறீஇயெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளுரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

---

எசு. வழுத்தல் என்பது துதித்தல் எனப் பொருள் படுமாயினும் இங்ஙனஞ் சொல்லலெனும் பொருட்டு; சாக்கிய நாயனுர் புராணத்து க-ல் "மறுவில் சான் பெற்றதிற மறிந்தபடி வழுத்துவாம்" என வருதலுமது. இந்நூலாசிரியருளிய ௨-வது மண்டலத்தைச் சார்ந்த சிவயாதனு வியாசத்து கக௨-ன் உரையில் வேறுபல இலக்கியங்களுங் காண்கலாம்.

ஆதியிற் சுத்தனு நிற்குநிலை தனிலிச்சை
யல்கவருள் புரியொணுதோ
அடுத்ததி லருட்செல்வ ஞநிலையி லேயறி
வடங்கவருள் புரியொணுதோ
வாதனை யிலாதகடை யிற்கிரியை விடுகின்ற
மார்க்கமருள் புரியொணுதோ
மாண்புடைய வக்கடையி லொன்றிரண் டற்றசுக
மருவவருள் புரியொணுதோ
ஏதமில் லாதசிவ சாயுச்சிய மீதெனை
யிருக்கவருள் புரியொணுதோ
என்றுகரு திக்கலுழ மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துத்
தீதில்பதி ஞானகதி நல்கியெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (எ௮)

ஒட்டாரு நட்டார்க ளாகும் படிக்கோ
ருபாயமருள் புரியொணுதோ
ஊனுன பூதபரி ணமவுட லிவ்வளவி
லொழியவருள் புரியொணுதோ
கிட்டிய வினைப்போக பூதசா ரமுமினிக்
கெடவொரருள் புரியொணுதோ
கேவல மிலாதவொரு கேவல மெனக்குக்
கிடைக்கவருள் புரியொணுதோ
எட்டற்ற வக்கேவ லங்கொளசி பதமா
யிருக்கவருள் புரியொணுதோ
என்றுகரு திக்கலுழ மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
சிட்டரடை யுங்கதி யளித்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (எ௯)

கல்லினுங் கடியவென் னெஞ்சங் கரைந்துனைக்
கருதவருள் புரியொணுதோ
கதிதனை யவாவியே காந்தத் திருந்துளங்
கனியவருள் புரியொணுதோ

அல்லிலும் பகலிலுந் திருவருட் கடலிலே
யமிழவருள் புரியொணுதோ
அங்கணே யாழ்பழம் பூவண் டிறழ்ந்துபே
றண்ணவருள் புரியொணுதோ
எல்லாரு முன்றெண்ட னென்றெனைச் சொல்லுமுறை
யேறவருள் புரியொணுதோ
என்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
செல்லல்வா வில்லமுத நல்கியெனை யாளாயோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அ0)

தாயாய வானந்த ரூபிமா தேவியரு
டையின்றி யென்னுள்வரவும்
தற்பரி வராகிமா சூலிமா குமரிமா
தங்கியரு ளென்னுள்வரவும்
தூயகுண வம்பிகை மனோன்மணி பவானியருள்
சொந்தமுட னென்னுள் வரவும்
சுந்தரி திகம்பரி பராசத்தி யின்பவரு
டோகமற வென்னுள்வரவும்
மாயமா கதவல்லி வாலைபரி பூரணி
வழங்குமரு ளென்னுள்வரவும்
மாசற்ற வாமியரு ளேசத்தொ டேயென்னுள்
வரவுநீ யருள்புரிந்து
தேயாத பேறெனுந் திருவளித் தாளாயோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அ

மனமா சறுக்கவல மாணிக்க வல்லியருண்
மளமளென வென்னுள்வரவும்
வரதமுடை யபிடேக வல்லியரு ளொல்லையின்
மயங்காம லென்னுள்வரவும்
கனயோக மல்கமுத வல்லிதன் யோகவருள்
கரிசின்றி யென்னுள்வரவும்
கரும்பனைய மொழிதருங் கற்பகப் பெயர்வல்லி
கருணையரு ளென்னுள்வரவும்

அனகவொண் மைத்தரள வல்லிபே ரின்பவரு
ளட்டியின் றென்னுள்வரவும்
ஆனந்த வல்லியுடை யருளென்னுள் வரவுமென்
னையனீ யருள்புரிந்து
சென்னமீ றில்லாத திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அஉ)

பஞ்சின்மெல் லடிவிழும வமிர்தகுண வல்லியின்
பரமவரு ளென்னுள்வரவும்
பங்கயன் பணிமகா மங்களே சுவரியின்
பசுமையரு ளென்னுள்வரவும்
விஞ்சைவரர் பரவுநல் வேனெடுங் கண்ணியின்
விகதவரு ளென்னுள்வரவும்
விட்டகுறை தொட்டகுறை கிட்டவர வேபுரியு
மெல்லியரு ளென்னுள்வரவும்
சஞ்சல வசஞ்சலப் பொருளெங்கு நிறையுமொரு
சத்தியரு ளென்னுள்வரவும்
தமபாவ சங்காரி யருளென்னுள் வரவுமென்
சாமிநீ யருள்புரிந்து
செஞ்சரோ சப்பதத் திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அங)

மின்னொளி யனந்தமுமிழ் வதனவழ கம்மையின்
விமலவரு ளென்னுள்வரவும்
மிகைதெறுங் காவியங் கண்ணிமா கண்ணியின்
விளக்கவரு ளென்னுள்வரவும்
கன்னலின் கண்டுறழ மொழிமகா வாணிமுக்
கண்ணியரு ளென்னுள்வரவும்
கவினுள சகச்சிரகம லத்திடை யிருக்குமொரு
கன்னியரு ளென்னுள்வரவும்
இன்னலை யொருக்கியருள் சோமகலை நாயகியி
னேசிலரு ளென்னுள்வரவும்

அங. விகதம் — விஹவிதம் என்னும் வடமொழிச் சிதைவு. இது மலர்ச்சி — முக மலர்ச்சி யென்னும் பொருள் பயக்கும்.

# குமரகுருதாசசுவாமிகள் பாடல்.

ஏர்கொண்ட சிவயோக நாயகியி னருள்வரவு
மெந்தைநீ யருள்புரிந்து
தென்னிலகு மலரடித் திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

அங்கயற் கண்ணியபி ராமிகா மக்கணி
யகண்டவரு ளென்னுள்வரவும்
அண்டபகி ரண்டங்க ளீன்றவென் னம்மையரு
ளன்புகொண் டென்னுள்வரவும்
சங்கடங் காதுசிவ சாம்பவி நிரந்தரி
சகாயவரு ளென்னுள்வரவும்
சருவபுவ னேசுரி தயாபரி யகாரியின்
சாதவரு ளென்னுள்வரவும்
துங்ககலி யாணிசரு வாணியபி ராணியரு
டுரிதமா வென்னுள்வரவும்
சுத்தசிவ சத்தியரு ளென்னுள்வர வும்பெரிய
சோதிநீ யருள்புரிந்து
சிங்கா நிரந்தரத் திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அ

அட்டமா சித்திதரு முத்தமியி னல்லரு
ளகங்குளிர வென்னுள்வரவும்
ஆதிநடு வந்தமில் லாதகரு ணாகரியி
னமுதவரு ளென்னுள்வரவும்
இட்டநிமிர் தொண்டரக முற்றபெரு நாயகியி
னீரவரு ளென்னுள்வரவும்
எவ்வுயிரு மெம்மக்க ளென்பவளி னின்பவரு
ளீடின்றி யென்னுள்வரவும்
கட்டழ கெலாமுடைய பருவரத வருத்தனிய
கண்டவரு ளென்னுள்வரவும்
கருதரு மிலக்குமியி னருளென் னுள் வரவுமெங்
கடவுணீ யருள்புரிந்து

திட்டமறு பூரணத் திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அகூ)

ஆற்றலுடை நித்திய சுகானந்தி பேரரு
ளளப்பின்றி யென்னுள்வரவும்
ஆனந்த வாரியென நிறையுநிட் களைவிமலை
யாணரரு ளென்னுள் வரவும்
கூற்றல் விளக்கரிய வாதிசிவ சத்தியின்
கோதிலரு ளென்னுள்வரவும்
குற்சித மெலாமடு மகோரநிர்த் தனியங்
குசத்தியரு ளென்னுள்வரவும்
ஊற்றமலி நின்மல நிராகார சத்தியரு
ளூரிமையோ டென்னுள்வரவும்
ஓங்கார சத்தியரு ளென்னுள்வர வும்பெரிய
வொருவனீ யருள்புரிந்து
தேற்றவுறழ் வோர்கருது திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அஎ)

ஒன்பது மணிப்பிரபை வீசுமுடி நாரணியி
னுசிதவரு ளென்னுள்வரவும்
உண்மைப் பரம்பொருளை யகலாத சிற்சத்தி
யொப்பிலரு ளென்னுள்வரவும்
நன்குகெழு புங்கவியொர் பகவதி பராபரைசெய்
நறியவரு ளென்னுள்வரவும்
ஞானவா னந்தமுகி லானபர தேவதையி
னவிலரு ளென்னுள்வரவும்
அன்பரு ணடிக்கின்ற வானந்த நிர்த்தனியி
னணவரு ளென்னுள்வரவும்
அந்தரியி னருளென்னுள் வரவுமெம் பரமனு
யவிருநீ யருள்புரிந்து
தென்புல மிலாதவொரு திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (அஅ)

துப்பிதழ்ச் சாரதை பழிச்சுருத் திரைபுடைய
சுத்தவரு ளென்னுள்வரவும்
சோதிவடி வானசரு வேசுரி மகேசுரி
துளக்கவரு ளென்னுள்வரவும்
எப்பொழுது முள்ளதிரு மங்கைஜக தம்பிகையி
னேதிலரு ளென்னுள்வரவும்
எழில்பெருகு சங்கரி சகோதரி யெனுஞ்சிற்
றிடைச்சியரு ளென்னுள்வரவும்
ஒப்பின்மா லினிவடுகி நீலலோ சனியமலை
யோகையரு ளென்னுள்வரவும்
ஒளிமல்கு காந்திமதி யருளென்னுள் வரவுமுள்
ளுணருநீ யருள்புரிந்து
செப்பரிய வீடெனுந் திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

சிந்தைதிக ழுஞ்சித்தர் கட்கருஞ் சித்துதவு
செல்வியரு ளென்னுள்வரவும்
தில்லையி னடம்புரியு மன்னைசிவ காமிதரு
தெய்வவரு ளென்னுள்வரவும்
இந்தவுல கின்பாசம் வெந்திட வுபாயமிடு
மிறைவியரு ளென்னுள்வரவும்
எவ்வுயிர்த் தொகையினு மிருந்துவிளை யாடுமையி
னேமவரு ளென்னுள்வரவும்
கொந்தலர்க் குழலிசிவ சங்கரி சிவானந்தி
குடிலையரு ளென்னுள்வரவும்
கோதிறிரி புரைகௌரி யருளென்னுள் வரவுமெங்
குரவனீ யருள்புரிந்து
செந்தே சிகப்பதத் திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (சு0)

பித்தேறு பித்தம் பிடித்திடா தத்துவித
பித்தம் பிடித்தேதகவும்
பேசாத பெருமையைப் பேணுதற் கெனதுவாய்
பேசாதென் வயமாகவும்

செத்தாலும் விட்டுவிடு வேறே யெனச்சிந்தை
திடமாய் நிலைத்தேறவும்
தேடரு முனைப்புறந் தேடியலை யாதபடி
தேடியென் னுட்காணவும்
எத்தொழில் புரிந்திடினும் வைத்தகுறி பிறழா
திருந்தமுத மேசேரவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
சித்தர்கள் பராவுனடி யருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூக)

பொருடேடி யுளமகிழு மிழுதையா காதபடி
பொருடேடி யுளமகிழவும்
போக்குவர வறியாத மூர்க்கனு காதபடி
போக்கோடு வரவறியவும்
அருவையுரு வென்கின்ற சிதடனு காதபடி
யருவையுரு வென்றறியவும்
அவனிவ னெனச்சொலுங் கரிசனு காதபடி
யவனிவனே டென்றறியவும்
இருளையொளி யென்கின்ற குருடனு காதபடி
யிருளையொளி யென்றறியவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
திருவளர் சிவானந்த வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூஉ)

நீங்கா மவாநினைவு நீந்துநல் லுணர்வொன்று
நீயாது மிஞ்சியிடவும்
தெய்வவட நீழலிற் சொல்லாது சொன்னதைச்
சிந்தையு ணிறீஇயிடவும்
தூங்காது தூங்கித் திளைப்போர்கள் கொண்டவொரு
தூக்கமென் பதையெய்தவும்
சொப்பன மிலாதவொரு சொப்பன மெனுந்திவ்விய
சொப்பனங் கண்டுகொளவும்

எங்காம லேங்குமோ ரேக்கமது கொண்டுநா
னேங்கியேங் கிக்கனியவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மினமக் கடிமையெனவே
தேங்காலி னன்பர்கரு தருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

மேலூர் வியோமா லயக்கோபு ரத்துடை
வெளிக்கடை கடப்பதற்கும்
விசித்தி ரமதானபிர காரத்தை வலம்வந்து
மெய்த்துதிகள் செய்வதற்கும்
நாலாறு திறமாகு நாதமணி மேடையினை
நண்ணிவந் திப்பதற்கும்
ஞானப்பிர காசம்பிர காசிக்கும் வந்துவை
நடுக்கண்டு கொள்வதற்கும்
ஏலாமை யின்றிநிட் களசங்க ரகிதனின்
பென்னுநிலை யுறுவதற்கும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மினமக் கடிமையெனவே
சீலாநல் கென்பவர்கொ ளருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

சன்மமுற் சன்மங்கள் போலபல மாகாது
சபலமது பெற்றுய்யவும்
தத்துவா தீதமெனு மொருபெரிய தத்துவந்
தனையே யடைந்துய்யவும்
புன்மனப் புன்மையர்கள் புன்மொழி யவாவிடும்
புன்மையை வரைந்துய்யவும்
புனிறுமா பென்னீர்மை மருவா திருக்குமொரு
புதுமையை யுணர்ந்துய்யவும்
என்செய்கை நின்செய்கை நின்செய்கை யென்செய்கை
யென்னுநிலை யுற்றுய்யவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மினமக் கடிமையெனவே

சின்மயா னந்தசிவ வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூரு)

தவமுய விளரிமுழு துந்தவிர வுங்கருத
றவிரா திருப்பதற்கும்
சத்தின்மு னெலாஞ்சூனி யங்கொலென் றறையுமா
தரிசித்து நிற்பதற்கும்
கவலைமா கடலிலே குடையாம னின்னருட்
கடலிலே குடைவதற்கும்
கருவூரை யின்னுமடை யாமலின் னமுதவார்
கலியூரை யடைவதற்கும்
இவனவ னெனுஞ்சிந்தை யிறையுமின் றலர்வண்டி
ணியல்பாக வமர்வதற்கும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
சிவஞான கைவல்லிய வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூசு)

பாசநிட் டாபரர்கள் போலவே யந்நிட்டை
பண்ணு துளேசெல்லவும்
பசுஞான நிட்டையுந் திடமன் றெனுவதிற்
படியாது மேலேறவும்
மாசற்ற பதிநிட்டை தன்னிலே நானறிவு
மயமா யிருந்தவிரவும்
மறைஞான சம்பந்த முனிசொன்ன முடிவாக
மௌனமே கைக்கொள்ளவும்
ஏசிலா துள்ளவிந் நிலையன்றி வேறுநிலை
யிலையெதிலு மென்றமரவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
தேசசுக மலிந்தவடி யருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (கூஎ)

---

கூசு. விளரி = வேட்கைப் பெருக்கம்; ளகரவேதுகை காண்க.

நெஞ்சம் பதைப்பற்ற நெஞ்சமா கத்தேநி
நெஞ்சையந் நெஞ்சறியவும்
நிலவுநன் மனவெளியி லொருநினைவு சலமின்றி
நிலையாக நின்றுன்னவும்
துஞ்சாத வினையங்க ணேகண்டு திருவருட்
டுணைவலியை நானுணரவும்
சுத்தவியல் பாமருளி லென்செயலு மறிவுஞ்
சுதந்திர மிழந்துறையவும்
எஞ்சிறுமை நாறிறைவ னுயவுன் றெடுநா
ளிருந்தபடி யாகிற்கவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
செஞ்சரண வன்பர்விழை யருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

சளசள வெனப்பேசு நாவினை யடக்கிச்
சவம்போ லொடுங்கிடற்கும்
சகலகே வலம்வந்து தாக்காம லங்ஙனே
சாகாது செத்திடற்கும்
மளமள வெனக்கருணை மழைபொழிந் தலபிடேக
மதிமகன் செய்திடற்கும்
மாசற்ற சடலைதனி லுடன்முழுது மொருஞான
வன்னியா னீற்றிடற்கும்
இளவலெம் பிதிரா முனேறெடென பிணைப்பறற்
கேசில்பின் டம்போடவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
தெளிவுள சுகானந்த வருள்புரிந் தாளமோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே.

சரியையுங் கிரியையும் புதுமணக் கோலச்
சடங்கென நினைந்துகொளவும்
சகயோக மணவறையுண் மணமகளு மகிழுமுள
தரமென வறிந்துகொளவும்

அரியமெய்ஞ் ஞானமபி மானமச் சந்துறந்
தணைதலென வுய்த்துணரவும்
அங்கணுண் டாகுமின் பதையிருவ ருஞ்சொலா
வதிருய்ய மெனவோரவும்
எரிநிரய யாதனையை நூறருண கிரிநிலையு
மிதுவே யெனத்தெளியவும்
எண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
திரிபுகே டில்லினிய வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்பிர மணியதேவே. (க00)

---

ஆகப்பிரபந்தம் இருபத்தேழினும் போந்த திருப்பாடல் — ருகஉ
தெய்வ வணக்கச் செய்யுள் ரு
ஆகத் திருப்பாடல் ருகரு

---

# உஅ. வேண்டுகோள்.

---

## துதிபரம்.

வேறு பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

போசவு லாசவி லாசப கேசவ பூர்வச தாசிவனே
போதவி பூபரி பூசிகி வாகன பூதகிர் பாகரனே
ஈசம கேசவி சேடவி சாகசு ரேசப ராபரனே
ஏககி யாதத யாளவ காதமி லாதுச தாநினைவோர்
நேசவ ரோதய பீமவி ராமவ னேகக லாநிதியே
நீதவி வேகசொ ரூபபி ராமண னேபிர சாதசிதா
காசச காரர காரவ காரண காரப வாருகமா
காரண பூரண தாரக னேகறை காதிவி ராவுதியே. (க)

---

க. போசன் = இயற்கைநலமுளன்; (ஹொஜ ஃ) போஜன் என்பது வடசொல்.
கியாதம் = விளக்கம்; (வூ்ாத ஃ) க்யாதம் என்பது வடசொல்.
அகாதம் = ஆழம்; உட்சூதை புணர்த்தும்.

# குமரகுருதாசசுவாமிகள் பாடல்.

## அரையனடி நாடுமனமே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். *

விதுவெழி னறுந்தும்பை மதலையர வங்கமடம்
விறலும்பல் வியாளவதளார்
நதியெழுழி யின்கொம்பு வளரறுகு வெள்ளென்பு
நவியமணி கின்றவிறையோன்
இதவொடு விரும்புமுமை மகனெனு மகண்டகுக
னிணையிலரு ளின்பமுறநீ
அதுவிது வெனும்பெரிய சுழலிலுழ லாமலயி
லரையனடி நாடுமனமே.

இதியென வுழன்றுலக மயல்விழை முசுண்டருற
வெனுநிலை நிலாதுபரம
நிதியெனு நலஞ்சதத மருளொரு கடம்பனது
நிறைகருணை மேவவடியார்
துதிபணி யிறைஞ்சுமொரு பெரியபொரு ளங்கியவி
சொரிகுந ரவாவுமுலகர்
அதிபதி சிறந்தகுரு பரனிமல னுனவயி
லரையனடி நாடுமனமே.

கடல்கவி யனந்தைமிசை முடையுரு வணைந்துவரு
கருமமற வரைகடுகளாம்
படலமுய ரும்பருறை பதியினை வளைந்துமிளிர்
பரிதியை மறைக்கவிறல்சால்
நடனமிடு மஞ்சிகியின் முதுகிடை யிருந்துபய
ணமிலரிட நணுகியுயுமா
றடலசுர னெஞ்சம் பிளந்தவிக லுடையவயி
லரையனடி நாடுமனமே.

பொய்யொன்றை விட்டவ ரிடங்கலுட மில்லெகட்ட
பொய்யொன் றிருக்குமெய்ளிமேரு
மெய்யன்ப ரென்னுரை பொருந்நா மருந்தவமும்
வீயுமத னுன்முதலினீ

---

* இவ்விருத்தத்தினுடைய அடிகளின் கடைச்சீர்களை மா மா எனப்பிரித்[து]
எழுசீ ரென்பாருமுளர்.

ந. ஈதி — "இதி" எனக் குறுகிற்று; வேதனைநோய் எனும்பொருள் பயக்கு[ம்].
பி — நிகண்டு காண்க.

செய்யுஞ் செயற்கெனொரு பொய்யின்றி முன்சொனபொய்
சிதையும் படிக்குமதன்மேல்
ஐயந் தணந்தவரு ளணவும் படிக்குமயி
லையனடி நாடுமனமே. (ரு)

**ஒற்றிலாச் செய்யுள்.**

விவேகவிற லேறுதிசை நாதரரு ளாளவ
விநாசிபர மேசவருளீ
உவாவென நிலாவுகனி யாலுலகை யேகண
முளேமயிவி லேவருமனு
துவாதச புயாசல வெனுநனி பராவிய
சுவாமிபத மேவவுலகா
மவாவினி வாராதபடி வேதகுரு நாதனயி
லையனடி நாடுமனமே. (சு)

**ஒற்றிலாச் செய்யுள்.**

மிடியுடைய நினதுபழ வினைகிழிய முனைகிழிய
மிகைகிழிய வசுரனெலியா
மிடிகிழிய முடிகிழிய மிடறணியு மணிகிழிய
வினையிலக வலிகிழியமா
மடிகிழிய நடிகிழிய வகடுமுது கிடைகிழிய
மதிகிழிய விதிகிழியவோ
டடியொடுயி ரதுகிழிய நொடியிலெழு தருமொரயி
லையனடி நாடுமனமே. (எ)

தனதத்த தனதத்த தனதத்த தனனதன
தனனதன தானதனனு

வழிவிட்டு விசுவத்தி லுழனிற்கு ளுளபெரிய
மருளிரிய மாதவமிலார்
மொழிபற்றி மருவுற்ற பவமற்று ளலைவுபடு
முரணிரிய வாதைமிகவீ
கழிவற்று வரவற்று நிலைநிற்க வருணகிரி
கவியணிய வாவியணிதே
அழிவற்ற பரனெப்பி றுடிகொட்டு முருகனயி
லையனடி நாடுமனமே. (அ)

---

எ. நாடி — "நடி" எனக்குறுகிற்று.

அ. உழல் நிற்குள் உளபெரிய மருள் = மனமே ! உழல்கின்ற உனக்குள்ளே உள்ள பெரியமயக்கம்.

# ௨௯. பொன்னவிர்மேனி.

---

*வேறு அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

பொன்னவிர் மேனி வேண்மன் பொருண்மகள் கேட்க வில்லை
மன்னில மதிக்குஞ் சித்தி வரங்களைக் கேட்க வில்லை
சென்னிக ணெருங்க வீழ்ந்து தேவர்கள் பரவும் பாதந்
தன்னையே கேட்டே னீதான் றயவுகூர்ந் தளித்தி லாயே.

இருள்செறி யிரவில் விண்ணோங் கிருப்பைசூழ் தோப்பி னூடு
விரிதலை வெள்ளி யாங்கு வீழவவ் வொளியைப் பார்த்து
மருண்மருட் செயலோ பச்சை மயிலிறை வாவோ வென்று
வெருவியுண் மகிழ்ந்து பின்னை மெய்யறிந் தகநொந் தேனே.

இருளொளி முன்னே நில்லா தெரிமுன்னை நுரையில் லாது
பொருண்முனே பொய்தா னில்லா தென்றறி சமயம் போலும்
அருண்முனே வினையில் லாதென் றறிந்தவர் விரும்பு மந்தத்
தெருளருள் பெறுவா னானுந் தேடியுள் ளுடைந்தேன் வேலோய்.

வீட்டினை யவாமெய் யன்பர் விருப்பறிந் தருளும் வள்ளால்
பாட்டொடு பழிச்சென் ணோக்கப் பரிசுங்கண் டருளல் வேண்டும்
தாட்டிய வலதீண் டேதுந் தந்தருள் புரியோ னாமுன்
பாட்டிலே போவென் றோர்சொற் பணிக்கினு நலமே யன்றே.

உன்னைநா ளூடி நாடி யொருபய னறியே னையோ
என்னதான் செய்வே னிஃதை யெவரிட மிசைப்பே னீண்டுப்
பின்னையோர் புகலுங் காணேன் பெரியிறை யுனையல் லாமல்
எந்நிலங் களினு முண்டோ வியம்புதி யிகல்வேன் மன்னே.

வன்மனத் தார்கள் கண்ணும் வறுமையைச் சிறிது நேரம்
தன்மையொ டுரைத்தா லன்னோர் சல்லியொன் றேனு மீவார்
என்னுடை யெளிமை யெல்லா மியம்பியு மெவனை வேனும்
உன்மன மிரங்கா தென்னை யோதயு முகத்தெடும் பானே.

நாளுரை கூறிக் கூறி நடுவழி விடுவா னென்றோர்
கோளறு குமர வேணின் குளிர்திரு வுளத்தே முன்னி
ஆளருள் கொடாது வாளா விருப்பைகொ லடியே னுன்றன்
தாளிணை வலித்தே சாவேன் சரதமீ தறிந்து கொள்ளே.

---

௩. நுரை=வெண்ணெய்.
௪. தாட்டியம்=உறுதி; "தார்ட்யம்" வடமொழி.

இப்படிப் பலகோ டித்து மிரங்கில னவன்றா னென்னாக்
கப்புறு கருத்துக் கொள்வா னமக்குமோர் கவலின் றென்றான்
ஒப்பறு மிதயத் துள்ளே யுறுதிசெய் தொளித்துக் கொண்டாய்
துப்படி யீந்தா லன்றித் தொலையுங்கொ லெனத வாவே. (அ)

நடத்தைநேர் போதா திந்நா ளுமருள் புரியோ மென்றோ
விடத்தையுண் டவர்தாந் தந்த விமலவுண் ணினைப்பா யென்னைக்
கடத்தினுள் விளக்குப் போலக் கடத்தினு ளமைத்தாய் செய்யுந்
திடத்தைநீ புரப்பா யேனுன் றேர்வதிற் றடையென் கொல்லோ. (௯)

பையலோ டிணங்கே லென்னும் பழமொழிப் படியோ வுன்றன்
துய்யமெய் யுளத்து ளுள்கித் தோன்றிடா திருப்பாய் நல்ல
மெய்யுணர் வாய மேலும் பையலென் றுள்க லாங்கொல்
செய்யதீ வரைப்பே ரெந்தை தெய்வமே கருணை செய்யே. (௰)

---

# ௩0. கருணாகரவேலன்.

---

கட்டளைக்கலிப்பா.

மண்ட லத்துயிர் யாவையு மாண்முதால்
வண்டு மொய்க்குநன் மஞ்சரி மொய்ம்பினோய்
கொண்ட லைப்பழித் துள்ள வருட்கொடைக்
கோவே யென்றனை யாளவென் றன்பினென்
வெண்ட மிழ்ச்சொலுங் கேட்டருள் செய்வையோ
வீதி நாய்பொ லலைந்திடச் செய்வையோ
அண்டர் பூதி யடைந்திடச் செய்வையோ
வறிகி லேன்கரு ணாகர வேலனே. (க)

வஞ்ச னாயறி வீனர்க ணம்புமிவ்
வாழ்வி லேயுழன் றிப்புலை யாக்கைதான்
துஞ்ச வந்தகன் கையிற் கொடுப்பையோ
சூழ்ந்து சூழ்ந்தினுங் கத்திடச் செய்வையோ
நஞ்ச முண்டு நடித்தவர் செம்மலே
நங்கை வள்ளிதெய் வானை மணாளனே
கஞ்ச மெல்லடி யீந்தெனை யாள்வையோ
காண்கி லேன்கரு ணாகர வேலனே. (௨)

தாயு நீபெற்ற தந்தையு நீமணந்
 தாளு நீசொந்தத் தம்பியு நீதந்தை
தாயு நீயன்னை தாயுநி யண்ணனீ
 தாதை யின்மரு மானுநி மாமனீ
சேயு மாமியு நீதொடர்ந் தோருநீ
 தேவு நீயிறை யோனுநி மன்னுநீ
ஆயு மென்னக நீபுக் கிருந்தெனை
 யாண்டு கொள்கரு ணாகர வேலனே.

அன்பெ னுந்தட்ப மானதென் னெஞ்சகத்
 தளவை யின்றெழுந் தோங்கிப் பரம்பவும்
என்பு நெக்குடைந் தென்வச நானின்றி
 யிருகண் ணுங்கண் ணீருகுத் தேசிலா
இன்பு தோன்றவுஞ் செய்யொரு நீர்மையை
 யென்று தந்தருள் வாயெழி லெந்தையே
துன்பி னின்று சுவர்க்கர்ப் புரந்தவோர்
 சுவாமி யேகரு ணாகர வேலனே.

நீரி னாரம் படர்ந்தது போலெனு
 ணீக்க மின்றி நிறைந்தவஞ் ஞானமாங்
காரி ருட்டைத் துமிக்க வெளிச்சமே
 காட்டு ஞான விளக்கினை யேற்றவிந்
நேரம் வந்தரு ணீட்ட வுனக்கயர்
 நேம மேது மறிந்தில னிதம்
நாரொ டும்படர் வேனினை யொப்பிலா
 ஞாட்பு டைக்கரு ணாகர வேலனே.

மூன்றி ரண்டு புலன்வென் றகண்டமா
 மோன ஞானமெய் விட்புல மன்னிநின்
றூன்ற வின்பம தொன்றனை யிச்சிப்பா
 ரந்த ரங்கத்திற் றித்திக்குந் தித்திப்பை
மூன்றி ரண்டையும் வென்றறி யாதநான்
 மோகித் திப்பர்த் தியங்கித் திகைக்கிறேன்
ஈன்ற நின்னரு ளன்பக்க மாகுநா
 ளெந்த நாள்கரு ணாகர வேலனே.

தண்ண ளித்தெய்வ ரத்தின மாமுனைச்
 சந்த தஞ்சிந்தை செய்கின்ற நாளுநான்
உண்ணு முண்டியு முண்டிக ளாற்புட்டி
 யுறுமு டம்புமுள் ளாக்கையு நோக்குமும்

கண்ணிக் கண்ணிக் கலங்கிட நிற்கின்ற
　　கண்ண தாமிந்தப் பூமியும் பூமிமீ
தெண்ண வுள்ளவெல் லாமல மாகுமே
　　லென்செய் வேன்கரு ணாகர வேலனே. (௭)

சாலி யைக்குத்துங் காலத்தி லேயெழுந்
　　தண்டு லத்தினை யேய்ப்ப மனத்தினைக்
கால முஞ்செய் தியானத்தி னாலிருள்
　　கண்டி தப்பட் டிலங்குமெய்ஞ் ஞானமென்
றோலி டுஞ்சுரு திப்படிக் கேயுனை
　　யுள்ளி னேனரு ளாற்றுவந் திப்பொலா
ஞால நச்சு மயக்கைவர்ச் சித்தரு
　　ளாட்டி யாள்கரு ணாகர வேலனே. (௮)

எண்ணி லாதபல் கால்களைக் கொண்டுல
　　கெங்கு மோர்கணத் தேகு மனத்தையோங்
கண்ணி வைத்துப் பிடித்து வளைத்துளே
　　கட்டி நானல்ல காரிய வேடனாய்
எண்ண மற்ற சுகத்தை யடைந்தினி
　　யெந்தை நின்னருண் மன்னும் வெளிக்குளே
மண்ணி கந்துய்யு மார்க்கத்தி னிற்கவென்
　　மாட்டு வாகரு ணாகர வேலனே. (௯)

கன்னி மாரறு வர்க்கட்ட சித்தியைக்
　　காத லாயன் றதிர்த்த பிரானுறை
கன்னி நாட்டங் கயற்கண்ணி தன்னகம்
　　கண்கு ளிர்ப்புற வுள்ளகைக் கிள்ளையே
தென்ன விர்ந்துயர் தென்கயி லைப்பதிச்
　　செல்வ னுக்குந் திருப்புகழ் செப்பிய
என்னை யாளுடை யானுக்குஞ் சாமியே
　　யென்னை யீகரு ணாகர வேலனே. (௧௦)

---

அ. வர்ச்சித்தல் = நீக்கல், தள்ளுதல்; "வர்ஜிதம்" வடசொல்.

## ௩௧. சிகிவாகனன்.

---

கட்டளைக்கலித்துறை.

புனலை மலைந்து நடித்தவர் வாக்குப் புகனெறியே
சனனமொழிக்கு மதாறி விக்குமோர் சாமியெனக்
குனையல திந்த வுலகினர் யாரு முரைப்பதென்னின்
மனது திருத்தி யடையாது காண்சிகி வாகனனே.

பிறவியை யொழிக்கும்படியான உறுதி யுபதேசம் எனக்கு இவ்வுலகின ருரைப்
தென்றால் என் மனசு திருப்தியடையாதன்றே. அவ்வுபதேசத்தை நீயே யுரைத்
தல் வேண்டுமென வேண்டி நின்றமை இத்திருப்பாடலிற் காணப்படுகின்றது. ஆ
பெற்றவாறு நூலுள் யாண்டு யாண்டுக் கூறப்படுமோ ஆண்டாண்டறிந்து கோட
அறிவுடைமையே.

பொருள்பெற வென்றிரும் பொய்பல பேசிப் பொறிதணந்த
மருள்பிடித் தாடு மடவர்தங் கேண்மை மறந்துநித்த
அருளை நினைத்தவ் வருள்பெற வந்த வருண்முதனீ
வரும்வகை ருனதி தூரங்கொ லோசிகி வாகனனே.

பாசத்தை நீத்தரு ளுன்னடிக் காய பரியுகொண்டு
தாசத் தொழிற்செயுஞ் சீடனென் றூக்கித் தழைத்தபஞ்ச
கோசத்தை நூறி யெனைக்கொளும் போது குருபணிக்கும்
மாசற்ற நின்னரு ளேநிற்க வான்சிகி வாகனனே.

ஆத்தர்சொல் லானு மெனுமனத் தானு மளக்கவொண்ணுப்
பூர்த்தி யெனப்படும் வானவ னுமுனைப் போற்றியுய்வான்
சேர்த்த பரிசுத்த நாமங்க ளாயிரஞ் செப்பியுநல்
வார்த்தைக ளானும் புகழ்வரன் றேசிகி வாகனனே.

நினைக்கு நினைப்புங் கருவி யியக்கமு நின்னையவ்
நினைப்பு மியக்கமு மென்னிற் கலக்குமோர் சீர்மையினில்
எனக்கொர் சுதந்திர முண்டாகிச் செய்த விருவினையாம்
வனத்திடை நின்று மயங்குகின் றேன்சிகி வாகனனே.

அறிவற்ற கன்மமு மென்றனைத் தேடி யடைவதின்று
பொறிகெட்ட நானு மதுகண்டு கோடற்குப் போவதின்று
குறிதிட்டங் கண்டதைக் கூட்டிப் புசிக்கக் குயிற்றுவது
வறிதற்ற நின்னருள் வல்லமை யேசிகி வாகனனே.

எந்நாளு மென்னைப் பிரியா யெனுமென் னிதயமதில்
அந்நாளி லுன்னை நினைபொழு தேயுண் டதற்கொருகே
டிந்நாளி லுற்றதன் றேமெளி யேனிதற் கென்னசெய்வேன்
மன்னூர் பெருக்கி யருள்வா யருஞ்சிகி வாகனனே. (௭)

பரபரப் பாநிலம் பொன்றேடு காதலும் பாழ்ஞ்சடரம்
விரிவெடுக் கச்சரு வுண்டேன் றிளைத்து விளைமதனக்
காகரப் போடுபெண் டோளணை காதலுங் கைக்கொண்டநான்
வருபிறப் பெற்றற் குனையடுத் தேன்சிகி வாகனனே. (௮)

நித்த வனாதி யுணோடு விராவி நிறையுமுத்திக்
கொத்த வணக்கமெ னுள்ளக மன்றெனக் குப்புறம்பென்
றுத்தி பணற்கொரு ஞாயமு மில்லை யுரைத்தபடி
வைத்த குறிக்க ணெழுந்தரு ளாய்சிகி வாகனனே. (௯)

பொன்னுக்கு மண்ணுக்கு மின்னுக்கு மாகப் பொருந்துமனந்
தன்னைக் கெடுத்திடல் வீடென்று தேராச் சழக்குநெஞ்சர்க்
குன்னைத் துதிக்கு நெறிகசப் பாமவ ரொட்டெனக்கேன்
வன்னிச் சிலைப்பெய ரோன்பர மாசிகி வாகனனே. (௧௦)

உலக நசையினர்க்குக் குமார பகவானைத் துதிக்குநெறி கசப்பாகும். அவர் நட்பை யான் விரும்பே னென்பது இப்பத்தாம் பாட்டில் வெளிப்படுகின்றதன்றோ.

---

## ௩௨. அயிலரசு.

---

கலிவிருத்தம்.*

திருநான்முக னரிநேடிய சிரமாவடி யுடையோர்
குருவாகிய குகனேயருள் கூராயென நவினுன்
ஒருபாதையு மறியாதினு முழிதந்திடல் சரியோ
மருளாதருள் புரியாய்நல வலியாரயி லரசே. (௧)

குழகந்திக பூரவம்பல குயிலஞ்செயு னடியே
தொழுதுந்துய ரடையும்படி தொடராம்விதி வசமோ
வழுவென்றுள வினைவென்றிட வரமென்றவு வணியீ
மழுவென்பணி யிறைதந்தவொர் வலியாரயி லரசே. (௨)

---

*இவ்விருத்தம்—நட்டபாடையெனும் பண்ணிலும் பாடலாம்.

வனவேனவி லொருமாதுடை மயலால்வளர் தளிர்பூ
நனைமேவிடு திமிசாநிமிர் நாஞகலே நிதிகூர்ப்
புனல்வாரி கடக்கும்படி யருளாகிய புணையீ
மனபூசகர் மனமாசடு வலியாரயி லரசே.

தமரும்பொரு ணிலமுஞ்சத மென்றுன்னை யெணுதார்
அமருந்தல மதிலேலழையு மமராநெறி கூடிக்
குமராகுக முருகாசிவ குரவாவென வோதா
மமர்தீர்கதி பெறுமாறருள் வலியாரயி லரசே.

குகன்மஞ்சடி பாடுஞ்செயல் கொடுநன்கென கொண்டான்
மிகுதொந்தரை களினைந்துயிர் விடலாயின னெனவே
சகமைந்தர்கள் சொலவுங்கதி தருநின்னருள் செயுமோ
மகிழும்படி யருளேசெயும் வலியாரயி லரசே.

மொழிநன்மொழி யோடுகமு முயல்வுந்தரு வாயேற்
சுழிவிண்டிடை யுழலுஞ்சிறு துகள்போலுக விழைவிற்
பழியேனலை யாதுன்னிரு பதமாமமு தடைவேன்
வழிபாடுடை யார்பாலொளிர் வலியாரயி லரசே.

நாவுந்தளர் வுறுகின்றது நற்ருேத்திர நழுவ
நோவுங்குடி கொளுகின்றது நுன்சிந்தை மிகாமல்
கூவின்றளை கிளர்கின்றது குருமோன மெழாமல்
மாவின்பனை யெவ்வாறுறும் வலியாரயி லரசே.

உடலோடுயிர் பகையாயிடி னுயிர்வாழ்வது முளதோ
அடர்கூழொடு மதிலேமுரா ணுறுவுரு வாமோ
அடியேனொடு நீதான்முனி வானுலுயர் வேறோ
மடன்மாமலர் முடியோயருள் வலியாரயி லரசே.

நானாரென வறியாமட நாயேனடு வுணர்வின்
கோனுமுனை யறியாற்றலு முளதோகுரு வருளால்
நானாரென வறியும்படி நலியாவருள் புரியாய்
வானோருனர் தீர்த்தாணொடு வலியாரயி லரசே.

இருளாமல மறுத்தாயிடை யெனைநீதய வருளின்
குருவாய்வர வேண்டுங்களி கூர்ந்தேகொள வேண்டும்
அருளாலுயர் தண்ணந்தமி ழனுபூதி யறைந்தோன்
மருமாமலர் கொடுபூசைசெய் வலியாரயி லரசே.

---

௩. மயலால்=விவாக ஆசையால்.
திமிசு=வேங்கைமரம்.
அ. கூழ்=பயிர்.

# ௩௩. கந்தரிரட்டைமணிமாலை.

## உருவம்.

நேரிசைவெண்பா.

பொன்னுய நன்னுடிய் புத்தேள்க ளாஞ்சுரர்க்கு
மன்னுகி யேனேர்க்கு மாதேவாய்—மன்னும்
குகனே யுனக்குருவங் கூறினுய ரின்பாஞ்
சுகமென்று மெய்ந்நூல் சொலும். (க)

## சொருபம்.

கட்டளைக்கலித்துறை.

சொலுநூ லனைத்தும் விதந்தெடுந் தோதுநற் றேத்திரங்கள்
பலவு முனக்கே பொருந்துமென் றேர்பவர் பாவகிப்பேர்
இலகுமெந் தாய்சொரு பந்தா னுனக்கிச்சை யென்பதொடு
குலவறு ஞானங் கிரியையு மாமெனக் கூறுவரே. (உ)

## சுவாபம்.

நேரிசைவெண்பா.

கூறுரையின் றுயென்னுங் கோலமறை காணுநின்
பேறளவை யாரிங்குப் பேசுவா—ரீறறுசேய்
உன்சுவா பந்தா னுலைவின்றி நிற்றலென்பார்
உன்சுவா பத்தையுணர்ந் தோர். (ங)

## விசேடம்.

கட்டளைக்கலித்துறை.

ஓராத பேதைநெஞ் சேறுத வுண்மையி லுள்ளவுனக்
காராலுஞ் சொல்லற் கரிய விசேட மதிர்ப்பதென்னின்
ஏரான தோற்ற மொடுக்கமில் லாம விருத்தலென்றும்
சீராரு மெங்கண் முருகப் பிரானெனுஞ் சிற்பரனே. (ச)

---

க. உருவம்=வடிவு. தடத்தமென்றுங் கூறப்படும்.

உ. சொருபம்=பற்றுக்கோடற்ற நிலை. நிலை வடிவென்றுங் கூறுப,

## வியாத்தியும் வியாபகமும்.

நேரிசைவெண்பா.

சிற்பர மாமுனக்குச் செப்பருவி யாத்திசொலிற்
பொற்புடை வாரிதிநீர்ப் பூர்த்தியொக்கும்—வற்பார்
வியாபகமுந் நீரளவை விண்மணியை யொக்கும்
தயாபரசந் தோடகுகே சா.

## குணம்.

கட்டளைக்கலித்துறை.

சாவும் பிறப்பு மருவாவெொர் நித்திய தத்துவமாய்
யாவுந் தனக்கு ளடங்கநின் றேய்தோற்ற நாசமென்னும்
நோவில் வருந்தும் பசுக்களை வீட்டு ளுய்க்கவென்று
மேவுங் கருணையி னோரா றுநின்குணம் வேலவனே.

## நிறம்.

நேரிசைவெண்பா.

வேலவ வென்றே யிழற்றுநர்க் கின்னுக்கஞ்
சால வளிக்குந் தயாநிதியே—கோல
நிறந்தா னினைப்போர்நெஞ் சின்படியா மென்று
அறிந்தோர்ஞா னஞ்சிதறு தே.

## சத்திகாரியமும் பிறவும்.

கட்டளைக்கலித்துறை.

தேவா குமர குருபர சேம சிவக்கொழுந்தே
ஓவா வுனது விமலமெய்ஞ் ஞானம் விழிக்கொளிபோல்
மூவா விகளின் மனத்திற் கொளியா முயங்குகவின்
தாவா ருயிர்க்கறி வாஞ்சத்தி யொன்று தழைவுற்றதே.

நேரிசைவெண்பா.

உற்ற சுழுத்திதனின் மூர்ச்சைதனி லொன்றுமின்றி
நிற்றல்போ லேமூட நீர்மையுயிர்—சொற்ற
மனதுட னுஞ் சேரா மனதுமாற் றேசேய்!
உனது திருவருள்சேர்க் கும்.

---

சு. ஓராறுகுணம் = சருவஞ்ஞதை, திருத்தி, அநாதிமுத்தத்தன்மை, சுவதந்திரத்துவம், அலுத்தசத்தி, அனந்தசத்தி யென்பனவாம். இவற்றின் பொருள்களும், விரிவுஞ் சுருக்கமும், சந்தேக நீக்கமும் தகராலயரகசியத்து ௨ ஆங் காண்டத்து ௩ள-ச் உரையிற் கண்டுகொள்ளலாம்.

அ. மூவாவிகள் = விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்.

கட்டளைக்கலித்துறை.

சேர்க்கு மருளின் றகவா னினைப்பது சேர்ந்தபின்னர்ப்
பார்த்த பொருள்கட் கெலாமிச்சை கொண்டு பணும்வினைகள்
தீர்த்திட வென்று பரிகார தண்டமுஞ் செய்வையந்த
மார்க்கம்வண் ணென்றொழில் போலாஞ் சடக்கர வாலியனே. (க0)

நேரிசைவெண்பா.

வாலறிவா முன்னறிவு வாள்விழிக்குப் பானுவொளி
போல வுளததுதான் புந்திபடர்—ஞாலமிசைச்
சென்றொன்றைச் செய்புமெனச் செப்பார்கள் கற்றுவல்லோர்
என்றொண்டை யேற்றகுக னே. (கக)

கட்டளைக்கலித்துறை.

குகனே குமர குருவே நினது குருநிறைவு
சகல பொருளிற் சிவணிய தேனுஞ் சடப்பொருள்கள்
அகமுன்னு கின்ற வறிவற்ற வத்துக்க ளாதலினால்
சுகமும்வெந் துக்கமுங் கொள்ளா விவையுயிர்க் கேசொந்தமே. (கஉ)

நேரிசைவெண்பா.

சொந்தப் படுத்திச் சுகமுற்றார் நல்லுணர்வோர்
சிந்தை மருண்டில்லார் தீழ்ப்புற்றார்—பந்தமிலார்
ஓர்ந்துபடர் கந்தாநீ யுண்மைநிலை சேருமென்றன்
றீந்தமறை யுங்கருணை யே. (க௩)

கட்டளைக்கலித்துறை.

கருணை தனையறி யாதவ ரேனிக் கருத்தையுயிர்க்
குரிமை யொடுவிதித் தானத ளைிந்த வூழெல்லாம்
வரவிட னுயிற் றெனவதிர்ப் பார்நல்ல வாலறிவின்
றுரிய மலமறு மோருக னுமெங்க ளுத்தமனே. (க௪)

நேரிசைவெண்பா.

உத்தமத்தி னுத்தமமா யுள்ளமுரு காபின்னும்
இத்துணையிச் சீவ னிழைக்குமென்றவ்—வத்தனென்போன்
ஏனறி யாதுணர்வா மெய்தினு னென்னுமுன்றன்
ஞானநிறை வென்றறியார் நா. (க௫)

---

க0. தகவு = குணம்; பி - நிகண்டு காண்க.

க௩. தீழ்ப்பு — தீட்பு என்பதன் விகாரம்; இழிவெனும் பொருட்டு. இதனிலக்கணம் பரிபூரணானந்தபோதப் பிற்படலத்து உ௩-ன் உரையிலோரலாம்.

கட்டளைக்கலித்துறை.

நாவான் மனதா லளப்பருங் கந்தநின் னல்லுறழ்வு
தாவான சீவர் வினைவயத் தாற்செயுந் தன்மையெல்லாம்
தூவோடு முப்போ தினுநனி காணுந் தொடர்வினையின்
றேவேட்கை யாயெண்ண றன்னையுங் கண்டிடு மெண்ணுமன்றே. (௧௬

நேரிசைவெண்பா.

அன்புற்ற கந்தாநின் னுசிலறி வானதுயிர்
முன்புற்ற கன்மமின்றி மோகத்தாய்—பின்புமுன்னல்
சிந்தித்து முன்னுணரத் தேவையொன்று மின்றென்று
நந்தலற்று ரோர்வார் நயந்து.

கட்டளைக்கலித்துறை.

நயந்த கருணையி னுலைந்து கன்மமு ஞற்றுகின்ற
சயம்பிர காச முருகாநின் கூத்துயிர்த் தாறணைந்தும்
இயங்கும் படிக்குள்ள தேயந்த வாட்டின்ன மெற்றென்னினோ
துயங்காம லெங்கு நிறைவாய சூக்கும சூக்கிரமே.

நேரிசைவெண்பா.

சூத்திர வாட்டிற்றன் றாலமு முள்ளுடம்பும்
சோத்திவிட்ட தானுந் தொழிற்பட்டு—மூத்த
வினைப்படிக்கு மிச்சை விளைவின் படிக்கும்
அனுபவிக்கும் வேலோ யணு.

கட்டளைக்கலித்துறை.

அணுவான சீவன் பிராரத்து வத்தை யனுபவிக்குங்
குணமேற்ற போதங்க ணுகாமி யத்தையுங் கூட்டுமிது
மணமாதைப் புல்கு பவன்வேறு மாது மருவிலாக்கும்
உணர்வோது கந்த ரனுபூதி யத்தனென் றுற்றபொன்னே.

---

௧௬. அன்றே=அக்காலமே.

௧௭. "தேவையொன்று மின்று" என்றதன் பொருள் — ஆணவ அழுக்குடை சீவனுக்கு நினைவெழுந்தவுடன் யாதொன்றை யிச்சித்தல் சகசம். அது நிமித்த கர்த்தாவானவர் தமது நிறைவான ஞானவியாபகத்தை அச்சீவனது இதயகருவிலே கண் மட்டும் இல்லாது செய்யவேண்டுமென்றலும், ஞானத்தாலன்றி அவ்வழுக்கொழி யாததால் அவ்வுணர்வைச் சீவனுக்குச் சேரவொட்டாது செய்யவேண்டுமென்றலும் அனுவசியம் எனவாம்.

௧௮. ஐந்து கன்மம்=சிருட்டியாதி ஐம்பெருந் தொழில். தூறு — தொறு என்பதன் விகாரம்; கூட்டமெனும் பொருண்மைத்து. பி — நிகண்டு காண்க. தூங்காமலென்றது "துயங்காமல்" என்றது எதுகை நோக்கிய விகாரமாம்.

௧௯. சோத்தி — சுழுத்தியென்பதன் மரூஉ.

# ௩௪. கந்தரொருபாவொருபஃது.

கட்டளைக்கலித்துறை.

உலக மியாவுந் தொழவுள வாதி யொருவனென்னும்
லமலி கந்த சுரேசுர நீயுநின் னல்லறிவின்
லவு முறழ்வுயிர்க் கூட்டமு நின்னுற் றொழிற்படுமோ
லமலி பாசமு நித்தமென் றேமறை பன்னுமன்றே. (௧)

ன்னு மறைகளுக் கெட்டா வருட்பெரும் பாவகியே
ன்றொரு நீதங்கஞ் சீவன்செம் பச்செம்பின் மல்குகளிம்
பென்ன விருப்பது பாசமென் றோர்ந்து வியம்புமுண்மை
தன்னை யுணர்ந்துனை யேத்துவர் காணல்ல சற்சனரே. (௨)

சற்சங்க நாளும் படனஞ்செய் தந்திரஞ் சாற்றுமுது
துர்ச்சங்க நீத்த பசுவெனுஞ் செம்பின் றுருசொழித்து
நற்செம்ப தாக்கிப்பொன் னையவுன் னோடையி னையகனீ
நிர்ச்சங்க மாக்கிக் கொளன்முத்தி யென்று நிசானந்தனே. (௩)

நிசமறி யார்பர னெண்ணுமிற் பாச நிலையழிந்தே
உசித முறுதோ வெனப்புகன் றுன்னைவிட் டோய்வரகம்
நசிய வடக்கிநின் கண்ணின்று தஞ்செய னந்தியபின்
பிசியிலின் பாமென் றறியாது வேலைப் பிடித்தவனே. (௪)

பிடித்த பிடியை விடாவயி ராக்கியம் பெற்றவர்க்குள்
நடிக்கு முருகா வணுக்கண் மலத்தை நசித்தமுதம்
குடிக்க வருள வெனவே தினமுங் குறுக்கமற்ற
கடிக்கரு மங்களொ ரைந்தையுஞ் செய்வாய் கரிசின்றியே. (௫)

கரிசற்ற செய்நிற் கணித்தா லுயிர்த்தொகை யின்கணக்கும்
பரிவுற் றுரைத்திட லாமென்று தேரும் பலமிறந்தோர்
புரிவுற்ற யாவுங் கதிபெற்ற பின்னர்ப் புரியுமைந்து
பிரிவுற்ற காரிய மேதென்று வாதித்துப் பேசுவரே. (௬)

பேசா மவுனச் சிவனே குகனே பெரியவருன்
தேசோ மயத்தை யுறுமுயிர்ச் சத்தி செகமுகம்விட்
டேசால வுண்முக மாயின்ப முண்பதி னீடிலுன்னல்
தேசேறு காரிய மோரைந்துஞ் சத்தெனத் தேறுவரே. (௭)

தாவுங்கயல் விழிவள்ளி தனாதுண்மை பொருந்தக்
காவிஞ்சிய வனவேடர்கள் கறுவிக்கவி தருகாற்
கூவும்படி சரணாயுதம் விளித்தேயடல் கொண்டோய்
வாவென்றுசொல் வாழ்வாயருள் வழிநாடிய மனதே. (௫)

தேவென்பன யாவும்புகழ் சிவசம்புவு முமையும்
மேவுங்கயி லாயந்தனின் மிளிருங்கொலு விடையே
தூவிண்சுரர் பரவும்படி சுடருங்கும ரேசா
வாவென்றுசொல் வாழ்வாயருள் வழிநாடிய மனதே. (௬)

முன்னைத்தவ முற்றுப்பெற மொய்ம்பேறசு ரேசன்
என்னப்புவி வந்துன்றனோ டிகலிக்கொலை யயிலாற்
கன்னற்சடம் வகிருண்டு கலாபந்துன நின்றான்
தன்னைக்கொளு முருகாவரு டாவென்றழு மனதே. (௭)

முருகாவரி மருகாவென முழுதுங்கொள வுளவோர்
குருவேபுக லினிவேறிலை கூகாவென வுறவோர்
அருகேயழு முனமேயுன தடியேபெற வருளாம்
பொருளீயென வுயர்வந்தனை புரியாயளி மனதே. (௮)

தென்றாணுவி லென்றும்வதி சிந்தாவறி வாளன்
மன்றாடி வணங்கும்பெரு மானேமுரு கோனே
என்றாளுவை யென்றாளுவை யென்றேவிசு வாசித்
தொன்றாநிலை கூடும்படி யுயர்வாயளி மனதே. (௯)

ஆசேதமி லாநின்னுடை யனுபூதி யடைந்தே
தேசோடுன தடிமேயவொர் தெருளாரரு ணகிரி
ஆசானென மிளிர்தாரக வரசேயெனை யாளொன்
றேசாதனை புரியாயினி யெய்தாய்துயர் மனதே. (௧௦)

---

௫. கலி = வஞ்சகம்; லகரவெதுகை காண்க.

# ௩௬. எழிலார்சுரும்பு.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எழிலார் சுரும்பு கிளரோதி வாணி யிறைவன் படைக்கு முலகிற்
பழிபாவ வஞ்ச மிகவே புரிந்து படுபாவி யாகி நிதமும்
அழல்வீசு கும்பி யிடையாகம் வெந்து கவலா திருக்க வருளாய்
பொழிலார் கதம்ப விரைவீ யலங்கல் புனையந்த காரி பொருளே.

சிவபால பைம்பொன் முடியாறு மன்னு சிகரங்கண் மின்னு மெழிலும்
துவர்வாய் துலங்கு முகமாறு மன்பு சொரிபன்னி ரண்டு விழியும்
சுவவாளு மும்பர் பகைகாது மேதி சுடர்பன்னி ரண்டு கரமும்
தவவாழ்வு பொங்க வவிர்தாளு நன்கு தரிசிப்ப தென்று தமியேன்.

பனியே கிளர்ந்த புவிமீது பொங்கு பசியான் மடந்தை மயலால்
அனியாய மென்னும் வழிநேடி நின்றெ னறிவே யிழந்து கெடவோ
உனைநா னினைந்து தொழுதே னகண்ட வுணர்வா யியங்கு குகனே
கனிவாய் திறந்து வருகென்று கூறுர் கரையென்று காது புகுமோ.

கலைவாணி பத்தி மையோடே பழிச்சு கழல்வெற்பு மங்கை யுடைய
முலையீ மகிழ்ச்சி யமுதங் குடித்த முளையே செழித்த பழநி
மலைமீ திருக்கு மழகா வழுக்கின் மனதூ டிருக்கு மனகா
உலைவாயி லிட்ட மெழுகா யிருக்கு மெனைநீ புகப்ப தெவனே.

நிலையாய வேத மெனவோது ஞான நிருவாண மேவ நினது
நலியாத பாத மதைநாடி நாடி நலமேது மின்றெறன் மனது
மலையோர முய்யு மறவேடர் கையின் மறிபோன் மயங்கு கிறதே
கலிகீழ் தயாள மிதுவோ கெடாவொர் கனியே குமார முனியே.

கடியே றரத்த மெழினீலம் வைத்த கவினூர மிக்க மிலைவோய்
செடிசே ரமித்திரர் பகைவா வருத்திரர் சிறுவா சுவர்க்க மிறைவா
படியா நிலத்தின் மலைபோ லளப்பில் பவமே யிழைக்க வெனவோ
வடிவான மக்க ளுருமேவி நிற்கு மகனாகி நிற்ப னிவனே.

துடிடுண்டு டுண்டு டுடுடுண்டு டுண்டு தொகுதொந்த மென்று முரலச்
சுடுகண்ட நின்று நடனஞ்செய் நம்பர் சுதனென்று வந்த பெரியோய்
அடிகண்டு கொண்ட வருளன்பர் சொந்த மனுவும் பெறுது சிறியேன்
நடுவன்க ணின்று வருமொய்ம்பர் முன்பெ னவில்வோன் விளம்பியருளே.

---

௨. சுவவு=தேவலோகம்.

உன்மீது வைத்த நினைவான பற்றை யொருபோது மாற்ற நினையேன்
என்மீது வைத்த புரிவாமு னட்பு மிடையா திருக்க வொருநால்
என்மீது பட்ச மிலியா யெனைப்பெ ரிதுநீ மறக்க வரினும்
உன்மீது குற்ற முரையே னெனக்கு ளுணர்வாக வுற்ற குகனே. (அ)

பதிஞான மின்றி யொழியாது சன்ம நிழலென் றுணர்ந்த பரிவோர்
மதியார்க ளிந்த நிலவாழ்வை யென்றன் மடமோக மிஞ்சு மதிதான்
நிதியேது மின்றி யிதிபோல வந்த விழிவே விரும்பு கிறதால்
பதியாக வந்தி னருளே புரிந்து னடியீ குமார பரனே. (௯)

கரியா னனத்த னிளையோ னெனத்தி கழுமேச கத்து ளுமலிப்
பரியோ யுனைப்பி லருளா னினைத்த படியே சுகிக்க வருண
கிரியார் தமக்கு நெடுவாழ் வளித்த கிருபாளு நித்த நினையே
பிரியாத நட்பி லடியேனை வைத்த பெரியோ யணைத்து மருளே. (௧௦)

---

ஆகப்பிரபந்தம் முப்பத்தாறினும் போந்த திருப்பாடல் — ௪௧௦
தெய்வவணக்கச்செய்யுள் ௩
ஆகத்திருப்பாடல் ௪௧௩

---

# ௩௭. திருநிறைந்த சிவம்.

---

## அந்தாதி.

### கலிவிருத்தம்.

திருநி றைந்த சிவம்பிர மம்பரம்
அருணி றைந்த வதீதன் புராபரன்
குருநி றைந்த குகன்சம்பு வென்பன
பொருளொான் றுய்ப்பொலி வுற்று நிலாவுமால். (௧)

நிலனி டத்தும்விண் கண்ணு நெருப்பினும்
உலவைக் கண்ணு முயிர்க்கண் சுடர்க்கணுஞ்
சலிலக் கண்ணு நிறைந்தநின் றன்மையை
உலகிற் றேர்பவ ராருனை யின்றியே. (௨)

---

௯. ஈதி – “இதி” எனக் குறுகிற்று. ஈதி=வேதனைநோய்.
௧௦. மேசகம்=விரிதரு மயிற்றோகை.

இன்று னேரடி யேத்துதல் போலவே
என்று நான்செய வேதமி லாவருட்
குன்றி லென்னைவை யாய்பகைக் கும்பெலாம்
வென்றி கொண்ட விறற்படை வீரனே.

வீர னேயடி யார்துயர் வீட்டுமா
தீர னேமறை தேடொரு தெய்வமே
ஈர வேறன்னை யேவுதி யென்னுடைக்
கூர மான கொடும்பவக் காட்டிலே.

காட்டு வாய்சகம் யாவையுங் கையகம்
சூட்டு வாய்மிடி யோர்க்குந் தொகாமுடி
ஓட்டு வாய்நமன் றன்னையு முள்கெனை
ஆட்டி னாயிலை யாருண் மேவவே.

மேவு வோரறி மெய்ப்பொரு ளேனுநீ
தாவு ளென்கணுஞ் சந்தத நின்றனை
பாவி நானறி யேனின்ன பண்பெனத்
தேவ னேயறி யுந்திறல் செய்தியால்.

செய்கை யொன்று மிலாமனின் சேவடி
எய்த நெஞ்ச மிகந்துன்னு வோரடி
பொய்ய னேன்றரி சித்தன்று பூத்தபூக்
கொய்த ருச்சிப்ப தென்றருட் குன்றமே.

குன்ற வில்லி குமாரமுன் னாணொடுங்
குன்றெ றிந்த குகாகொடுங் குற்சிதக்
குன்று பீறவுங் கூரயி லோச்சுதி
குன்ற வாணர் குரங்கயி லீசனே.

ஈசன் வாமத் தியங்குமை மைந்தநின்
ஏசி லன்பர்கொன் னேகழிந் தாரெனக்
காசி னூல்கள் கதைத்திடக் கண்டிலேன்
தாச னேற்குஞ் சரண்டரல் வேண்டுமே.

வேண்டு வார்துன்பு வீட்டுநின் றாள்கணுன்
வேண்டி வேண்டி விவேக மிலாமிடி
பூண்ட பாதக னாகிப் புலப்புநீர்
ஆண்ட நீயறி யாய்கொலெ னத்தனே.

---

௯, தா = துன்பம், பகை; வகரவேதுகை காண்க.

அத்த மின்மனை யம்புவி யொக்கலும்
வித்தை யும்விவ காரமும் வேட்கையும்
செத்தி டுஞ்செவ்வி யென்செயுந் தீதிலா
அத்த னேநின தன்பொன்று காக்குமே. (கக)

காக்கை யுண்ணுங் களேபரம் போலவீண்
ஊக்கத் தாழெுழி யாதரு ளூட்டியென்
நோக்கம் பூர்த்திசெய் வாயொரு ஞானமில்
மோக்க வேட்கையர் முன்னரு ளையனே. (கஉ)

ஐய னேயர சேயழ கார்மயில்
வைய மீதிவர் வானவ னேயருள்
மெய்ய னேவிறல் வேலவ னேவெறும்
பொய்ய னேற்கினிப் போக்கிட மெங்ஙனே. (கங)

எங்கு முன்பதி யெங்குமுன் னுள்சதா
எங்கு முன்செய லாக விருந்துநான்
இங்கு வெந்துய ரேற்றிட லென்கொலோ
பொங்கெ ரிப்புழுப் போல வருந்தியே. (கச)

வருண வுற்பன்ன மங்குல் குழீஇநின்
றருமு கத்தி லளப்பின்றி யூற்றல்போல்
அருண்மு கிற்றிர ளென்க ணுூரதம்
பரவி நின்று பனிப்பதெக் காலமே. (கரு)

காலன் மூரி கடாவிக் கணிச்சிகொண்
டால மென்னவந் தாவியுங் கொள்வனோ
ஞாலத் தேயுனை நாளுங் குரங்கிடுற்
சீல மேய சிவானந்த வாழியே. (கசு)

ஆழி சங்க மமர்ந்தகை யண்ணலும்
நீழ விண்டை நிலாவய னும்புகழ்
ஏழை பங்க னிளஞ்சுத வென்றுரால்
கீழ லென்றன்பர் கேள்கிள ராதியே. (கஎ)

ஆதி யந்த மிலாப்பர மார்த்தவொண்
சோதி யாயவுன் சுத்த சுபாவத்தைப்
பேதை பெற்றன்றி யென்னொரு பேய்மன
வாதை தீருங்கொ லோவைய வந்தருள். (கஅ)

---

கசு. கணிச்சி=மழு ; பி — நிகண்டு காண்க.

அருளி லாமனுக் குப்பை யெலாமுனைக்
கருத வுங்கருத் தொட்டுமொர் கையுமுன்
திருவு ளப்புரி வாற்றுதி செய்கிறேன்
இருளி ரிப்பதென் றோவறி யேனரோ.

அறிவி னுக்கறி வாயரு வானதும்
குறிகு ணம்பல கூறுரு வானதும்
பொறிபொ லிந்துள பொன்னுல கானதும்
செறிய ருட்சிறப் பென்ப செழும்பொனே.

பொன்ன னந்தைபொன் பூண்மட வாணைசை
தன்னை நாடி யழுஞ்சக சண்டியாம்
என்னை நீயிரண் டின்றி வளாவுநாள்
இன்னுந் தூரங்கொ லோவெங்க ளீசனே.

ஈசற் கின்புள மைந்தவொ ரேதிலாத்
தாசற் கின்பரு டந்தை விடாவிசு
வாசத் தாலிங்கண் வாழ்த்திப் பராவுமென்
பாசக் கோளறப் பார்பர தெய்வமே.

தெய்வ மென்பது சிந்தை யடங்கினோர்
மெய்வி ழிக்கு வெளிச்சமென் றுமது
பொய்யி னிற்பவர் புந்திக்கு மெட்டுங்கொல்
ஐய பொய்யுழல் வேற்கென்னை யண்முமே.

அண்ண லாரறி வாள ரவாமருட்
கண்ணே கண்மணி யேகரு ணாகர
விண்ணே விண்மணி யேயெனை மேவெனு
உண்ணி லாவினண் ணேன்கொலொ ருண்மையே.

உண்ணி குஞ்ச வுயிர்க்குயி ராயவென்
அண்ண லேயரு ளானந்த வெள்ளமே
எண்ண மோய்ந்த விடத்தி லிருக்கவான்
பண்ணும் பூசை பயிற்றலுன் பக்கமே.

பக்க மற்றவ ரென்றுமிப் பாழுடல்
புக்கு வாழ்வதின் பென்பாப் புன்மையைப்
பொக்க மற்றவுன் பூரணங் கோடலே
தக்க தென்றெண்ணு நானினிச் சார்வனே.

---

உ௬. நிகுஞ்சம் = குகை.

சார்வ காலமு முன்பெருந் தன்மையைச்
சேர்வ தாமொரு சின்மய வாதிக்கம்
சூர்ந் ணூத சுகானந்த மென்பதின்
பார்க லாவல ராரு மறிந்ததே. (உஎ)

ஆரெ னக்கதை யன்பொடு மாக்குநர்
ஆரெ னக்கதை யாகலை செய்குநர்
ஆரெ னக்கதை யாக்குந ரென்றுநான்
ஆரை நித்த மலட்டுகின் றேனரோ. (உஅ)

ஆரனன் றுலினல் லந்தணர் நால்வர்கட்
கூரெனு டோதலின் றேூதிய வுண்மையைப்
பிரமை யோடுணர் வோர்பெந்தப் பேறெலாம்
திரண மாகினை யார்கொனற் றெய்வமே. (உகூ)

நற்ற மிழ்க்கலை நாதனென் போன்பரி
வுற்று வேண்டுமெய்ஞ் ஞான முணர்த்தியன்
றற்றந் தீர்த்தவ னேயரு ளானெனைப்
பெற்றி லேனின தன்பினைப் பெற்றுமே. (௩௦)

பெற்ற தாயும் பிதாவும் வெறுப்பரால்
உற்ற வேவ லுஞற்ற றவிர்ந்தக்கால்
இற்றை நான்செய்குற் றேவலை யின்னதென்
றற்ற மில்லை யளித்தென்னை யாண்டுகொள். (௩க)

கொண்ட கொள்கைக்கொ ளுன மணைந்திடா
தண்டர் நாயக னேயரு ளாற்றினீ
அண்ட மெண்டிக்கு மாநிறை யாற்றலைக்
கண்டு ளங்களி கூர்வலென் கண்ணிலே. (௩உ)

கண்ணி லானருங் கல்விகற் றென்பயன்
தண்ணீ ரென்றிடிற் றுக மடங்குமோ
விண்ணு மண்ணுந் தொழாகொணின் மேதகத்
தண்ண லம்பெறிற் றன்னிலை தன்னிலே. (௩௩)

தன்ன கந்தனிற் றன்னிசங் கண்டபின்
தன்னை வேறெனச் சாற்றவுந் தாவிலா
உன்னைத் தானென வோதவு மொவ்வுமோ
இன்ன தென்றியம் பாதொன் றின்றரோ. (௩௪)

---

உகூ. திரணம் — த்ருணம் எனும் வடமொழி விகாரம். புல், புற்போன்ற துரும்பு எனும் பொருள்பயக்கும்.

இன்றிவ் வாறுசொ லெண்மை புரேளனிலை
நின்று சாதித்து நெஞ்ச மொடுக்கிலேன்
பொன்றி டாதுபொன் றிக்கதி புக்குப்வான்
என்று வாலரு ணீட்டுவை யெந்தையே.

எந்தப் பூசனை செய்யினு மென்னுழல்
சிந்தை யொன்று திடப்படிற் சித்தியென்
றந்த வேத மறைந்திட வில்லையோ
கந்த னேகரு ணைப்பிர காசமே.

காசி போந்தவ ருங்கறை செய்வரேல்
ஆசி லாதபொன் னாடு மடைவர்கொல்
ஆசை யாம்புது நாடல கங்கெடின்
ஏசி லாச்சுக மெய்தறி வோங்குமே.

ஓங்க லோங்குஞ் சுரந்துழி யூண்டுயில்
நீங்கி மேலவர் நிட்டை பொருந்தியும்
பாங்க ருத்தவம் பண்ணியு நிற்கிறார்
தீங்கி னேற்கொரு செய்கையு மில்லையே.

இல்வி னைத்துறந் தேகினு மென்மனத்
தொல்லை நீங்கினன் றேசுக மெய்துமோ
தில்லை யேலங்கு மிட்டளந் தேநாக் குமால்
ஒல்லை யெந்தை யொடுக்கென் மனத்தையே.

மனது கூம்பினிஞ் ஞால மறைந்துபோம்
எனும் விவேகமேற் றீந்தனை யின்னமும்
எனைம றந்தெனை யெய்த வியைந்திடால்
அனக பூரண மானந்த வாய்க்கவே.

வாய்க்கு மின்பென வாழ்ந்துமி னன்பமை
எய்க்கு மோவிவ் விருந்தக மானையும்
பேய்க்கு ணஞ்செய்து பேதக மாமனத்
தேய்க்க வுள்ளது மென்மன மல்லவே.

அல்லு மெல்லு மகத்தி னுணைப்பதிந்
தல்ல லற்றம லானந்த பூமியின்
எல்லை யைக்கண் டவர்க்கிங் கொருபொருளால்
இல்லை யில்லை யெனச்சொலும் வேதமே.

வேதஞ் சொற்றது மெய்யுறழ் வேயதைப்
போத மற்றவென் புன்மன தாற்பெறற்
கேது மற்றவ னென்றறி வாய்நவில்
வேத முந்துணை பேணு விசாலமே. (௪௩)

விசுவ வின்பினும் விண்ணுல கின்பினும்
உசித மாவ தொருங்குப கன்மமும்
விசம மாக விடுத்தரு ணிட்டையே
நசைஇ நின்னடி நாடி நிலைப்பதே. (௪௪)

நிலைநி லாமை நினைந்துதிப் பஞ்சியே
குலைகு லைந்து குரைக்கின்ற துள்ளமென்
தலைவ னீயிருந் துந்தமி யேனினம்
அலைய லாங்கொ லருட்குரு நாதனே. (௪௫)

நாத னேயுனை நாடி யிருக்கையிற்
சீத வேந்தனைச் சேண்புயன் மூடல்போல்
தீதெ லாம்வந்து சிந்தைமொய்க் கின்றவே
நீத மில்லைகொ னின்னர சில்லரோ. (௪௬)

அரச னுக்கடங் காக்குடி யேய்ப்பவென்
இருத யத்திற் கிணங்கி நிலாக்கொடுங்
கரவு நெஞ்சமுங் கண்ணுங்கொ லோநினைப்
பரம னேயருள் பாலிக்க வேண்டுமால். (௪௭)

வேண்டி யன்று விசாலப் பவக்கடல்
தாண்டிக் கண்டனர் சந்தத ஞானிகள்
ஆண்ட நீயென்க ணன்புவைத் தாலதைக்
காண்டல் கக்கிஷ மோகருத் தொத்தரோ. (௪௮)

ஒத்த நீர்மை யுறுதவர் தம்மனம்
பெத்தத் தாலுரு வாமெய் பிறங்குயிர்
முத்த ருக்கரு வாம்பர முத்தருக்
கத்த வுன்னரு ளாலவை யில்லையே. (௪௯)

இல்லா னென்னறி வில்லாத பேதைபோல்
நில்லா துன்னடி ஞேயத்தில் வைத்தருள்
அல்ல றீர்த்தரு ளைப்பெய ரான்சொலுஞ்
சொல்லிற் காசைகொ டேத்திருத் தோன்றலே. (௫௦)

---

# ௩அ. இந்துமிலைந்தோன்.

கட்டளைக்கலித்துறை.

இந்து மிலைந்தோன் புரஞ்செறுத் தான்வளை யேந்துநல்வை
குந்த னிலங்கையர் கோன்சினந் தானறுங் கோலமலி
இந்திர னீடார் வலன்செறுத் தானரு ளோமிகுந்த
கந்தன் றெழும்பர் துயர்செறுத் தான்சர்வ காலமுமே.

வேளைச்செம் பொற்கழ லன்பர்சேர் தேனை விமலைகொஞ்சும்
காளைக் குமரனைக் கந்தன் குகனென் கலைவலனை
வாளைப் பொருவிழி வள்ளி யவாவி மருவுநறுந்
தோளொப் பிலியைத் துதிக்குநர்க் கானந்தந் தோன்றிடுமே.

குரவன் குரத்தி கொழுநனி னன்னை கொழுநன்முதல்
மருக னுடைத்திருத் தாதையை வெட்டொரு மாகுரத்தி
மருகி யெனுங்குறத் திக்கடங் காநசை வைத்தினிய
பரிவுற்று நின்ற குறவனைத் தேவென்ப பண்ணவரே.

அந்தே னிருக்குங் குரற்காம தேவியு மாசைகொள்ளும்
பந்தார் குயத்தியொண் டெய்வானை வள்ளி பதியெனெதிர்
வந்தாள வேண்டு மியாணர் வினைகளின் வாய்க்குமருஞ்
சந்தான வாழ்வு நிகராகு மோவெனத் தானிங்ஙனே.

படைத்துப் படைத்துச் சலித்தநின் றெண்கணன் பந்துரக்கை
தொடுத்துத் தொடுத்துச் சலித்தநின் றூலத் தொடைமதன்கை
கெடுத்துக் கெடுத்துச் சலித்தநின் றேபண்மை கேட்பவர்க்குக்
கொடுத்துக் கொடுத்துச் சலித்தநின் றுண்மை குகேச்சுரனே.

ஆசைப் பெருக்குடை யாழியி லாழ்ந்தி யஞ்ஞா தமும்
பூசைக் கிணக்கமின் றேவல்கொள் பாழ்ந்த புரைமனத்தின்
மாசைக் கடிந்தினி மாறுப் பெருங்களி வவ்வுதற்கு
நீசற் றிரங்குத லெக்காலம் வேல்பற்றி நின்றவனே.

---

௨. வள்ளி யவாவி மருவுநறுந் தோளொப்பிலி = வள்ளியாகிய தன் சத்தியை விரும்பி அத்துவைதமாகச் சார்ந்து நிற்கும் நற்றோள்களையுடைய ஒப்பில்லாதவன்.

௩. குரவன் குரத்தி = பிரமாவின் தலைவியாகிய சரச்சுவதி.
முதல்மருகன் = விக்கினேச்சுரன்.

௫. பந்த உரம் — "பந்துரம்" என வேய்ந்தது. "அழகுந் திரட்சியும்.....பந்துரமென்ப" எனப் பிங்கலந்தை கூறுதலிற் பந்தம் = அழகாம். உரம் = வலி.

பேரின்ப நூல்கற்றுப் பேதையர் மோகம் பிடித்தவர்கள்
பார்வை வலையி லகப்பட்ட கோலங்கள் பார்த்தவர்முன்
பாரதைச் செய்தவர் நாமிலஞ் செய்தவ னுளுடையான்
சார்புடை யீரறி வீரென்பர் வீணர்கள் சண்முகனே. (௭)

வீட்டி லிருக்கும் விளக்கைவிட் டேவெளி யேநெருப்புக்
கேட்டுத் திரியு மதியிலி போலுனைக் கீழ்நிலையோர்
நாட்டிற் கருது கிராந்த நாட்டமெ னட்டங்கொலோ
பாட்டிற் புகழுரு னைப்பெய ரோற்குற்ற பண்ணவனே. (௮)

---

# ௩௰. கந்தர் திருவாரம்.

---

கலிவிருத்தம்.

ஐயமா முகவைங் கரனார் துணைவா
உயர்சீர் விடையே றுமையா டனயா
தயவா யருளே தரவா தணியா
நயமா னசுகோ தயநா னுறவே. (௧)

அடிநா முடியின் றழியா வெளியாய்
மடியா வுருவாய் மறைநா யகமாய்
வடிவே லரசாய் வளர்வா கையனே
அடியே னிறையா யருடந் தருளே. (௨)

இரவும் பகலு மெளியே னுரியோர்
பரவுங் கழலைப் பணியும் படிநல்
அருடந் திடுவா யகிலந் தொழுமே
வருமஞ் சிகியில் வரும்வா னவனே. (௩)

அசுரர்க் கிறையீ டழியப் பணிவாழ்
நிசிதக் கரவே னிலவத் தமியேன்
கசிவுற் றசொன்மா லைகணித் தணிவான்
உசிதத் தொடுவந் தருளுந் தமனே. (௪)

தேவா வுனைநா டியபின் றிணையில்
மூவா சைகெடும் படியான் மொழியும்
பாவா வனசெம் பயனும் வனமால்
மேவா தருளாய் மிடல்வே லவனே. (௫)

பாவக் கடலிற் படியோ ருயிர்தான்
நாவிற் பெயர்மந் திரமே நவிலின்
தேவர்க் கருமா டுறுமே சிறியேன்
பாவிற் கருளா தெனைபா வகியே.

பெண்ணா கியபே யெனவந் துபெரும்
புண்ணா கியநீர் பொசியுங் குழியின்
கண்ணே தளுமோ கழல்கொண் டபினும்
விண்ணா டர்பரா விகல்வே லரசே.

எல்லா மதமுங் கரைகண் டிடநீ
வல்லாண் மைபுரந் தலர்வா ளிமதன்
பொல்லா மயலிற் புகவே புரிநீர்
உல்லா சமகா குகனே யுரையே.

காமக் கனலிற் கருகுந் தமியேன்
சாமிக் கடிமைப் படவுந் தரமோ
பூமிக் குளுனைப் புகழ்வோ ரையரும்
பூமிக் குள்விடும் பொருவே விறையே.

இச்சைக் கடிமைப் படுமென் னுழையுன்
செச்சைச் சரணந் திகழும் படியுள்
மெச்சித் தகவீ திகெடா விறல்சால்
பச்சைப் பரிமேல் வருமெம் பரனே.

இரவும் பகலும் பிரியா வெனுடை
யரசே யிதுநா ளஞர்நா ளுறவென்
றொருதே வுளதோ யுனையன் றயரந்
தெரியே னெளியேன் மயிலூர் சிவனே.

மனதா ரவெனுண் மயிலூர் குகதோம்
தனையா டியதின் றிலமுன் றனையாம்
வினைவா தனைவந் தெனைமே யினதால்
கனவாய் முடியத் தருவாய் கமமே.

மையார் கலிசூழ் மகிநின் றெருவி
நொய்யே னுயுமா றுளதோ நுவலாய்
மெய்யா ரடியார் விழையுஞ் சரணா
துய்யா முருகா சுபசோ பனனே.

---

௧௦. தகவு=குணம்.

எளியே னுளமிங் கெதிலென் பதைநீ
தெளிவா யறிவாய் சிறியே னிதயம்
களிகூ ரருள்கூ ரவெனாய் கழுதுண்
அளிநீ பமிகப் புனையம் பரனே. (௧௪)

எந்தா யெளியே னிகலா மிடரால்
நொந்தேன் மிகமே னுதிசே ரருடான்
தந்தா ணெடுவாழ் வுடையந் தரியின்
மைந்தா குமரா வடிவே லவனே. (௧௫)

நிலைமே னினையே நினையா துவயா
அலைவோ ரெவரோ வவர்தா மவிவார்
பலநா ணினையே படர்நா னுமிவண்
வலைமீ னெனவா தலென்வேன் மனனே. (௧௬)

தரையோர் புகழும் படிதந் திரமாப்
புரிவோர் புணியம் பலியா ததுபோல்
தரைமீ நினையே கருதுந் தவமும்
விரைவா யிறுமோ மிளிர்வேன் மனனே. (௧௭)

பணியா பரணன் மகிழும் படிநீ
திணிஞா னநிஜஞ் சொனதீர் வையினல்
அணிமா தியருந் தொழினின் றுமதே
துணிபா குமனு மயதூ யவனே. (௧௮)

சன்மப் பிணியைத் தணியச் செயுமுன்
நன்மைத் தயவா மமிழ்தத் தினைநான்
தின்னப் பணியாய் திருவாழ் குறமின்
தன்னைத் தழுவுந் தனிநா யகனே. (௧௯)

வாசங் கமழ்பா தகுகா மறவா
நேசம் பணியுண் ணிறைபே ருணர்வின்
தேசந் திகழச் சிவயோ கமதைத்
தாசன் பெறுவா னருள்சந் ததமே. (௨௦)

கானங் குறமா திதழ்மா கனியின்
தேனுண் டருகா குழகா தெருளோர்

---

௧௯. தழுவல் = அத்துவைதமாக விரவிநிற்றல்.

௨௧. "இதழ் மா கனியின் தேன்" என்ற பிரயோகம் — மலரிதழ்போன்ற வாயின் அழைப்பாம் மொழிக்கனியின் இன்சுவை யெனும்பொருளைப் பயப்பதாயிற்று. இதழ் = உதடு ; சினையாகு பெயராய் வாயை யுணர்த்திற்று. "மா" அழைப்பு எனப்படு வதைப் பிங்கலந்தை "ஒருமாப் பெயருமழைத்தலும்.....மாவென லாகும்" என்

கோனென் றுளவே லவனே குயினுன்
ஞானம் பெறவோர் நடனம் புரியே.

ஆதா ரவுனோ டணவென் றனைமேல்
நீதா நிலைநின் றிடமூ டருளேந்
தாதா வெனவே தனிவா றுசெயும்
போதோ வருள்வாய் பொருவே லிறையே.

வித்தைத் திறமே துமிலா மடியேன்
கத்திக் கதறிக் கழல்பா டவருள்
வைத்தெற் குணர்வா யருபோன் மறையாச்
சித்திற் குளநம்வைத் தருள்சே யவனே.

இந்த ௨௩ ஆம் பாட்டில்—என்னைப் பாடும்படி யருள்புரிந்து உணர்வாகவு நின்று திருவருளே என்றமை இனிது புலப்படுகின்றதன்றோ. ௬ — வது மண்டலத்தி திருவருட்செயன் ஞாபகத்திலே—

"பாடி யேயறி யாவெளி யேன்வாய் பாட லுன்கிரு பையெனவு நினைந்தேன்
நேடி யேயறி யாதவென் னினைவு நினை நினைந்திடல் கருதியு மகிழ்ந்தேன்"

என்றும் அடிகள் கூறியருளினரே. இத்திருவருட்செயன் ஞாபகத்திலேயே—

"வனப்பு மிக்கவொர் சைவரென் கனவில் வந்தெ னைக்கொடு போய்ப்பய சடிசில்
இனிப்பு றப்பிசைந் தனாதை யென்னோ டினித ருந்தியு மேகின ரதுதொட்
டுனைப்ப ழிச்சிடு கவிதையு நூலோ ருணர்வும் வளர்ந்தன விவையுமு னருளே"

எனக் கூறியிருத்தலும் இங்கே கருதிக்கொள்ளத் தக்கதே.

தருவார் தருவார் சரணங் களையென்
றிருபா தமிறைஞ் சிடுவோர் புலவாம்
உருமே வுவரோ வுயர்வீ டிலராய்த்
திருமான் மருகா சிவசே யவனே.

முகமொன் றுரைமுன் முகமொன் றருண்முன்
முகமொன் றமர்முன் முகமொன் றொளிமுன்

---

றியம்பு சூத்திரத்தா னறிக. இனிது பழுத்தமொழி கனிபோறலின் கனியெனப் பட்டது.

வள்ளிப்பிராட்டி, இறைவனை யழைத்தவாற்றினை ௬ — வது மண்டலத்திலே கூனவளாகத் திருவிளையாடலிலே "இன்னு மைத்தமி ழூந்தடுமாற வெம்பிரா, னெனக் கூவினள் பல்கால்" எனக் கூறிச்சேறலிற் கண்ணுறலாம்.

௨௫. (௧) முகமொன்றுரைமுன்=ஐந்து தொழில்க ளென்பனவற்றுள் முதன் மொழிக்கண்ணதாய படைப்புத் தொழிலில் நிற்பது ஒரு முகம், (௨) முகமொன்றருள் முன்=படைக்கப்பட்டவைகளைக் கிருபையால் அழியாது காக்குந் தொழிலே காத்தல். அதன்க ணிற்பது ஒரு முகம், (அருள்=கிருபை) (௩) முகமொன் றமர்முன்=காக்கப் பட்டவனைத்தும் தத்துவசங்காரப் போரிடை ஒடுக்கும் பெருந்தொழிலே அழிப்பு. அதன்க ணிற்பது ஒரு முகம், (௪) முகமொன்றொளிமுன்=மறைப்புத் தொழில் புரி ஆதிசத்தியே இருளாகவு மொளியாகவு நிற்றலின் அதன்க ணிற்பது ஒரு முகம், (ஒளி யைக் கூறினமையின் இருளுங்கோடல் தகுதி).

முகமொன் றிருநங் கையர்மா முகமுன்
முகமொன் றடியார் முனநின் றிடுமே. (௨௫)

மூகமொன் றுயர்விண் முகமொன் றெருகிழ்
முகமொன் றுடுதனு தொருமா முகமேன்
முகமொன் றுவடா ததமோர் முகமென்
முகநின் றருள்சண் முகவற் குளமே. (௨௬)

சூரம்விண் டுநிலங் களினுந் தொழுவோர்
உரனெவ் வணமவ் வணநின் றுதவுங்
கரமுஞ் சிரமும் பலவே கருள்போழ்
அரன்மைந் தனெனுங் குகனுக் கறிவே. (௨௭)

ஈசன் குணமெண் குணமென் றிறைநூல்
பேசெண் குணமும் பிரியா விறையோன்
நாசஞ் சனனஞ் சரைநா குமிலாத்
தேசந் திகழ்சண் முகதே வுளமே. (௨௮)

தவமே நிமிருட் சமயந் தனினூஉம்
அவமே பயின்மற் றதிலும் பொதுவாய்
எவனின் றுளனே வவனே யெனையாள்
சிவனென் றறையுஞ் சிவசண் முகனே. (௨௯)

நாவன் மையுளோர் நவிலெண் ணறுமாப்
பாவண் மையினும் படியா தவனுக்
காவென் பவர்தந் துயரங் கடியெந்
தேவென் றுளவே லவனே சிவனே. (௩௦)

சீர்வே தகுலன் றிருநா விறையோன்
ஆரூ ரனரூ வருள்வா தவுரான்
ஆரார் தமிழின் பறியா தியிரூல்
ஊர்வா னவனே யொருசே யவனே. (௩௧)

௨௫. (௫) முகமொன்றடியார் முன்=பந்த விடுதலை நிமித்தம் அடியவர்க்கனுக்கிரகிக்குந் தொழிலில் நிற்பது ஒரு முகம், (௬) முகமொன் றிருநங்கையர்மா முகமுன்=தெய்வயானை வள்ளியெனும் பிராட்டிகள் முகமுன் அவர்களுடைய விருப்பு மேம்படு மகிழ்ச்சியுறச் சிவசத்தியாய் நிற்பது ஒரு முகம் எனவாமென்க. ௧-முதல் ௫-வரையிலுமுள்ளன சிவமுகங்களென்பதும், ௬-வது சத்திமுகமென்பதும் வடநூற்பிரமாணங்களோடு இவ்வாசிரியரது ஸ்ரீ சுப்பிரமணிய வியாசத்தி லறியலாம். இப்பொருள்கட்கு மாறுபாடாக முகங்களுரைத்தல் ஏற்புடைமை யாகாது.

௨௯. அவம்=நித்தவீடுபேறின்மை.

திருமா லயனெண் டிசைநின் றுளரும்
செருவா னவருஞ் சிவசங் கரனார்
உருவென் றுணர்வோ ரறிவா ரொளிரும்
ஒருகந் தபிரா னுயிர்நா யகனே.

காலுஞ் சிலையுங் கவிசா ரனுவும்
சீலந் திமிர்தஞ் சிரமீ நிடுவோர்
கோலங் கருணார்ந் துளமே குளிர்வோன்
பாலன் குமரன் பதமே கதியே.

ஆதா ரபிரா னருளா டுநர்கட்
கோதா மொழியா லுபதே சமருள்
மீதா னபரா பரவே லவனை
நீதா னெறியாய் நினையாய் மனனே.

ஆலா சியமான் மியவா டலெலாம்
வாலா மையின்மா வளரா னகிரிப்
பாலோ ரிறைகா ணவெனப் பகர்வோன்
காலா யுதகே தனபுங் கவனே.

கீரன் சுகனோர் கிளரொள் ளருணைப்
பேரன் குகன்வீ ணைவரன் பிரமன்
சூரன் முசுமா முகனீள் சுகமே
சேரும் படிசெய் பவனென் சிவனே.

---

## ௪௦. அவனியாசை.

---

கட்டளைக்கலிப்பா.

அவனி யாசை யெலாஞ்சிக லென்றறு
வன்புக் காந்தொண் டடிந்துணை காண்டலென்
றிவரு நெஞ்சசை யாதிலை நிற்பதென்
றெங்கு நின்னன்ப ருக வலாவலென்
றுவமை யற்ற சிவானந்த வெள்ளமே
யுண்மை யாய பரம்பொரு ளேயிருங்
கவலை நூறிறு மாப்பளித் தாளுமெங்
கர்த்த னேகந்த மாதவ மூர்த்தியே.

நாசி நாவிழி காதுட லிந்தையும்
ஞால நாடலி லேதடை செய்யினும்
ஆசை யாலகக் கண்ணுழல் பேய்மன
மரைநொ டிப்பொழு தேனு மடங்குமோ
தேசி கன்றய வொன்றுள தேலது
செவ்வ னேயடங் கித்துணை யாமலாற்
காசி கண்டவர்க் கும்பகை யாகுமே
கர்த்த னேகந்த மாதன மூர்த்தியே. (உ)

பாவிற் றுண்பவர் போலநில் லாமலுன்
பாத மேபுக ழுந்தனி யேனுனை
மேவிக் கொள்ளும்விர்த் தாந்தமெ லாநுவல்
வேத நூல்பல வாய விளம்பவென்
ஆவிக் குச்சரி யாயுள நன்முனி
யாண்டி யாபிள்ளை யைப்பிரிந் திங்கணே
காவுற் றுத்திரி யும்படி யாயினேன்
கர்த்த னேகந்த மாதன மூர்த்தியே. (ந)

வாட்ட டங்கண் மடந்தைய ரல்குலா
மண்ட பத்துறை மாமத வேண்முக
வாட்டங் கொண்டெனக் கஞ்சுவ தென்றுழல்
மனமி லாதகப் பார்வையி னிற்குமோர்
நாட்ட மாகி நிராலம்ப விண்ணிலே
நாணி றந்துநின் றுய்வதென் றம்மையார்
கோட்டு ரோருக வள்ளிக்குங் குஞ்சரக்
கோதைக் குங்கிடைத் துள்ளநற் கொண்கனே. (௪)

காவி யங்க ணிளம்பிடி யார்களின்
காம வேட்கை யெலாமிங்க ணேபச்சை
நாவி யாகியு னல்லருண் மங்கையை
நாடி யின்புறற் கென்றருள் வாயெனக்
கூவி யேத்த விதித்த சுரேசனே
கோளர் கையி லெனைப்பிடித் தேகொடுத்
தாவி சாம்பி யவத்தைகொள் வானெனை
யாக்குங் காரண நானறி யேனரோ. (ரு)

---

ந. பாவிற்றுண்பவர்=மனிதரைப் பாடிப் பொருள்பெற்றுப் பிழைப்போர்.

அந்த கார விலாச வுடம்புடை
யந்த கன்வந் தலைத்துயிர் கொண்டபின்
பந்த ஞுப்பட் கிடத்தி வயாவுடைப்
பந்து கூடி யழாவொரு வாழ்வுறச்
சிந்தை யானதை நின்பதப் போதிலே
சேர வைத்துனை யேதுதி செய்திடுஞ்
சொந்தக் காரனு மாயபின் பென்றனைச்
சோதிக் கின்றதென் னேகுக தெய்வமே.

இம்மை யிற்சுகந் தந்துதன் மேலுமே
விடத்தில் வைக்கும் விழுப்பொரு ளாயவுன்
செம்மை சேர்திருத் தாள்களைச் சந்ததம்
சிந்தித் துக்கரங் கூப்பென் கரங்களால்
தம்மை யேபெரி தாப்புகழ் வீணரில்
சார்ந்து கும்பிடச் செய்தவென் புன்மையை
விம்மு நானுண் ணினைத்து நகைக்கிறேன்
வேதன் விண்டு தொழுங்கும ரேசனே.

என்னுற் பன்னமுவ் வாறிரண் டாண்டெனு
மிங்கு ளோர்மதித் தோது திருபதில்
உன்னைச் சூழ்ந்ததெ லாஞ்சொலி னேழுளா
வுற்ற வேழிலு முட்கவை யின்றிநின்
தன்னை நாடிய வாண்டொரு நான்கரோ
சங்க டங்கொண்ட வாண்டொரு மூன்றரோ
இன்னு மென்வினை வாங்கொ லறிந்திலே
னெந்தை யேசெந்தில் வாழ்கும ரேசனே.

பன்றி யொன்றக னேமியைத் தோண்டவும்
பறவை யொன்றகல் வானிற் பறக்கவும்
நின்ற முக்க ணுடைப்பெரு மானுடை
நித்தி யானந்த மைந்தவிங் குன்றுனை
யன்றி வேறோர் துணையெனக் கில்லையே
யைய னேநம்பி னேனைநீ கைவிடாய்
என்ற சொல்லும்பொய் யாகுங் கொலோவிடா
வீரம் வைத்தின்ப மேகொளச் செய்திடே.

---

௬. அவைத்தல் = குத்துதல். குற்றமென்றுங்கூறுப.

௮. இச்செய்யுள் கலியுகம் ௪௯௮௬ — ல் தாரண வருடம் சித்திரை மாசங் கூறப் பட்டதாக முதற்பதிப்பிலே காணப்படுகின்றது.

வெண்ட லைக்கைய ராடறக் காட்டழல்
விவர்ண மாயையைச் சுட்டடக் குந்தரம்
தொண்ட னேன்கண் டகங்களி கூர்ந்துனைத்
தொழுமெ னுதுரு வைத்தெரிந் தங்ஙனே
கண்டி டுந்தெளி வானுன் னருட்பிர
காசத் தோடுங் கலந்துய்ய வேண்டுமால்
அண்ட வாண வணுமலைப் பேருடை
யானை யாளறு மாமுகத் தெய்வமே. (௪௰)

---

ஆகப்பிரபந்தம் நாற்பதினும் போந்த திருப்பாடல் — ௫௧௪
தெய்வ வணக்கச் செய்யுள் ௩
ஆகத் திருப்பாடல் ௫௧௭

---

# ௪௧. பகலெல்லாம்.

---

நேரிசைவெண்பா.

பகலெல்லா முள்ளிநெடும் பள்ளிகொளுஞ் செவ்வி
அகலமறந் தாலின்னு மந்தோ—புகல்வேறே
ஏதுநினை விட்டானு னெப்படியா னாயிடுவேன்
வேதமுரு காநீ விளம்பு. (௧)

பாடுவே னின்னைப் படிப்பேனுன் மார்க்கமுறை
சூடுவே னின்னடியென் றொங்கன்முடி—நாடிச்
சருவதா காலமுஞ் சண்முககா வென்பேன்
இருதயா னந்தமணி யே. (௨)

---

௨. "தொங்கன்முடி" இச்சீரை, நேர்நேர் நிரையென அலகிட்டுத் தேமாங்கனி
னக் கோடலொழிந்து—க – மு இரண்டிற்கும் இடையிலுள்ள னகரவொற்றை நீக்கி
ர் நிரை நேரென அலகிட்டுக் கூவிளங்காயெனக் கோடல்வேண்டும். என்னை?
வண்பாவிற் கனிச்சீர் வரலாமென்னும் ஓத்தில்லாமையால். இவ்வாறிடைவிற்கும் ஒற்
றழித்து வெண்சீராகக் கொளவேண்டுமெனு நியாயத்திற்காக அடியார்க்கெளிய
னைத் தொடங்குமொரு வெண்பாவில் தனிச்சீர் "படியின்மிசை" எனநிற்க ஸ்ரீமங்
-ராஜப் பெருமா னருளினதையு முணர்வதோடு "சொல்லாரும் வல்லின மெல்லின
மாடிடைத் தோன்றுமொற்று—நில்லாது நேர்நிரை நோய்முடியு நிரம்பியநூல்—கல்
த மாந்தர்க டேமாங் கனியென்பர் கற்றுணர்ந்த—நல்லார்கள் யாவருங் கூவிளங்
யென நாட்டுவரே" என்ற விதியையுமுணர்க. யாப்பருங்கலக் காரிகைக் கட்ட
க்கலித்துறைகளி னடிகளி னீற்றில் "வானத்துமே" "நிகரில்வெள்ளை" எனக்
னிச்சீர்போலும் பூச்சீர்போலுங் காணப்படுபவைகளையும், வேறு நூல்களில் இவ்வாறு
ணப்படுபவைகளையும் இவ்விதியாற் காய்ச்சீரெனவே யெழுத்தளவுபொருந்தக்

கொன்றுதின் றேன்சிலநாட் கொல்லாதுண் டேன்சிலநாள்
இன்றுவிட் டேனினிமே லில்லையே—மன்றிலுறை
ஆட்டுக்கா லோன்முருக னைருக ஞானவழி
காட்டித்தா றாமலெனைக் கா.

சும்மா கிடந்தவெனைத் தூண்டிவிட் டேனுண்ணுஞ்
செம்மாரின் னைத்திரிதூர்ச் சிலம்போ—விம்மவியின்
மம்மரார் வத்துழல வைத்ததெதற் காவமரர்
பெம்மானே யெம்மானே பேசு.

முருகனருள் கொண்டுள்ளார் மூர்க்கரயர் தன்பிற்
கொருபோது மஞ்சியுற வாகா—வெரிமீது
குப்பைசினந் தாலழிவு கொண்டிடுமல் லாலெனெஞ்சே
நட்பாவ துண்டோ நவில்.

சொன்னாற் பிறப்பொழியுஞ் சூராய கூற்றகலும்
எந்நாளும் பேரின்ப மெய்துநெஞ்சே—முன்னாள்
பொருசூரன் வல்லுடம்பு போழ்ந்தவயி லேந்து
முருகவே ளென்னு மொழி.

பொல்லாத நெஞ்சே புரந்தருளும் வேலவற்கு
நல்லாறு நின்றுண்மை நாடாது—வல்லாண்மை
பண்ணியுல கோரவாம் பாழ்த்தநெறி செல்வாயேல்
மண்ணாவாய் சொன்னேன் மதி.

வாரா விடும்பைபல வந்தே குவிந்தாலும்
ஓராறு துண்டனரு ளுண்டன்றோ—சீராவாய்
அஞ்சாதே யஞ்சாதே தொய்யாதே நையாதே
அஞ்சாதே நெஞ்சே யறி.

வீட்டின்மேன் மாட்டின்மேல் வேற்கண் மடந்தையர்மேல்
நாட்டின்மே லேசிந்தை நாட்டுகிற—பூட்டைநெஞ்சே
இவ்வளவு நன்குனக்கிங் கீந்தருமை ரன்சரணை
எவ்வளவு மெண்ணாத தென்.

கோடன் மரபு. இந்நூலுள் இவ்வொரு செய்யுட்கண்மாத்திரம் "தொங்கன்முடி" என ஆசிரியர் வருவித்தகருத்து வெண்பாவிலும் இப்படி யொருவிதி ஏகதேசமங்கீகரிக்கப்படுமென்பதைப் பிறர்க்கு விளக்கும்பொருட்டேயாம். மேலைவிதி கட்டளைக்கலித்துறைகட்குப் பெரும்பாலு மங்கீகாரமாம்.

க. பூட்டை—காராம்பி. செக்கென் மங் க. ௱.

எண்ணாத வெண்ணமெலா மெண்ணியுழல் பேய்மனமே
விண்ணேர் பேணுமயில் வேலவனை—யுண்ணடிப்
பார்க்கவிரு ளாயுளசு பாவமல மாய்த்தொன்றாச்
சேர்க்கவரு வானதனைச் செய். (௧0)

இக்கா சினியெங்கு மேகும் பணப்பறவை
எக்காலுந் துக்கமே யீயுமென்று—பொக்கநெஞ்சே
கானமயில் வீரனடி கண்டுபெரும் பேறுபெற
நீநினையா தேநினைந்து நில். (௧௧)

நல்லார் நிஜநெறிக்கு நாட்டுப் பொருட்டொல்லை
இல்லா திருப்ப தேயியையு—பொல்லாப்
பொருள்வந்து டாடிடுமேற் பொக்கமற்ற தெய்வ
அருள்வந்து டாடலரி தாம். (௧உ)

என்றைக்கு மில்லாநொவ் வென்னவினை யாலேயோ
இன்றைக்கு நாமெய்த விங்குற்ற—தொன்றுக்கும்
அஞ்சாதே நந்தே வருட்குமர வேள்காவல்
நெஞ்சே யிருக்கு நிதம். (௧௩)

ஆணும்பெண் ணுங்கூடி யாடறரி னின்னமுதம்
காணுமதை யுட்கொள்ளிற் கற்பமன்றே—மாணுடையோர்
கொள்வாருய்த் தோர்ந்தே கொளார்க்குநல னிவ்வுலகின்
உள்ளேது நெஞ்சே யுணர். (௧௪)

வரிசைவழா வோரேழு வண்ணவர ணஞ்சூழ்
அரியநிலை யென்பவைகட் கப்பா—லிருமைப்
பகலிரவில் லாவோர் பரவெளிக்கண் ணேசேய்
திகழுமா னெஞ்சே தெரி. (௧௫)

மூன்செய்து பின்னஞ்சு மூடமன மேநீதான்
என்சொல்லை நன்குமதி யிஞ்ஞாலத்—துன்பினிடைப்
போகாதெம் மான்றாள் பொருந்தவென் றுணர்வு
சாகாம னின்றங்கே சா. (௧௬)

சிரங்குனிப் பான்விண்டு தெண்டனிடு வான்மால்
கரங்குவிப் பான்றலையிற் கஞ்சன்—குராங்கித்
துதிபடித் தாள்வேலோய் சூர்தபவென் பார்க்குக்
கதியளிப் பான்பதங் கண்டு. (௧எ)

---

௧௫. அரணம் = மதில்.
௧எ. குராங்கி = தாழ்ந்து.

மண்சுமந்த கோன்முருகா மண்சுமந்த மான்மருகா
மண்புரந்த மால்குரவா மாயஞ்செய்—மண்பிளந்த
வேலிறைவா நூலிறைவா வீடருளென் பார்களவன்
காலடைவார் மாலடையார் கள்.

சங்கரிசேர் பொன்மேனிச் சங்கரியின் மாமருமான்
சங்கரியி னோர்மருமான் சங்கரியைச்—சங்கரிக்குஞ்
சாமிக்கு மோர்குரவன் சாமிக்கோர் சூழிறைவன்
நாமெச்சி நாடயிலி னன்.

கோத்தயிர்வெண் ணெய்த்திருடன் கோலமரு காநறிய
பூத்திருடன் றன்மதலாய் பொங்குகுறக்—கோத்திரத்தோர்
பெண்டிருடிச் சென்ற பெருந்திருடா வென்போத
முண்டுதிரு டத்தெரியா யோ. (உ0)

இந்த உ0 ஆம் செய்யுளை ஒரு காகிதத்துண்டி லெழுதித் தழுவணை யடியில் வைத்துவிட்டு ஆசிரியர் படுத்திருந்தார். அஞ்ஞான்று கைகொண்டு மெத்தென அடிக்கும் ஓரடி தமது முதுகில் வீழ்ந்ததை யுணர்ந்து "இறைவ! எளியேன் பாடிய பாட்டு, திருவுளத்திற்குச் சம்மதமில்லையென வுணர்த்துமாறு இதன்மேலு மறிவிக்கப்படு மாயின் அதனைப் பரிகரித்துவிடக் கடவேன்" எனச் சிந்தித்துப் படுத்துக்கொண்டனர். அவ்வித அறிவிப்பொன்றும் ஏற்படவில்லை. நிகழ்ந்த தலம் பிரப்பை. பெண் திருட்டு எக்காரணத்தெழுந்த தென்பதை ஸ்ரீமத் – குமாரசுவாமியத்துச் சேழுந் சோலைத் திருவிளையாடலி லறியலாம்.

காலில்லா தான்மதலாய் கையில்லா தானிளையோய்
தோலில்லா மால்குருவே சூர்கீண்ட—வேலுள்ளோய்
கண்ணில்லாள் காதலனே காதில்லா ரீசுரவென்
னுண்ணில்லா தென்கொ லுரை. (உக)

அன்னைக் கரைவலியப் பற்குத் தலைவலியோர்
கொன்னறு மாதுலற்குக் கூனற்கை—மன்னெஞ்சக்
குத்துடைய வண்ணனுக்குக் கோட்டுவாய் பேச்சில்லா
முத்திதந் தாள்சண் முகன். (உஉ)

கஅ. மண்சுமந்தகோன் = சோமசுந்தர பிரான். மண்சுமந்த மால் = ஓரசாத் கடலில் வைத்துள்ள பூமியை வராக வடிவெடுத்துச் சுமந்துகொணர்ந்த விட்டுணுமூர்த்தி மண்புரந்தமால் = பூமி புரந்த தசரதாரம மால். மண் = பூமியாகலின் தாணி யென வுங் கூறப்படும். "தலமு மலையுந் தபனனுந் தரணி" எனப் பி – நிகண்டு கூறுதலின் அம்மண், மலையெனும் பொருள் பயக்கும். அம்மலை கிரௌஞ்சகிரி யெனப்படும்.

கக. சங்கரிசேர் என்னுந் தொடரிலுள்ள அரி = ஒளி. "மருமான் எனுஞ் சொற்கள் இரண்டில் முன்னையது மகன்; பின்னையது மருமகன்.

உஉ. கூனற்கை என்பதிற் கூன் = சங்கு. சங்கு கோணலாயிருத்தலின் இ பெயரும், சுரிமுகம் வளையென்னும் பெயர்களுங் கொண்டன. "கூனும் வளைவு கோண லென்ப" என்பது பி – நிகண்டு. கூத்து "குத்து" எனக் குறுகிற்று நெஞ்சக்கூத்து = இதய நடனம்.

கீழுதடு மேலுதடுங் கிட்டித் துவரன்ன
கீழுதடு மேலெயிறுங் கிட்டியந்தக்—கீழுதடும்
மேலுதடு மேசேர்ந்து மேற்குத்தொன் றேற்றுவருந்
தோலறவொள் வேலற் றுதி. (௨௩)

பசுவே றரன்சுதனைப் பக்குவந்தா னுள்ள
பசுவைவதைத் துண்ணும் பானைப்—பசுவெல்லாங்
காப்பவனைக் கந்தரலங் காரஞ்சொன் ஞெனிறையை
நீப்பின்றி நெஞ்சே நினை. (௨௪)

இப்பிரபந்தத்துள் ௪, ௧௭, ௨௨ ஆஞ் செய்யுள்கள் பூட்டுவிற் பொருள்கோள் உடைய.

---

# சு௨. கங்கையின்சேய்.

---

கட்டளைக்கலித்துறை.

கங்கையின் சேயெனை யாளுடை யானெழில் காண்கழலுக்
கங்கையி னுன்மலர் தூவும் பலனங் கமலமல்குங்
கங்கையி லேயுருப் பட்டிடா யுத்தியைக் காட்டுநற்சு
கங்கை வயப்படச் செய்யுநெஞ் சேநனி கண்டுகொள்ளே. (௧)

சக்கர மான்முன் சமரம் புரிந்த தடவிருத
சக்கர னுலைச வுற்றவெற் பேறுந் தழல்கொளுதற்
சக்கர ஞருரு விற்பாதி யென்றுள்ள சற்பிரகா
சக்கர மாதிள மைந்தனென் றுன்பு தணிப்பவனே. (௨)

கலவை திமிர்திண் குயவள்ளி நேயக் கணவநற்ச
கலவை பவமு முடையவ னேநின் கழல்களைப்பு
கலவை மடமையி னுலுற்ற பாவக் கணங்களைய
கலவை நிமிர்நின் னருளிற் கலாவிக் களித்திடவே. (௩)

இருகோ மளத்தனைப் பூவிலை மாதில்லிற் கென்றனையின்
றிருபோ வெனத்தள்ளி னுன்வந்து காமவே ளென்பவனுன்
இருசீயென் றேசி யிருவாவென் றேதியிங் கேகிவந்தேன்
இருபாத வன்பின் வலியா லுடம்பிடி யேந்திறையே. (௪)

---

௨௩. இச்செய்யுளைப் பொருள்படுத்துங்கால் "பவம்" என்னும் ஒருமொழி வெளிப்படும். அஃது அ "ஒள்வேலற்றுதி" என்றறிவுறுத்தா ரென்க.

எண்ணாய புன்மை யிலராகி வாழ்வென் றெண்ணுநர்மேல்
எண்ணா வனீத ரெனச்செயார் பாவமொன் றீரமற்ற
எண்ணா ருளுற்று மிகைக்கும் பிரதி யிழைப்பதின்றி
எண்ணாத வெண்ணத்தி லேயிருப் பாரயி லேந்திறையே.

எல்லா வுயிர்க்கு மறிவா யியங்கு மிறையறிவை
எல்லா வுயிர்க்கு மிதமாகு சாந்தம தெய்தியுணர்ந்
தெல்லா மதஞ்சன் னிதியெனு முண்மையி லேறியன்றோ
எல்லா வறிஞரும் வீடுபுக் காரயி லேந்திறையே.

பாவ முளுற்றோ திருப்பது தான்சிவ பாக்கியத்தின்
பாவ மதற்குண் டுடுப்பன கேடு பணுவென் றுயிர்ப்
பாவகஞ் செய்தா னருந்துந ரீரப் பவுள்சிழந்து
பாவ மிலையென்ற பாவமுங் கைக்கொள்வர் பாவகியே.

புலானுகர் நாக்கி னுருசியை மாற்றப் புகலற்றவர்
புலானிமிர் யாக்கை தனைப்பிண மாவெண்ணிப் போதருமைம்
புலாதி யெலாம்வென் றகம்புற மொத்தவொர் பூரணத்திற்
புலாதி யிலாநிலை நிற்பர்கொ லோசிவ புங்கவனே.

புலைமறுத் தோருங் கொலைமறுத் தோரும் புரையுரைக்கும்
புலைமறுத் தீசன் குருதாசர் பாட்டன்பு பூத்தபின்மெய்ப்
புலைமறுத் துன்னரு ணோக்கினிற் பொன்றாது பொன்றிநிற்போர்
புலைமறுத் தோங்கு முனைக்காண்ப ரேசிவ புங்கவனே.

வேத் நெறிக்குப் புறம்புளோ ருளுண்டு மெய்யறிவாம்
வேத மடைய விலைகொலென் பாரந்த வேதமுயர்
வேத மிலையிழுக் கென்றுண ராது விமலர்தந்த
வேத வழிநின் றுளசந்த மாமுனி மெய்யிறையே.

---

எ. "பாக்கியத்தின் பாவம்" என்ற தொடரில் (ஹாவ ஃ) பாவம்=விலாசம். பாவகம்=பாவத்தலைமை.

# ௪௩. மண்ணிற் சிறுவீடு.

---

கலிவிருத்தம்.

மண்ணிற் சிறுவீ டதுசெய் மழவோர்<br>
எண்ணிற் சிறிதே பெரிதா மிவணீர்<br>
பண்ணித் திரிகா ரியமின் படர்வேல்<br>
அண்ணற் கடிமைப் படுமா னுடரே. (௧)

வருநா ளுயிர்போ யிடுநாண் மடவார்<br>
இருவாள் விழிநீர் சொரியே தநடை<br>
திரிவீர் தழைசால் சிகியே றிவரும்<br>
பெரியோன் விபவம் பெறவம் மினரோ. (௨)

உறவே கொடுநீ ருறவென் றிவணெவ்<br>
வுறவெய் தியுளீ ருறவொன் றுளதஃ<br>
துறவே யுறவோ டுறுவீ ரெனினல்<br>
லுறவென் றுணர்வீ ருறவே யுளரே. (௩)

உயர்வீர் தினமெய் யுடையை பணிமேல்<br>
உயர்வீர் தினமெய் யுளசேய் பணிமேல்<br>
உயர்வீர் தினமெய் யுறவோர் பணிமேல்<br>
உயர்வீர் தினமெய் யுடையீ ரொளியே. (௪)

கல்லா மனதைக் கனியப் பணிமா<br>
வல்லோ னெனையாண் மயிலூ ரிறைதாள்<br>
எல்லோ ருமிறைஞ் சியெலா நலனும்<br>
அல்லோ பெறவென் னகவா தரமே. (௫)

அன்பர்க் கருள்வா ரிதியா யழியா<br>
இன்பத் திரளா யிணையில் பொருளாய்<br>
என்கர்த் தனெனு வுளசே யடியார்ப்<br>
பின்பற் றிடுவோ ரணவார் பிணியே. (௬)

---

௨. தழை = மயிற்றோகை, பீலி; "கபாலந் தழையே தொங்க லென்றிவை—கலாபிப் பீலியிற் கட்டிய கவிகை" எனுஞ் சே - திவாகரச் சூத்திரத்தானும் இப்பொருளறியப்படும்.

௪. ஐபணி - எனுந்தொடரில் ஐ = சாமி = குரு; யகரவேதுகை, பிங்கலந்தை காண்க.

எவருந் தெரிவீ ரெமனுள் வருமுன்
சிவகந் தமனுச் செபியா தவர்பால்
புவனந் தொறுமே பொருநோ வெனுமா
கவனம் பெரிதுங் கவியுந் தினமே. (௭)

வாய்பே சவொணு மதிவாழ் வதிலே
நோய்வா தனைகோ ணுளேயே றுவதில்
மாய்வா முனரே மகியீர் பெறுமின்
சேய்போல் வருமோர் சிவனு லதையே. (௮)

நினைவொன் றுவதே நிகழ்சே யடியார்
வினையென் பதைநீ ருணரீர் வினையீர்
தனவின் பமதே சதமென் றதிலே
மனமுந் துரவ் வழிநா டரிதே. (௯)

அறிவின் பெருமா ணறிவீ ருளர்பால்
அறியா மையினீ ரறிவீ ரிலர்பால்
அறிவாய் நிறைவா னினைமின் களரு
அறிவா ரருணைப் புதனு தியையே. (௧௦)

---

# ௯௪. புவியாரே.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

### ஆதித்தவாரம்.

ஒளியா யிருளா யிருக்குமரு ளென்னுந் திரோதை யும்முள்ளே
விளையு மடமை போக்கிநல்ல விவேக முதவிப் பிறவிதன்னைக்
களையும் படியின் பருளாகக் கருது கிறவும் முட்பதியும்
அளவை தானே யாதித்த வார மாகும் புவியாரே. (௧)

### சோமவாரம்.

நீரு நிழலு மொன்றாக நிகழ்தல் போலுந் தலையிருக்குஞ்
சூர னொளிபோ லுஞ்சுடர்செய் தூய வறிவுப் பரம்பொருளைச்
சேரும் பவுள்சே பவுள்சென்றோர் சித்த மகத்து ளொழி இநறும்
வாரங் கொளுநா ளேசோம வாரந் தேரும் புவியாரே. (௨)

---

உ. சோமம்=அமுதம், நன்மை. "ஸோமம்" வடகிளவி.

### மங்கலவாரம்.

துல் பகல்க ளுள்ளடங்கக் கணிக்கு நிலைகட் கப்பாலாய்
து நிறைவா யுள்ளபொரு ளெங்க ளறிவுக் கறிவாயுள்
கி நாளு முளததனைச் சாரி னிடரின் றெனவுணர்நாள்
கலவார மாமுணர்வின் மதிக்க வுள்ள புவியாரே. (௩)

### புந்திவாரம்.

ரிக்கு முயிரைப் புரந்தாளுந் தலைவ னாய பசுபதியை
த்து ளிருத்தி யறிந்தொன்று மருவத் தனைமுன் கண்டன்றி
த்தின் மலையி லுறைந்தானு மொல்லா தெனவே வளர்புந்தி
ரிக்கு மொருநா ளேபுந்தி வாரந் தகைசால் புவியாரே. (௪)

### குருவாரம்.

திது பெரிதென் றுளபேதச் செயலுஞ் சாதி குலமரபும்
திது மறதி நினைப்புமத வழக்கு மிழுக்கு மிலாதென்றும்
றிவிற் கறிவா யவிரொன்றை யறிவ தற்கா வருண்மொழியொன்
றுதி யிறைவந் தருளொருநா ளுயர்கு ருவாரம் புவியாரே. (௫)

### சுக்கிலவாரம்.

ரையுந் திரையு மிளைமூப்பு நலமும் பொலமு மில்லாமல
நவு மின்பப் பெருவாழ்வின் மன்னு வதற்கிங் கெடுத்தவுடல்
ரியு முன்னங் குகனருளாற் பிறழ்சீ வனறிந் தருளுடற்குக்
நவா நாள்சுக் கிலவாரங் கண்டீர் களிசால் புவியாரே. (௬)

### மந்தவாரம்.

தாந்தித் தசையு நிணமுமல்கச் சோற்றான் வளருந் துளையாக்கை
ந்தி ரியம்பொன் மாதர்மக்க ளெனவே யோங்கி மலிபாச
ந்த முழுது நீத்தெம்மான் பருக்கு மமுத வாரியுண்டு
ந்தங் கொண்டு மலர்ந்திடுநாண் மந்த வாரம் புவியாரே. (௭)

### கொலைசெய்க.

ரியுந் தரணி வதிமாக்கள் விலங்கு பறவை யூர்வனநீர்
ரியும் பிராணி களையிம்பர்த் தீழ்ப்பா யெண்ணிக் கொலைசெய்யா
ரிய பேறு பெறுவதற்கா வந்தக் கரண விருத்திகளைப்
ரியும் படியே கொலைசெய்யப் பெற்றி கொள்ளும் புவியாரே. (௮)

---

௮ — முதல் ௧௨ — வரையிலுமுள்ள பாட்டுக்களில் கொலை, பொய், களவு, கள்,
ருநிந்தை யென்னும் ஐந்து மாபாதகங்களையும் அறக் களைதலும், அவ்வைந்திற்கும்
வறுபொருள் நயம்பிறங்க வுரைத்து அவை கோடற்பாலனவெனக் கூறலும் இங்குக்
ண்டாமன்றே. ஏனையவும் இன்னனவாமே.

## பொய்கூறுக.

நெய்யு மமுது முண்டுமின்னுர் நேயங் கோடற் கென்றிங்னே
மெய்யை மெய்யா விட்டிழுக்கா மிறையார் பொய்தான் சொலலொழித்து
மெய்யை யறியா தவர்க்குமெய்யாய் விளங்கு முலகை யிலையென்னும்
பொய்யைச் சொல்லி யுய்யவன்பு பூண்டு வாரும் புவியாரே. (கூ)

## களவுபுரிக.

உளமு முடலும் வருந்திடக்கா முற்றுத் தேடும் பிறர்பொருளைக்
களவு செய்தல் கறையெனவே காணற் கரிய பரவெளியில்
அளவு சங்கை யின்றியற்கை யமல மாக வுளபொருளை
உளவு கொண்டு களவுசெய்வா னுற்று வாரும் புவியாரே. (கo)

## கள்ளருந்துக.

ஏற வளர்ந்த தாலங்தென் னீந்தின் மாந்த ரிடுவினையால்
ஊறுங் கள்ளைக் குடியாதுள் ளூன்றி யுணர்ந்து சத்தியமாய்
ஈறு முதலு காப்பணுமின் றெங்கு நிறைவா யுளதெனநூல்
கூறு மின்பக் கள்ளதனைக் குடிக்க வாரும் புவியாரே. (கக)

## குருநிந்தைசெய்க.

அருளுந் தெருளுந் தாநின்ற வையன் முருக னருண்மலிந்த
குருவை நிந்தை பணுதிழிவு கூறுங் கொலைகட் சூதுவஞ்சம்
மருளார் பொச்சாப் பழுக்காறு மற்றுங் கலுட வினைவுக்கே
குருவா யுளமை நிந்தித்துக் கொள்ள வாரும் புவியாரே. (கஉ)

## கொள்ளை.

கள்ளில் வேத நெறிதுறந்து காமஞ் சீற்ற மீயாமை
எள்ளு மிடம்ப மதந்துவேஷ மிழிவா மோக மென்பவற்றைக்
கொள்ளை கொள்ள வேண்டாநீர் குறையா நிறைவா யனுமயமாய்
உள்ள பொருளைக் கொள்ளைகொளற் கோடி வாரும் புவியாரே. (கங)

## சுத்தவீரம்.

வாழு நாக வமரர்பிரான் வகுத்த வழியி னில்லாநீர்
தாழல் போல்வன் சீற்றநேரிற் றம்மை மாய்க்க வுடனிருக்கும்
பாழி மனதை யடக்காது பயிலும் வீரம் வீரமன்று
சூழு மதனை யடக்கிநிற்றல் சுத்த வீரம் புவியாரே. (கச)

---

கஉ. கலுடம் = பாவம்.

கச. "வன்சீற்ற நேரிற்றம்மை மாய்க்க தாழல்போலுடனிருக்கும்" என வியைத்துக் கொள்க. தாழ் அல்போல் = தாழ்ந்த இருளைப்போல்.

### சம்பிரதாயம்.

நினையு நினைவிற் கெட்டாம னிற்கு முருகோ னெனும்பொருளைத்
தினமு நினையோர் சாதனையாற் றேகம் விடுமவ் வேளையினும்
மனைவி மகார்மண் மாசைநசை மருவா மௌனம் பூட்டுகின்ற
மனநி ரோதஞ் சம்ப்ரதாய மற்றொன் றில்லை புலியாரே. (கரு)

### உத்தியோகம்.

உடையு நடையுங் குடையுங்கொண் டில்லா சப்பேய் நனியாட்டத்
தடையில் லாநும் முத்யோகந் தடுக்க மாட்டா தெமபடரைக்
கடையு முதலு நாப்பண்ணுங் காணுப் பொருளெங் கண்மணியை
அடையப் பார்க்கு முத்யோக வாற்ற றடுக்கும் புலியாரே. (கசு)

### காயகற்பம்.

விவேக மின்றி நெடுநாளிவ் விபுலை தன்னி விருப்பதனால்
அவமே யன்றிச் சுகமில்லை யாத ரொட்டா யுளுக்காக
உவகை யுற்றுக் காயகற்ப முண்டிங் குழன்று கெடாமலலை
கவலை மனத்தைக் குளிரவைத்தல் காய கற்பம் புலியாரே. (கஎ)

### சித்தி.

மாய வித்தை யாஞ்சித்து வகைக ளானே தனையறிந்து
ஞேய முத்தி யடையொண்ணு நிகழ்நற் குசல ரவைவிரும்பார்
தூய ஞான முடையவரைத் தொடர்ந்து நிற்குஞ் சித்தியெலாம்
காயம் விடுமுன் சிவஞானங் கருது மதனாற் புலியாரே. (கஅ)

### நல்லநாள்.

வாதின் மூத்து வழக்கிடற்கே மதங்கொண் டடங்கா மதமுடையோர்
ஏது முடிவு கண்டாரிங் கீசன் றன்னை யிறைஞ்சினிய
போத முடையா ரெல்லாரும் புனித மூர்த்தி யாவரொரு
நாதன் பரிவைத் தெளிநாளே நல்ல நாணற் புலியாரே. (கக)

### பண்டிகைநாள்.

எஞ்சா வருணைப் பதியிருந்த வெந்தை யருண கிரிக்கன்றால்
அஞ்சே லஞ்சே லெனுமபய மளித்த வேலிற் கிறைவனடிக்
கஞ்சந் தன்னை நினையாநாள் கசட்டு நாளந் நாளதனைப்
பஞ்ச மாக்கிக் கண்டவெல்பண் டிகைநாள் பரிவுப் புலியாரே. (உ0)

---

கரு. மாசை =பொன் : நு - நிகண்டு காண்க.
சம்ப்ரதாயம் =மறைத்து மொழிகிளவி ; வடநூன்முடிபு.
கசு. உத்யோகம் - வடநூன்முடிபு.
கஅ. தொடர்ந்துநிற்கு மென்றதற்கு ஏவலுக் கெதிர்பார்த்து நிற்குமெனப் பொருளறிக. சித்தியெலாமென்றதனால் அணிமாதி அஷ்டசித்தியுங் கொள்ளலாம்.
உ0. கசடு=மாசு ; பி - நிகண்டு காண்க.

# சரு. சொன்னயம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சொன்னய மலிந்த மறைநெறி துறந்து
துன்மதி யாற்பிழைத் ததற்கு
நன்னடு வுடைய விறைவனால் விதித்த
ஞாயமே விதியென முளைத்தாங்
கன்னவ ருடலு முள்ளமும் வருந்த
வாற்றிடு மென்றுண ராதான்
என்னகச் செயலா விறையவன் செயலென்
றிழைத்தபொல் லாங்கினை மறுப்பான்.

மதிவழி யாலே விதிவரு மென்னும்
வகையறி யாமட மாந்தர்
விதிவழி யாலே மதிவரு மெனவே
விளம்புபு மதிநெறி யிகந்து
சதிவழி கருதித் தன்னிலை பிறழ்ந்து
தயங்குவர் நன்னெறி பேணி
நதிவிழு கடல்போ லருளடைந் துயர்வார்
நாதனி னருட்டுணை கொண்டோர்.

கன்மமென் றறையோர் காரண மின்றிக்
கடவுடா னன்மைதீ மைகளைப்
புன்மைகொண் டுழலான் மாக்களின் மாட்டுப்
பொருந்தவே செய்தன னென்னில்
தன்மமிக் குடைய வவனிட மதன்மஞ்
சாருமன் றேவத னுனே
கன்மமே சன்ம மெனவிசைத் திடுமார்க்
கங்கரி சற்றமார்க் கமரோ.

அற்றனைக் கரும வுயிர்கள்சத் தினிபா
தத்தினை யடைந்துவீ டடைவான்
முற்றிலா மாயை மாயையின் கலைக்கண்
முளைத்திடு பிரகிரு தியெனும்

அற்றமின் முதற்கா ரணத்தின்மெய் யருளா
யவிர்துணைக் காரணங் கொண்டு
நற்றனை யுருவுண் டாக்கிடுந் தொழிலை
நடத்துவ னிமித்தகா ரணனே. (௪)

மூவகைக் கார ணமுமிலா தேது
முளைப்பதே யிலையதெவ் விதமேற்
பூவுழைக் களிமண் முதலினைத் துணையாம்
புரையறு தண்டுசக் கரத்தான்
மாவுடை நிமித்த மாங்குய வன்றான்
மட்கலம் வனைதல்போ லெனநல்
ஆவிக ளுணர்ந்தா ரறிவிலார் மருண்டா
ராகவி லணைவிதி வினையே. (௫)

விதியது பெரிதோ மதியது பெரிதோ
வெனவினா விடுவரவ் விதிதான்
எதன்வழி யெக்கால் வருமென வறியா
ரெப்படித் தப்புவா ரெனலும்
அதன்வர வறிந்தோ ரதிற்சிக்கி வருந்த
வமைவரோ வெனலுமோர் வாரேல்
மதிவலி யளவும் விதிவலி யளவும்
வகுத்துணர் வாரிவண் மாதோ. (௬)

தன்னையே யறியிற் புதியவா காமி
யங்கெடுந் தலைவனை யறியின்
முன்னைய சஞ்சி தங்கெடு மொன்று
முறைமையிற் பிராரத்தங் கெடுமென்
றென்னையாள் பெருமான் விதித்துள பனுவ
லிசைத்தலி னரியஞா னத்தின்
முன்னடல் விதிதான் வலுப்பதின் றிலரை
முறைப்படி வயம்பணி யாளும். (௭)

தந்தையா மதிதான் விதியெனு மகனைத்
தந்துதன் சமிரட்ச ணைக்குள்
அந்தமா வளர்த்து விருத்தனா கியபின்
பவனதி காரத்திற் குள்ளாய்
உந்துர மோய்ந்து நின்றிடு ஞானி
யுயர்வலி குறைவதே யின்றி
மைந்தனும் விதியைச் சட்டைபண் ணாமல்
வாழ்வனெக் காலமு மன்றே. (௮)

தீவினை தெவுள விழைத்தவை யனைத்துஞ்
சேர்ந்துமால் வரையினை நிகர்த்து
மேவலர் போற்போர் தரினும்வே லவன்றாள்
விரும்பிநல் வினைவழி நிற்போர்
யாவுளும் பெரியோர் நலன்மிக வுடையோர்
யாவரும் புகழ்தக வுடையோர்
நாவினுக் கரியோ ரெக்குல ரெனினு
நான்மறை யிறுதியின் படியே.

எப்பொரு ளினுமிக் குயர்வுடை மதியை
யெவர்பரி பூரண மாக
ஒப்பொடு முளரோ வவர்பிரா மணரென்
றோதிடு நான்மறை முடிவை
இப்படி மிசைமூந் நூலுடைப் பார்ப்பா
ரென்பவர் மட்டுமோ வடைவார்
அப்பனல் லருண கிரியிறை யருளா
லனைவரு மினிதடை வாரே.

---

## சுசு. கந்தர் நான்மணிமாலை.

---

நேரிசைவெண்பா.

சொல்லேறுஞ் சாத்திரங்க டோலாரு மோருடற்கு
நல்லாவி யொன்றென்னு ஞாயம்போ—லெல்லா
வுலகுக்கு மோரிறையா யுள்ளமுரு காநின்
சலமற்ற வாழ்வே சதம்.

கட்டளைக்கலித்துறை.

சதமான வாழ்விங் கிறப்பும் பிறப்புந் தவிர்ந்ததென்றே
இதமான நூல்கள் சொலச்சிலர் தாமிங் கிறந்தபின்னர்ப்
பதமான சொர்க்க மடைதலை யந்தப் பரமுத்தியென்
றுதவாத கூற்றினை யோதுவ ரேமயி லூர்பவனே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உளர்மிதிர்ந் துயர்தக் கோர்தா முறுதரு மத்தா னெய்துஞ்
சீர்நிமி ரூர்த்த லோக செல்வம தனித்த மென்று

---

க. தகவு=குணம்; ௩௩, ௪0 - ன் குறிப்புரை காண்க.

நார்நிமிர் ஞான யோகா னல்லருள் வடிவா யின்பு
கூர்நினை யினித ளாவிக் குலவுவர் குமர வேளே. (ங)

நேரிசையாசிரியப்பா.

வேளுரு வெரித்த விமலன் புதல்வா
தாளரு ளவாவித் தமியனேன் பழிச்சுந்
திருமுரு காமெய் சிறந்தநின் னடியார்
அருமறை யறைதரு மிருவினை யுள்ளே
எழினல் வினைபொன் னின்விலங் கெனவும்
இழிதீ வினையிரும் பின்விலங் கெனவும்
கணித்தவை யிகந்துன் னருட்கட லாடுபு
புணர்ப்பான் மனோலய பூர்த்தி நேடி
இடைவிடா வேலையி லேகண்
படைகொளா வாறு படைகொள்வ ரன்றே. (ச)

நேரிசைவெண்பா.

அன்றலர்ந்த பூக்கொண் டருச்சிக்கு நாகரிகல்
வென்றமுரு காபாழ்த்த வேட்கைமனங்—கொன்றவர்பால்
எல்லாநின் கூத்தாக வேயிருக்கு மாற்றார்செய்
பொல்லாங்கு மில்லாமற் போம். (ரு)

கட்டளைக்கலித்துறை.

போமோ வருமோ வெனுமைய நீங்காத புந்தியர்க்கும்
ஆமோ சுகங்கதிர் வேலவ தஞ்செய லற்றவர்பாற்
பூமே னலமும் பொலமு மிழைத்திந்தப் பூதலத்தோர்
மாமேவு மன்னோ ரிருவினை யாவையும் வவ்வுவரே. (சு)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வவ்விய பிடிதான் மர்க்கடப் பிடிபோல்
வலிகொள வசைவற நிற்குஞ்
செவ்வுறு சிவயோ கத்திலே பழகித்
திளைத்திடா வாய்ப்படிப் புடையோர்
எவ்வித மறிவா ரவர்நா மதுவென்
றிசைப்பது மெனவறி வீனம்
நொவ்விலா வதுதா னவரெனி னசைச்சூர்
றுகர்வர்கொ லெலைக்கொளுங் குகனே. (எ)

நிலைமண்டிலவாசிரியப்பா.

குகனே யென்றன் கோனே யுன்றன்
சுகசொரு பத்தைத் துகளற வடைந்த
சீவன் முத்தர் பூவிற் புரிசெயல்
யாவு நின்செய லாக்கண் டுவப்பார்
பூதமைந் தானும் பொல்லாங் கடைகிலார்
வாதனை தணந்த மனதோ டுலாவுவார்
காலமோர் மூன்றுங் கண்டடங்கி நிற்பார்
ஞாலமீ தொன்றை நயனத்தா னறிந்த
மனமதைத் தன்னுண் மறையாது காண்டல்போல்
அனகஞா னக்கணா லறிந்ததைச் சாக்கிர
தசையினுங் கண்டே சிவானந் தமாக
அசையா நீர்மையி லமர்வார் சிறந்தே. (அ

நேரிசைவெண்பா.

சிறந்தகந் தாநின்னைத் தெய்வமறை யோமென்
றறைந்ததையு மாதிபுரா ணங்க—ணிறைந்தபரம்
என்பதுமோ ரார்வே லிறையோன் மனுடனெனும்
அன்பிலிபொய் யேபொடிப் பார். (௯

கட்டளைக்கலித்துறை.

பாருயிர் கட்டும் பரலோக மேயநற் பண்ணவர்க்கும்
ஆருண் மோக்க மளிக்கும்வே லோய்நீ யருளிலிபோல்
ஆரண மந்திரம் யோக மருந்துக ளாற்கடவு
ணீரடைந் தாயென்னு மேடுந் தொடுவரோ நின்னன்பரே. (௧0

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அன்பர்க ளருளிற் பாடு மருந்தமி ழிலக்க ணத்தைத்
தென்பொதி யக்கோற் கன்று தெரித்தெழின் மதுரைச் சங்கத்
தின்புல வோர்க டேவா யிருந்துள நினது நாவிற்
புன்கவி பிறக்கு மென்னார் பொருளறிந் துளர்வே லோயே. (௧௧

நேரிசையாசிரியப்பா.

வேலோய் வேலோய் வீடருள் வேலோய்
வாலார் கலைமா மகளும் புகழ்சேஎய்
பிரம னறியாப் பிரணவப் பொருளைப்
பரமற் குரைத்த பரமா வென்பார்
துயரடு சிவனே யுயிருறை குகனே

செயிராறு வேத முயர்புரா ணங்கள்
பந்தமின் ஞானசம் பந்தர்வா கீசர்
சுந்தரர் வாதவூர்த் துறைதிரு வாக்குகள்
எல்லாம் பொய்யென் றெழுதி யுள்ள
கல்லா மடவோர் காமுற வுள்ள
ஆபா சத்தமிழ் யாப்புக ளமைத்த
மாபா விக்கென் கதிவந் ததுவோ
அத்தமிழ் கருதி யலையுன்
மத்தர்க்கு மென்கதி வருமறி யேனே. (கஉ)

நேரிசைவெண்பா.

ஏன றனிலிருந்த வேந்திறைகொண் காவுனரு
ளானிகழ்வோர் மேன்முத்தி யாங்காலம்—வானூர்
சிவலிங்கஞ் சோதி சிதாகாச மென்று
நவிலொன்றிற் சேர்வார் நயந்து. (கங)

கட்டளைக்கலித்துறை.

நயமேய பட்டினத் தார்போல ஞான விலிங்கவுருச்
சுயமா வமைவதுஞ் சுந்தரர் சேரலன் றாலமுடன்
கயிலாயஞ் சேர்ந்தது போனனி சேர்வதுங் காசிலருட்
செயலாளர் சேர்முத்தி யென்னலா மோஞ்சிவ தேசிகனே. (கச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேசிகனூர் சொற்றமறை யறைகின்ற வாறுபுலாற் றேகம் விட்டுப்
பேசரிய முத்திபெற லுண்டெனற்குப் பெருமிழலைக் குறும்பர் நீறு
பூசிடுமன் பேனாதி மெய்ப்பொரு டீசிமுனி போற்பல் லோரும்
காசினியிற் கரியென்று கழறுவார் சன்மார்க்கர் கதிர்வே லோனே. (கரு)

நிலைமண்டிலவாசிரியப்பா.

வேலுடைச் செம்மாஅல் வித்தகக் கடாஅல்
இறைதே டுவதோ டிறையுந் தேடியர்
மதியுடை யாருள் வதிதருந் திருவே
என்னக வடிகே ளிரும்பர வெளியை
மரீஇய தற்கு வாதவூர் முனியும்
மோதமிக் குளசுக முனிவரு முளரே
ஆசறு சோதி யடைந்த தற்கால்
அமணர் சிங்க மாதியெண் ணிலரும்
பத்திர கிரியொடு பலரு முளரே
சிவலிங்க வைக்கியஞ் சேர்ந்த கரிக்குப்

புரைதெறு மப்பர் போற்பல ருளரே
தாவறு பெற்றான் சாம்பா னென்பான்
உருநீ றாகி யுற்ற திறம்போற்
பலவா கிளக்கும் பனுவலும் பலவே. (௧௬)

நேரிசைவெண்பா.

பலக்குமா னேசொற்ற பந்தமிலா மோக்க
நிலைக்கதோ பாகநிற்கு நர்க்குப்—பலிக்கும்
பதமுத்தி தன்னையுமா முத்தியெனப் பன்னல்
இதமுற்ற பூர்வபக்க மே. (௧௭)

கட்டளைக்கலித்துறை.

பக்க முளார்க்கருள் பண்ணுங் குமார பரமவருஞ்
சொக்க வருட்கதி மெய்யொடு மாமெனச் சொல்லுவதுன்
பக்கசித் தாந்த மலாதொரு மார்க்கம் பகர்வதுண்டோ
தக்கவிம் மார்க்கநண் ணுதவர் யாவருந் தாழ்வுளரே. (௧௮)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தாழ்வறி வணுதியுயிர் தன்னையு மதற்குளவிர்
தற்பரனை யுங்கெழுதகைக்
கேழ்கிளர்மெய்ஞ் ஞானமத னுவினி தறிந்தணவு
கேவலமி லின்புதவிர
ஊழ்கிளரும் வேறுகதி யாவுநிலை யின்றெனவு
ரைப்பதை மறுக்கவிங்னே
சூழ்பவர்கள் சொன்னிலை கொளுங்கொலெனை யாண்முறைமை
சொல்லுமயி லிற்கரையனே. (௧௯)

நேரிசையாசிரியப்பா.

அரையிற் புலியுரி யார்த்தே றுகைப்பார்
குருவே யவர்தங் குருந்தே நினது
நெறியுணர்ந் தோர்புற நெறியோர் கருதும்
அறிவுடை யுயிர்முன் னிருந்திவ் வாக்கையுள்
வந்ததே லந்த வகைதான் றெரியா

---

௧௬. "பலவாகிளக்கும் பனுவலும்பலவே" என்று கூறினமையின் ௧௪, ௧௫, ௧௬ ஆஞ் செய்யுள்களிற் கூறப்பட்டா ரனைவரும் அவரவர் சரிதைகளின் படியே கூறப்பட்டாரெனல் கொள்ளக்கிடக்கின்றது. சரிதைகள் சத்தியமுள்ளன அல்லவென லேற்படின் அச்சத்தியமின்மைக்கு இந்நூலாசிரியர் பொறுப்பொன்று மின்றே. பிறவு மன்ன.

௧௮. மெய் = உறுப்புமாறியேனும், தூலம் வீழ்ந்தவுடனேனும் உறும் பிரணவ தேகம். ௪ — வது மண்டலத்தைச் சார்ந்த சேக்கர் வேளிறுமாப்பு ௨௮, ௨௯ — முதலிய செய்யுள்களில் விவரமறியலாம்.

திந்த நிலைமீ திருப்பதென் னென்று
கடாவிடி னஃதிக் காலத் திழைத்தவை
சுடாத சுழுத்தியிற் றூன்று வாபோல்
தன்னக மிருந்துந் தன்னால்
உன்னற் கரிதா வுளதென் றுரைப்பரே. (உ0)

நேரிசைவெண்பா.

உரைக்குமவ ராழ்சுழுத்தி யுற்றபோழ் தங்கட்
குரக்குநெஞ் சென்றே குயிலு—முரக்கருவி
இல்லாமை யாற்சாக் கிரத்துநினைப் பின்றென்றுஞ்
சொல்லுவார் வேலோய் துணிந்து. (உக)

கட்டளைக்கலித்துறை.

துணியற்ற வந்தச் சுழுத்தியென் றோதுந் துயிலொழிந்தால்
எணியுற்ற வெல்லா முணர்ந்திடல் போலேகி லெல்லின்முன்னம்
பணியிட்ட வெல்லாம் விளங்குமென் றெப்புவிப் பாரவைக்கண்
திணியுற்ற சன்ம மிலையென்பர் வாதென் செயுங்குகனே. (உஉ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

குகமெனு மிருதய குகையுழை யமருயிர்
குயிற்றிய தொழின்மறந் துழல்கால்
மிகுகவ னமொடது நினைவழி யறிகிற
விதமென வொருநினை வதிலே
பகவிழி மலர்பொழு துளபழ நிலைமைகள்
பரிவொடு மறியுமென் றுணர்வார்
சுகமுய ருனதரு ளுடையவ ரெனுளுறை
சுகுர்த குமரகுரு பரனே. (உங)

நேரிசையாசிரியப்பா.

பரமுத்தி சேராப் பசுக்களிந் நிலமேல்
இல்லின்றி வாழ்வதற் கியலா தேய்ப்பச்
சடமின்றி யுய்யுந் தகையுள தன்றுயிர்
தூல மிழக்கினுஞ் சூக்கும யாதனு
சரீரமுட் டேவ தண்டமள விருக்கும்
புண்ணிய நுகர்சற் புரத்தோ டிருக்கும்

உஉ. துணி = ஒளி ; பி — நிகண்டு காண்க.

இருவினைப் போகமு மிறந்தான் மீட்டுஞ்
சஞ்சித வினையிற் றுயுதாஞ் சேரும்
என்றுன தாகம மியம்பும்
வென்றிவேல் பரித்த வியன்பெரு மாளே. (உச)

இன்னிசைவெண்பா.

பெருமானே நீபப் பிணையானே யென்னைக்
கருமேவா வாகாப்போய் கம்பிரள யத்தில்
அழியவுள்ள சூக்க மடங்குவதற் குள்ளே
அழிதூல வெண்கணிப்போ ரார். (உரு)

கட்டளைக்கலித்துறை.

ஆரிய னனவுன் போதக ஞானத்தி னுலூரிய
காரண தேகங் கரைவதற் குள்ளுட் கரணமுள்ள
சார வவயவ மெத்தனை தாம்வந்து சாருமென்று
பூரண மாப்புகல் வோரெவர் வேலுடைப் புண்ணியனே. (உசு)

கலிவிருத்தம்.

புண்ணி யஞ்செய்த புண்ணிய மூர்த்திகள்
எண்ண·மோயநின் றின்படைந் தார்வசம்
பண்ண வென்று சுவாசபந் தம்புரிந்
தெண்ணி லாரிறந் தாரெங்கு வள்ளலே. (உஎ)

இணைக்குறளாசிரியப்பா.

வள்ளியத் துள்ளே மறைந்தபொற் பொடிபோல்
உள்ள வுண்மையைத்
தெரிவா னினைப்பைச் சிக்கெனப்
பரிவொடு மடக்குபு பழுதறு
நின்மல சுழுத்திமீ நின்று
துன்மை காணுத் துரியத்தே
அருள்காட் டிடவே யறிவார்
அருள ரென்றனை யாளயி லரசே. (உஅ)

---

உரு. பிணையல் "பிணை" எனப் பொருந்திற்று; பின்னியமாலை யெனும் பொருண்மைத்து. பிணையென்பதற்கு ஆசையெனும் பொருளுமிருத்தலின் இறைவன் நீபஆசையுடையானெனக் கூறப்பட்டனனென்றுங் கூறலாம். நீபம் = கடம்பு.

உஅ. "வள்ளியத் துள்ளே" என்னுந் தொடரிற்கு வளப்பாடுடைய ஈயம்போல நெகிழ்ச்சியுள்ள பொருளிலே எனப் பொருள்கோடல் வேண்டும். ஆவதேல் இது, மெழுகெனற்குமேயும். இயம் ஈயமென்பதன் விகாரமாம்.

பஃறொடைவெண்பா.

சேவே றான்பரைக்குச் செப்பியநிட் டானுபுதிப்
பாவறு பத்தைந்தைப் பார்த்தவருங் கந்தாலங்
காரனெழு பத்தொன்றைக் கண்டவருஞ் சைவநூற்
சாரயோ கக்கழற்றி தன்னின்மூன் றெட்டிரண்டு
செய்யுளினி தோர்ந்தாருந் திட்டெடுக்க மூச்சடக்கித்
தொய்வார்கொல் வேலிறைவா சொல். (உ௯)

கட்டளைக்கலித்துறை.

சொல்வள்ந் துன்ன முதனூ லெனச்சிவன் சொன்னவருட்
செல்வச் சிவஞான போதமுஞ் சார்புந் திடவழியுங்
கல்வித் திடங்கொண்டு கண்டவர் மூச்சைக் கடமுடவென்
றொல்க விழுக்கத் துணிவர்கொ லோவள்ளிக் குற்றவனே. (௩0)

வஞ்சிவிருத்தம்.

உற்ற நெஞ்சை யொடுக்கினல்
எற்று மூச்சு மியங்குமோ
பற்றி லார்க்குப் பலிக்குமால்
வெற்றி ஞாங்கர் விருத்தனே. (௩௧)

நேரிசையாசிரியப்பா.

விருத்த வுணர்விலார் விடய வுணர்வாற்
கருத்தனைக் காணக் கருதுத லாழிய
வார்க்கட லைச்சிவை வால்கொண் டாழும்
பார்க்கத் துணிந்த பண்பைச் சிவனும்
என்றறி வார்நல் விகலார்
குன்றெறிந் தோயுன் குடியடி யாரே. (௩உ)

நேரிசைச்சிந்தியல்வெண்பா.

யாரானு மிற்றென்று நாவா லரற்றவொண்ணச்
சீராரும் வேலோய் சிவயோகந்—தேரார்
மனதையறி வென்பார் மருண்டு. (௩௩)

---

உ௯. இஃது ஒழிவிலொடுக்கமெனு நூலிலோர்பாகமே " கழற்றி " என்றமையின்.

௩0. இச்செய்யுளிலே முதனூலெனச் சிவன் சொன்ன சிவஞானபோதம் என்றதும், பிறவும் சைவசித்தாந்தமெனும் புத்தகங்களெழுதினோர் கூறியவாறே கூறிக்கொண்டனவாம். இம்முடிபு இந்நூல் அ, எ—ல் " பரமனருள் மொழியாய " என்றற்றொடக்கத்துத் திருவிருத்தத்தின் குறிப்புரையிலும் இனிது புலப்படுத்தப்பட்டுளது.

௩உ. சிவை = நரி ; வகரவேதுகை காண்க.

கட்டளைக்கலித்துறை.

மருளிலார் தூல வுருவிழி போல மறைந்துளவுள்
ளுருவிழி யாகு மனதென்று மந்த வுருவிழியாங்
கருவி யளாவிக் கருது முயிர்பிறர் காட்டவொன்றைத்
தெரிய வுளதென்றுந் தேர்வார் சடக்கர சின்மயனே.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மயர்வில்லா நுண்ணியர்தாந் தீமை யாளர்
மனமென்னுங் கருவிதெளி வின்றித் தோன்றிச்
சுயபோத மெனுமறிவம் மனத்தே நன்றாச்
சொலியாம லறிவில்லாப் பேதை யானார்
நயமான வினையுடையோ ரதைநன் கேற்று
ஞாலமீ தறிவுடையோ ராவ ரென்றிங்
கயராம லறிவாரென் னறிவா யுள்ள
வரும்பொருளே வகண்டவருட் குமர வேளே.

நிலைமண்டிலவாசிரியப்பா.

வேளாண்மை வள்ளால் விறலயிற் பெருமான்
ஆளான வடியா ரல்லார்ந்த தண்ணிய
மாயா நிட்டையா வழுத்திடு பாசம்
ஓயா நிட்டையு முயிரி னிட்டையும்
இன்றிப் பதியி னிட்டை யினிதடைந்
தென்றும் பிரிவற் றிருப்ப திராச
யோகமென் றுணர்ந்தா ரொருமொழிப் படியே
ஏகமா யகண்டமா யியங்கும் மொழிக்கயல்
எம்மொழியு மிலையே யெப்பொருளு மிலையே
இம்மையி லதன்றகை யியம்புந ரெவரே.

நேரிசைவெண்பா.

எவருரையு மோர்மொழிக்கு ளேயென் றுணர்ந்தோர்
துவிதநவி லாதிருந்து துய்ப்பா—ரவிவேகர்
சூக்கமறி வேமென்று சொல்லிநனி யுண்டுறங்கிச்
சாக்காடா வார்குமரே சா.

கட்டளைக்கலித்துறை.

சாப்போன் மருண்டிவ் வுலகப்பித் தேறித் தயங்குநரே
மாப்பாகு ஞான நெறியையிச் சித்தல் வளுவளுத்த

ந-அ. சா=பேய்.

நீர்ப்பாயுங் கூழுக்கு மீசைக்கு மிச்சிக்கு நேர்மையன்றே
பாப்பாடு மென்றன் பரிவுக் குவப்புறு பாவகியே. (ந-அ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாவக ஞான முள்ளோர் பலதிற விடய மெல்லாம்
தீவளர் நெருப்பா றென்றுந் திளைக்குமெய் யறிவே யாங்குப்
பூவளர் மயிர்ப்பா லந்தா னென்றுமுட் பொருந்தி யுய்ந்தார்
தாவுள ரிவைதேர் வாரோ சண்முகா னந்த வாழ்வே. (ந-கூ)

நேரிசையாசிரியப்பா.

வாழ்வுக் குரியோர் மாமறை யந்தமும்
தாழ்வற்ற வாகம சைவசிந் தாந்தமும்
அகண்ட வாக்கிய மாமொரு மொழிவயின்
விகண்டித மின்றி மெய்யத்து விதமா
நிற்கு மதன்பொரு ணிராமய மாய
தற்பர வின்பத் தனிப்பழம் பொருளை
அனுபவித் திடுசுத் தான்மா நித்தம்
பணிதீ ரதுவும் பரமும் பிரிவின்
றுடலுயிர் போல வுளவென் றறிந்து
சடமல நூறிச் சமாணமி லின்பச்
சீர்த்தி வீடெனத் தெய்வ மறைநுவல்
பூர்த்தி யடைவதுன் பூரண வருளால்
என்றுநா னுணர்பாக் கென்னகத் திருந்த
வென்றிவே லரசே மிளிர்பரம் பொருளே
யருட்கச நாயகி யருட்குற மாதரு
கிருப்ப மணித்தவி சிருக்குமெம் பெரும
என்று பிளளுநு யென்று முதுவனுய்
நீசொன நிட்டை நிலையை
ஏசறு வாய்மலர்ந் தெற்குஞ் சொல்லே. (சo)

ஆகப்பிரபந்தம் நாற்பத்தாறினும் போந்த திருப்பாடல் கூஉஅ
தெய்வவணக்கச்செய்யுள் ந
ஆகத்திருப்பாடல் சுநக

# ௪எ. நெஞ்சுப்பத்து.

கலிவிருத்தம்.

பூமணை மிறைச்சிமது பொங்கலொடு போதை
நேமமுட னேயிழிதெய் வங்களெதிர் நீட்டிச்
சேமமுற லுண்டெனினல் லும்பர்பணி தேவை
நீமுனி நயம்பெறவொ ரையமெனை நெஞ்சே.

என்னடிய வர்க்குலகி லேதுதுய ரென்று
சொன்னகும ரேசனது சொன்னிஜ மறந்திங்
குன்னிடு கலக்கமிக வுற்றலைவ தென்னை
அன்னவ னடிக்கடிமை யாகவமர் நெஞ்சே.

தாரகன் மரிக்கமலை சாயவசு ரேசன்
பாரவுடல் பிறவொரு பாழியயி லேவும்
வீரனடி யெண்ணவினை வெல்வதரி தோசம்
பூரண நினைப்பொடது போற்றுதியெ னெஞ்சே.

வாக்குமன மெய்வழி வளர்ந்தபவ மெல்லாம்
போக்கவுள நீயுறை புதைக்கிறுதி வந்து
நீக்குமுன மேகுருவை நேயமுட னேடு
நோக்கநிறை வேறுமதி நுட்பமிது நெஞ்சே.

புண்ணிய மிலாவறியர் புந்திநிகர் கூந்தற்
பெண்ணசை யெனுங்கழுது பின்றொடரு மேற்சேய்
தண்ணளி யெனும்பெரிய தண்டமது கொண்டு
மண்ணின்மடி யும்படி வதைத்தினிதுய் நெஞ்சே.

சந்ததமு மாடரி தழங்கிட நடிக்கும்
செந்திநகர் மேவிய திருக்குமர வேடாள்
புந்தியி னினைந்துதெளி போதவறி ஞர்க்கால்
எந்திரமு மந்திரமு மேனுணர்வு நெஞ்சே.

ஆதியிடை யந்தர மிலாதவயி லீசன்
பாதவிணை கொண்டருள் படைத்தநிபு ணர்க்கு
மாதமொ டிராசிதிதி வாரமெழு நாள்கோள்
ஏதுமிலை யென்றறிவி லேறுணர்வு நெஞ்சே.

---

எ. அந்தரம்=முடிவு; நகரவேதுகை காண்க.

சோதியிறை வற்கினிய தொல்பிரண வச்சால்
போதிய குகேசனடி யுற்றவுறழ் வர்க்குச்
சாதிகுல நாமநசை சஞ்சலம் விகற்பம்
ஏதுமிலை யென்றறிவி லேமுணர்வு நெஞ்சே. (அ)

திக்கொடு திகந்தமு நிறைந்தசிவ சேயோன்
நக்கனொ டுரைத்தபொரு ளுடுமறி வாளர்
துக்கசுக மென்றறை சுழிப்பவன முள்ளே
சிக்கியுழ லாரறிதி சிந்தனைகொ ணெஞ்சே. (கூ)

அஞ்சொனயம் விஞ்சிய வருட்புகழ்க ளந்நாள்
நெஞ்சுருக வோதினவ னெஞ்சுழி யிருந்தோன்
தஞ்சமென நிற்குநர் தயங்குவர்கொ லென்றும்
சஞ்சலமி லந்தநிலை தன்னையடை நெஞ்சே. (கo)

---

# சஅ. உலகவாழ்வு.

---

வஞ்சிவிருத்தம்.

உலக வாழ்வை யுறுதியென்
றலையு மூட ரகமெலாம்
கலக மேசெய் கருவியார்
வலைவி டாது வளையுமே. (க)

சாமி நாத சண்முகா
காம ஞேபு கன்மமே
வாம லேசெய் வந்தெனை
நேம நேடு நெஞ்சமே. (உ)

பூசி வாவி பூதிநீ
ருசி லாத மேனிமேன்
மாசில் பூதி மல்குவாய்
நேச மான நெஞ்சமே. (ங)

---

க. கருவியார் = ஆயுதமுடையார்.

காறு கெட்ட கந்தனல்
ஊற றுக்க வுள்ளநீ
வேறெ ழுத்தை வெஃகுறேல்
ஆறெ ழுத்தை யன்றியே.

சாம மோது மாசதா
வீமன் மைந்தன் மேனியாம்
ஓமு மெய்பி ராணினோ
ரேம மந்த்ர மேயரோ.

இறைமு னிட்டு ணுதவூண்
கறையை யொக்கு மேகலாம்
உறவ றுத்த வூனிடேல்
வெறிதில் சுத்தன் வேலனே.

நிலவு மேனி நிருமலப்
புலவ னெந்தை பொருவில்கால்
மலரை நாளும் வழிபடின்
விலகு மெந்த வினையுமே.

வடிவு மைந்த னடிமலர்
வடிவு கண்டு மகிழ்பவர்
வடிவு கொண்ட மடவரல்
வடிவை வண்டு புகல்வரோ.

ஆதி யந்த மற்றசேய்
சீதம் விஞ்சு சேவடிப்
போது கண்ட போதையர்க்
கேத னந்தை யிச்சையே.

இச்சை நோய ரெத்துணைப்
பச்சை மாழை பார்க்கினும்
துச்ச வாசை சோர்வரோ
உச்சு வாச வுள்ளமே.

வரையி லும்பை வண்டறை
சுரம டர்ந்த துறையிலும்
விரத நோற்க வேண்டுமோ
சரண டைந்த தாசரே.

---

க. கலாம்=கொடுமை; சூ - நிகண்டு காண்க.

நிட்டை கூடி நிறுவினும்
சட்டி நாதர் தயவிலார்
ஒட்டி வாழு மூரனுரூர்
விட்டி டாது விடுதியே. (கஉ)

மூத்த ளுன முருகனைப்
பத்தி யோடு பணிகுநர்
செத்தி லாத தெளிவிலே
நித்தம் வாழ்வர் நிலவியே. (கங)

அருணை நாத னறிவினால்
மருவு தேவ மணியருள்
முருக வேளை முழுவதும்
கருதும் யோகு கமழுமே. (கச)

## சக. ஞாயவாதிகள்விளக்குவர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**வி**யனில மனலுயிர் புனலெனு நான்கினும்
விளைந்ததிவ் வுலகென முடிபு
பயிலிழி பாமரர் பரசிவ மிலையவை
பழமையிற் பழமையென் றறையின்
குயவனில் லாமலுங் குடம்வரு மோபெருங்
கோபுரம் வனைந்தவ னிலையோ
நயவுணர் விருந்திடி னறிதிரென் றறிவுடை
ஞாயவா திகள்விளக் குவரே. (க)

உணர்வறு பூதமு மவைகளின் விருத்தியு
முணர்வுடை யுயிர்களைச் செயுமோ
உணர்வுடை யுயிர்களு முணர்வறு பொருளிருந்
துதித்திடு மியற்கையை யுறுமோ
உணர்வறு பொருளறி வாமெனி னிறந்தவ
ருடலறி வின்றழி வானேன்
நணுகறி விருந்திடி னறிதிரென் றறிவுடை
ஞாயவா திகள்விளக் குவரே. (உ)

வடிவமி லளப்பறு பேரறி வாமொரு
வானென வெங்கணு மல்கி
வடிவுரு வுடையிய மானனுக் கறிவசை
வாகவு மிருக்குமோர் சிவனே
கடவுளென் றருமறை யறைதரு மேயது
கறையறு முறையென வுள்கி
நடலையி லந்நெறி நின்றிட னலனென
ஞாயவா திகள்விளக் குவரே.

சித்திர வுலகினைச் செய்யிறை யாய்நனி
செய்வதைப் பிரேரகஞ் செயமா
சத்தியுஞ் சிவனுமொ ருருவினி லிலகிய
சத்திய மறியுநுண் ணியர்பால்
நித்திய மாயவி ரமலசின் மயத்திரு
நிஜத்திரு வாமது தானே
நத்தமும் பகலுமி லாநடு நிலையென
ஞாயவா திகள்விளக் குவரே.

அரிவரி கெழுமிளை யோரதன் மேன்முறை
யறியவு முளரது புரையச்
சரியையுங் கிரியையும் யோகமு ஞானமுஞ்
சாதகர்க் காகுமந் நெறியே
புரிபவர் மார்க்கநன் மார்க்கமெ னுத்துணி
பொருள்கணித் தாட்படு பவரே
நரகடை யாரெனப் பறைதுவைப் பாமென
ஞாயவா திகள்விளக் குவரே.

கல்லினும் வலிதெரி கனலினும் பெரிததி
கடுமனக் கயவர்கள் வாயின்
சொல்லினுங் கொடிதுழி தருமுசு மனதிது
துணிவொடு துணையுறுங் காலம்
புல்லறி வொழித்துர னுணர்த்திநின் றிடுமுயர்
பொறையினில் வரையையும் வெல்லும்
நல்லரு ணிலைக்குமொ ருரியநட் பாமென
ஞாயவா திகள்விளக் குவரே.

---

௬. நத்தம்=இரவு; நக்தம் என்பது வடசொல்.

௭. துவைத்தல்=ஆரவாரித்தல்; ஒலித்தலெனவுங் கூறுப. "கறங்குமணி துவைக்கும்" என்றார் மலைபடுகடாத்தினரும்.

பல்லுயிர்க் குயிரெனு மிறைக்குயி ரிருதய
　　பங்கய மிருப்பிட மென்றே
சொல்லிறை யாகம நெறிபிடித் துய்ந்திடு
　　தூவடி யார்கடம் முயிரே
வல்லுயிர் பிறவுயிர் புல்லுயி ரெனவவை
　　வருந்தவோர் கொடுந்தொழில் புரியார்
நல்லறி வுளர்செவிக் கிதுவமு தாமென
　　ஞாயவா திகள்விளக் குவரே. (எ)

உயிரினுக் குயிரறி யறிவினுக் கறிவென
　　வுளபெரும் பழம்பொரு ளருளே
அயனரி யரன்றிரு வாயிருந் துளபடி
　　யாக்கியு மோம்பியு மழிக்கும்
செயல்களுக் கிடைவடி வுடையுயிர் களைவதஞ்
　　செயுமரு ளிலிகளை நோக்கா
நயமுறு கருணையி லார்தவ மவமென
　　ஞாயவா திகள்விளக் குவரே. (அ)

கண்ணுடல் செவிநுகர் வாயொடு நயனமுங்
　　கால்புகு மூக்குநம் போலப்
பண்ணிய வுயிரழித் துண்ணுமி னெனுமொழி
　　படித்திடு மனுடருக் குலகில்
எண்ணறு மசரப தார்த்தமிக் கிருக்கமெய்
　　யிறையுயிர் வதைத்துண்ண வறையான்
நண்ணுக ரேயத னுலிது மேலென
　　ஞாயவா திகள்விளக் குவரே. (கூ)

அன்பிறை யினியவுட் சமயவொண் பகலுக்கு
　　மளியில் பரசமய நிசிக்கும்
அன்புடை யிறையென வமைந்தவை களுக்குயர்
　　வாயசித் தாந்தவிண் மணியாய்
இன்படைந் தவருண கிரிகுரு வெனச்சொலு
　　மேதமின் முருகைய னுகி
நன்குடை யீசனுக் குரைத்தது துணிபென
　　ஞாயவா திகள்விளக் குவரே. (கய)

---

கய. அளியில் = ஈரமில்லாத = கிருபையில்லாத.

# ௫௦. போற்றிவிண்ணப்பம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐயனே யரசே போற்றி யருமறைப் பொருளே போற்றி
துய்யனே துணையே போற்றி தூமணித் திரளே போற்றி
மெய்யருள் விளைவே போற்றி வெற்றிவே லேந்து பூவற்
கையனே போற்றி யெங்கள் கடவுளே போற்றி போற்றி. (௧

போற்றுவிண் ணவர்கோன் போற்றி புரிதவத் தொண்டர்க் கின்பம்
ஆற்றுநல் லழகன் போற்றி யாடுமம் பரியோன் போற்றி
நீற்றினைப் புனைந்த மேனி நிலவருட் குன்றம் போற்றி
சீற்றமெம் மேற்கொ ளாவோர் சிவசுப்பிர மணியம் போற்றி. (௨

மணியணி மால்வி ரிஞ்சன் மற்றுள கணங்கள் யாவும்
பணியநின் றவனே போற்றி பரமனே போற்றி யன்பர்
அணியடி யலரே போற்றி யாக்கிநன் களித்து மாய்க்குங்
குணமுடை யத்தா போற்றி குமரவேள் போற்றி போற்றி. (௩

போற்றிவந் தாளு முன்றன் பொன்னடிக் கமலம் போற்றி
தேற்றுவா ருன்னை யல்லாற் றிக்குவே றில்லை போற்றி
மாற்றரும் பிறவிக் காட்டை மடிக்கமெய்ஞ் ஞானத் தீயை
ஏற்றுமெய்க் குடையாய் போற்றி யெங்குறை தவிர்ப்பாய் போற்றி. (௪

பாய்நதிக் கிடையோன் வாம பாகமே கொண்டா டன்னைத்
தாயென வுவந்தாய் போற்றி தனிப்பரஞ் சுடரே போற்றி
வீயிலாப் புத்தேண் மாதை வேட்டுமற் றொருத்திக் கன்று
நாயக னுனாய் போற்றி நான்மறை முதல்வா போற்றி. (௫

முதலுமாய் நாப்ப ணாகி முடிவுமாய் நின்றாய் போற்றி
சததள பாதா போற்றி சகச்சிர நாமா போற்றி
மதிபுனை பரம னூர்க்கு மதலையாய்க் குருவாய்த் தேவர்
பதியென வுளவேள் போற்றி பரஞ்சுடர்க் கண்ணா போற்றி. (௬

கண்ணுமாய்க் கருத்து மாகிக் காணொழி லெந்தை போற்றி
விண்ணுமாய் மண்ணு மாகி விளங்கருட் டேவே போற்றி
பண்ணவர்க் கருளத் தண்ட பாணியா நின்றாய் போற்றி
தண்ணருட் கடலே போற்றி சதுர்முகற் கிறைவா போற்றி. (௭

---

௧. துய்யன் = தூய்மையென்னும் பண்பினடியாகப் பிறந்த பெயர்.

௫. வீ = நீக்கம், சாவு; ' வீ நீக்கம் பூப்புட் சாவாம் " என்பது நகரவேதுகை.

இறைவனே போற்றி யாதி யெந்தையே போற்றி வேலுக்
கிறைவனே போற்றி நீப விணாரணி சிவனே போற்றி
மறைபுக லரிய வெங்கண் மாதவ மணியே போற்றி
குறைவறு நிறைவே போற்றி குளிர்சிவக் கொழுந்தே போற்றி. (அ)

கொழுமையிற் குளிர்மை போற்றி குக்குடக் கொடியாய் போற்றி
குழுமிய சிவக ணங்கள் கும்பிடுங் கழலாய் போற்றி
தொழுபவர்க் கருள்வோய் போற்றி சுந்தரா போற்றி யென்னை
முழுதுமாள் பவனே போற்றி மோனநா யகனே போற்றி. (கூ)

நாயக மானார்க் கெல்லா நாயக மானாய் போற்றி
தாயென வருவாய் போற்றி சண்முகத் தரசே போற்றி
தீயரிப் பெயரோற் கன்று தெய்வமுங் குருவு மான
நீயெனைக் கலந்தாள் போற்றி நித்தனே போற்றி போற்றி. (கம)

---

## ருக. சரணவிண்ணப்பம்.

---

### அந்தாதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அத்தனே சரண மெங்க ளாதியே சரணந் தூய
சித்தனே சரணஞ் சைவ தெய்வமே சரண ஞான
முத்தனே சரண மோன முனிவனே சரணம் வேத
வித்தகா சரண மென்னை வெளிப்படக் காட்டு வாயே. (க)

காட்டிய வுலகி யாவுங் காக்குநின் னருளி னென்னைக்
கூட்டியாட் கொளுமெங் கோனே குமரனே சரண நீபம்
சூட்டகன் மார்பா வுள்ளத் துய்யனே சரண மோக்க
வீட்டையாள் வானே யந்த வீடெனக் காக்கி டாயே. (உ)

ஆக்கைபொய் யுறவா மென்று னடைக்கலம் புகுந்த வென்னைக்
காக்கவிந் நாளி ழுத்த கருத்தனே சரண நீறு
பூக்குமா தார தேவ புனிதனே சரணம் வேத
வாக்குடை யடிகே ளாள வருவது தருணந் தானே. (ங)

தருணமு மறிந்தெ னாது தன்மையு முணர்ந்து நல்ல
அருணல மளிக்கு மெங்க ளையனே சரணம் வேத

உருவனே சரண மாதி யொருவனே சரண நாளும்
முருகனே சரண மோன முனிவனே சரண மன்றே.

சரணநின் சரண நானே சரவண பவனே சன்ம
மரணமு மளவு மில்லா மழவனே சரண மாதிப்
பிரணவ மருளு மூலப் பிரமனே சரண மாறும்
மருவிய பொருளே யென்னை மனமுவந் தாண்டு கொள்ளே.

கொள்ளவென் றகத்தியற்குங் குயிற்றரும் புகழாற் சீர்த்தி
அள்ளவந் தவற்கு மோது மையனே சரண மெங்கள்
வள்ளலே சரண மூல மறையவ சரண மென்னைத்
தள்ளிடா தாண்டு கோடி தாவுடைப் பிழைபொ றுத்தே.

பிழைபொறுத் தாளற் காய பெற்றியே சரண நட்பை
மழையெனப் பொழிவி லாச வானமே சரண மெண்கண்
ணுழைமதிச் செறிவா யோங்கு நட்பமே சரணங் கோலத்
தழைபுடைச் சிகியி லூருஞ் சண்முகா சரண நானே.

நானெனை தெனரு மோய நல்லருள் காட்டு மின்ப
வானநா யகனே யுன்றன் மலரடி சரணஞ் சாம்பி
ஈனமா நெறிநான் சென்று லெதிர்நின்று தடுத்தாட் கோடற்
கானசேய் சரண மாசி லங்கணு சரணங் காணே.

காணுமென் றந்தாய் வேத கதிநெறிக் கந்தா வேமப்
பூணுமுற் பலமும் பூணும் புயத்தனே சரணம் பூவார்
வாணுதல் வள்ளி யெந்தாய் மணமுதால் சரண மென்னைப்
பேணவுட் படர்ந்திவ் வாறு பிதற்றிநா னிற்கின் றேனே.

நிற்குமெ னுருவைக் காட்டி ஞேயமோ டருளிற் கூட்டிச்
சிற்பர மளித்தி தேவ தேவனே சரண நாளும்
பொற்பதம் விழைவார்ப் போற்றும் புண்ணியா சரண மெம்மான்
அற்புத வருணைப் பேரா னத்தனே சரண மன்றே.

---

# ருஉ. அமிர்தமதி.

## அந்தாதி.

வேறு அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அமிர்தமதிக் குடிலத்தா னுன்குமுனி
  வோர்க்குரைத்த வடைவே போனீ
நிமிருமதி யறுமுனிவர்க் குரைத்ததுகை
  காட்டாக நிலைத்த ஞாயம்
தமியனறிந் தன்னணமே நில்லாது
  பிதற்றிநிதந் தணியா மோகத்
தமமதனிற் கிடந்துழலு நெஞ்சுளனுத்
  தகவிழந்து பாழ்பட் டேனே. (க)

பாழான வுடலெடுத்தேன் பயனறியேன்
  பண்பில்லாப் பாவி யானேன்
தாழாத வுனைமறந்தே னெனையறியேன்
  செய்தவெலாஞ் சமித்துக் கொண்டு
சூழேதப் பிரபஞ்ச வாசனையை
  மாய்த்துனடித் தொழும்பர் நாளும்
வாழேக வீட்டினுக்கே வரவழைத்தி
  யயில்பிடித்த வடிவி னனே. (உ.)

வடிவில்லாப் பெருவெளியா மன்னியநீ
  கருணையினல் வடிவ மாகி
மிடியில்லா வடியார்கட் கனுதினமு
  மருளிறையாய் விளங்கி யாதி
முடிவில்லா விறையோன்மு னிறையாகி
  நான்மறையின் முதன்மெய் யோதும்
கடியில்லா நினதடியை யிறைஞ்செனது
  கரிசொழித்துக் காத்தி டாயே. (ங)

காத்தாரு முன்னையல்லான் மற்றெருவர்
  காப்பார்கொல் ககனத் தோர்சூர்
தீர்த்தாண்ட பெரியோய்கா வெனத்தினமு
  மனத்துள்கிச் சேவை செய்யுங்

---

ங. கடி = அச்சம்.

கோத்திரமு ளாரெவர்க்குங் குடிக்கடவு
ளானவருட் கோல ஞாலம்
மாத்திரந்தா னேவறியும் வானுலகு
மறியுமருள் வாழி மன்னே.

வாழியநீ வாழியவோர் தெய்வமகண்
முருடர்மகண் மஞ்ஞை வாழி
கோழியெனுங் கொடிவாழி கொற்றமுடை
யயில்வாழி குடிலை வாழி
ஊழிதொறு முன்னடியார் வாழியரும்
பொன்னடிவாழ் வுறவே வந்த
ஏழையே னுயுமாறிங் கெவ்வணமோ
வவ்வணம்வந் தியம்பி டாயே.

இயம்பருமுன் சேவடியை யல்லாது
மற்றெதையு மிறையென் றெண்ணேன்
நயம்படுமா றற்றெருழுங்கு மறிகிலேன்
திருவடியை நாடி நாடிப்
பயம்பெருகத் தீழ்ப்படையு முழுமகனென்
றும்பலனே பலிக்கக் காண்பேன்
தயங்கேலென் றணைத்தருளத்
திருவுளத்தி னிலையாத தன்மை யாதோ.

யாதுமுனை யன்றியுண்டோ நானுனக்குப்
புறம்போவென் னட்ட மாகிச்
சூதுடையோர் தொழில்போல யானறியா
தெனுளிருந்து சுழற்றி யாட்டுஞ்
சாதமதை யெனக்குநனி யறிவிக்க
வுளகருணை தான்வா ராமல்
தோதகந்தான் விளைத்ததெது சொல்லியரு
ளகண்டவருட் சுகிர்த வாழ்வே.

சுகிர்தமற்ற விறப்பினையும் பிறப்பினையுந்
துணிபொடுநா னினைக்கும் போதால்
அகிவாயி லகப்பட்ட வணிநுணலை
போலுள்ளே யழுங்கு கின்றேன்
மகிழ்வுகெழு நீயணைத்துக் கொள்ளாயே
லவ்வழுங்கன் மாறு மோவென்
விகிர்தமெலாஞ் சீத்தாள விளங்குமருட்
சிவஞான விமல விண்ணே.

விண்ணவராய்த் தானவரா யிராக்கதராய்ப்
 பல்கணமாய் வெறியார் பேயாய்
மண்ணினுறை மானுடராய் வல்விலங்கா
 யண்டசமாய் மணியார் பாம்பாய்த்
திண்ணியகல் லாமலையாய்ப் புன்மரமாய்ப்
 புழுவளியாய்ச் செடியாய் மற்றும்
எண்ணரிய பிறப்பெல்லாம் பிறந்ததற்குங்
 கணக்குண்டோ வேழை யேனே. (௯)

ஏழையிங்கே யினிப்பிறக்க ஞாயமில்லை
 காணெவைபு மினிமை யில்லாப்
பீழையெனத் தோன்றிநினை யடைதனிஜ
 மெனுங்குறிப்புப் பிறங்க லானும்
ஊழூறுதி போழ்ந்தாரு முருத்திரனு
 முனையடுத்த தானு மோவா
ஆழவருட் கடலருணை யான்வாழ்வி
 லென்னையும்வை யமிர்த விண்ணே. (௧௦)

---

இம்முதன் மண்டலத்தின் "திருவுயர்ந்த வாறெழுத்தான்" என்னும் ௫௭ ஆம் பிரபந்தத்தின் ௧௦ - ல் "காவருடங் கடகமாதம் வந்தவொரு புகரிரவிற் பழநிக்கோவில் வாவிஞ்ஞான் றருளவில்லை" என்பது காணப்படுதலால் "அமரர்கோ" என்னும் முதற்பிரபந்த முதல் "அமிர்தமதி" என்னும் ௫௨ ஆம் பிரபந்தமாகிய இப்பிரபந்தங் காறும் பாடியுள்ள பாட்டுக்களைத் தம்து மேன்மாடியி லிருந்துகொண்டு தேவனே! இவற்றை நீ கேட்டருளல் வேண்டும்; யான் நாளை யிவ்வூரைவிட்டுத் துறவற நிலையை அடையவுள்ளேனெனச் சிந்தித்துப் படித்து முடித்துத் தென்புறந் திரும்பியவுடன் எதிர்முகமாக இறைவன்றோன்றிக் கூறியருளிய செய்திகளுள் ஒரு சிறிதறியப்படு கின்றது. காலம் போந்தவாறு காவருடத்து ஆடிமாதத்தெய்திய ஒரு சுக்கிரவாரத்தின் மாலைப்போதாகும். இது, கி. பி. 1891 ஆம். போந்த சுக்கிரவாரத்துப் பகற்போதில் அங்கமுத்துப் பிள்ளையெனும் ஒரு நண்பர்செய்த தடையைத் தடுக்க ஆற்றாமல் நிற்கும் அடிகள், பழநியம்பதி போதா முருகவேள் கட்டளையோ? எனும் அந்நண்பர் கடாவுக்கு "ஆம்" என்பதை விடையாக இறுத்ததையும் பிற தருமங்களையுந் திருவுளத் தடைத்த அவ்விறைவன், எனது கட்டளையென்று பொய் கூறினையென்று தனது வலக்கரச் சுட்டுவிரலை நிமிர்த்தசைத்துப் பல்லைக்கடித்துக் கோபிப்பதைக் கண்ட ஆசிரியர், தம்முடைய கண்களை மூடிக்கொண்டு உண்ணடுங்கி "என்னப்பனே! என் கடவுளே! நிலம்பொலம் விழைந்து பொய்புகலவில்லை. ஆன்மலாபமெய்த வேண்டுமென்பதுபற்றியே அது தோன்றுவதாயிற்று. பொறுத்தருள்க" என மனத்தினுலேயே விடையிறுத்தனர். அது தெரிந்துகொண்ட பெருமான், "அந்த இலாபம் என்னுலாகாதா?" என்று திருவாய் மலர்ந்தருளி "இனி யான் வருகவென்று கூறுங்காறும் பழநிக்கு நீ வாலொண்ணாது; வருவதில்லையென்று கூறு" என்று கூறலும் அடியவ

ராகிய ஆசிரியர் "அப்படியே" என்று மனத்தினுலேயே விடையிறுத்தவுடன் இறைவன் அந்தர்த்தானமாய் மறைந்து விட்டனன். பின்னர் அடிகள் "சிறுமை நீக்குயர் செல்வம்" "துறவு நோக்கம்" "பிழைபொறுக்க முறையீடு" என்னும் ௫௩, ௫௪, ௫௫ஆம் பிரபந்தங்களைப் பாடுவாராயினர். இறைவனுக்கும் தமக்கும் நிகழ்ந்த இவ் வரலாற்றின் விஸ்தார விவரம் சரித்திரத்திலும், ஸ்ரீமத் - குமாரசுவாமியத்திலும் கண்ணுறலாம்.

---

# ௫௩. சிறுமைநீக்குயர்செல்வம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பேத மோர்தரு மிக்க ளித்துயர் பெற்றி யேதுமி லாதுதன்
தாதை யைக்கொலை பண்ணி யீன்றவ டன்னை யும்புணர் பாவிமா
பாத கந்தப நோக்கி யாளிறை பால னுன சுவாமியென்
றீது கண்டெதிர் வந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (௧)

கருட னன்ன முனிந்த மஞ்ஞையை யாயி ரங்கண னீடெழில்
உருவ மாமொரு மஞ்ஞை யைத்தொடர் நோற்ற மாதவ வுத்தியை
மருவ வேல்வகி ருருவி லேயெழு மஞ்ஞை யைப்பரி யாக்கொளும்
திருவ னென்முனம் வந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (௨)

சந்த தக்களி வாரி யாயொரு தண்ண ருட்பிர வாகமாய்
எந்தை யாயரு ணந்தி தேவ ரிருக்குங் காவலி னுக்கமாய்
அந்த மாதியின் மைந்த னுயவி ரடிகள் சேவடி சேரவோர்
சிந்தை நல்கிட வந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (௩)

வில்லை யாமொளி யாயி னைந்துவி ளங்கு மின்கணொ ராறுபேர்
நல்ல கைக்கறு பிள்ளை யாயவர் நட்பி னூட்டமு துண்டெலாம்
வல்ல நாயக னுகி யுள்ளவன் வலிய வந்தினி யென்சொலிற்
செல்ல லுன்கட னென்ற தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (௪)

ஆறு நங்கையர் சூட்டு மாவல ரார மாரெழின் மொய்ம்பினுன்
ஈறில் கந்த கிரிப்பொன் மாமணி யாச னத்துறை யெம்பிரான்
நீறு கொண்டபொன் மேனி யன்றின நின்ம லன்றனி யேற்கருட்
சேறு பேணுணர் வீந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (௫)

---

௫. அருட்சேறு=அருளினிமை.

வானின் மாதொரு பாங்க ருந்திரு மானின் மாதொரு பாங்கரும்
கான ருமலர் சூடி வைகம காவ னப்பொடு நடுவமர்
ஞான நாயக னுன சண்முக னுயி னேனையு மாள்வதாத்
தேனின் மேன்மொழி தந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (சு)

ஆலி னீழலி னுறு பேர்தொழ வாசி றென்முக மாயிருந்
தோல மாமறை யுண்மை யீதென வோதி யாண்டவர் சேயெனும்
கோல வேலவன் ஞால வாதனை கொண்டு நான்றுலை யாவணம்
சீல மாங்குண மீந்த தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (எ)

என்றும் வாலிய மாறி டாவடி வேசி றந்துள வெம்பிரான்
குன்றின் மேலடி யார்கள் கண்டருள் கூர வோரருள் கூர்ந்துகை
ஒன்றி லேதடி கொண்டு நின்றுள வுண்மை கண்டிட வீணெறிச்
சென்றி டாவகை செய்த தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (அ)

கோடெ ழூம்புல் வராக வன்சிறு குருளை கட்கொரு தாயென
ஓடி யன்பொ டணைத்து மாமுலை யூட்டி மந்திரி மார்களாக்
கூட லம்பதி யீந்த கோன்றரு குமர னெம்பெரு மான்றனைத்
தேடி நிற்கவி ழைத்த தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (கூ)

ஓது செந்தமி ழானி ரம்பனு பூதி சொன்னவ னேடுநல்
மோத மாமொழி பேசி யேதமு டங்கு கொன்றருள் சேயவன்
வேதன் விண்டுவ லாரி செம்பதி வேட்பு றுதவன் வாழ்வவாஞ்
சேத னந்தழை வுற்ற தேயெங்கள் சிறுமை நீக்குயர் செல்வமே. (கο)

---

ஆகப் பிரபந்தம் ஐம்பத்துமூன்றினும் போந்த திருப்பாடல்—எ௦உ
தெய்வவணக்கச் செய்யுள் ௩
ஆகத் திருப்பாடல் எ௦௫

---

# ருச. துறவுநோக்கம்.

---

வேறு எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐயனே யரசே யறைமறைப் பொருளே
யாதியாம் பரமனுள் ளுணர்ந்து
செய்யதா மரைக்கண் மாலவ தாரச்
செழுங்கிடி யுடையவல் லுடம்பு

நையவே சவட்டி யெயிற்றினைப் பறித்தந்
நறும்பர மனணியக் கொடுத்த
தெய்வமே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே.

பல்புவி படைக்கப் படைப்பவை யளிக்கப்
பார்முத லனைத்தையுந் துடைக்க
மல்குமுத் திறத்தார் தொழின்முத லாசாய்
வயங்கொரு நீயென தகத்து
வல்லிரு ளிரித்து நல்லொளி கொடுக்க
வந்ததே மாதவ மெனுமென்
செல்வமே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே.

போகிமால் விரிஞ்ச னேனைவிண் ணவரும்
புகழ்சா ணும்புய வடிகேள்
ஏகநா யகனு யிருந்துள வொருநீ
யெளியனை வலியவந் திழுத்த
யோகமே யோகமிஃ தேதெனு வுரைப்பே
னுள்ளநா ளளவெனைக் கொண்டாள்
சிகெழு வுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே.

சாவது பிறப்ப தெனும்புவி யாக்கஞ்
சள்ளையென் றுன்னடி நாடி
ஆவது புரியுந் தொழும்பர்க ளகத்தே
யனுதினந் திருநட நடிக்கும்
பாவக மெளியே னறிந்திட வெனுளே
பதிந்துய ரருணெறி சேர்த்த
தேவனே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே.

ஆலமார் மிடற்ற னுலவாய் தனிலே
யாடலோ ரறுபது நான்குஞ்

---

௪. பாவகம்=பரம்பிய உள்ளம்.

௫. அறுபதும், நான்கும் கூச ஆம். இவ்வறுபத்து நான்கு திருவிளையாடு
குமாரபிரானுடைய பரத்துவ விரோதமாகவும், நியாயம் பொருந்ாதவாறுகவும் ...
விடயங்கள் காண்டொறுங் காண்டொறுங் கடியப்படுவனவாகலின் உண்மையன
கோடற்பாலனவெனல் தகு துணிபாம். ஸ்ரீசுப்பிரமணிய வியாசம் முதலியன கான்

சாலவே யிளைத்தான் றிருவடித் தாசர்
தம்பொருட் டாகவக் கோல
மூலனாய் விபுவா யகண்டசின் மயமாய்
முழுமுதற் றெய்வமா யுளவோர்
சீலமே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ ணவலித் தேனே. (ரு)

கவ்வைசேர் புளுகர் கடும்பகை யாளர்
கரவடர் காமவி டாயர்
நொவ்வுசேர் தூர்த்தர் பொறாமைய ரூத்தை
நுகர்பவர் வெறிகளை யுண்போர்
உவ்விலா ருன்றாண் மறந்துள ருறவை
யொழித்தெழு பவப்படர் நீக்குந்
தெவ்வனே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ ணவலித் தேனே. (சு)

கூந்தனீள் கோல மடந்தைபொன் பூமி
குரம்பையென் றுளநசைக் கடலை
நீந்திடா ததிலே வீழ்ந்துசா மாந்தர்
நிறைந்தவிப் பூமியை யிகந்து
சாந்தமே யோங்கு தொழும்பருக் கருட்சீர்
தழைத்திட வருள்சுரந் துதவும்
சேந்தனே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ ணவலித் தேனே. (எ)

ஆசையோர் மூன்று மவியவ ருவோ
ராசைவந் தேயெனை விழுங்க
ஆசைகொண் டுளநீ ரினிதறி வாய்நீ
யாக்குவ தென்றென வறியா
தூசல்கொள் கலக்கஞ் சாம்வரை யடியா
ருளத்துழி நீக்கமின் றொளிரும்
தேசுளோ யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ ணவலித் தேனே. (அ)

---

சு. கவ்வை = பழிச்சொல்
உவ்வு = தவம்; பி — நிகண்டு நோக்குக.

சந்ததி பாரி விமானமண் வீடு
தனுவென நவில்புறப் பற்றும்
பந்தமே மருவு மனுதிதத் துவனாட்
பாமகப் பற்றும அறுத
தொந்தரை யிருளு மிலாததி வேக
சுகத்தினை யெனக்கினி தருளும்
சிந்தையோ யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. (கூ)

அரியசெந் தமிழை விரிசடைப் பொதிய
வாரியற் கருளிவெள் ளேனம்
தெரிவரு மலைப்பேர் முனிநவி றமிழ்ப்பாச்
செவிமடுத் துளமகிழ்ந் தவற்குத்
தரிசன மான சரவண பவனே
தாசனைத் தடுத்தாட் கொள்ளும்
திருமலி யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. (கo)

# ருரு. பிழைபொறுக்கமுறையீடு.

மூத்தரின் முதல்வா முதுமொழித் தலைவா
முட்டிலா வனப்பது பொதுளும்
சித்திர வடிவே திகழுருங் குழகா
செங்கையி னன்கயி லுடையாய்
மத்தமு மெழிலா ரறுகும்வில் லுவமு
மதலையு மணிபவர் மழவா
பித்தனேன் குறைதீர்த் தருள்சிவ னேயென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (க)

கிணமில் பொருளே கிளரொளிப் பிழம்பே
கிருபைசேர் கற்பகக் காவே
மாணவர் சிரமேற் கரங்களைக் குவித்து
வணங்கிட வருசிவக் கொழுந்தே
ஆணவங் குடிகொண் டுருடனை மறந்திங்
கனுதின மனுசிதஞ் செறியப்
பேணிய கொடியே னின்சரண் புகுந்தேன்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (உ)

பத்தருக் கேமம் பொழியருட் குயிலே
பரமமெய்ஞ் ஞானிக ளுளத்தே
நித்தலும் ருசிக்குஞ் சருக்கரைக் குவடே
நேயமா லயன்முத லோர்தாம்
சித்தசன் னதமே கொளப்பொறி யிசைத்த
செம்மலே யெங்குல வாழ்வே
பெத்தனே னுன்சே யானதா லினியென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (௩)

கன்னலே யிழுதே கற்கண்டே தேனே
கனிந்தமுக் கனிரச மேயின்
மன்னய விளைவே யமுதமே யொழியா
மதுரமே சீனிச்சக் கரையே
என்னுளத் தியங்கு மிறையெனுங் குருவே
யெந்தையே திருத்துணை கிடைத்த
பின்னுநிற் கேற்காப் பிசிதனை நவின்றேன்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (௪)

பங்கய னரன்மால் பண்ணவ ரிமவான்
பந்தனை யேனைமூர்த் திகளும்
கங்குலும் பகலும் விழைதவைம் பூத
கருமமு மூனையன்றி யுண்டோ
எங்களுக் கயலோர் புரிபுகர் பொறுப்ப
தெங்களு ளுண்டது பொருவப்
பிங்கல வயிலோய் பரிக்கைபண் ணுதேன்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (௫)

மாலயற் கரிய வரையெனத் திமிர்ந்த
மதிக்கிடைத் தாணுவுக் காதி
நூலின்முன் மூல நொடித்தகத் தியற்கு
நுவன்றநற் பரமபுங் கவனே
வேலினுக் கிறையே குறத்திதன் றுரையே
வினயவிண் ணவர்கள்பண் ணவனே
பீலியி லிவருஞ் சிவபெரு மானே
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (௬)

---

௫. பிங்கலம்=பொன்.

வீசிடு துளக்க ஞெகிழியந் தாளா
விண்குடி யேற்றிய வீரா
தாசர்வெம் பவத்துட் டினைத்திடா வண்ணந்
தடைபுரிந் தாளரு ளாளா
ஆசைகொள் பாழ்த்த நினைப்பினுள் ளயர்வே
னதிகமு மேழையே முனிந்து
பேசிய நீதா னெனைக்கைவி டாதென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (எ)

அடியவர்க் கெளியா னென்றுனை முதுநூ
லனைத்துநன் கெடுத்தெடுத் ததிர்த்த
படியெனை யொருதொண் டாயெண்ணி யிதுநாள்
பணித்ததி னில்லெனச் சொனதால்
கொடியவ னெனினுந் தவக்கமில் லாமற்
கூடுவ னுன்னருட் பவுள்சைப்
பிடிதவ றுதோர் நிலைகொள்ள வேயென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (அ)

துள்ளுமா மயின்மீ தேறுவிண் ணவனே
தொழுமடி யார்கள்பி ரானே
கள்ளையார் கழுநீர்த் தொடையிறை நாயேன்
கருத்தைவிட் டகலாக் கருத்தே
பிள்ளைசெய் யடக்கோ தனைத்தையும் பொறுமைப்
பிதாசமித் தணைப்பது கடப்பப்
பிள்ளையென் றுனக்கே யடைக்கல மாமென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (௯)

நேசமுற் றோர்பா னிறையுநல் லறிவே
நினைவினி லெழுந்தொளிர் சுடரே
மாசினல் லருணை சலத்தவ னிறையே
மலரடி பணிகும ரகுரு
தாசனைக் காப்போ னெனனுந் தேவே
சரவண பவசிவ குகனே
பேசிய பேச்சா ஞனிங னிழைத்த
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. (௧௦)

---

எ. ஞெகிழி=சிலம்பு ; பி – நிகண்டு காண்க.

அ. தவக்கம்=குறைவு. "தவ" என்பதன் விகாரமாக இது கொளற் குரித்து; "தவவென்ப மிகுதி குன்றல்" என்பது வகரவேதுகை.

# ௫௬. உள்ளக்களி.

வேறு எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விளங்காய், கருவிளங்காய், கருவிளங்காய், கருவிளங்காய்,
கருவிளங்காய், கருவிளங்காய், கருவிளங்கனி.

கடல்சுலவு நிலயமிசை மகளிரகல் குறியிதொரு
கடவைவழி வருவதென வருமனிதரைக்
கடவுள்சுத ரெனுமிழிவு புரையவொரு குறைவிழிவு
கழறவழி யெவளவுமில் கடவுண்மகனாய்
மிடன்மகிமை யொளிவடிவ மிளிரவெளி வருமுருகை
விகிர்தமற வெனதுமன நினைநிலைமையால்
நடலைகெட வவலநசை யுழலைகெட விதலைகெட
நவிலரிய பரமசுக மதையடைவனே. (௧)

திரிநகர மெரியவெதிர் பகவவுண னியமனெனிர்
தினகரனை விதுமதன னயனவன்மகன்
கரியசுரன் வலியசிறு விதியிளவ லிவர்களுயர்
கறுவமற முறுகிவிற லணிகவிசமார்
முருகிதழி கிளைவைவிள வணிபரம சிவனுடைய
முருகனென வருமறைகண் முரசமறையும்
ஒருவனென திதயமல ருளனினியொர் விளரியிலை
யுறுவதவ னரியவிணை யடியினிழலே. (௨)

வருகைசெல வெனவறையு மிருதிறமு மிறுதியுற
வளர்மவுன வொருமொழியை யருளுமிறையோன்
பரிபுரமு மிறைமணியு மளமனென வொலிதரவொர்
பசியசிகி மிசையுலவு பவுள்சுடையகோன்

௧. இதலை=கொப்பூழ். இவ்வுறுப்பு, ஒருருவிலிருந்து தான் தோன்றியதென்பது காட்ட அடையாளமா யுள்ளது. இஃதில்லாமையே வருமுடம்பை மறுப்பதென்பதை யறிவுறுத்துமாறே "இதலைகெட" என்றாரென்க.

"நாபியுடை யெவ்வுயிர்க்கு நாயகனு மாதியில்லா
நாபியுள்ள வெம்மிறையை நண்ணுவனே பொன்மயிலே"

என்று இந்நூற் பொன்மயிற்கண்ணியில் அறிவுறுக்கப்பட்டதும் இங்குக் கருதிக் கோடற்பாற்றே.

௨. பகவவுணன்=கொக்கு வடிவான அசுரன். பகம்=கொக்கு; நிகண்டுகள் காண்க.

கவிசம்=வன்னி.

விளரி=வேட்கைப் பெருக்கம்.

கருமுகையு நெளிபணமு மிலையுமலை மகளுடைய
காமுருக னனுதினமென் மனதிலுளனால்
மருவலர்கள் பகைமையிலை யுறுவலுறு பிணிகளிலை
வறுமையிலை யுறுகணிலை மடமையிலையே.

பைந்துளவ மவுலியும யனுமிமைய வருநறிய
பனிமலர்கள் கொடுபுசனை புரியவளர்தே
உய்ந்திடவுள் கிருடிகண லுபநிடத மவுனமுள
ருயர்மகிமை யுடையவர்க ணினைவிலுளகோ
ஐந்துமுக னுருவினிட மிளிரமலை முருகனெனு
மருளிறையென் மனமதனி லுளனினியரோ
நைந்தொழியு மறமுழுது முதியமல வலியழியு
நடுவுடைய நமனுருமும் வருவதிலையே. (ச)

மூண்டிதமில் சிறுசிகையு மிடையிலணி கவுசனையு
முழுமதிய மெனமிளிரு முகமுமொருகைத்
தண்டுமா முறுபுரியு மிளமையுடை யுருவுமெழி
றாவிலக விருடிசுரா ரடிகளெவரும்
கண்டுநல னடையவென வமிர்தமழை பொழிபெரிய
கருவிகவி பழநிமலை யுறைபெரியவன்
றொண்டனென வுளவெனது மனதிலுள னிரவுபக
றினையுமவ னணைவுமவ னினைவுமவனே. (ரு)

பன்றிமலை தணிகைமலை யருணமலை யரவமலை
பவணைமலை யடிகண்மலை துடவைமலைவா
ழென்றுமலை மயிலமலை மலயமலை கயிலைமலை
யுறைவிமல குமரகுரு புவனமுழுதும்
நின்றநிலை யறியவெளி னுனதுருவை யறிதியென
நிகமமெனு முதுமறைகண் முறையிடுதலால்
என்றுமவ னருள்வலிகொ டெனதுருவை யறிதல்பெரி
திலையெனுமொ ருயர்துணிவி லடிமையுளனே. (சு)

பொருவுமிலி திரிபுமிலி மருளுமிலி தெருளுமிலி
புகழுமிலி வசையுமிலி நசையுமிலியோ
ருருவுமிலி யருவுமிலி யுருவருவு மிலிநுவலு
முரையுமிலி கரையுமிலி வெறுமையுமிலி

௩. கருமுகை=சாதிப்பூ; பி - நிகண்டு காண்க.
௬. பவணை=கழுகு.
துடவைமலை=சோலைமலை.

குருவுமிலி குடியுமிலி குலமுமிலி பெயருமிலி
குணமுமிலி சினமுமிலி துணையுமிலியென்
றருமறைக ணவில்பெரிய பொருள்குமர குருவெனவு
மறியுமென திறையுணர்வு நிறைவையுறுமே. (௭)

கருதரிய வொருநிலையி லிரவுபக லிலைவலிய
களுடமொடு சுகுர்தமிலை மிசிரமிலைநீள்
பெருமையொடு குறுமையிலை யகநடுவு புறமுமிலை
பிரிவுமிலை விழைவுமிலை மறதிநினைவாம்
இருவகையும் வருதலிலை யெனமறைகள் புகலுமதை
யெனைமருவு பரமகுரு வெனுமுருகவேள்
கிருபைகொடு சமநிலையை யணவியெனை யணவியுள
கிருதியற யுகளமற வடைவலினியே. (௮)

உயிரினுயி ரெனமருவு குமரகுரு பரனெனுடை
யுளமதனி லுளனினியவ் வரியவிறைவற்
கயர்விலளி திருவுதக மமைதிமல யசமலர்க
ளணுவனில நறையறிவு சுடருணருயிர்
நயமுடைய வவியெனவு மமையமற வனுதினமு
நகைமுகமொ டயருமுறை தனிலெனதுபாழ்
மயலொழிய வியல்பொழிய வுதயமொடு விளிவொழிய
மலரகித வமுதநிலை தனையுறுவனே. (௯)

ஐந்துதிற நவிலவுள வுலகினடை தாவுரிய
வனவரத வுயிர்களுயி ரெனவுமறிவி
லைந்தினர செனவுநிறை யமலவருண் மயவனக
வவிசனவி சமதுவித ரகிதவுசித
விந்தைமிக வுளவருண கிரிதமிழி னிரதநுகர்
மிகையில்செவி யினனெனுமெ னிறையருளினன்
விந்துமன வொழிவடைவ னெனையடைவ னருளடைவன்
மிளிரமல பரமகதி யினையடைவனே. (௧0)

---

௮. அணவல்=தழுவல் என்பது நகரவேதுகை.
கிருதி=பிரகிருதி.
௯. அளி=அன்பு. திருவுதகம்=திருமஞ்சனநீர்.
அமைதி=சாந்தம். மலயசம்=சந்தனம்.
அணுவனிலம்=பிராணவாயு. நறை=நறும்புகை.
அறிவு=ஞானம். சுடர்=தீபம்.
அவி=நைவேத்தியம். அமையமற=இன்னகாலமென் றில்லாமல்.

# ௩௭. திருவுயர்ந்தவாறெழுத்தான்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவுயர்ந்த வாறெழுத்தான் மேலும் வேறோர்
தெய்வமுள தெனுமார்க்கி கனையு நாளும்
பொருவிகந்த குருபரத்தை நீத்து மாந்தர்ப்
புகழதமப் புலவரையு முறைமை மாறிப்
பரவுமடக் குருக்களையும் பசுபா சங்கள்
பகர்ந்துதெய்வ மிலையென்பார் களையு நான்றான்
இருமையிலு மதித்திடே னவனை வேட்போ
ரெவரெனினுங் கரங்கூப்பி யிறைஞ்சு வேனே.

ஆறெழுத்தானுக்கு மேலாகத் தெய்வங்கூறு மார்க்கத்தாரையும், மனிதரைப் புகழ்ந்து பாடும் அதமப்புலவரையும், மாறுப்படக்கூறு குருக்களையும், பசுபாசங்களை யொப்புக்கொண்டு பதியெனுங் கடவுளை யில்லையென்பாரையும் "யான்மதித்திடேன்" என அடிகள் கூறினமையின் அவர் மார்க்க நிலை இனிதறியக் கிடக்கின்றதே.

தந்நலத்துக் கெனவணையுந் தந்தை தாயுந்
தம்பெருமை குயில்படிற்றுக் குருக்கண் மாரும்
பொன்வரவுக் கெனவடுத்த வுறவு மீண்டுப்
பொருத்தமுள்ள புரிவுடைய ரல்லர் நீங்கா
அன்பில்விரிந் தருள்பவனைச் சுவர்க்க ரேத்து
மனைத்தினுக்கு மாதிதந்தை தாயாய் நின்றோ
ரின்சொலரு ளறுமுகனைப் பரசு வாரை
யிறைசனகன் றாயுறவென் றிறைஞ்சு வேனே.

மாறாத விளமையனைக் குறமான் முன்னே
வளர்வேங்கை யானவனை வடிவே லானை
வீறேறு சிவகணங்கள் சூழப் போந்து
விதிர்ப்புவிளைத் தடல்வாகை சூடி னானை
நீறேறு மேனிமிளிர் நுதற்க ணானை
நீபநறு மிருகமதங் கமழ்மெய் யானை
ஏறேறு மிறைகுருவை யேத்து வார்க
ளெவரெனினுங் கரங்கூப்பி யிறைஞ்சு வேனே.

---

௩. விதிர்ப்பு = நடுக்கம்.

ஐயனெனும் பரமசிவ னுவகை பூத்தன்
றளித்தபடை யரசாகு நெடுவே ளுங்கு
கையரசைக் கருள்கிழும் பெரியோன் றன்னைக்
கயிலைநடை யுடையானைக் கருணை யானை
நைவுறுதல் கண்டெனது கண்ணீர் மாற்று
நயனமொரு மூன்நான்கு முடைய தேவை
எய்தரிய வீடளிக்குங் குகனை வேட்போ
ரெவரெனினுங் கரங்கூப்பி யிறைஞ்சு வேனே. (௪)

சாமிமலை தனில்வதிந்த பன்னி ரண்டு
சகச்சிரவே தியர்களையுஞ் செந்தூர் மேய
நேமவிரண் டாயிரமெய் யரையு மாளோர்
நித்தியனைக் கபிலர்முதல் யோகத் தார்க்குச்
சேமமுடைத் திரிமூர்த்தி களையுந் தன்பாற்
றெரியநனி காட்டியவோர் சேயைப் புற்கால்
மாமுனிவன் பணிகுகனைப் பணிவோ ரெல்லா
மகியின்மிசை யான்வணங்கு மாண்பு ளாரே. (ரு)

சதுர்முகர்சக் கிரபாணி யனந்தர் நந்தி
தத்தரெழின் மாவியெனு மாறு பேர்க்கும்
முதமுடைய பிரமேந்த்ர னெனுஞா னிக்கு
மூதுலகா ணித்தியநா தனுக்கு மேசில்
இதமுடைய சொன்னகுத்த னெனுநாய் கற்கு
மேதமிலா வேளாள வசுமந் தற்கும்
கதியருளிச் செய்தகுகற் றொழுவா ரெல்லாங்
காசினியி னுன்வணங்குங் கடவு ளாரே. (௬)

பழநிமலைப் பாழிசெய்த சேரர் கோற்கும்
பழுதறுசித் திரசேன வரைய னுக்கும்
கிழமையுடைக் கோசிகனும் பூச ரற்குங்
கிருபைகெழு குகனென்னும் வேடர் கோற்கும்
எழின்மல்கு சுகப்பிரம முனிக்கு மேனு
ளிணையில்கதி யளித்தபரப் பிரம சேயின்
கழல்களையுட் கருதிடுவா ரெவரா னாலுங்
காசினியி லவரெனக்குக் கடவு ளாரே. (௭)

௬. பிரமேந்த்ரன் — வடநூன்முடிபு.

வாசுகியி னுடல்வருத்தந் தீர்த்த தேவை
மாபாவ மைந்துஞ்செய் யொருவற் குற்ற
மாசுதபுத் தனுக்கிரகஞ் செய்செவ் வேளை
மாதொருத்திக் கவள்கணவ னறுத்த கையை
மோசமின்றி வளரவருள் புரிந்த சேயை
முரட்களிறு கொன்றொருபுத் திரனைக் காத்த
தேசயிலன் றனைவிழைவா ரெவரா னாலுந்
திருமலிந்த வவரெனக்குக் கடவு ளாரே. (௮)

பொற்கனக சுந்தரியென் பாளுக் குற்ற
புரவிமுக மாற்றியெழின் முகந்தந் தானைக்
கற்பனவெல் லாங்கற்றுப் பொய்யென் றோதிக்
கர்த்தபமாப் பிறந்திறந்த பார்ப்பா னுக்கும்
நற்கமலத் தய னுலகங் கொடுத்த கோனை
நலனின்றிப் பாவத்தின் மூத்தி றந்த
அற்பமிலேச் சற்குமடி யளித்தோ னைப்பே
ணடியவர்க ளாரெனினு மவர்மிக் காரே. (௯)

செந்தமிழைச் செவிமடுத்து மகிழுந் தேவைத்
திறவிடும்ப னுயிர்முருக்கி யெழுப்புந் தேவைப்
புந்திநிறை வுடையருண கிரிசூழ் தேவைப்
புகரிகந்த கரவருடங் கடக மாதம்
வந்தவொரு புகரிரவிற் பழநிக் கோவில்
வரவிஞ்ஞான் றருளவில்லை யருள்வே மந்நாள்
பந்தமற வருதியெனப் பணித்துப் போந்த
பண்ணவனைப் படர்பவரெம் பரமர் தாமே. (௧௦)

## ௫௮. அடியவர்க்கடிமைநாம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

மறைமலி காழி யோனு வுக்கரையர் சேம
மதிகொண்ட நாவ லூரர்
பொறைமலி சண்டி பூச னமிநந்தி முருகர்
புகழுடைத் தண்டியடிகள்

*இவ்விருத்த அடி எண்சீர்க்கழிநெடிலடியாகாதோ? என்பார்க்கு ௨-ல் "விறன் மிண்டனார்" ௩-ல் "நெடுமாறனார்" என வருவனபோற் பல தொடர்கள் வருகின்றன வாகலின் அத்திறத்ததாகா தென்பது விடையாம்.

நிறைமதி நீல நக்கர் சோமாசி கலயர்
　　நேயவப் பூதியடிகள்
அறிவொடு நேடி நின்ற வருளார் குகேச
　　னடியவர்க் கடிமைநாமே.　　　(௧)

புகழ்த்துணை மானி செங்கட் சோழருயர் வாய
　　பொறையிடங் கழியர்கம்பர்
புகழ்க்கழற் சிங்கர் தூய நேசர்மெய்ப் பொருளர்
　　புகழ்ச்சோழன் மலையனெண்மை
திகழ்சிறப் புலிகு றும்பர் கணநாதர் திவ்விய
　　திருமூலர் விறன்மிண்டனார்
அகமதி னேடி நின்ற வருளார் குகேச
　　னடியவர்க் கடிமைநாமே.　　　(உ)

நரசிங்க முனையர் மூர்த்தி யேனாதி கலியர்
　　நலனின்ற நெடுமாறனார்
வரம்விஞ்சு சடையர் கூற்ற ரமர்நீதி யன்பின்
　　மதர்சேரை யடிகள்கோனார்
பரம்விஞ்சு சத்தி மூர்க்க ராயை ருருத்ர
　　பசுபதிப் பெயரர்பரிவால்
அரனென்று நேடி நின்ற வருளார் குகேச
　　னடியவர்க் கடிமைநாமே.　　　(௩)

இயற்பகை நாளைப் போவார் வாயில்லார் மாற
　　ரிசைஞானி கண்ணப்பனார்
தயைப்புகழ் திருக்கு றிப்பர் கலிக்காமர் காரி
　　தாயரருள் கொள்கோட்புலி
கயற்கணம் பேயர் நாகை யதிபத்தர் மானக்
　　கஞ்சாற ரெறிபத்தனார்
அயிர்ப்பற நேடிநின்ற வருளார் குகேச
　　னடியவர்க் கடிமைநாமே.　　　(௪)

செருத்துணை சிறுத்தொண் டண்ணல் கிழநீக்கு நல்ல
　　திருநீல கண்டாருளே
பெருத்திட விளங்கு தண்டி லேவல்ல பாணர்
　　பிழையறு குலச்சிறைநெடுங்

---

உ. மலையன் = சேரமானயனார்.

தருக்குறு கணம்பு லார்மா முனையடுவா ரேசில்
சாக்கிய ருயர்ந்தவன்பால்
அரிப்பற நேடிநின்ற வருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. (௫)

பரமனைப் பாடு வாரெந் நாளும் புகழ்ந்து
பணிபவர் மனத்தையவனில்
மருவவைப் பவர்க ளாரூ ருதயஞ்செய் யன்பர்
வழுதற்ற புலவரறவோர்
முருகுடை மேனி தீண்டு பவர்சாரு மடிகண்
முழுநீறு பூசுமுனிவர்
அரனொடு நேடி நின்ற வருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. (௬)

சேந்தனார் கண்ட ராதித் தாஞ்சேதி ராயர்
திருவாலி யமுதரமுதம்
மாந்துபுரு டோத்த மப்பே ராளர்கரு வூரர்
வாய்மைவே ணாடரார்வந்
தீந்தகா டவர்கள் கோனற் றிருவாத வூரர்
திருமாளி கைத்தேவரோன்
றுந்தனையு நேடி நின்ற வருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. (௭)

பிடித்திடு தண்டு குந்தஞ் சுரிகைமுச் சூலம்
பிரபாவ மோடியங்க
மடக்கொடி வள்ளி பங்கன் மணநீ றணிந்து
மயிலேறு மெங்கள்பரமன்
நடித்திடி னகத்தி னுள்ளே நடுவான சண்ட
னடமாட வருவதேதெதன்
றடிக்கடி நேடி நின்ற வருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. (௮)

முனைதருஞ் சூர னோடென் றமர்செய்து கொண்ட
முருகவே ளெங்கள்பரமன்
பனியுறு கடம்பு நீல முடிமீ தணிந்து
பலகாலு நெஞ்சினடுவே

௫. அரிப்பு=குற்றம் ; சூ-நிகண்டு காண்க.

௬. வழுது=பொய் ; நிகண்டுகள் காண்க.

௮. வள்ளிபங்கன்=வள்ளிவிருப்பன். பங்கம் (ஸஂஜ்ஞை) விருப்பம் ; நிகண்டு-விச்வமேதினி காண்க.

கனைகழல் சிலம்ப நாட கஞ்செய்யின் வந்து
கவிபாத கங்களிலையென்
றனுதின நேடி நின்ற வருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. (௯)

கொடுநிழ லவிய வந்த குறையோவ வின்பு
குறையாத பேறுமுறவே
வடுவறு கவிகள் சொன்ன வருணகிரி யென்று
மறவாது கொண்டசரணம்
குடிகொளவு ளஞ்சி யஞ்சி யிவைபாடு கின்ற
குமாரகுரு தாசனனும்
அடியடைய நேடி நிற்கு மருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. (௧௦)

---

## ௫௬. ஆரணத்திறுதி.

---

ஆசிரியத்தாழிசை.

ஆரணத் திறுதிதா னகிலமுஞ் சீவனும்
தாரணப் பரமதும் பொய்யெனச் சாற்றிடுங்
காரணம் போதமங் கலின்மறைந் திடுதலால். (௧)

அகிலமோ பாசமென் றுமதிச் சீவனோ
பகையுயிர்த் தத்துவம் பரமுருத் தேவராம்
யுகளமா வெண்ணிடி னொடுக்கமெய் தாதரோ. (௨)

நிசசிவந் தானென நினைக்கினும் விகற்பமாம்
அசிபதத் தைக்கிய மிரண்டுமின் றொன்றுமின்
றசிதநற் றேனுணீ யொப்பநின் றுணர்தியால். (௩)

நினைவிருந் தாலுறு துயர்நிரு விகற்பமால்
நினைவிருந் தாலுறு துயர்நிறை வுடைச்சுகம்
நினைவிருந் தான்மலப் பிராணனு நிகழுமே. (௪)

நினைவிலா நிலையிலே நிஜவிழி விளங்கிடும்
நினைவிலா நிலையிலே யுயிர்பரம் விளங்கிடும்
நினைவிலா நிலையிலே நினைவிலா நினைவரோ. (௫)

நினைவிறந் தாலமு னிருவிகற் பஞ்சகம்
நினைவிறந் தாலமு னிருவிகற் பம்பசு
நினைவிறந் தாலமு னிருவிகற் பம்பரம். (௬)

இம்முடி புணர்ந்திடா திடும்வழுக் கிழிவழுக்
கிம்மகி சுழுத்தியி லிருந்துமுண் மறைதல்போல்
அம்மதி நிலைக்கணு மெனத்தெளி யகத்துளே. (௭)

ஆதலா லகிலமோ டுயிர்பரம் பொய்யெனு
ஓதலும் பதிபசு பாசமங் குண்டெனும்
போதசித் தாந்தநூல் புகறலு மிணங்குமே. (௮)

அழுக்ககன் றோர்சிவ மடைந்திடா வுயிர்களை
விழுப்பொரு ளெனச்சொலல் விகற்பிலும் விகற்பென
வழுத்திட வயிர்ப்பிலை மதித்துநில் லுள்ளமே. (௯)

கனவிகண் ணிழல்கொளல் கடுப்பமுக் கட்டையும்
நினைவையும் விழுங்கியே நிருவிகற் பப்பலன்
தனையிடற் கருணையன் சாமிதா ணம்பிடே. (௧0)

---

## ௬௦. சிவலோகசுந்தரமாலை.

---

தரவுகொச்சகக்கலிப்பா.

பரிதிமதி சேயரிபொன் பளிங்குசனி பாம்புகளும்
விரிதலைநாள் வேளைகளு மிகையடுநின் னடியவர்கட்
குரியநலம் புரியுமன்றி யொருபோழ்தும் படர்புரியா
தெரியலருந் தொண்டிழைப்பார் சிவலோக சுந்தரனே. (௧)

பத்தருக்கும் யோகிகட்கும் பரமசிவ ஞானிகட்கும்
மித்தையிலா மெய்யருளாம் வெறுக்கையளித் தாளிறைநீ
பித்தனெனை யாளாமே பீடையில்வைப் பாயோவென்
சித்தவினை வைக்கவருஞ் சிவலோக சுந்தரனே. (௨)

---

௧0. கண்ணிழல்=கண்ணொளி.

௧. தெரியலர்=அறிவிலார்.

சுந்தரன்=அழகன்=முருகன். முருகு=அழகு.

எத்தனையோ தெய்வவகை யெத்தனையோ செய்கருமம்
எத்தனையோ தொடர்மார்க்க மிப்புவியி லேயுளதீ
அத்தனையும் வேண்டாமே யருணெறிகா முறவிழைத்த
சித்திரத்தை நான்மறவேன் சிவலோக சுந்தரனே. (௩)

கல்லிரும்பு களில்வலிய கடுவயிர மாமனதை
நல்லருளை நாடவெனு நசுக்கிவிட்ட கருணையினால்
எல்லிரவு மிருவிழியு நீரரும்ப வுளபேயேன்
செல்லுமள வுனைமறவேன் சிவலோக சுந்தரனே. (௪)

தீயமனம் வாக்குடம்பிற் செய்தமறத் தான்மலமுண்
நாயினுங்கே டாயவெனை நண்ணிவந்த பெருங்கருணைத்
தாயமதை நான்மறக்கத் தகுங்கொல்லோ தாசர்பவம்
தீயவரு ளெரிமூட்டுஞ் சிவலோக சுந்தரனே. (௫)

பெண்டுபிள்ளை யாசையெனும் பேய்பிடித்திங் காட்டாது
துண்டுசெய வென்றெனுளே தோன்றியகோ ராத்திரமும்
தொண்டரறை யுன்பெருமை சொல்லவைத்த வுனைமறவேன்
திண்டறுகண் ணாளாநற் சிவலோக சுந்தரனே. (௬)

மின்னனைய விங்ஙேமி வேட்கையெனும் பொய்வாழ்வை
உன்னியுனை யுன்னுதிங் கூழிழந்த நான்வாழ்வான்
உன்னியிது நாளிழுக்க வுற்றதய வினைமறவேன்
தென்னிலங்கு தேசுடையாய் சிவலோக சுந்தரனே. (௭)

சக்குவிய நாசிசெவி தாலுவெனும் பாவிகளுக்
கெக்காலு முறியாய வென்னைவிடு வித்தாண்ட
பக்கமதை நான்விலகப் பார்ப்பேனோ கண்பாராய்
சிக்கமறு செல்வமலி சிவலோக சுந்தரனே. (௮)

எண்ணரிய வேசுடைநா யேனையொரு பொருட்படுத்தா
நண்ணிவரு மன்புருவெஞ் ஞான்றுநிலை யாகவுள்ள
புண்ணியனே யுனைமறக்கப் புந்தியினி யொருப்படுமோ
திண்ணியக ணங்கடொழுஞ் சிவலோக சுந்தரனே. (௯)

---

௬. தறுகண்ணாளா=(பாவநாசமென்னுஞ்) சங்கார கிருத்திய முடையானே. தறுகண்=கடுகக்கொல்லுதல். இப்பொருளிலே "தறுகட்பூட்கை" எனச் சிறுபாணாற் றுப்படையில் வருதலுமோர்க.

௮. வியம்=உடம்பு; பி—நிகண்டு காண்க.

பொருவிறந்த வறிஞருரைப் போதகமெத் துணையுமின்றி
மருளிருந்த விருதயமே மலியநின்ற நான்வாழ்வான்
பெருகுமன்பை யுன்மீது பெருக்கிவைத்த வுனைமறவேன்
திருவிருந்த வெழினிலவுஞ் சிவலோக சுந்தரனே. (க0)

விண்டுவிதி சதக்கிருது விபுதரிருந் தவமுளரும்
கண்டுகணிக் கற்கரிய கதழ்வுகெழு நீயெனையும்
தொண்டுகொளற் கென்னதவஞ் செய்தேனோ தொன்மையினில்
தெண்டனிடு வார்பரவுஞ் சிவலோக சுந்தரனே. (கக)

நாளவனீ நாளனைத்து நமனுடைய நாளெனவே
நீளுளத்தி னினையாது நிலையழிந்து மதிமருண்டு
மாளுமனக் குருடரதர்க் கெனையயலாய் வைத்துளபுத்
தேளெனுமுன் னடிமறவேன் சிவலோக சுந்தரனே. (கஉ)

முன்னுலகி லொருபோது மறந்துவிடி னப்போது
பின்னமெய்தா தென்றோர்ந்த பின்னுமடி யேனுன்னை
என்னவிதம் பொச்சாந்திங் கிருக்கமனந் துணிவனந்தோ
தென்னவிரு மெம்மானே சிவலோக சுந்தரனே. (கங)

இருக்குநிலை நிற்குநிலை யிருகுவளை துஞ்சுநிலை
மிருத்திகைமே னடக்குநிலை விழிசெவிவாய் வினைகொணிலை
நிரப்பிலுண வுண்ணுநிலை நினைநினையச் செய்துளவுன்
திருக்கருணைக் கென்மாறு சிவலோக சுந்தரனே. (கச)

மெய்வாழ்வு வேண்டாமல் வினைகுழுமு மிப்புடவிப்
பொய்வாழ்வுக் காசைசெயும் போக்கினுழை யாதொருநீ
கைம்மாயஞ் செய்ததற்குங் கைம்மாறிங் கொன்றுளதோ
தெய்வமெலா நனிதுதிக்குஞ் சிவலோக சுந்தரனே. (கரு)

ஏட்டெழுத்தை யியன்மொழியாச் சேர்க்கவறி யாவெளியேன்
பாட்டினுனைப் பழிச்சவொரு பாக்கியமும் பெற்றதன்றி
வீட்டைநினைந் தினிதுய்ய வியனுணர்வு முற்றேனுன்
சேட்டவரு ளுரிமையினாற் சிவலோக சுந்தரனே. (கசு)

பதகரின நாடாது பலகதைகள் பேசாது
சத்தமுனைப் புகழவந்த தன்மையினிக் கைவிடுமோ

---

கக. கதழ்வு=பெருமை. பி - நிகண்டு காண்க.

கஎ. பதகர்=கீழோர்.

மதலைதவ ழாழிசுலா மகிப்டைத்த கம்பியனே
சிதலைதவிர்த் தெனையாளுஞ் சிவலோக சுந்தரனே. (௧௭)

குத்திரமு மழுக்காறுங் குழும்பிந்தக் கலிநாளிற்
பித்தனெனை யாளவந்த பெம்மானே யெம்மானே
நித்தலுநா னுனைமறவே னீநானென் றேயுளவோர்
சித்திரத்தைக் காட்டியருள் சிவலோக சுந்தரனே. (௧௮)

கற்றதையுங் கேட்டதையுங் காடுகொண்டு போகாதன்
புற்றுநினைச் சந்ததமு முன்னவந்த வாக்கநலம்
பெற்றதுபோ லடியுறைவும் பெறச்சிறிது பார்த்தருடி
செற்றமிலாச் சிவக்கொழுந்தே சிவலோக சுந்தரனே. (௧௯)

பத்திநெறி படர்ந்தேறூர் பயம்பயமென் றேமடிவார்
சித்தியுளோர் தெளிவேறிச் செயஞ்செயமென் றேசேர்வார்
கத்தியனு தினங்கரைந்து கருதுமெனைக் கண்பாராய்
சித்தமிசை குடிகொண்ட சிவலோக சுந்தரனே. (௨௦)

அறியறிவுக் கறிவாகி யதற்குமுதற் பொருளாகி
அறியறிவுக் கெட்டாவோ ரரங்கமமர் சோதியுனைக்
குறுகுசமா தியிலெனைநீ கொண்டணைப்ப தன்பரமே
சிறியேனைத் தேடிவந்த சிவலோக சுந்தரனே. (௨௧)

மாறுத யாற்றுவெள்ளம் போலெனது மனைதநறும்
பேறேறு நினதடியிற் பெருக்கிவிளை பேரின்பம்
வீறேற நுகராதிங் குய்வேனோ மெய்யறிவின்
சேறேறு மனதரவாஞ் சிவலோக சுந்தரனே. (௨௨)

நன்னயஞ்சால் பழநிநக நாடிநின்ற வெனைத்தகைந்து
சொன்னவண மேவிளிக்கத் தொழும்புடையேன் காண்வருநாள்
இன்னதென வறியேனே யெளியேனின் கனைகண்ணே
தென்னடியார் திருமுதலே சிவலோக சுந்தரனே. (௨௩)

நாறுமிந்தப் புலையாக்கை நலியாதிங் கொருவேளைச்
சோறருந்து தொல்லையுமே தொலைந்துதிரு வருளானே
ஊறடங்கி யுய்யமுடை யுடன்மென்மை யாவதெந்நாள்
தேறுநரைப் புரந்தருளுஞ் சிவலோக சுந்தரனே. (௨௪)

---

௧௭. மதலை=மரக்கலம்.
சிதலை=பிணி.

காணுமறி வாயவெற்குக் காட்டுமறி வாயுளநீ
காணவெனக் காட்டாயேற் காண்டகைமை யுண்டாமோ
பேணுமரு ணல்கியெனைப் பிரிவினிலை வைத்தருடி
சீணமிலாப் பெருந்தகையே சிவலோக சுந்தரனே. (உரு)

உயிருடம்பை நியதிசெய்தவ் வுயிருளுயி ராயிருக்கும்
வியன்பொருளா முன்னையிவன் மேவியென்று நிராமயமாச்
சுயம்பிரம சேதனமாச் சுகர்போலப் பூரணமாச்
செயிரின்றி நிலவவருள் சிவலோக சுந்தரனே. (உசு)

தந்தைசுத னேயென்ற தருணமவ ணேனேனென்
றந்தமொடு செடிமாங்க ளதிர்த்தனவா லமலமுத்தி
பெந்தமிலா நிறைவதனைப் பெற்றவரு மெண்ணிலரே
சிந்தைமகிழ்ந் தருள்வதெந்நாள் சிவலோக சுந்தரனே. (உஎ)

காரணந்தா னிருப்பவினை காரியக்கோள் கெடுத்தந்தக்
காரணத்தை நானறிந்து கணனமிடற் கொண்ணுச்சம்
பூரணத்தை யெய்தவருள் புரிவதினி யென்றோநற்
சீரனைத்து முள்ளவனே சிவலோக சுந்தரனே. (உஅ)

சைவமெனுஞ் சொற்சிவசம் பந்தமெனப் பொருடாற்கோ
ரையமிலை யாகலினுன் னடியேனஃ தின்றுலகில்
சைவனெனச் சாற்றவொரு சற்றுமொவ்வா தெங்களையாள்
தெய்வமுதால் சைவஞ்செய் சிவலோக சுந்தரனே. (உகூ)

சுமதியுடை யருணகிரி தோத்திரித்த மாட்சிமையே
குமரகுரு தாசனுக்குக் கோதிலரு ணீட்டிறையே
சமரசசு பாவநிலை தனிலமருங் குகதேவே
திமிதநிலை தந்தருளாய் சிவலோக சுந்தரனே. (௩0)

---

௩0. திமிதநிலை=பேரொலிநிலை. இது, தத்துவசிரேட்ட பாநாதத்தைக் குறிப்ப தாகும். திமிதத்தைப் பிங்கலந்தையிற் காண்க.

# ௬௧. பணம்.

---

கலிநிலைத்துறை.

பணமென் றூற்பிணை மூந்துவண் டெழுமெனப் பாரில்
குணமு ளார்தரு மொழியுமொன் றுண்டது குறிக்கின்
உணர்வி லாவதி லுன்பெருந் திருவரு ளுணர்வு
மணமி லார்பலர் மயங்குவ ரென்குரு மணியே. (௧)

பிரப்பை மசானத்திற் செய்யப்பட்ட சதுரக்குழியொன்றில் விஜய வருஷத்துப் (1895) பங்குனிமாசத்தில் ஒரு சனிவாரந் தொடக்கமாக ஆண்டவனை நாடி நிட்டை சாதித்த அடிகளுக்குப் பயமுண்டாக்கி யெழுப்பிவிடவேண்டுமெனுங் கருத்தானே ஆணும் பெண்ணுமான ௬, ௭-பேய்கள் சூழ்ந்திருந்துகொண்டு ஐந்திரவும், வருதியென இவரைக் கிளப்பிய பெரிய ஆவியொன்று ஓரிரவுமாக ஆறுதினங்கள் தகைந்து நின்று தங்கருத்துப் பயன்படாமையின் அவை விலகிவிட்டன. ஆறாவது நாள் மனமடங்கி நின்ற அடிகள், இவ்வடிமைக்குச் சொல்லவேண்டியதுளதேல் அதனைச் சொல்லி யருள்கவென்பது முதலிய சொற்களால் இறைவனுக்கு விண்ணப்பித்தனர். ஏழாவது நாளிரவிலே ஜடாமகுடமுடைய இரண்டு முனிவர்களோடு நேர்முகமாக இளைஞுருக் கொடுவந்த பெருமான் ஓரிரகசியமான வார்த்தையை வெளியிட்டருளி முனிவர்களோடு மேற்குத்திசையை நோக்கிச் சென்றுவிட்டனன். அடிகள், அவ்வார்த்தைதான் உபதேசமென்று நன்குமதித்து யோகத்திருப்பவராயினர். ௯ ஆந் தினத்திரவு ஆண்டவன் கட்டளைப்படி நிட்டையிலிருந்தெழுந்தனர். தமக்கு ஞானோபதேசஞ் செய்தவன் பாமனாகலின் அவனை இம்முதற்செய்யுட்கண் "என் குருமணியே" என்றது ஏற்புடைத்தே. ௬௧ ஆம் பிரபந்தம் "குருபாக்கண்ணி" எனவெழுந்ததும் இதனையே காட்டுகின்றது. கூறிப்போந்த செய்திகள் சுருக்கமே. விரிவாய யாவும் சரித்திரம், ஸ்ரீமத் – குமாரசுவாமியம் முதலிய பல்லாற்றானும் அறியக்கிடக்கின்றன.

பொன்னி னாற்பிர யோசன மொருபொழு தேனும்
இந்நி லத்திலெய் தாக்கடி களுமதி லிருக்குந்
தன்மை யுள்ளன வேலத னாற்பலன் சாரும்
உன்ன மானுடர் விடுவர்கொல் பொன்னசை யுரியோய். (௨)

பொருள வாவினர்க் கிருவகைப் பந்தமும் போமோ
அருளு மேவிடு மோபொரு ளாசையி னாலே
கருது பாவமுஞ் செய்கிற பாவமுங் கணிக்க
ஒருவ ராலிவ ணாவதென் மாமயி லுகைப்போய். (௩)

---

௨. கடிகள்=பேய்கள்.

இரவி னித்திரை யின்மையும் பகலிடை யிளைப்பும்
தரவி ருப்பது மீனரை மூடரைச் சார்ந்து
பரவிப் பஃறொழில் பார்த்திடப் பழிதொழி லெல்லாம்
புரியச் செய்வதும் பொருணசை யேபரம் பொருளே. (௪)

அறிவி லாப்பொருள் வாழ்வினை விரும்பிடு மகந்தான்
அறிவி னாருள் வாழ்க்கையெண் ணுதிருந் திடுமோ
அறிபு லால்விழிக் கருடெரி யாவறி தாலே
யறிவி லோங்கயிர்ப் பேயதை நீத்தனெ தன் னரசே. (௫)

நல்வி வேகிகள் பெருமலிங் கதிகமு நாட்டார்
கல்வி கேள்விக ளுயர்தெய்வம் வழிபடு கருமம்
பல்வி வாதம்வி டாப்பிர சங்கமென் பவைகள்
தொல்வி னைதபு விப்பயன் கருதுபு தொடர்வார். (௬)

தொடரு மன்னவ ருட்சிலர் தொன்னிலம் புகழப்
படரு வார்சிலர் மறுமையிற் பலிக்கவென் றயர்வார்
இடரி லாச்சில ரன்புட னீட்டுவ ரிவர்க்கே
கடவு ணன்றிப ராட்டுத லெனக்குமோர் கடனே. (௭)

உலக வாழ்வினை நீத்தருந் துறவற முறுவோர்
சிலவ ரேயவ ருட்சிலர் தேகநோவ் வாதி
பலவு பாதிகள் சகிக்கவொல் லாப்பரி சான்முன்
நிலைமை நாடிவந் திடுவரொ ருதரு ணிதியே. (௮)

துறவி லேசிலர் துன்புகள் சகித்திருந் தானும்
மறைவி னின்றெழு வாசனை யான்மன மடங்காக்
குறைவு கொண்டுழி தருவரிக் குறைவினு ளதையும்
உறவெ னெஞ்சள தோநவி லயிற்படை யுடையோய். (௯)

ஆளு நின்னடி யன்றிமண் ணுசைபொன் னுசை
நீளு மென்குழன் மங்கைய ராசையி னீங்காக்
கோளு ளோர்களு ஞானிக ளோபுகழ் குயின்றேன்
நாளு நாடிய தெய்வமுள் கெனைவளை நபமே. (௧௦)

---

௪. பரவி=துதித்து ; நிகண்டுகள் காண்க.
௫. அயிர்ப்பு=சந்தேகம்.

# ௯௨. அபிமான மறுத்தல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மூதுமறைகள் புகழ்மணியை முதியர்மொழி யொளிர்மணியை
மூடரறி யாமணியை மோன மணியை
மதர்வுகெழு மாவறிவுக் குருமணியைத் திருமணியை
மதிநடன மன்றமிருந் தவிரு மணியை
நிதமணியைக் குமரகுரு தாசனகத் தசைமணியை
நினைப்பவர்க்கு வீடுளதென் றிமிழு மணியை
இதமணியைப் பரசிவசுப் பிரமணிய மதைநினையு
மிதயரடி மலர்களென் னவிர முறவே. (௧)

நேரிசையாசிரியப்பா.

நிலமிசை யாகம நெறியி லேனும்
கலைமலி நான்மறைக் கடையி லேனும்
இறைநூ லாயவவ் விரண்டினு மேனும்
சிறிது படனஞ் செய்தந் நடவை
திடப்படா துலக மாயையிற் சிக்குபு
விடப்படா தலைவோர் விரதமுள் ளோரைக்
கண்ணுறு காலவ ரில்லத் திருந்திடின்
கண்ணக வில்லையேன் கருதின ரென்பர்
துறவிருந் திடினேன் றுறந்தன ரென்பர்
இறையா லயம்புக் கிருந்து வழிபடின்
இவர்க்கே னாலய வழிபா டென்பர்
அவணமாற் றுவிடி னாற்றிலென் னென்பர்
சடைமுண்ட மிலையேற் றவமின் றென்பர்
சடைமுண்ட முளவேற் சால்புக்கோ வென்பர்
ஓரிடத் திருப்பி னுழிப்பற் றென்பர்
பாரிடத் துலாவிற் பசுவலை வென்பர்
உண்டுடுத் திடினமை யொத்தவ ரென்பர்
உண்டுடுக் காவிடி னுஞற்றிலென் னென்பர்
பேசி விளக்கிடிற் பிதற்றலே னென்பர்
பேசா திருந்திடிற் பிறர்க்கென் னென்பர்

௧. இமிழ்=ஒலி. "தெரியிமிழ் கொண்டநு மியம்போல்" என்றார் மலைபடு கடாத்தினரும்.

விழித்து நோக்கிடின் வெளிமுக மென்பர்
விழியா திருந்திடின் விழிக்கிலென் னென்பர்
அற்புத மிலதே லருளின் றென்பர்
அற்புத முளதே லணிவித்தை யென்பர்
ஆதலின் மனனே யவனியர் பலவா
றோதிழி வுக்குநீ யுள்ளுலை வேதும்
உறலொழிந் தெம்மா னுரைத்தசன் மார்க்க
முறையி னுனக்கெது பிடித்தமு முயல்வும்
உள்ளதோ வவ்வா றுற்றெங் கடவுளாய்
உள்ள குகேசனை யுலப்பி லுண்மையை
அகண்ட பூரண வருட்பெருஞ் சோதியை
அகண்ட பூரண வானந்த வாரியைச்
சொல்லற நிற்குந் தூய வெளியைச்
சொல்லின் மதுரஞ் சொரியருட் கனியை
நினைக்கி னினைந்து நிகழ்ந்து பற்றுபு
நினையா தேனீங் கிடுமோ ரியற்கையைத்
திருவரு ணகிரி சிந்தித்த தேவை
உருவரு வின்றி யொளியிரு ளின்றிச்
சுத்தசித் தாகச் சூழ்ந்து
சத்திய முத்தி தானடை வாயே.

---

## சுஙு. மறைமுடிவு.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மறைமுடிவுத் தெளிவாக வாகமத்தின்
முடிபாக வளர்சித் தாந்த
முறணுக வெவ்வகைய சைவருள
ரேனுமவர் முன்னுந் தெய்வம்
கறைகாது சிவனுத லாலவரைக்
கணநாத ராக வுள்ளி
உறவாடு பவர்க்கெலா நானுமுற
வாதல்கட னெருசே யோனே.

---

உ. உலப்பு=சாவு.

க. முரண் என்பது எதுகை நோக்கி “முறண்” எனவாயிற்று. பகையென்பது பொருள்.

அந்தணனு முனையொருகா லவமதித்தான்
விபரீத வறிவா லிப்பூ
வந்துருவுற் றிருப்பாயே லிங்குளர்நீ
பேயேவன் மாய வித்தைத்
தந்திரியோ வெனவினவிப் பலசாரசஞ்
செய்துதலை தனினுங் குட்டச்
சந்தேக மிலையிதனைக் கருத்தடைத்தோ
மறைவிருக்குஞ் சாமி யானுய். (உ)

மூச்சுமன மற்றிருப்பார் வேட்புறு
பராபரமா முதல்வா நீதான்
மாச்சரிய முடையென்றோ டிருந்துமதி
தூரமென மறைந்து நிற்றல்
ஆச்சரியத் தாச்சரிய மேயதனை
யானறிய வருளல் வேண்டும்
பூச்சனிப்பி லாவருண கிரியிறைவ
நான்புகழும் புனித வேளே. (ந.)

## கூசு. ஏ ம வி லே க ர்.

கலிவிருத்தம்.

ஏமவி லேகரை யேவல்கொள் வேலோய்
தேமலர் நின்னடி சிந்தைசெய் வேற்கு
மாமருண் முற்றினு மாறிடா தென்னென்
றேமுறு முன்னைவி னுவிலென் சொல்வாய். (க)

வையமு திக்குண்ம ருண்டிதன் முன்னீ
செய்தவி னைத்தொடர் தீர்ந்திடு காறும்
மையிருள் போமருண் மார்க்கமு றுதென்
றையப திற்புகல் வாய்கொலோ வன்றே. (உ)

கலமணி வேந்தர்செய் கட்டளை தன்னை
நிலமிசை மாற்றுநி யாயம தேய்ப்ப
உலகெலா மானுன துத்தர மாற்றம்
இலைகொலோ நின்னரு ணீதியி லெந்தாய். (ங)

அப்படி மாற்றமு முண்டது கோடற்
கிப்பொழு தன்பவு னெஞ்சிலை யென்று
செப்பிடி னீயுனை நம்பிய சேய்நான்
எப்படி யுய்குவ லென்செய்வ லெந்தாய்.

ஏர்த்தமி ழாலுனை யேபுகழ் வோரைப்
பார்த்தரு டேவப ரஞ்சுட ரோதிப்
பேர்த்திரு வாளன டைந்தவொர் பேற்றிற்
சேர்த்தரு ளாயெனை யுஞ்சிவ சேயே.

கட்டளைக்கலித்துறை.

காலமே யாவையுந் தந்திடுங் காக்குங் களையுமந்தக்
காலமோ காளையங் கந்தவேள் கையகப் பட்டதென்றால்
ஆலமுண் டோனுமைக் கோதுண்மை மாற்றமுண் டாகலினுன்
பாலனு மென்னையு மூழ்கட்டு மோவெம் பராபரமே.

---

## ௯௫. ஸ்ரீ கதிர்காமவேலர்வண்ணம்.

---

### மடக்கு*

இராகம் - புன்னுகவராளி.

தானன தந்தனன தன தான தந்தனன தன
தான தானன தானன தன தான தானன தானன தன
—தானன தனதன தானன

சீருப ரந்தரவேண் மிக நானு சுந்தரவேண் மலர்
சீத மாமலர் மாலையா னிரு நாலெ னுநவின் மாலையா னுயர்
தேவர்வ ணங்கடியா னழி யாநெ டுங்கடியா னொரு
தீதி லாமுக மாறுளா னுக மாய மாநசை மாறுளா னணி
சேரிருசெஞ்சரணு னடி யார்க டஞ்சரணு னிறை
தேம ருநெடு வாடையா னுரை யேறு மாடக வாடையா னுயர்
——பார்வையா னடியவர் பார்வையான் (வறு)

---

* இதனை யமகமென்றுஞ் சொல்லலாம்.

வறு. அந்தரம் = இருள்.

உரை = புகழ்; "உரைசெல மலர்தலை யுலகம்" என்றார் மதுரைக்காஞ்சி யாரும்.

தீமரு வும்பெருமான் மரு மானெ னும்பெருமான் விரி
தேவ மேகமெ னீகையே நனி நாண வேயரு ளீகையே புரி

கோமிகு மொண்குடையா னிழ லீயு மொண்குடையா னிமிர்
கோழி யேறிய தோகையா னிறை வீசி யாடிடு தோகையா னடல்

சேர்பல்பெ ரும்படையா னொரு போதும் வம்படையா னதி
தீர வேலுடை யானரு வுயிர் யாவு மாளுடை யானரு மறை
——யாணையா னெறியுடை யாணையான் (வ)

ஏருய ருஞ்சிகையான் ரவி போலு மஞ்சிகையான் விறல்
ஏறு தானவ நாசனே யடி யார்கள் பாசவி நாசனே சுக

ஞானநி ரந்தரனே பெரி யார்து ரந்தரனே சிவ
நாத னார்குரு நாதனே நிரு வாண ஞரும நாதனே யருள்

ஈதிசு தந்திரமே வுற வீடரு தந்திரமே வயில்
ஈச னேயெனு மாசிலா தவர் ராச னாகிய மாசிலா னிஜ
——வாகையா னடுகள வாகையான் (வஉ)

ஏனுறு தண்டலையே வரி யார்க தண்டலையே யொலி
ஏறு மாதிரு வோடையே மண நாறு தேன்மிக வோடையே மலி

கோடிபெ ரும்புனலே பல கோடி யம்புனலே யுள
கோல மார்கதிர் காமமா ளருள் வேலன் வேதுசெய் காமமா மயல்

ஈயல ரம்பனையே யொரு காய்க ணம்பனையே முடி
வேயி லாமுது தாதையே யெனும் வாயி னொரு தாதையே தமொ
——டாடுகோன் வனமிஞெ டாடுகோன் (இ)

சாருயர் செங்கழன்மே லிசை யேசெய் செங்கழன்மே லெழு
தாக மாகிய வாசையே கொடு பாச மாகிய வாசையே ஜகம்

ஆமென வெஞ்சுதனே வெளி யேறி யஞ்சுதனே ரிலை
ஆடு மாபட நாகமே யிரு கோடு நீண்மத நாகமே வலி

---

வ. தேவ மேகமெனீகை=தேவ மேகமெனப்படும் ஈகை.
அருளீகை=அருட்கொடை.
குடை=குடையெனுங் கூத்தும், குடையும்.

வஉ. துரந்தரன்=வல்லோன்.
வாகை=கொடையும், வெற்றியும்; ககரவேதுகை காண்க.

இ. ஐயேமலி=அழகே மலிந்த.
ஒரு தாதை=பிரமன்.
ஏதமொடாடுகோன்=குற்றத்தோடு (பிரமன்) பேச நின்ற பெருமான்.

இஉ. ஆசை=அன்பும், பொன்னும்.

சாலுளி யம்புலியே கட மாகொ டும்புலியே வதி
தாவ மேகின னேயெனு வியெ னுது போயின னேயெனு வினன்
——ஆவதே தழுதழு தோய்வதே (இஎ)

தாவில்ப ரங்கிரியே வளர் சாமி யங்கிரியே நினை
சார்பி னுலவ னேசிலா மக னுயி னுனிவ னேசிலா சலை
போல்வன லம்புரிவான் மனு வாழ்நெ டும்புரிவா னுறு
போக மேவமெ யேனையோ ரென வேயெ னுவெணி னேனையோ விது
தானுனு கண்டினுமே நல பான்மது கண்டினுமே னவில்
சாது மாமொழி யானையே கவி னீடு மாமத யானையே விட
——லாவதோ நிதமெண லாவதோ (ஐ)

ஊருறை தங்கையரோ யணி சார்ச தங்கையரோ சொலு
வீரொர் காடமர் பூவைகாள் குயில் காளு லாவிடு பூவைகாள் சிறை
நீடிய கிஞ்சுகமே விளை யாடு செஞ்சுகமே யெவண்
நீள வேகமொ டேகினுன் மக னேது வீரத ரேகினு னவ
னேடுவி ளம்புவனோ வறி தேதக ளம்புவனோ வுரை
யீரெ னுதுளம் வாடிடா தலை பேய்க ளோடுற வாடிடா கினி
——யேவயா வறவிசை யேவயா (ஐஎ)

ஊறுவி லங்கினமே மன மேக லங்கினமே லெத
னுலுய் வேனநி யாயமே யிது கூறு மேலொர்நி யாயமே பசி
வாடிவ ருந்தினனோ கனி காய ருந்தினனோ வெயில்
வாடை யாலயர் வேகொள்வா னினி யாவ தேதுயர் வேகொள்வா னெனும்
ஓர்சுர குஞ்சரியா னுரி யோர்சொன் மஞ்சரியா னனு
பூதி மாமுனி யாதியா ரடி யார்வி டாதகி யாதியா னறை
—— யீகவே லவனடி யீகவே (க)

---

இஎ. கொடும்புலி=சிங்கம்.

ஐஎ. பூவை=காயாமரமும், நாகணவாய்ப் புள்ளும்.
சிறை நீடிய கிஞ்சுகம்=செந்நிறப்பறவை.
ஏகல்=போதலும், நடத்தலும்.
வயா=ஆசையும், வருத்தமும்.

க. ஈகவேல்=ஒளியுள்ள வேல். "ஈஹா" என்னும் வடசொல் பிரகாசமெனும் பொருள் பயத்தலை நாநார்த்தார்த்நமாலையிற் காண்க.

# ௨௨. பங்கிகள்.

## திருமாலைமாற்றுத்திரிபங்கி.

ஒப்புமைபற்றிவந்த கலித்தாழிசை.

(ஒற்றிலாச்செய்யுள்)

தானதானனதானனதானனா தானதானனதானனதானனா

௧. மேலமூககுகாசலபாலசீ வேலசாமிதுன்னோவறுவாலசீ
சீலவாறுவன்னோதுமிசாலவே சீலபாலசகாகுகமூலமே. (௫)

### அடியெதுகைத்தொடைவஞ்சிவிருத்தம்.

௨. மேல மூக குகாசல
வேல சாமி துன்னோவறு
சீல வாறு வன்னோதுமி
சீல பால சகாகுக.

### அடியெதுகையொடொரூஉவெதுகையும் அந்தாதித் தொடையும்பெற்ற கலிவிருத்தம்.

௩. மேல மூக குகாசல பாலசீ
சீல வாறு வன்னோதுமி சாலவே
வேல சாமி துன்னோவறு வாலசீ
சீல பால சகாகுக மூலமே.

திருமாலைமாற்றுப்பொருள்.—மேல்அம் ஊக=சிறந்த அழகும் யூகமுமுடைய, குக=குகனென்னுந் திருநாமத்தோனே, அசல=சலனமற்றவனே, பால=(யாவையும்) காப்பவனே, சீவேல=காந்தியுள்ள வேலிற்கிறைவனே, சாமி=(பரம) குருவே, துன்னோவறு=துன்மையான நோயற்ற, வால=பரிசுத்தனே, சீசீல=சம்பத்துள்ள வறிவாளனே, ஆறுவன்னோ=(எனக்குள்ள பசி – தாகம் – சோகம் – மோகம் – சரா – மரணமெனும்) ஆறுவலிய துன்பத்தையும், சால=போதுமானமட்டும், துமி=அறுத்தருள், சீல=தருமநாயகனே, பால=என்றும் மாறா விளமைப்பருவ முடையோனே, சகா=என்னோடுள்ளவனே, குகமூலமே=(இதயகமலக்) குகையின் மூலப்பொருளே. என்றவாறு. ஏ–அசை. சீ – ஸ்ரீ என்னும் வடமொழி விகாரம். (ஸவ꞉) ஸகன் – வட சொல். துன்னோ–துன்னெறி யென்பதன்ன புணர்க்கைத்து. திருக்குற்றாலப்படலத்து ௩–ல் "துன்னெறி" என்றார் கந்தபுராணத்தாரும்.

## எரிவரைக்குகன்தசபங்கி.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்:

நனநன நானன நானன நானன நானன நானந்
நனநன நானா நனனா நனநன நனநன நத்தனனா

௧. உலகமெ லாம்வனை யோமுரு காவயி லோகைய னேகாவிண்
ணுலகர வாமா கரனே கறுவலி லுருவளர் கட்டழகா

---

௨. கறுவலில்=சினமில்லாத.

நலமலி கேதன நாமுதல் வாதிரு நாகைய னேகூவின்
னறவணி பூண்மா குரவா குறுகலி னரநிமிர் கொக்கரியே
யிலகும காமயி லீசுர னேகன வீகைய னேமாவின்
ணிறைமகள் கான்மா தரையா மறுவறு மெரிவரை மற்குக(
மலமிலர் காணிச மாசுர னேயடல் வாகைய னேதேவொண்
மதியொலி யாஞ டிருவே சிறுமையில் வரமருள் சிற்பரனே.

### அடியேதுகைத்தொடைவஞ்சிவிருத்தம்.

௨. உலகமெ லாம்வனை யோமுருகா
நலமலி கேதன நாமுதல்வா
இலகும காமயி லீசுரனே
மலமிலர் காணிச மாசுரனே.

௩. கறுவலி லுருவளர் கட்டழகா
குறுகலி னரநிமிர் கொக்கரியே
மறுவறு மெரிவரை மற்குகனே
சிறுமையில் வரமருள் சிற்பரனே.

### இரண்டடியேதுகை யடியியைபுத்தொடைவஞ்சிவிருத்தம்.

௪. ஓமுரு காவயி லோகையனே
நாமுதல் வாதிரு நாகையனே
ஈசுர னேகன வீகையனே
மாசுர னேயடல் வாகையனே.

### கட்டளைக்கலித்துறை.

௫. உலகமெ லாம்வனை யோமுரு காவயி லோகையனே
நலமலி கேதன நாமுதல் வாதிரு நாகையனே
யிலகும காமயி லீசுர னேகன வீகையனே
மலமிலர் காணிச மாசுர னேயடல் வாகையனே.

### தரவுகொச்சகக்கலிப்பா.

௬. ஓகையனே காவின் னுலகாவா மாகானே
நாகையனே கூவின் னறவணிபூண் மாகுரவா
வீகையனே மாவின் ணிறைமகள்கான் மாதரையா
வாகையனே தேவொண் மதியொலியா ஞடிருவே.

---

௨. நாகையன் என்பதில் நாகு=இளமை.

கூவாகிய இப்பூமியையும், வில்லாகிய ஒளிப்பொருள்களையும் மணத்தோ கூடிய திருவணியாகப் பூண்டருள் முன்னவனே யெனும்பொருளைக் "கூவின்( வணி பூண்மாகுரவா" எனுஞ் சொற்கள் பயத்தல் காண்க.

நாரம் "நாம்" எனக்குறுகிற்று. நாரம் = நீர்; கடலுக்கிலக்கணை.

### கலிவிருத்தம்.

௭. காவிண் ணுலக ரவாமா கரனே
கூவின் னறவணி பூண்மா குரவா
மாவிண் ணிறைமகள் கான்மா தரையா
தேவொண் மதியொலி யாறு டிருவே.

### ஒருவிகற்ப நேரிசைவெண்பா.

அ. ஓகையனே காவிண் ணுலகரவா மாகரனே
நாகையனே கூவின் னறவணிபூண்—மாகுர்வா
வீகையனே மாவிண் ணிறைமகள்கான் மாதரையா
வாகையனே தேவொண் மதி.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

௯. காவிண் ணுலக ரவாமா கரனே கறுவலி லுருவளர் கட்டழகா
கூவின் னறவணி பூண்மா குரவா குறுகலி னரிமிர் கொக்கரியே
மாவிண் ணிறைமகள் கான்மா தரையா மறுவறு மெரிவரை மற்குகனே
தேவொண் மதியொலி யாறு டிருவே சிறுமையில் வரமருள் சிற்பரனே.

### வருக்கவேதுகை வஞ்சித்துறை.

௧௦. உருவளர் கட்டழகா
நரமிமிர் கொக்கரியே
எரிவரை மற்குகனே
வரமருள் சிற்பரனே.

---



---

வெண்டளையான்வந்த

## ௬௭. பரஞ்சுடர்க்கண்ணி.

---

### வணக்கம்.

ஆரணமு மாகமமு மங்கிங் கெனுதுபரி
பூரணமாச் சொல்லும் பொருளே பரஞ்சுடரே. (௧)

அறிஞருரை யின்பொருளே யவ்வறிஞர் நாடும்
சிறுமையற்ற சுத்த சிவமே பரஞ்சுடரே. (௨)

வித்தைமுனி யாஞ்சேது மாதவனென் வேதியனென்
சித்தமுணர்ந் தெற்களித்த தேனே பராஞ்சுடரே.

வித்தையுடைய வேதியச் சேதுமாதவ முனிவர், ஒரு விஜயதசமியில் (சூரியோ
தயம்) அர்த்தமண்டல மாதற்குள் ஆசிரியராது வலச்செவியிற் சொல்லிய சடக்ஷரோப
தேசத்தை இக்கண்ணி வெளியிடுகின்றது. இதுவே முதலுபதேசமாம். இதுபு
ஸ்ரீமத் – குமாரசுவாமியத்திலே வருகைவிழைந் திரங்கலிலும், திருவருட்செய
ஞாபகத்திலும்—

"பாத ணூர்தலம் யாத்திரை செய்பரிவார்
பலரு மேகுவி சேதுவில் வாழ்மறையோன்
எரியி னுமநெ டுங்கட னீர்நிலேமே
லெளிய வென்னுள மோர்ந்து கொடுத்தபொருள்
உரிமையே"

"பாட லோர்சத மாயபின் தேவைப் பனவன் மாதவன் சயதச மியிலுன்
பீட ரூமனு நல்கவென் னிதயம் பிடித்த துங்குக நினதரு ளன்றே"
என ஆசிரியரே கூறிய விவா மறியக்கிடக்கின்றது.

எப்பா ருளாரு மிறைஞ்சும் பலமதங்கட்
கப்பா லிருக்கு மறிவே பராஞ்சுடரே.

என்று மருவாக வென்று முருவாக
என்றுங் குருவா யிருக்கும் பராஞ்சுடரே.

இருவினைக் கட்டொழிந்த வேகாந்த மோன
குருபர மாயசிவக் குன்றே பராஞ்சுடரே.

பிருந்த மலப்பிணியைப் பேதித்துப் போக்கும்
மருந்தீ மருத்து மலேயே பராஞ்சுடரே.

பேரறிவு தோன்றப் பிடித்தபிடி யிற்கிடக்கும்
ஓரறிஞர் கட்கருளின் பூட்டும் பராஞ்சுடரே.

அயன்மா லதீத ரறவோர்க்கு ஞான
மயமாய்முன் னிற்கு மணியே பராஞ்சுடரே.

மாதவர்க ளாறுபெயர் கட்கும் வனப்பொதிய
நாதனுக்குந் தீக்கை செய்த நட்பே பராஞ்சுடரே.

மூவுலகு மெச்சு முசுகுந்த னக்கிர
தேவனுய்ய நல்லருள்செய் தேவே பராஞ்சுடரே.

ஈனவிட யங்கடவை யெய்தாம னீத்தபரா
தீன ரெடுத்தருந்து தேனே பராஞ்சுடரே.

---

எ. பிருந்தம் (வ்யூஹம்) = கூட்டம்.

சிறிதும் பெரிதுமிலாத் தேசநடை நாடும்
அறிஞ ருளத்தின் பழுதே பராஞ்சுடரே. (௧௩)

மாவடியை நாடி வழிபட்டு நிற்பவருட்
கோவிறனில் வாழுங் குருவே பராஞ்சுடரே. (௧௪)

ஆலடியை நாடி யனுதினமு நிற்குமருட்
கோலவடி யார்கள் குருவே பராஞ்சுடரே. (௧௫)

வாகையடி நாடி மலந்துமித்த முத்தருடைத்
தேகநழு வாதருந்து தீயே பராஞ்சுடரே. (௧௬)

தென்னையடி நாடித் தியக்கோய்ந் திருப்பவர்கள்
தந்நினைவி னிற்குந் தருக்கே பராஞ்சுடரே. (௧௭)

உடையடியை நாடி யுணர்வுற்றோர் நெஞ்சத்
திடையுறையு மானந்த வின்பே பராஞ்சுடரே. (௧௮)

மாட்டடியை நாடி மறவா திருப்போருள்
வீட்டி லிருக்கும் விளக்கே பராஞ்சுடரே. (௧௯)

ஆட்டடியை நாடி யனுத்துறங்கி நிற்குநரைக்
காட்டிக் கொடுக்கவுள்ள கண்ணே பராஞ்சுடரே. (௨௦)

பரியடியை நாடிப் பதைப்போவ நிற்போர்
கரிசறுக்க வுள்ள கருத்தே பராஞ்சுடரே. (௨௧)

சேவலடி நாடித் தியங்கா திருப்பவருட்
பூவினுறை கின்றவரும் புள்ளே பராஞ்சுடரே. (௨௨)

அடியா மருளை யடைந்தவடி யாருட்
குடியா யிருக்குங் குகனே பராஞ்சுடரே. (௨௩)

என்று முதாத் திருந்தகா லந்தொடங்கி
ஒன்றாக நிற்கு முயிரே பராஞ்சுடரே. (௨௪)

பாவிற்று வாழ்பவர்போற் பாடாது பாடுநர்தந்
நாவிற் குடியிருக்கு நட்பே பராஞ்சுடரே. (௨௫)

---

௧௫. ஆலடி = ஒலிக்குமடி; ஆலல் = ஒலித்தல்; லகரவேதுகை காண்க.

௧௬. வாகை = கொடை.

௧௭. தருக்கு = களிப்பு.

௨௧. பரி = பெருமை; பிங்கலந்தை காண்க.

கரிசு = குற்றம். இக்கரிசு—சித்தாந்தசிகாமணி சங்கம மான்மியத் தலத்தில் "கரிசறு பூசனை முத்தி காரணம்" என்னுமடியில் வருதலும், பஞ்சாக்ஷரப் பதி பசுபாசவிளக்கத்தில் "கலையெலா முணர்ந்தா னேனுங் கரிசறத் தெளிந்தா னேனும்" என்னுமடியில் வருதலுங் காண்க.

தொண்டனேன் சூழ்வதுபோற் றாவின் பெனக்குமெனை
அண்டினவர் கட்கு மருளும் பராஞ்சுடரே.

வெள்ளக் கடன்மீன்போல் வெய்திருந்துஞ் சேராமல்
உள்ளொளியா னாளு மொளிரும் பராஞ்சுடரே.

துன்பத் திடையழுத்துந் துன்பச் செயலனைத்தும்
துன்பமென நீக்கத் துணைநீ பராஞ்சுடரே.

பொய்யாகும் வாழ்க்கைதனைப் போக்கி யுனையடைவான்
ஐயா வுனைப்பணிய லானேன் பராஞ்சுடரே.

## பொய்ப்போகநிந்தை.

மட்பூமி மிக்குடையோர் மண்ணிலுற்ற தீவினையை
மட்பூமி கொண்டோ மறுப்பார் பராஞ்சுடரே.

தங்கம்பொன் மிக்குடையோர் தாஞ்செய்த தீவினையைத்
தங்கம்பொன் கொண்டோ தடுப்பார் பராஞ்சுடரே.

மாடகூ டங்களுளோர் மண்ணகன்று போங்காற்பின்
மாடகூ டங்கள் வருமோ பராஞ்சுடரே.

தண்டிகைபல் லக்குடையோர் தாம்படும் பாசறையைத்
தண்டிகைபல் லக்குவந்தோ தாங்கும் பராஞ்சுடரே.

சேனைதள முள்ளோரைத் தேடி நமன்பிடித்தால்
சேனைதளம் யுத்தஞ் செயுமோ பராஞ்சுடரே.

பெண்டுபிள்ளை சுற்றமிகப் பெற்றோர் படுந்துயரிற்
பெண்டுபிள்ளை சுற்றநின்றோ பேணும் பராஞ்சுடரே.

வாய்வலிமை யுள்ளோர் மறலிவிடுங் கட்டளையை
வாய்வலிமை கொண்டோ மறுப்பார் பராஞ்சுடரே.

மந்திரஞ்சாச் சித்திபெற்ற மக்களயர் தீவினையை
மந்திரஞ்சாக் கொண்டோ மறுப்பார் பராஞ்சுடரே.

செத்த வுயிரெழுப்பத் தேர்ந்த மருத்துவரும்
சித்தத் தியக்கறுத்துய் வாரோ பராஞ்சுடரே.

கரும்பொன்னைச் செம்பொனெனக் காட்டிட வல் லோரும்
அருஞ்சிறை நீங்கியிங்குய் வாரோ பராஞ்சுடரே.

---

கூ௩. பாசறை= துன்பம்; சே — திவாகரம் காண்க.

## அருள்வலிகூறல்.

உன்னுமனம் வாக்குடம்பா னுற்ற பவமலையை
உன்னருட்சம் மட்டி யுடைக்கும் பரஞ்சுடரே. (௪௦)

பாராளு மன்னவர்க்கும் பங்கயவன் காற்கருணை
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே. (௪௧)

வீராதி வீரரென விஞ்சுபவர்க் குங்கருணை
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே. (௪௨)

கார்நேர் கவிஞருக்குங் கட்டார் திருக்கருணை
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே. (௪௩)

சீராருஞ் செல்வத் திருவடிக்கா ருண்ணியவோம்
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே. (௪௪)

## பிரார்த்தனை.

பகட்டிப் பகட்டிநிதம் பார்த்திடுமொய் யாரம்
அகற்றி யிருக்க வருளாய் பரஞ்சுடரே. (௪௫)

துக்க மெனுந்திடரைத் தூற்றிச் சமனுக்கும்
அக்கரையே மாப்பை யளியாய் பரஞ்சுடரே. (௪௬)

பெண்சாதி பிள்ளையெனும் பித்தேறிச் சாகாமற்
கண்சாடை செய்தே கடத்தாய் பரஞ்சுடரே. (௪௭)

பெண்ணேக்க மென்னும் பிசாசம் பிடித்தலைத்துப்
புண்ணுக்கா வண்ணம் புரப்பாய் பரஞ்சுடரே. (௪௮)

ஆகாக் கவலையெல்லா மாகாம லேசாவ
ஆகுங் கவலை யருளாய் பரஞ்சுடரே. (௪௯)

முக்கால முந்தெரிந்து மோன மதுவருந்தற்
கெக்கால முந்துணையா யெய்தாய் பரஞ்சுடரே. (௫௦)

அபமிருத்துக் காலமிருத் தாமிரண்டுங் காணுச்
சுபவிருத்தர் கூடருளைத் தூண்டாய் பரஞ்சுடரே. (௫௧)

பிறப்புளதேற் குண்டலிபாற் பேணவளி யின்றேல்
இறப்பிலருட் சத்தியிட மீயாய் பரஞ்சுடரே. (௫௨)

மாயா மனத்துடிப்பு மாயும் படிக்கொருநு
தாயான வன்மையினித் தாராய் பரஞ்சுடரே. (௫௩)

இந்திரியப் பேய்க ளெனைத்தொடாந் தரிக்காமல்
சந்ததமு நன்னுட்டந் தாராய் பரஞ்சுடரே. (௫௪)

எண்ணேறி யுள்ளே யிருக்குங் கவலையெல்லாம்
மண்ணாக வுள்ளே மடக்காய் பராஞ்சுடரே. (ருரு

அறன்கடை வேட்கை யவித்துநடு நோக்கில்
உறங்கியுறங் காதிருக்க வுன்னாய் பராஞ்சுடரே. (ருசு

கவலைச் செழும்பெருங் காட்டைக் கனற்ற
மவுனச்செந் தீயை வளர்த்தாய் பராஞ்சுடரே. (ருஎ

சோபான மோர்நான்கிற் றேகமற்ற வீறாகும்
மாபோக சன்மார்க்க வாழ்வீ பராஞ்சுடரே. (ருஅ

எவ்வுலகு மீன்ற வெழிலம்மை நன்னடனம்
எவ்விதமுங் காண்பா னிணைப்பாய் பராஞ்சுடரே. (ருகு

உத்தமர்க ளென்று முனைக்குராங்கி நிற்குநறுஞ்
சித்ரமணி மன்றுட் செலுத்தாய் பராஞ்சுடரே. (சு0

தீயிலிழி செம்புருக்கிச் செம்பொன்னாத் தானெடுக்கத்
தாயென்னு மோர்குருவைத் தாராய் பராஞ்சுடரே. (சுக

உளக்கச் சுழிக்காற் றுழலனுவை யேயகண்டம்
ஆக்குமொரு வித்தை யருளாய் பராஞ்சுடரே. (சுஉ

பத்தவிடர் சான்ற பசுவைப் பரமாக்கும்
அத்துவித வித்தை யருளாய் பராஞ்சுடரே. (சுங

ஆதாரப் பண்புணர்த்தி யப்பான்முப் பாழ்கடத்தி
மீதானத் துள்ளிருத்தி மேவாய் பராஞ்சுடரே. (சுச

## புலம்பல்.

படுத்த படுக்கையிலே பால்வாய்ப் படற்கோ
எடுத்தேனித் தேக மியம்பாய் பராஞ்சுடரே. (சுரு

வலிப்பிளைப்பு விக்கலெழ மால்விழிகள் சோரத்
தலைப்புரட்டல் கொள்ளத் தகுமோ பராஞ்சுடரே. (சுசு

தலைப்புரட்டல் கொண்டே தடிபோற்கை கால்போய்க்
குலைப்புரட்டல் கொள்ளல் குணமோ பராஞ்சுடரே. (சுஎ

கொண்டபன்னி பாலரழக் கூடுமுற வோர்களழக்
குண்டலிமே னேக்கல் குணமோ பராஞ்சுடரே. (சுஅ

நோக்கி யெழுந்துநெஞ்சி னேவுறுத்தி மேலிழுக்க
ஏக்கங்கொண் டேக விதமோ பராஞ்சுடரே. (சுகு

---

சு0. சித்ரமணி—வடநூன்முடிபு.

இதயந் தனைவிட் டெழுந்துகளந் தாண்ட
அதிக மிழுத்தலமை வாமோ பராஞ்சுடரே. (எ0)

இழுத்தடைத் திந்திரிய மெல்லா மயர்ந்தே
கழுத்துணங்கி வீழ்தல் கதியோ பராஞ்சுடரே. (எக)

அழுதழுது னைத்தேடி யம்புவியோர் கூடி
அழுநெறிக்கோ நானுமினி யாவேன் பராஞ்சுடரே. (எஉ)

கெடுங்குவ்வோ ராக்கை கிடத்திக் கிடத்திச்
சுடுங்கா டெனக்குத் தொலைகாண் பராஞ்சுடரே. (எங)

வீணாள் போக்கும் விகற்பமும் பாற்றியகம்
கோணாம னிற்பதெந்நாள் கூறாய் பராஞ்சுடரே. (எச)

என்னோ டிருந்துமெனக் கேபகைஞ ராவாரை
என்னோ டிணக்கிவைப்ப தெந்நாள் பராஞ்சுடரே. (எரு)

புன்மனதுக் கும்மெனக்கும் போராட்ட மாயிருக்கும்
சென்மவழக் கென்றுநன்காத் தீரும் பராஞ்சுடரே. (எசா)

சோதி துலங்காமற் சூழ்ந்த மலத்தினுக்கோர்
பேதி வருவதெந்நாள் பேசாய் பராஞ்சுடரே. (எஎ)

உள்ளவுண்மை காட்டா தொளித்த விருட்டினுக்கோர்
கொள்ளை வருவதெந்நாள் கூறாய் பராஞ்சுடரே. (எஅ)

மோசம் விளைத்தெனையே மூடி யிருட்டினுக்கோர்
நாசம் வருவதெந்நா ணட்பே பராஞ்சுடரே. (எகூ)

அலையுமெனைத் தான்காட்டா வாணவக்கங் குற்கோர்
தொலைவு வருவதெந்நாள் சொல்லாய் பராஞ்சுடரே. (அ0)

நாடு மெனைமறைத்து நானெனன் மலத்தினுக்கோர்
கேடுவந்த தாகவென்று கேட்பேன் பராஞ்சுடரே. (அக)

கள்ள மெனும்பொருளைக் காணாம லேதிருடும்
கள்ளவரு ளெய்துவதெக் காலம் பராஞ்சுடரே. (அஉ)

தேசிகனு முன்றன் றிருவருளி லேதிளைத்துத்
தாசரதர் நிற்பதெந்நாள் சாற்றாய் பராஞ்சுடரே. (அங)

நித்திரையை நித்தநெட்டி நித்திரையை நித்தமொட்டி
எத்திசையுங் கூடிநிற்ப தெந்நாள் பராஞ்சுடரே. (அச)

---

எக. உணங்கல் = வாடல். " உணங்கல் சாம்பல் வாட லுலர்ந்தபூ " என்பது பி - நிகண்டு.

எப்பொருளி னுஞ்சார்ந் திருக்கு மெதார்த்தமதை
எப்பொழுது காண்பே னியம்பாய் பராஞ்சுடரே. (

காணக் கிடையாக் கனியைப் புசிக்கவருள்
பேணிக் கொடுப்பதெந்நாள் பேசாய் பராஞ்சுடரே. (

காயில்லாத் தேங்கனியைக் கள்ளில்லாக் கள்ளதனை
ஈயில்லாத் தேனையுண்ப தெந்நாள் பராஞ்சுடரே. (

ஆசைவலை யிற்கிடந்தே யல்லலுறு வாரசடர்
தாசன் கிடக்கத் தகுமோ பராஞ்சுடரே. (அ

மெய்யான வாசைவந்து மேவி வலித்தலினாற்
பொய்யான வாசையிலே போகேன் பராஞ்சுடரே. (

பெற்றமுலை விட்டுநுகர் பெற்றிவந்த பின்னினைக்க
வற்றியவ திற்பால் வருமோ பராஞ்சுடரே. (

நிலம்பொன் பவுள்செதற்கு நின்னை நினைத்தே
புலம்பும் பவுள்செனக்குப் போதும் பராஞ்சுடரே. (

என்ன சுகங்கருதி யென்னதொழி லாற்றிடுவேன்
உன்னைத் தொழுவதினி யொன்றே பராஞ்சுடரே. (

மெய்யருட்டேட் டுக்காக விட்டேன் பொருட்டேட்டும்
மெய்யருளெய் தாதேலென் செய்வேன் பராஞ்சுடரே. (

அருளும் பொருளுமற்றா லாண்டிப் பிணம்போல்
உருள்வதன்றி யுய்யுநெறி யுண்டோ பராஞ்சுடரே. (

எக்காலும் பெட்டகத்தி லுள்ளபொரு ளென்றிருந்தால்
எக்காலு மாக்கை யிராதே பராஞ்சுடரே. (

கற்றமுட்டா ளென்றேயிக் காசினியோ ரேசாமல்
முற்றுமுற்றா னென்றே முடிப்பாய் பராஞ்சுடரே. (

இகழ்ந்திகழ்ந் தென்னைமுட்டா ளென்றாலு முன்னைப்
புகழ்ந்தமுட்டா ளென்பதுவும் பொய்யோ பராஞ்சுடரே. (

பிள்ளைகுற்றஞ் செய்தாற் பிதாபொறுத்துக் கொள்வதல்லால்
தள்ளி விடுவதுண்டோ சாற்றாய் பராஞ்சுடரே. (

வெல்லப்பானைக்குளத்தம் விட்டோர் விரல்சுவைப்பார்
அல்லவோ வத்துணையு மின்றோ பராஞ்சுடரே. (

ஈசா வுனைப்பணிந்து மேத மடச்சகுந்தம்
ஆசையுட னுண்ணுபிண மானேன் பராஞ்சுடரே. (

வயங்குசிவ நாடா மடிக்கிருமி தொள்ளாற்
கயர்ந்துகிடக் குங்குணப மானேன் பராஞ்சுடரே. (௧0௧)

மடக்கி மடக்கிவரு மாதர் மயற்பேய்
அடித்துமிசை யுங்குணப மானேன் பராஞ்சுடரே. (௧0௨)

துங்கமற்ற வுண்டியுண்டு சூழ்படிற்றுப் பேழ்க்காகம்
அங்கலாய்த் துண்ணுபிண மானேன் பராஞ்சுடரே. (௧0௩)

வஞ்சனைபொச் சாப்பெனுங்கோ மாயு விலாப்புடைக்க
அஞ்சா தருந்துபிண மானேன் பராஞ்சுடரே. (௧0௪)

திண்டிமிண்டர் செய்கையிலே செல்லுமிந்தி யப்பருந்திங்
கண்டிவிழுந் துண்ணுபிண மானேன் பராஞ்சுடரே. (௧0௫)

ஓவலற வாங்கவலை யென்னுநா யூன்கொழுக்க
ஆவலற வுண்ணுபிண மானேன் பராஞ்சுடரே. (௧0௬)

வாடாம லேவளர்ந்து மல்குபிணி யாயவெள்ளா
டோடுங் காடாக வுற்றேன் பராஞ்சுடரே. (௧0௭)

ஏய்க்குமன மாமாயை யென்னுமுழு மாங்காய்கள்
காய்க்குமர மானேனென் கண்ணே பராஞ்சுடரே. (௧0௮)

தேனைப் பழித்தவின்பந் தேடா மடமையெனும்
பூனைக்கு முன்னெலியாப் போனேன் பராஞ்சுடரே. (௧0௯)

காயுலக மிச்சையெனக் கண்டுமுல கிச்சையெனும்
ஈயலெழும் புற்றா யிருந்தேன் பராஞ்சுடரே. (௧௧0)

மோகனமில் வாலாமை மூதேவி யேறிடற்கு
வாகனம தாக வளர்ந்தேன் பராஞ்சுடரே. (௧௧௧)

காலைநடு மாலை கதிக்கும் பிணிகளெனும்
ஆலைநனி யாட்டிடுமெள் ளானேன் பராஞ்சுடரே. (௧௧௨)

உண்டியிடும் பண்டிதனை யுற்ற புலையுடம்பாம்
வண்டிக்கு மாடாக வாய்த்தேன் பராஞ்சுடரே. (௧௧௩)

தெட்டுத் தொழின்மூலந் தேடும் பொருளிடற்குப்
பெட்டகம தானேன் பிரானே பராஞ்சுடரே. (௧௧௪)

மிடியுஞ் செடியுநல்கும் வெய்யபவ மென்னும்
கொடிபடர் கொம்பானேன் கோனே பராஞ்சுடரே. (௧௧௫)

---

௧0௧. குணபம் = பிணம்; பி — நிகண்டு நோக்குக.
௧0௩. துங்கம் = உயர்வு; நிகண்டுகள் காண்க.
௧௧௪. தேட்டு — "தெட்டு" எனக் குறுகிற்றெனல் வேண்டும்.
௧௧௫. செடி = குணமின்மை; நிகண்டுகள் காண்க.

கருங்குவளைக் கண்ணார்தங் காமக் கலக்கப்
பருந்தெடுத்த குஞ்சாய்ப் பதைத்தேன் பராஞ்சுடரே. (௧

பட்சமற்ற பாழ்த்தநெஞ்சம் பண்ணுமுரா ணாலரசுப்
பட்சியின்முன் சிட்டாய்ப் பதைத்தேன் பராஞ்சுடரே. (௧

உருக்க விரக்கமிலா துள்ளமுடைக் கள்வர்
இருக்கும் பொதும்பானே னெந்தாய் பராஞ்சுடரே. (௧

ஆசு மனச்சுழிக்கா லாலே சுழலுகின்ற
தூசாகி னேனே சுவாமீ பராஞ்சுடரே. (௧

ஓடியுழல் சிந்தையினு லோயாம லேகறங்கி
ஆடுங் கறங்கெனவிங் கானேன் பராஞ்சுடரே. (௧

நாட்ட மனங்குவிய நானறியேன் பூட்டைதனில்
ஆட்டிடுங் கொட்டையென வானேன் பராஞ்சுடரே. (௧

ஏறுசல மோடழுக்கா றென்னுமுள் ளூற்றுநிதம்
ஊறுமசும் பானே னுயிரே பராஞ்சுடரே. (௧௨

சூழு முரட்டாட்டத் தோஷக் கொடுவிலங்கு
வாழுமடர் காடானேன் மன்னே பராஞ்சுடரே. (௧

ஈனமுற்ற வுன்மத்த மென்னு மதம்பொழியும்
ஆனைகட்டு கின்றதறி யானேன் பராஞ்சுடரே. (௧௨

திடனொடு சந்ததமுஞ் சீறுஞ் சினப்பாம்
படையுஞ் சிறுகூடை யானேன் பராஞ்சுடரே. (௧௨

ஆன்ற தவப்பயிர்கொல் லாங்காரத் தீப்பூடு
தோன்றுநில மானேன் சுவாமீ பராஞ்சுடரே. (௧௨

எஞ்சா மமகார மென்னும் பெரும்புலிக்குப்
பஞ்சரம தாகப் படிந்தேன் பராஞ்சுடரே. (௧

இருள்பகலென் றேத விருக்குந் திறத்தான்
இருதலைக் கொள்ளியெறும் பானேன் பராஞ்சுடரே. (௧௨

அரிய திருவருளா மன்னைதன்னைக் காணா
தெரியினுறை யொத்தே னெளியேன் பராஞ்சுடரே. (௧௨

கணக்கிலருள் வாரிதியைக் காணாது வெய்யோன்
மணற்கிருமி யொத்தேனென் வாழ்வே பராஞ்சுடரே. (௧

௧௨௨. அசும்பு=கிணறு.

தேம்பித்தேம் பிச்சிறந்த சீரருளைக் காணாது
பாம்பின்வாய்த் தேரையொத்தேன் பாராய் பரஞ்சுடரே. (௧௩௧)

போக்குவர வைக்கெடுக்கும் பொன்னருளைக் காணாது
தேக்கிலையி னீர்போற் றிகைத்தேன் பரஞ்சுடரே. (௧௩௨)

நிலையான பேரருளா நின்மலத்தைக் காணா
தலைவாய்த் துரும்பேய்ப்ப வானேன் பரஞ்சுடரே. (௧௩௩)

சோகத்தை நீக்குமருட் டேமுகிலைக் காணாது
நாகக்கை மாலையொத்தே னட்பே பரஞ்சுடரே. (௧௩௪)

தருக்கருளைக் காணாது சாத்திரக்கோ ளோரா
துரைப்பார்தம் வாயுரையை யொத்தேன் பரஞ்சுடரே. (௧௩௫)

அட்டகுணத் தன்பே ரருணலத்தைக் காணாதிங்
கொட்டுதளை விட்டசெய்யு ளொத்தேன் பரஞ்சுடரே. (௧௩௬)

கவ்வருளைக் காணாது காண்டல் சுருதியுத்தி
ஒவ்வாத புத்தகத்தை யொத்தேன் பரஞ்சுடரே. (௧௩௭)

திக்கனைத்தும் போற்றுந் திருவருளைக் காணாமல்
அக்கினிபற் றுங்கூள மானேன் பரஞ்சுடரே. (௧௩௮)

உண்மையரு ளின்றுயர்நூ லோதினவர் தீமைவிடா
தொண்மையறம் விட்டதா மொத்தேன் பரஞ்சுடரே. (௧௩௯)

சீகரமுந் நீர்நடுவிற் செல்லுமம்பிப் பாய்மரத்தின்
காகத்தை யொத்தேனென் கண்ணே பரஞ்சுடரே. (௧௪௦)

பொக்குவிட யத்திலவாப் பூக்கும் புலைஞரிடம்
சிக்கிய மான்போற் றிகைத்தேன் பரஞ்சுடரே. (௧௪௧)

முட்டமுட்டத் தீவினையின் மொய்த்தகரை யார்வலையிற்
பட்டசிறு மீன்போற் பதைத்தேன் பரஞ்சுடரே. (௧௪௨)

கலிக்குதவு கின்றகருங் காளியம்மை கோவிற்
பலிக்கடாப் போலும் பதைத்தேன் பரஞ்சுடரே. (௧௪௩)

அரிக்கள் வினைக்குடித்தே யாடுமடப் பேய்வாய்ப்
பொரிக்கறியை யொத்தேனென் பொன்னே பரஞ்சுடரே. (௧௪௪)

கட்டுக் கடங்காத கானப் புலவேடர்
தொட்டசெருப் பாகித் துவண்டேன் பரஞ்சுடரே. (௧௪௫)

---

௧௪௪. அரிக்கள்—அரி=புகர்=குற்றம்; ரகரவேதுகை காண்க.

நித்த விறப்புவெங்கோ நீங்காப் பிணியாளர்
சித்தத்தை யொத்தேனென் றேவே பராஞ்சுடரே. (கசசு)

கோவணத்தைத் தான்றரித்துங் கொள்கைகெட்ட வஞ்சகர்கைத்
தாவடத்தை யொத்தேன்மெய்ச் சத்தே பராஞ்சுடரே. (கசஎ)

புல்லருந்தி வாழாட்டைப் புல்லறைந்து தின்பதுபோல்
அல்லகண்ட மென்னையுண்ண லாமோ பராஞ்சுடரே. (கசஅ)

கொள்ளி மனமறுகிற் கூடுதுன்பக் குப்பைகளை
அள்ளியெறி யத்துணைநீ யாவாய் பராஞ்சுடரே. (கசகூ)

காக்கைவிழி யாளரைப்போற் கண்ணகன்று நில்லாமல்
யோக்கியனென் றுநிலைமைக் குன்றுய் பராஞ்சுடரே. (கடு0)

நீக்கினு நீங்காத நீர்ப்பாசி யாம்வெளிற்றைப்
போக்குநிஜ மார்க்கம் புகலாய் பராஞ்சுடரே. (கடுக)

அளிக்கும் பொருளையளி யாதுகரு மண்ணை
அளிக்கும் விதகா னறியேன் பராஞ்சுடரே. (கடுஉ)

## பரமோகம்.

பத்தாறு தேசும் பரவ விளங்கிடும்வீ
பத்துமுகங் காணவிருப் பங்காண் பராஞ்சுடரே. (கடுங)

உண்டையங் கிண்கிணிக ளோலிடும் பொன்னடியைக்
கண்டுகொள்ள வாசைகொண்டேன் கண்ணே பராஞ்சுடரே. (கடுச)

செக்கச் சிவந்திலங்கு தீப்போலு மேனியின்மேன்
மிக்கவு மெற்கோர் விருப்பம் பராஞ்சுடரே. (கடுடு)

தேவடியார் மொய்காணிற் சீரியகண் ணுலைழைக்கும்
பாவனைக்கு நாணுசைப் பட்டேன் பராஞ்சுடரே. (கடுசு)

துன்பத்தை வேண்டாத் தொழும்பரொடு பேசுநின்சொல்
இன்பத்துக் காசைகொண்டே னெண்ணே பராஞ்சுடரே. (கடுஎ)

---

கசசு. விறப்பு=அச்சம்.

கசகூ. மறுகு=தெரு.

கடுங. வீபத்துமுகம் என்பதன் பொருள்—மலர் போன்ற பத்துத் திசைகளையு நோக்கி நிற்கும் ஆறுமுகம் எனவாம். யாங்ஙன மெனின், திசை ஒரெட்டில் மூலைத் திசை நான்குஞ் சேருமேல் திசை நான் கென்பதே நிலைபேறுறும். இந்நாற்றிசைகளை யு நோக்கி நிற்கும் முகம் நான்கோடு மேனோக்காய்க் கீழ்நோக்காய் நிற்கும் முக மிரண்டையுங் கூட்டின் ஆறுமுகமா மதரா னென்க. அனைத்துங் குமார பகவான் பார்வையி லுள்ளன வென்பது இங்ஙனறியக் கிடக்கின்றதால்.

புணத்தைப் பணமென்று பாராம னல்குன்
குணத்துக்கு நானுசை கொண்டேன் பராஞ்சுடரே. (கடுஅ)

மையலுற்ற யாவரையு மைதுனஞ்செய் யன்பினுக்கு
மையலுற்று நான்புலம்பு மாறே பராஞ்சுடரே. (கடுகூ)

வேல்பிடிக்குங் கண்ணார் விரும்பி நிதம்பிடிக்கும்
கால்பிடிக்க வென்னுசை கண்டாய் பராஞ்சுடரே. (கசுο)

மால்பிடித்த பூவணைமேன் மைதுனஞ்செய் தேகாமப்
பால்குடிக்க நானுசைப் பட்டேன் பராஞ்சுடரே. (கசுக)

நடுக்ககன்றுன் னோடே நடுவணையிற் சேர்ந்து
படுத்துறங்க நானுசைப் பட்டேன் பராஞ்சுடரே. (கசுஉ)

நாட்டி லெனைச்சேர்ந்த நட்டார்க் கெலாநினையே
கூட்டிக் கொடுக்கவிச்சை கொண்டேன் பராஞ்சுடரே. (கசுஙு)

ஆசைக் குரோசமில்லை யன்பருக்குத் துன்பமில்லை
தாசிகட்கு வேலையென்ன சாற்றாய் பராஞ்சுடரே. (கசுச)

உண்டி யொறுத்தே னுடைநடைக டாஞ்சிறுத்தேன்
மண்டியவுன் மையலெனு மாலாற் பராஞ்சுடரே. (கசுரு)

பஞ்சுப் படுக்கையற்றேன் பச்சைமணம் பூசலற்றேன்
வஞ்சியுப்பு மற்றேனுன் மாலாற் பராஞ்சுடரே. (கசுசு)

மங்கைவா வென்னுமன் மாதேவா வென்றாலும்
அங்குமொரு பேரின்ப மாமே பராஞ்சுடரே. (கசுஎ)

அகந்தான் குளிர்ந்தவன்பா லானந்தத் தேனே
சுகந்தாவென் றாலுமின்பந் தோன்றும் பராஞ்சுடரே. (கசுஅ)

துக்கமில்லா வுன்னைச் சொருசாகக் கூடியுய்யப்
பக்குவமீ தன்றோகண் பாராய் பராஞ்சுடரே. (கசுகூ)

நானுடலாய் நீயுயிராய் நன்றாய்ப் பொருந்துவதற்
கானவொரு பக்குவமீ தன்றோ பராஞ்சுடரே. (கஎο)

பக்குவத்தி லென்னைநீ பக்குவமாக் கூடுதற்கு
விக்கினமொன் றுண்டோ விளம்பாய் பராஞ்சுடரே. (கஎக)

---

கடுகூ. மைதுனம் = ஒன்றிப்பு.

கசுரு. உண்டியொறுப்பு, சுο — உச — ல் ஒருவேளைச் சோறருந்துதல் எனக் குறிப்பிடப்பட்டதே யாம்.

கசுசு. பெண்ணுசைக்கு வன்மை யுண்டாக்குவது உப்பாகலின் அது, "வஞ்சி யுப்பு" எனப்பட்டது. "அற்றேன்" என்றலின் அடிகள் உப்பில்லா வுணவுடையா ரென்பதறியக் கிடக்கின்றது.

காணுமன்பி னாரெவர்க்குங் காமவிடாய் தீர்த்திடுநாள்
ஆணலமில் லாதயர்வுற் றாயோ பரஞ்சுடரே. (௧௭௨)

உள்ளீங்கு மின்ப வுறவையளித் தாற்பிடித்துக்
கொள்வேனென் றோவொளித்துக் கொண்டாய் பரஞ்சுடரே. (௧௭௩)

தினமு முனைவிரும்புந் தேவடியார் பாலும்
மனம்போனீ சென்றும் வரலாம் பரஞ்சுடரே. (௧௭௪)

சின்னஞ் சிறுவயதிற் சீரழிந்து நின்றேனென்
றென்னைக் கழிப்பாயோ வேசில் பரஞ்சுடரே. (௧௭௫)

இட்டமய லாள ரெவர்க்குநீ மாப்பிள்ளையென்
றிட்டாறை சொற்கயலோ வேழை பரஞ்சுடரே. (௧௭௬)

உன்னை விரும்பியபின் போகையுடன் யாரையுந்தான்
என்னினைவி லெண்ணியிருப் பேனோ பரஞ்சுடரே. (௧௭௭)

மெத்தக் கொடுத்தணைய வேண்டுமெனு நோக்கமுற்றோ
இத்துணைநா ளாடா திருத்தல் பரஞ்சுடரே. (௧௭௮)

மெத்தக் கொடுக்கவர வேண்டா மிழுக்கி லின்பப்
புத்திரனைத் தந்தருளிற் போதும் பரஞ்சுடரே. (௧௭௯)

கூடா திருப்பாயேற் கொண்டகொள்கை யாலெவரும்
தேடார்க ளென்னவினிச் செய்வேன் பரஞ்சுடரே. (௧௮௦)

ஏழையா மென்முகத்தை யேறிட்டு நோக்காயேல்
ஏழைகொண்ட காதலெவ்வா றேகும் பரஞ்சுடரே. (௧௮௧)

ஏரா றானைநாடி யேகெட்டே னென்னுமொழி
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. (௧௮௨)

தீராக் கலக்கமறச் செப்புமனு விற்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. (௧௮௩)

தாராள மாகவுன்மேற் சாற்றுங் கவிக்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. (௧௮௪)

போராட்டம் பண்ணிப் புலம்பு மெனக்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. (௧௮௫)

நாராரு முன்னைமுன்னி நாடியவன் புக்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. (௧௮௬)

சீராரு முன்னைமுன்னிச் சிந்தைசெய்த தற்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. (௧௮௭)

தேராத சிந்தையினர் சேருங் கதியெனக்கும்
வாராது கொள்வதற்கு வாராய் பராஞ்சுடரே. (கஅஅ)

சேராது துண்டுபட்டுச் செல்வார் பலனெனக்கும்
வாராது கொள்வதற்கு வாராய் பராஞ்சுடரே. (கஅகூ)

அன்றருணை நாதற் களித்த பெருநலமே
இன்றெனக்கு மீந்தா ளிறையே பராஞ்சுடரே. (ககூ0)

ஆகப் பிரபந்தம் அறுபத்தேழினும்போந்த திருப்பாடல் — சுOOசு
தெய்வவணக்கச் செய்யுள் ௩
ஆகத் திருப்பாடல் சுOOகூ

## சா அ. பொன்மயிற்கண்ணி.

சொல்லரிய சின்மயமாச் சொல்லவுள்ள பூரணமாம்
வல்லவனை நான்கூடி வாழ்வேனோ பொன்மயிலே. (க)

வேத முதலா விளங்கு மருளிறையென்
காத றணிக்கவரக் காண்பேனோ பொன்மயிலே. (உ)

உருவருவ மென்னு முவளகமு மில்லா
ஒருவனையே கூடியினி யுய்வேனோ பொன்மயிலே. (௩)

பேருர் பிறப்புநசை பெற்றூர் பிறந்தாரும்
தாரமுமில் லாதவனைச் சார்வேனோ பொன்மயிலே. (ச)

மட்டுப் படாதவருள் வள்ளலென வேயிருந்தும்
தட்டுப் படாதவனைச் சார்வேனோ பொன்மயிலே. (ரு)

ஈரமிக வைத்துலக மெங்கு முயிர்க்குயிராய்த்
தாரகமாய் நிற்போனைச் சார்வேனோ பொன்மயிலே. (கூ)

ஏசற்ற சின்மயத்தை யெய்தக் குமாரகுரு
தாசர்க் கருள்பவனைச் சார்வேனோ பொன்மயிலே. (எ)

அயிலைப் பிடித்தானை யம்பரமாள் கோனைக்
கயிலைப் பதியானைக் காண்பேனோ பொன்மயிலே. (அ)

என்னை யறியாம லென்னைத் திருடியின்பு
தன்னைக் கொடுப்பவனைச் சார்வேனோ பொன்மயிலே. (கூ)

௩. உருவருவ மென்னு முவளகமுமில்லா ஒருவன்=(ஒருசார் மதம்) ரூபாரூப மென்று கூறும் அப்பக்கமுமில்லாத ஒருவன். உவளகம்=ஒரு பக்கம்; "உவளகமதிலோர் பக்கம்" என்பது திவாகரவேதுகை.

நாபியுடை யெவ்வுயிர்க்கு நாயகனா யாதியில்லா
நாபியுள்ள வெம்மிறையை நண்ணுவனோ பொன்மயிலே. (க0)

உள்ளத்தி லுள்ளுநரை யோர்ந்தணைத்தங் காளுமிறை
தள்ளா தெனைக்கொளுமோ சாற்றாய்நீ பொன்மயிலே. (கக)

நேசமுளோ ரெவ்வருக்கு நித்த சுகங்கொடுக்கும்
தேசுடையா னிங்கெனக்குஞ் சிக்குவனோ பொன்மயிலே. (கஉ)

தேடக் கிடையாத செல்வமுடை யானையினிக்
கூடிநனி வாழ்வேனோ கூறாய்நீ பொன்மயிலே. (கங)

தேடுவார்க் கின்பந் தெவிட்டப் பகுப்பவனைக்
கூடுவதெக் காலங் குயில்வாய்நீ பொன்மயிலே. (கச)

எந்தலைவ னுமிறைவ னெல்லார்க்குந் தாமிறைவன்
வந்தருள்வ தெந்நாள் வழுத்தாய்நீ பொன்மயிலே. (கரு)

சித்திரத்தி னும்பொறிக்க வொண்ணாத் திருவழகைச்
சித்தத்தி னாலணைந்தாற் றீருமோ பொன்மயிலே. (கசு)

கண்டுகளித் தெம்மிறையைக் காதலற வேகூடிக்
கொண்டிருந்தா லன்றோ கொடுக்குமின்பம் பொன்மயிலே. (கஎ)

நீடுஞ் சிரகிரிமே னிற்குமணி மண்டபத்தின்
மேடைதனி லெம்மிறையை மேவுவனோ பொன்மயிலே. (கஅ)

வருவானோ வாரானோ வென்னுமோ ரையம்
கருகவொரு நிச்சயந்தான் காட்டாயோ பொன்மயிலே. (க௯)

தேம்பெருகு சந்தமத்தர் தேடியிட மார்க்கமின்றிச்
சாம்பலிட்டு மையறந்த சாமியெங்கே பொன்மயிலே. (உ0)

என்னை மறவா திருத்தியெனக் கைம்மருந்து
தன்னையிட்ட சாமிசதி செய்வானோ பொன்மயிலே. (உக)

நாட்ட மிருக்கவென்று நாடிவந்து மாயத்தூள்
போட்டதுரை யென்னைவிட்டுப் போனதென்னை பொன்மயிலே. (உஉ)

பூமணத்தை நாடாமற் போட்டபொடிக் காரனின்னந்
தாமதந்தான் செய்தாற் சகிப்பேனோ பொன்மயிலே. (உங)

கட்டிக்கொள் வேனெனவே கைப்பரிச மிட்டதுரை
எட்டிப்பா ராதிருப்ப தென்னேயோ பொன்மயிலே. (உச)

---

உ0. “சாம்பலிட்டு மையல் தந்த சாமி” என்பது அடிகளுடம்பிலே இறைவ திருநீறு பூசினனென்பதை யுணர்த்துகின்றது. இது, சரித்திரத்திலும் வெளிய கின்றது. உக-ல் “கைம்மருந்து” என்றதூஉம், உஉ-ல் “தூள்” என்றதூஉம், உங- “பொடி” என்றதூஉம் இத்திருநீற்றையே குறிப்பிட்டன என்னலாம்.

மந்திரங்கார் மையில் வசப்படா னைப்பிடிக்கத்
தந்திரம தொன்றெனக்குச் சாற்றாய்நீ பொன்மயிலே. (உ௫)

கட்டழக னெங்கோன் கமல சரணனை
எட்டிப் பிடிக்கவகை யில்லையோ பொன்மயிலே. (உ௬)

தன்னந் தனிப்பெரிய சாமி வசப்படுமா
றென்ன மருந்திடலா மீண்டுரையாய் பொன்மயிலே. (உ௭)

தேவாதி தேவன் சிவஞான தேசிகனை
வாவென் றழைத்துவர மாட்டாயோ பொன்மயிலே. (உ௮)

இரவுபக லாகவிங்கே யெண்ணியுழல் பாங்கைத்
துரைமக னாரிடம்போய்ச் சொல்லாயோ பொன்மயிலே. (உ௯)

அத்த னருமறையோ னண்டநிரை யெல்லாமாள்
வித்தகனுக் கென்னை விளம்பாயோ பொன்மயிலே. (௩௦)

திக்கனைத்தும் போற்றவுள்ள சித்தாந்த முத்தையற்குப்
பக்குவப்பட் டேனெனநீ பன்னாயோ பொன்மயிலே. (௩௧)

வேலைப் பிடித்தசெங்கை வேந்தை யழைக்கவுன்றன்
காலைப் பிடித்தேனென் காதலாற் பொன்மயிலே. (௩௨)

அம்பரம தானவெங்க ளண்ண றிருவடியைக்
கும்பிட்டே னென்றுசொல்லிக் கூட்டிவா பொன்மயிலே. (௩௩)

வீட்டுக்குட் டங்கி வெளிப்படா மன்னவனைக்
கூட்டிக் கொடுப்பலென்று கூட்டிவா பொன்மயிலே. (௩௪)

பொன்னுசை பெண்ணுசை பூவாசை நாடேனீ
என்னுசை நாதற் கியம்பிடாய் பொன்மயிலே. (௩௫)

சாவுபிறப் பென்னுந் தடங்கடலில் வீழ்ந்தேனென்
காவலனுக் கோதாய் கரையேற்றப் பொன்மயிலே. (௩௬)

சித்த மிகவுழங்கிச் சீர்மை குலைந்திடுமுன்
முத்திகொடு வென்றே மொழியவற்குப் பொன்மயிலே. (௩௭)

ஆராய வொண்ணு வகண்டசிவ னுக்கெனது
பூராய மெல்லாநீ போதிப்பாய் பொன்மயிலே. (௩௮)

ஒப்பில் பரவெளியி லுள்ள பரசிவத்தைத்
துப்புரவின் றிங்கழைக்கத் தூதுபோ பொன்மயிலே. (௩௯)

இன்பக் கடல்படிந்த வெந்தை யருணகிரி
அன்புக் கிசைந்தவனை யாளவுரை பொன்மயிலே. (௪௦)

# ௬௯. குருபரக்கண்ணி.

பூவேறு கோனும் புரோகிதனும் புங்கவரும்
நாவார வாழ்த்து நலமே குருபரனே.

அண்டபகி ரண்ட மடங்கவொரு பூரணமாக்
கண்டபொரு ணீயேயென் கண்ணே குருபரனே.

என்றுமென துள்ளே யியங்கும் விழுப்பொருளாய்
நின்றருளு ஞான நிலையே குருபரனே.

எல்லாரு நல்லகதி யெய்தவென்று மாமறைகள்
சொல்வதுபோ னானுமிங்கே சொன்னேன் குருபரனே.

கேட்பார் செவிகொடுத்துக் கேளாம லும்போவார்
ஆட்படுவார் காண்ப தரிதே குருபரனே.

மோசந் திருட்டு மொழிமாறிப் பேசுதற்கிங்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே.

தேசிக நிந்தனையூன் சேருமுயிர்க் கொலைக்கிங்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே.

நீசர் நுகர்லகரி நெய்யொழுகு மூன்புசிப்புக்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே.

பேசு மசத்தியங்கள் பேதகங்கள் சூத்திரங்கட்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. (கூ

மோசப்பொய்ப் பத்திரங்கண் மோசப்பொய்ச் சத்தியங்கட்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. (க0

ஏசற்ற புத்தேள்சொத் திட்டும் பிறர்பொருள்கட்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. (கக

வேசை விபசார மெய்யன் பரையிகழ்தற்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. (க௨

காசுபணந் தேடிக் கணிகையரைப் புல்குவதற்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. (கங)

மாசைரச வாதசித்தி மைவசியங் கைம்மருந்துக்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. (கச)

---

கங. கணிகை = பொதுமகள் = விலைமகள்; நிகண்டுகள் காண்க.

தாசரையுந் தம்படிற்றுச் சார்நடத்தி யேவவிங்கே
ஆசைப் படுவோ ரதிகங் குருபரனே. (௧௫)

கூசத்து மங்கைமயல் கூறுங் கதைகளுக்கே
ஆசைப் படுவோ ரதிகங் குருபரனே. (௧௬)

மாசற்ற வுன்னைவிட்டு மண்ணைகளை யேவணங்கற்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. (௧௭)

தீபந் தனையேற்றிச் செங்கைகுவிப் பார்களருட்
டீப மிருக்குநிலை தேரார் குருபரனே. (௧௮)

சந்திரனைச் சூரியனைத் தாழ்வார்க ளந்தரங்க
சந்திரனைச் சூரியனைச் சாரார் குருபரனே. (௧௯)

என்றுநணி நாடினுன்னை யீட்டியுள்ள தேட்டமெலாம்
குன்றிவிடு மென்பவரு முண்டே குருபரனே. (௨௦)

முத்திநிலைக் கேசிவனை முன்னிநிற்க வேண்டுமிக
உத்திக்கின் றென்பவரு முண்டே குருபரனே. (௨௧)

உத்தியெனும் பூவாழ்க்கை யுன்னுநரைச் சத்தியரி
பத்திசெயப் பன்னுநரு முண்டே குருபரனே. (௨௨)

ஐந்தொழிலு முன்னிடமென் றுய்ந்தறியா மண்ணையெலாம்
இந்தவித மெண்ணி யிடையுங் குருபரனே. (௨௩)

இத்தகைய மாந்த ரிருக்குங் குழுவிடைநான்
எத்தனைபோ தித்தாலு மென்னை குருபரனே. (௨௪)

எங்கு மிருக்குமென்பா ரின்னவித மென்றறியார்
அங்கிங் கெனவே யலைவார் குருபரனே. (௨௫)

நோக்கதனை மூக்குநுனி நெற்றிநுதல் வைப்பார்கள்
நோக்கினதங் கென்னெனவு நோக்கார் குருபரனே. (௨௬)

நோக்கறிவு சிற்றறிவாக் காண்டவினு ளேக்குமதைக்
காக்குமறி வுண்டெனவுங் கண்ணார் குருபரனே. (௨௭)

சின்னாட் டொழுதுவினைச் சேர்வாற் றுயருறுகால்
உன்னைவிட்டு நிற்பவரு முண்டே குருபரனே. (௨௮)

செல்வமிருந் தால்வணங்கிச் செல்வமொழிந் தால்விடுவோர்
ஒல்குமிடை வேசியரை யொப்பார் குருபரனே. (௨௯)

---

௧௭. மண்ணை = பேய்.

௨௨. உத்தி = யோசனை; ௧௩ — ௬௦ - ன் குறிப்புரை காண்க.

இன்புதுன்பி ரண்டினுமுன் னேசிலடிக் கன்புடையார்
அன்புகிளர் பத்தினிபோ லாவார் குருபரனே. (௩௦

இம்மைதனி னல்லோரா யுள்ளா ரிடுக்கணுறின்
உம்மைவினை யென்பா ருயர்ந்தோர் குருபரனே. (௩௧

காரார் பிரவாகம் போலிருக்குங் கன்மமுனைப்
பூராவாக் கூடினல்லாற் போமோ குருபரனே. (௩௨

கண்ணிலார் வெய்யோனைக் காணா ரவர்போலக்
கண்ணுணர்வி லார்காணார் கண்ணே குருபரனே. (௩௩

எட்டுருவி னுங்கலந்தவ் வெட்டினுக்கு மேலானோய்
கிட்டுவார்க் கன்றோ கிடைப்பாய் குருபரனே. (௩௪

அழுதபிள்ளை யேபா லருந்துமது போலத்
தொழுதபிள்ளைக் கன்றோ சுகமாங் குருபரனே. (௩௫

தேடக் கிடையாத தெள்ளமுதைச் சேரவென்று
நாடித் திரிந்தானண் ணாதோ குருபரனே. (௩௬

தன்னைப் பொதிந்திருக்குஞ் சட்டகமு மித்தையெனின்
அன்னியப்பண் டங்கணிலை யாமோ குருபரனே. (௩௭

பாசபந்த மாகநவில் பாலகரை யீனுமில்லத்
தாசைதன்னை யாளினரு ளாமோ குருபரனே. (௩௮

தூண்டிலிரைக் காசைகொண்டு துஞ்சுமச்சம் போன்மடமை
பூண்டுலக விச்சையிலோ போவேன் குருபரனே. (௩௯

தந்த வறிவிருக்கத் தந்தைநீ தானிருக்க
எந்தவா வீண்போவே னீசா குருபரனே. (௪௦

படித்தபடி நில்லாப் பதடிகள்போ னானும்
நடித்துத் திரிவேனோ நாதா குருபரனே. (௪௧

கத்திநிலை விட்டே கதைகளினிப் பேசாமல்
சித்தந் தனையடக்கச் செய்யாய் குருபரனே. (௪௨

இப்பிறவி வீணாகி யின்னுமொன்று வந்தானும்
அப்பிறவி யுன்னையலட் டாதோ குருபரனே. (௪௩

சென்மமெய்து மென்றாலிச் சென்மந் துறவுபுகின்
சென்மமெய்தா தென்பதையுந் தேர்ந்தேன் குருபரனே. (௪௪

---

௩௧. உம்மை=முற்பிறப்பு.
௩௪. எட்டுரு=பூதமைந்தும், சூரியனும், சந்திரனும், உயிருமாம்.
௩௭. சட்டகம்=வடிவம்.

நீநா னெனும்பேத ஞாயமதை நீவிரிப்பா
யானுலென் ஞாய மறுமே குருபரனே. (௪௫)

என்வழக்கு நின்வழக்காக் கண்டே னெனக்கருளாத்
தன்மைதனக் கோர்ஞாயஞ் சாற்றாய் குருபரனே. (௪௬)

கண்டிறமாப் புற்றிருக்கக் காட்டலரு ளென்னுமொழி
கண்டேனென் மட்டிலதைக் காணேன் குருபரனே. (௪௭)

என்னடியார்க் கெஞ்ஞான்று மின்னலறி வேமெனநீ
சொன்னசொல் வீணோ சொல்லாய் குருபரனே. (௪௮)

சிந்தித்த வெல்லாஞ் சிவஞான தேசிகமாப்
பந்தித்து வைக்கவருள் பண்ணாய் குருபரனே. (௪௯)

அண்ண லருணகிரி யன்புக் கிரங்கியவோர்
தண்ணளிதந் தாளெனையுந் தாய்போற் குருபரனே. (௫௦)

---

# எ௦. சதாசிவக்கண்ணி.

---

சீராருஞ் செல்வஞ் சிறந்தசச்சி தானந்தத்
தாராள வாழ்வே தனியே சதாசிவமே. (௧)

இல்லையென்று சொல்பவர்க்கு முண்டென் றிசைப்பவர்க்கும்
நல்லமை யாயிருக்கு நட்பே சதாசிவமே. (௨)

பாவிகளைப் புண்ணியரைப் பட்சமுட னேம்பியவர்க்
காவனதந் தாளு மரசே சதாசிவமே. (௩)

ஞாலத் தருக்கா னமனுலகெய் தாதிருக்கக்
காலைப் பிடிப்பார் கருத்தே சதாசிவமே. (௪)

பாடவுள்ள மூர்த்தம் பலமறைசொன் னுலுமெற்குத்
தேடிவந்த சேயே சிரேட்டஞ் சதாசிவமே. (௫)

ஏசில் சிவவுருவ மெத்தைக்கண் டாலுமுற்ற
ஈசனெனத் தாழ்த லெழிலே சதாசிவமே. (௬)

அஞ்ஞான மென்னுமழுக் கான்மாவை மூடினதால்
மெய்ஞ்ஞான மின்றலைதன் மெய்யே சதாசிவமே. (௭)

சேற்றைமழை போக்குமன்றிச் சேறகற்று தவ்வாறன்
ஆற்றலன்றிப் போகா தகத்தஞ் சதாசிவமே. (௮)

கண்ணன் முகம்பார்க்கக் கண்ணாடி வேண்டுமெப்போல்
விண்ணேறற் குன்றனருள் வேண்டுஞ் சதாசிவமே.

நல்லறலிற் பானுவிம்ப நன்றாத் தெரிவதுபோல்
நல்லுயிரி னீவிளங்கு ஞாயஞ் சதாசிவமே.

ஆசைமலை போலவிங்கே யானாலும் போங்காலம்
காசும் வராதேயென் கண்ணே சதாசிவமே.

பொன்னீட்டி னோரைவிட்டுப் போனாலும் போமவரப்
பொன்னைவிட்டுப் போனாலும் போவார் சதாசிவமே.

காயகற்ப வாழ்வுமொரு காலமழி வாமெனிற்கீழ்
ஆயபுலை யாக்கைநிலை யாமோ சதாசிவமே.

திண்மையுற்ற சித்தியெல்லாந் தீழ்ப்பாமென் றல்லமனார்
உண்மைவித்தை காட்டினது முண்டே சதாசிவமே.

தூயபடி கம்போன்ற வான்மாவைத் துப்புடையோர்
காயமுள்ள போதேதான் காண்பார் சதாசிவமே.

நான்சாமி யென்னுமை னல்லருளி னூனுநிற்கும்
ஓஞ்சோகம் பாவனையோ ருய்வார் சதாசிவமே.

பொய்ம்மார்க்க மத்தனையும் பொய்யெனவே தள்ளிநிற்கும்
மெய்ம்மார்க்க மொன்றேதான் வேண்டுஞ் சதாசிவமே.

பொய்வீடு கட்டியதிற் பொய்வாழ்க்கை யுற்றேனுன்
மெய்வீட்டு வாழ்க்கையினி வேண்டுஞ் சதாசிவமே.

கவ்வுநாய் வெள்ளெலும்பைக் கவ்விக் கடிப்பதுபோல்
இவ்வுலக விச்சையிது வேறோ சதாசிவமே.

இவ்வுலக விச்சையென்ப தில்லைநிலை யாமுனடி
எவ்விதத்துஞ் சேரவெனு திச்சை சதாசிவமே.

கண்டனவெல் லாமறையக் காண்பதொன் று மேநிறையக்
கண்டு களிப்பதெந்தக் காலஞ் சதாசிவமே.

பாட்டிற் பயில்வதுபோற் பட்டாங் கபயாத்தம்
காட்டி யழைப்பதெந்தக் காலஞ் சதாசிவமே.

கூப்பிட் டழைத்திதன்மேற் கொள்பிறவி யில்லையெனக்
காப்பிட்டு வைப்பதெந்தக் காலஞ் சதாசிவமே.

---

கக. சோகம்பாவனை. இதன் பொருள் விவரமெல்லாம் ரு-வது மண்டலம திருப்பாவின் கக—ஆம் பாட்டின் குறிப்புரையிற் காணலாம்.

அறிவை யறிவதுதா னர்த்தமென்று சொன்ன
குறியிற் கிடப்பதெந்நாள் கூறாய் சதாசிவமே. (உ௪)

நினைப்பு மறப்புமற்று நிற்குஞ் சமாதிக்
கெனைப்புணர்த்த லெந்நா ளியம்பாய் சதாசிவமே. (உ௫)

முப்பத்தா றிற்குமுதன் மூலமா யுள்ளவுனை
எப்போ தடைந்துசுக மேற்பேன் சதாசிவமே. (உ௬)

சற்குருவுக் குச்சீடன் சற்புத்ர னவதுபோல்
அற்பனுமுன் னற்புதல்வ னானேன் சதாசிவமே. (உ௭)

தந்தைநீ சேய்நானென் றுள்ள தகைமையினால்
எந்தவித மும்பற் றிருக்குஞ் சதாசிவமே. (உ௮)

பாலகரை யிங்கே படிப்பிப்போர் பற்றுவது
போல வெனைவலித்துப் போவாய் சதாசிவமே. (உ௯)

காட்டுமுழைவை முன்னுட்டைக் காட்டுவது போனமன்முன்
காட்டிக் கொடுப்பாயோ கந்தா சதாசிவமே. (௩௦)

நீலக் கடுவிழியார் நேயமறந் துன்னருளாம்
பாலைக் குடிக்கவெனைப் பாராய் சதாசிவமே. (௩௧)

பேசும்பேச் செல்லாமுன் பேச்சா யிருக்குமெனின்
பாசமறு மன்றோகண் பாராய் சதாசிவமே. (௩உ)

சோற்றைப் புசித்துச் சுகம்பெறவென் றேம்புநெய்த்தோர்
ஊற்றுச் சடமயக்கை யோட்டாய் சதாசிவமே. (௩௩)

நிட்டைதனி லுண்மயக்கங் கொண்டிடார் நீளுடம்பு
விட்டாலு மம்மயக்க மேவார் சதாசிவமே. (௩௪)

தோன்று முயிர்க்குடம்பு தோன்றியமுன் னொடொடங்கி
ஈன்றவனெண் சொல்வோ ரெவரே சதாசிவமே. (௩௫)

இன்னுந்தா யுண்டென் றிசைக்காம லிப்பிறப்போ
டன்னையருட் சத்தியென வாக்காய் சதாசிவமே. (௩௬)

இப்பார் நகையினர்கட் கிட்டபதந் தேசமின்றி
எப்போது மெங்குநினை யென்னாய் சதாசிவமே. (௩௭)

---

உ௬. முப்பத்தாறு—ஆன்ம தத்துவம் – உ௪, வித்தியா தத்துவம் – எ, சிவ தத்துவம் – ௫.

௩௦. "கந்தாசதாசிவமே" என்றியம்பியவாற்றானும், ஈற்றுக்கண்ணியில் "எம்மா னருணகிரியீசா" எனக் கூறியவாற்றானும் சதாசிவம் எனக்கூறப்பட்ட பெயர்ப் பொருள் குமார சிவமேயல்லாது பிறிதில்லையென்க.

நீச்சுநிலை யற்றவரு ணேயப் பரவையினுன்
மூச்சடங்கி யேகிடக்க முன்னுய் சதாசிவமே. (௩அ)

உள்ளுக்குள் ளேதா னொளித்துக்கொண் டேயிருக்கும்
கள்ளப் பொருளைபெற்குக் காட்டாய் சதாசிவமே. (௩௯)

மாயையென்ப துன்னு மனமோக மாமதனை
மாய வுபாயமிழை மாசில் சதாசிவமே. (௪0)

நெஞ்சநல்ல தேலைந்து நல்லனவே நெஞ்சமொன்று
நஞ்சாகி னவ்வைந்து நஞ்சே சதாசிவமே. (௪௧)

ஐந்து மறிந்திடினு மைந்து மடங்கிடினும்
சிந்தைநிற்க நிற்றலன்றோ திட்டஞ் சதாசிவமே. (௪௨)

சாதனத்தி லேறமயந் தன்னைமறந் தேதுயிலின்
ஏதமுடைக் கேவலம்வந் தேயுஞ் சதாசிவமே. (௪௩)

சாதனத்தி லேறமயந் தாழ்ந்த விடயநினைப்
பேதுமுறு மேற்சகல மெய்துஞ் சதாசிவமே. (௪௪)

நானினைத்தா னீவாராய் நானினையே னேல்வருவாய்
ஈனமற்ற வுன்னிலைமை யென்னே சதாசிவமே. (௪௫)

வேமுனெடுத் தாலரிசி வெந்துகுழைந் தானுதவா
தாமெனவு நன்ற யறிந்தேன் சதாசிவமே. (௪௬)

நினக்குநா னுள்ளாயு நிற்கயன்மை யாயும்
எனக்குணீ யாயுநிற்ற லென்னே சதாசிவமே. (௪எ)

நானருளி லேயடங்க நல்லருளுன் கண்ணடங்க
நீநினைவு கூர்வதெந்த நேரஞ் சதாசிவமே. (௪அ)

எண்ணமறி வாய்முடிக்கு மெண்ணமறி யேன்றயவு
பண்ணியிட னிற்கே பரங்காண் சதாசிவமே. (௪௯)

எம்மா னருணகிரி யீசா வுனைமருவும்
செம்மாப் பெனுள்ளிரியச் செய்யாய் சதாசிவமே. (௫0)

---

ஆகப்பிரபந்தம் எழுபதினும் போந்த திருப்பாடல் — ககசசு
தெய்வ வணக்கச் செய்யுள் ௩
ஆகத் திருப்பாடல் ககசகூ

---

# எக. தேர்ந்தேனேயென்கண்ணி.

## சத்திநிபாதவிளக்கம்.

பொன்னொடு மண்ணொடும் போற்றுங் குமரேசன்
தன்னாணை யெல்லாந் தயாளமென்று தேர்ந்தேனே. (க)

அனாதிமல பந்தவுயி ரம்மலத்தை யாய்ந்து
மனோலயமுற் றுய்யவிவண் வந்ததென்றுந் தேர்ந்தேனே. (உ)

எம்பெருமான் சேவடிக்கன் பில்லாத சீவனெல்லாம்
தம்பெருமை குன்றித் தவிக்குமென்றுந் தேர்ந்தேனே. (ஙு)

மாயையின் பொய்ப்போக வாஞ்சைதனை மெய்யென்று
மாயுமுயிர் வந்துவந்து மாளுமென்றுந் தேர்ந்தேனே. (ச)

பொய்ப்போகங் கைத்தவர்க்குப் பூரணத்தைக் காட்டவெம்மான்
மெய்ப்போத கஞ்செய்யு மெய்ப்பரிவுந் தேர்ந்தேனே. (ரு)

செய்தவினைக் கீடாகச் சேர்ந்த பிறப்பினின்றும்
தெய்வமுயர் சென்மமதிற் சேர்க்குமென்றுந் தேர்ந்தேனே. (சு)

மாயையின்கர்ப் பத்துண் மலவிருளி லேகிடந்து
தோயுயிரைச் சுத்திசெய்வான் விட்டதையுந் தேர்ந்தேனே. (எ)

விட்டவுயி ராம்பசுவின் மெய்ம்மூல தேகமொளி
ஒட்டுமிடை மாயையெனு முண்மையையுந் தேர்ந்தேனே. (அ)

காரணவம் மூலவுடற் கட்டுயிர்க்குச் சூக்கமெனும்
சாரவுடம் பீதலருட் டாதையென்றுந் தேர்ந்தேனே. (கூ)

சூக்கவுயிர் தூலமெய்துங் காலமள வாகாயத்
தேக்கமுற்றுத் தான்கிடக்கு மென்பதையுந் தேர்ந்தேனே. (கo)

சூக்குமத்திற் பக்குவந்தான் கண்டாற் றொடர்புபற்றி
ஆக்கலசை யாத்தா வரத்திலென்றுந் தேர்ந்தேனே. (கக)

தாவரத்திற் பக்குவந்தா னுற்றூற் சரிக்குமுயி
ராவனவுள் ளூருருவ மண்ணுமென்றுந் தேர்ந்தேனே. (கஉ)

ஊருயிரிற் பக்குவந்தா னுற்று னுதகமதிற்
சேருயிருட் பல்லுருவஞ் சேருமென்றுந் தேர்ந்தேனே. (கஙு)

---

கஙு. பல்லுருவமென்றதனால், இங்கே ஒவ்வொரு பிறப்பிலும் பலமுறையெனப் பொருள் விரித்துக்கொள்ளவேண்டும். அவ்வாறனைத்திற்குங் கொள்க.

நீருயிரிற் பக்குவந்தா னுற்று னிகழ்விசும்பிற்
சாரங்கொள் புள்ளாச் சமையுமென்றுந் தேர்ந்தேனே. (

புள்ளுருவிற் பக்குவந்தா னுற்றுற் புவியிலுய்யும்
மள்ள விலங்குருவம் வாங்குமென்றுந் தேர்ந்தேனே. (

விலங்குருவிற் பக்குவந்தா னுற்றால் விவேகம்
இலங்குபல மக்களுடம் பேற்குமென்றுந் தேர்ந்தேனே. (

அம்மக்க ளிற்சிலர்தா மாசி றவமிழைத்துச்
செம்மைச் சுவர்க்கமடை வாரெனவுந் தேர்ந்தேனே. (

மானுடத்திற் பக்குவந்தா னுற்றவுயிர் மாண்புடைய
தானப் பரதகண்டஞ் சாருமென்றுந் தேர்ந்தேனே. (௧

பரதத்திற் பக்குவமாம் பண்படைநல் லாவி
பிரமமுத னன்குட் பிறக்குமென்றுந் தேர்ந்தேனே. (

நால்வருண மேவிநிற்கு ஞான்று புறமதமாம்
மால்கிளக்கு மார்க்க மருவுமென்றுந் தேர்ந்தேனே. (

புறமதத்திற் பக்குவமுற் றுலதுதான் போதச்
செறிவி லனித்தமுத்தி சேருமென்றுந் தேர்ந்தேனே. (௨

அந்த வனித்தமுத்தி யாகியபின் பாதியுடைச்
சொந்தவக மார்க்கமதிற் றோன் றுமென்றும் தேர்ந்தேனே. (௨

அகச்சமய மாறிலுள்ள சாதனமம் மூர்த்தி
பகமந்த்ர நிட்டைப் பதவளவுந் தேர்ந்தேனே. (௨

அக்கதிக்கட் பக்குவந்தா னுற்றவுயி ராகமத்தின்
மிக்கசித் தாந்தநெறி மேவுமென்றுந் தேர்ந்தேனே. (௨

சித்தாந்த சோபான நான்கிற் செழுஞ்சரியைக்
கொத்தா லுலோக முறுமெனவுந் தேர்ந்தேனே. (௨

கிரியைதனில் யோகினின்றுற் கேள்பூக்க வாழும்
இரிபில் சமீபமுரு வெய்துமென்றுந் தேர்ந்தேனே. (௨

மூக்கதியு மெக்காலு மொய்வினையின் போகமிவை
தொக்கென் றருவிருத்தல் சுத்தமென்றுந் தேர்ந்தேனே. (௨

---

கக. பிரமமுதனன்கு = பிரம சத்திரிய வைசிய சூத்திரம் எனப்படு நா
வருணம். இவ்வருணங்கள் தொழிலாற் கொள்ளப்படுவன.

உங. பகமந்த்ரம்=மோக்ஷமந்திரம்; வடநூன் முடிபு. (ஸூ ஓ) பகம்=மோ

உச. ஆகமத்தின் மிக்க சித்தாந்தம்=ஙசு—தத்துவங்களைக்கூறு சித்தாந்தம்.

உஎ. வினையின் போகம்=சரியை கிரியை யோகமென்னுந் தொழில்வழியெ
போகம். தொக்கென் றருவிருத்தல்=குறைவென்று (ஞானமாகிய) அருவிலிருத்த

சுத்தவிந்தப் பக்குவத்தைத் தூயதல மென்றுமுயிர்ச்
சித்தின் விளக்கமென் றுஞ் சேயருளிற் றேர்ந்தேனே. (உஅ)

இத்தலமெல் லாத்தவர்க்கு மேசிலனு வர்க்கவைந்து
கர்த்தருக்கு மெட்டாக் கதம்வெனவுந் தேர்ந்தேனே. (உ௯)

அருளொன்னுஞ் சிற்சத்தி யங்ஙன்முட் டங்க
உருவில் விதேகமுத்திக் குன்னுமென் றுந் தேர்ந்தேனே. (௩௦)

இத்தாத்தி லைக்கியத்தை யெய்தறுணி பென்னுமிச்சை
உத்துங்க மாக வுதிக்குமென் றுந் தேர்ந்தேனே. (௩௧)

அப்பாமே யாசா னிலிங்கமடி யாரெனப்பேண்
துப்புச் சமரசமுந் தோன்றுமென் றுந் தேர்ந்தேனே. (௩உ)

பிறப்பிறப்புக் கேதுவென்னும் பெந்தவுத்தி யோகம்
துறக்க விராகமக்காற் றேன்றுமென் றுந் தேர்ந்தேனே. (௩௩)

ஆனசமு சாரமென்று கேட்டாலு மஞ்சியுள்ள
மானசமு மூச்சு மடங்குமென் றுந் தேர்ந்தேனே. (௩௪)

பாச மகன்றமுத்தர் பக்கலைவிட் டோகாத
வாசமு நற்பணியு மல்குமென் றுந் தேர்ந்தேனே. (௩௫)

நற்பணியின் முத்தரயர் நற்பூசை போலவுயிர்
உற்சாக மாயிழைக்க வுன்னுமென் றுந் தேர்ந்தேனே. (௩௬)

அன்னணமற் பாற்பூசை யாற்றிச் சிவபணியும்
நன்னருறச் செய்யுமென்று நன்றாகத் தேர்ந்தேனே. (௩எ)

அன்பாற் சிவசரிதங் கேட்கு மனுரதமும்
நன்கார் சிவத்தைநெஞ்சி னூட்டுமென் றுந் தேர்ந்தேனே. (௩அ)

மோக்கப் பிரசாத போகமோ கிக்குமங்ஙன்
ஆக்கியுற்ற போக மருந்துமென் றுந் தேர்ந்தேனே. (௩௯)

முத்தருற வாதி மொழிந்தவெட்டும் வாக்கோடு
சித்தமுடம் பென்பனவுஞ் சுத்தியென் றுந் தேர்ந்தேனே. (௪௦)

இச்சுத்தி சிவனுற்று லெம்பெருமான் பித்தேறி
இச்சகத்துப் பற்றையிகந் தேகுமென் றுந் தேர்ந்தேனே. (௪௧)

எந்தை பராபரத்தை யெண்ணியய ரிக்கருமம்
பந்தந் தராவெனநூல் பன்னுமென் றுந் தேர்ந்தேனே. (௪உ)

---

௩௦. "விதேக முத்தி" இன்னதென்பதைச் சேக்கிழார்வேளிறுமாப்பில் உஅ, உ௯ ஆஞ் செய்யுள்களி லறியலாம்.

இப்பருவ மேவிளக்கும் பத்திசத்தி யுட்பதிந்தால்
ஒப்பில் விவேக முதிக்குமென்றுந் தேர்ந்தேனே. (சங)

பத்தியெனு மஞ்சனத்தை யிட்டாற் பரமகுரு
சுத்திசெய வென்றெதிரே தோன்றுமென்றுந் தேர்ந்தேனே. (சச)

## ஞானசாரியரருள் விளக்கம்.

இந்தவுயர் பக்குவமுற் றுலனுவிற் கெம்பெருமான்
வந்துமலம் போக்கும் வழுத்துமென்றுந் தேர்ந்தேனே. (சரு)

மாநுடத்தை மாற்றவென மாநுடமா வந்துநின்று
நானென்னல் சீத்தறிவு நல்குமென்றுந் தேர்ந்தேனே. (சசு)

தாங்கித்தா ளுக்கியென்றுந் தன்னடிக்கீழ் வைத்தனிலை
ஆங்கதியென் றுகமறா லார்க்குமென்றுந் தேர்ந்தேனே. (சஎ)

இந்தவுயர் தீட்சைகுரு மேனியினு மேர்ச்சீடன்
சிந்தையினு நின்றருளே செய்யுமென்றுந் தேர்ந்தேனே. (சஅ)

கள்ளமில்விஞ் ஞானகலர் க்ட்கிறைவ னாருடான்
உள்ளுளே நின்றுமறைப் போட்டுமென்றுந் தேர்ந்தேனே. (சகூ)

தண்ணருளுட் கன்மமலஞ் சார்ந்த பிரளயர்க்குக்
கண்ணுதலா நின்றுகதி காட்டுமென்றுந் தேர்ந்தேனே. (ரு0)

தெவ்விலருண் மும்மலத்துச் சித்தாஞ் சகலரெதிர்
அவ்வவுரு வாய்நின் றருளுமென்றுந் தேர்ந்தேனே. (ருக)

குருவென்னுஞ் சொற்கருத்தங் குற்சிதமா மோகம்
மருவாம னீக்குகின்ற மன்னனென்றுந் தேர்ந்தேனே. (ருஉ)

## தீட்சை விளக்கம்.

காரண மாயையெனுங் கர்ப்பங் கடத்தியெழிற்
பேருடலி லேற்றுவது பீசமென்றுந் தேர்ந்தேனே. (ருங)

சன்மமுளே யாயிருக்குங் கன்மஞ் சவட்டியந்தச்
சென்மமுடி வாள்வதுநிர்ப் பீசமென்றுந் தேர்ந்தேனே. (ருச)

தெருளாரு நிர்ப்பீச தீட்சைசெய்த போதே
ஒருமூன்று நீக்கியிட லுண்டெனவுந் தேர்ந்தேனே. (ருரு)

மூக்கருமமுந்தீர்ந்த வக்கணமே முத்தியுறல்
சிக்ககன்ற சத்யநிரு வாணமென்றுந் தேர்ந்தேனே. (ருசு)

---

சரு. வழுத்தல் = சொல்லல்; உஎ—எகூ-ன் குறிப்புரை காண்க.
ருசு. சத்யநிருவாணம் – வடநூன்முடிபு.

பேசிந் நிருவாணம் பெற்றானென் பாற்கொருகால்
தேசொ டுமாபதியார் செய்ததென றேர்ந்தேனே. (௫௭)

சீரியநிர்ப் பீசத்துந் திண்மைப் பிரார்த்தமன்
றோரிரண்டு நீக்குதலு முண்டெனவுந் தேர்ந்தேனே. (௫௮)

இத்தீட்சை பெற்றோர்க் கெடுத்த வுடலொழிகால்
நத்துபிரா ரத்த நசிக்குமென்றுந் தேர்ந்தேனே. (௫௯)

இந்தநிரு வாணமென்ப தின்பேர் சிரமிதனால்
பந்தமற்ற பேர்தாம் பலவரென்றுந் தேர்ந்தேனே. (௬௦)

சேமநல்கு மீதசத்ய தீட்சையென்று மித்தையுற்றோர்
ஆமிலத்தைப் போலிருப்பா ரன்பரென்றுந் தேர்ந்தேனே. (௬௧)

தீட்சையெனுஞ் சொற்கருத்தந் தெய்வமொன்றைப் போக்கியொன்றை
மாட்சியரு ளாலே வழங்கலென்றுந் தேர்ந்தேனே. (௬௨)

நெல்லிற் றவிடுமியுண் ணிற்குமுளை போலிருக்கும்
பொல்லா மலமூன்றும் போக்கலென்றுந் தேர்ந்தேனே. (௬௩)

எக்காலு நீங்காத வெங்கடவு டன்னிலையை
எக்கழுத்த வன்பினனி யீதலென்றுந் தேர்ந்தேனே. (௬௪)

மேலுரைத்த பக்குவங்கண் மேவார்க்கு மேன்மார்க்கம்
சீலமுட னீயாது தெய்வமென்றுந் தேர்ந்தேனே. (௬௫)

மீன்சினையைப் பார்ப்பதுபோன் மின்விழியாற் பேதித்தல்
தானயன தீட்சையென்று சங்கையறத் தேர்ந்தேனே. (௬௬)

ஆமையண்ட நோக்குதல்போ லாஞ்சோகம் பாவனையில்
தேமருவல் பாவனையென் றீட்சையென்றுந் தேர்ந்தேனே. (௬௭)

கோழியண்டங் கோடலொப்பக் கொள்கரங்க ளாலணைத்தல்
பாழிப் பரிசமென்ப பாங்கரென்றுந் தேர்ந்தேனே. (௬௮)

நெஞ்சினடு வேறுழைந்து நிற்குமுயி ரைக்கிளப்பிச்
செஞ்சிவத்தி லேநிறுத்தல் யோகமென்றுந் தேர்ந்தேனே. (௬௯)

மந்திரத்தி னாயகமா மந்திரங்கள் சொல்லிவைத்தல்
செந்திருக்கொள் வாக்கெனுமோர் தீட்சையென்றுந் தேர்ந்தேனே. (௭௦)

புத்தகத்தி னேராப் பொருள்விளக்கிக் காட்டுவது
சித்துரைக்குஞ் சாத்திரமென் றீட்சையென்றுந் தேர்ந்தேனே. (௭௧)

---

௫௭. "பெற்றான்" என்பான் கதி யாதாம்? என்பது பற்றி ௪௯—௧௪ ன் குறிப்புரையிற் கூறியாயிற்று.

௫௮. பிரார்த்தம்—பிராரப்தம் என்னும் வடசொற் சிதைவு.

கட்டீட்சை யாதி கழறியுள்ள வோராறும்
சிட்டரடை மெய்ஞ்ஞான தீட்சையென் றுந் தேர்ந்தேனே. (எ௨

## ஓரெழுத்து விளக்கம்.

சின்மயமாத் தீக்கையெல்லாந் தேசிகன்சொல் லோர்மொழியில்
தன்மயமாக் காட்டுமென் றுஞ் சங்கையறத் தேர்ந்தேனே. (எ௩

ஓர்மொழியே மோனநிலை யோர்மொழியே நிற்குநிலை
ஓர்மொழியே யோரெழுத்து மென்றவுண்மை தேர்ந்தேனே. (எ௪

ஓரெழுத்தே யோதாம லோதவுள்ள தென்றுமந்த
ஓரெழுத்தை யோலையெழுத் தில்லையென் றுந் தேர்ந்தேனே. (எ௫

ஓரெழுத்தே பற்றியவா ரெவ்வவந்து முற்றுமென
ஆரணந்தா னேதுவண்ண மாக்குமென் றுந் தேர்ந்தேனே. (எ௬

ஓரெழுத்தே சித்தாந்த மோரெழுத்தே வேதாந்தம்
ஓரெழுத்தே நாதாந்த வுண்மையென் றுந் தேர்ந்தேனே. (எ௭

ஓரெழுத்தே போதாந்த மோரெழுத்தே யோகாந்தம்
ஓரெழுத்தே யோவாக் கலாந்தமென் றுந் தேர்ந்தேனே. (எ௮

ஓரெழுத்தே யொன்றிரண்டென் றோதாக் சமரசமும்
ஓரெழுத்தே யெங்குமுள்ள வுண்மையென் றுந் தேர்ந்தேனே. (எ௯

ஓரெழுத்தே யைந்தெழுத்து மோரெழுத்தே யோமெனலும்
சீரியசின் முத்திரையு மென்றுநனி தேர்ந்தேனே. (அ0

அவ்வெழுத்திற் கைந்துகுறி யாமவற்றுண் மூன்றசத்து
செவ்வையுள்ள மற்றிரண்டுந் தீர்க்கமென் றுந் தேர்ந்தேனே. (அ௧

அவ்வெழுத்தை ஞாதுருஞே யங்காட்சி யற்றுளவோர்
தெவ்விலின்ப மாமதுரத் தேனெனவுந் தேர்ந்தேனே. (அ௨

## வைதிகத்திருநீற்று வண்மைவிளக்கம்.

வீட்டகத்திற் சாணி மெழுகிநலஞ் செய்தலொக்கும்
சேட்டமறை நீறு திமிர்தலென்று தேர்ந்தேனே. (அ௩

நீறிடா நெட்டுடம்பு சுத்தமில்லை நீத்தவுயிர்
ஊறகத்தி லேயுறைவோ ராக்குமென் றுந் தேர்ந்தேனே. (அ௪

---

எ௨. கட்டீட்சை = நயனதீட்சை.

அ0. "ஓம்" இதுவே சூக்கும சடக்கரம்.

அ௪. ஊறகத்தில் = இடையூறுள்ளவிடத்தில்.

ஆபாத சூட மணியுயிரா டாவிடினும்
ஆபாத சூடநல மாகுமென்றுந் தேர்ந்தேனே. (அரு)

மேலாந் தவத்தழகை வெண்ணீ றளிக்குமென
நூலாளர் வாக்கு நுவலுமென்றுந் தேர்ந்தேனே. (அசு)

சாத்துவிக மெய்ஞ்ஞானந் தான்வளர்ப்ப னக்கினியிற்
பூத்ததிரு நீற்றைநனி பூசலென்றுந் தேர்ந்தேனே. (அஎ)

உற்றபிணி தீர்ப்பா னுரியோர்க் கருமருந்தும்
அற்றமற்ற வெண்ணீறே யாகுமென்றுந் தேர்ந்தேனே. (அஅ)

அம்பரத்தி னுசைவிஞ்ச வம்புவியி னுசைதுஞ்ச
எம்பெருமா னிட்டபொடி யீதெனவுந் தேர்ந்தேனே. (அகூ)

எத்தனைதாங் கற்றாலு மெத்தனைதாம் பெற்றாலும்
இத்திரு நீற்றைவிடா ரின்பரென்றுந் தேர்ந்தேனே. (கூ0)

## குகப்பிரமானந்த விளக்கம்.

வெறுவெளியிற் கையேந்தி வேண்டுவதிற் றேவை
அறியவொண்ணா துண்ணுழைந்தா லாகுமென்றுந் தேர்ந்தேனே. (கூக)

உண்ணுழைந்து கார்நீத் தொளிருயிரைக் கண்டபின்பு
தண்ணருளைக் காண்டல் சாதமென்றுந் தேர்ந்தேனே. (கூஉ)

தனக்குணர்ச்சி யாகநிற்குஞ் சத்தியைக்கண் டாங்கே
தொனிப்பின்றி யாழ்தல் சுகமெனவுந் தேர்ந்தேனே. (கூங)

அவ்வருளிற் றோயா தமுந்தியரு ளாதனண்ணல்
செவ்வியசம் பன்னசுகா தீதமென்றுந் தேர்ந்தேனே. (கூச)

சொன்னசுகா தீதநிலைத் தோய்விற் பசுஞானம்
உன்னாது சாமங் கொருவனென்றுந் தேர்ந்தேனே. (கூரு)

ஒருவனெனு மெம்மா னொளியோன்கண் ணேக்கைத்
தெரியா தடக்குதல்போற் செய்யுமென்றுந் தேர்ந்தேனே. (கூசு)

சிவபோ தத்தையந்தத் திட்டமிறை யோன்கவர்கால்
ஆவியுந் தேவனென வாகுமென்றுந் தேர்ந்தேனே. (கூஎ)

நித்த விரண்டுமொன்று நிற்கு மநுதிநிலை
அத்துவிதங் காண்டலிது வாகுமென்றுந் தேர்ந்தேனே. (கூஅ)

---

அரு. ஆடாவிடினும் = நீரில் முழுகாவிடினும்.

புந்திநெறி யாமிதனைப் போரூர்ச் சிதம்பரப்பேர்
எந்தையை யாண்டமுரு கீயுமென்றுந் தேர்ந்தேனே.

ஆனந்த வாழ்வை யருணகிரி நாதனுடை
யீனமறுத் தாண்டகுக னீயுமென்றுந் தேர்ந்தேனே.

## எஉ. பரம்பொருட்கண்ணி.

படைப்பாய் புரப்பாய்பின் பாழாக்கி யாள்வாய்
கடைப்பட்ட நாயேற்கென் கண்ணே பரம்பொருளே.

நீடனந்தச் சோதிவெளி நின்றுசுக துக்கமென்னும்
நாடகங்கள் செய்திடனு நட்பே பரம்பொருளே.

சிவனிடத்திற் சீவச் செயலொப் படைத்தோர்
அவனித் தொழில்விரும்பு வாரோ பரம்பொருளே.

உடல்பொரு ளாவியெல்லா முன்னிடமீந் துள்ளோர்க்
குடல்பொரு ளாவிதுண்டா வுண்டோ பரம்பொருளே.

சும்மா விராமலெனைச் சும்மா விருக்கவைத்த
அம்மா னுனக்கயனு ளுகேன் பரம்பொருளே.

சொல்லே றரும்புகழ்கள் சொன்னபெரி யோனடைந்த
எல்லா நலமுமெனக் கீந்தாள் பரம்பொருளே.

## எங. பூரணக்கண்ணி.

ஆரணஞ்சொல் கின்றபடி யஞ்சகத்தி லான்மாவிற்
பூரணம தாகப் பொலிந்துளவெம் பூரணமே.

எண்மைகணித் திந்நா ளெனக்கறிவை யூட்டவந்த
சண்முகமே யாதிசிவ சற்குருவே பூரணமே.

சுட்டுணர்வுஞ் சூனியமுஞ் சொல்லவொண்ணுச் சோதியென்று
கட்டுரைக்கு நான்மறையுங் காணுத பூரணமே.

ஆனியின் றெங்கணுமென் றுதிநீ நிற்றலினுல்
சூனியமென் றெவ்விடத்தைச் சொல்லலாம் பூரணமே.

மறப்பு நினைப்புமிலெம் மானுன் சுபாவச்
சிறப்பினை யாருரைப்பார் செவ்வனே பூரணமே. (௫)

வேதாக மங்களிகழ் வோரும் விவேகநிட்டை
ஓதாத வேட்டோரு மொன்றுரே பூரணமே. (௬)

அன்பான மூர்த்தியைப்போ லான்மாவு மாதல்வீ
டென்போ ரனுபவந்தா னில்லாரே பூரணமே. (௭)

சங்கப் பயிரவியைச் சாம்பவியைக் கேசரியை
அங்கமென வுள்ளகைகாட் டற்புதமே பூரணமே. (௮)

கைகாட்டு மார்க்கநின்றே காண்போர் நிருவிகற்ப
மெய்வாழ்க்கை மேவுவது மெய்யேயெம் பூரணமே. (௯)

ஈரெண் சகச்சிரசந் தப்பா வியம்பியமெய்
ஆரியனை யாண்டவின்ப வன்பேசம் பூரணமே. (௧௦)

---

ஆகப்பிரபந்தம் எழுபத்துமூன்றினும் போந்த திருப்பாடல் — ௧௨௬௨
கடவுள் வணக்கச் செய்யுள் . ௩
ஆகத் திருப்பாடல் ௧௨௬௫

---

## ஆனந்தக்களிப்பு.

ஆனந்த மேருக பிரமம்—சச்சி
தானந்த ஞான சதானந்த பிரமம்.

௧. எந்தை யவனருள் கொண்டே—யுனக்
கெடுத்துச்சொல் வேன்செவி கொடுத்துக்கேண் ஞேயா
சிந்தைகெட் டுத்துயி லுங்கால்—செலல்
செப்பி னெழுபதோ டைந்தங் குலங்காண். (ஆனந்த)

௨. மாதர்சை யோகத்தி றுற்பத்—தெட்டும்
மருவிய முக்காலு மாம்விரைந் தோடும்
போதிரு பத்தைந் தரையாம்—சென்று
போம்போது தான்பதி னெட்டாகு ஞேயா. (ஆனந்த)

௩. உண்ணும் பொழுது மொலிக்க—மொழி
யுரைக்கும் பொழுதும் பதின்மூன் றரையாம்
நண்ணிய சாதார ணத்தி—லிரு
நான்குட னென்று நலிவது ஞேயா. (ஆனந்த)

ச. ஒன்பதி லேவிட யந்தா—னில்லா
தொடுங்கிடி னெட்டேகா லாமே மூரைக்கே
இன்பச் சமாதிதான் கூடி—நன்று
யிருக்கலா மற்றப் படிக்கில்லை ஞேயா. (ஆனந்த

ரு. ஏழரை தன்னிலே முக்கால்—குன்று
மேனற் கடாக்ஷவாக் குண்டாகு மாறில்
ஊழொடு முக்காலந் தோன்று—மதி
லோர்முக்கால் குன்றின்மெய்ஞ் ஞானக்கண் காணும். (ஆன

சு. நாலரை தன்னிலா காய—கம
னந்தனக் குண்டா மதின்முக்கால் குன்றின்
கோலப் பதினுன் குலகும்—நிமை
கொட்டு மளவிலே சுற்றி வரலாம். (ஆனந்த

எ. மூன்றிலே யட்டமா சித்தி—கூடு
முக்கா லடங்கிடி னவநிதி செய்ய
ஆன்றவல் லாண்மைபுண் டாமொன்—றரைக்
கான்மாவைக் காணலா மன்புள்ள ஞேயா. (ஆனந்த

அ. முக்காலி லீசுர வமிச—மாகி
முன்பினுந் தன்னிழல் காணும ணிகழும்
முக்காலு மற்ற விடத்தே—பர
முத்தி யெனும்பெரு வாழ்வாகு ஞேயா. (ஆனந்த

கூ. இந்தத் திதியிற் புசிப்பும்—நீரு
மிதமான காற்று மனுவசி யஞ்சேர்
எந்த வியாதியுஞ் சாவு—மில்லை
யெழிலான தேசுநல் வாசமு முண்டாம். (ஆனந்த

கo. இந்தவி தம்பர மேசன்—சொற்று
னென்றுநீ தேரிதின் மூச்சைப் பிடித்துப்
பந்திப்ப தில்லை மனத்தை—யுள்ளே
பந்திக்கத் தானே யடங்குமம் மூச்சு. (ஆனந்த

---

ரு. முக்காலந் தோன்றல்=தனக்கெய்து பலனுக்குரிய மூன்றுகாலமுந் தோன்றுதல். முக்காலந்தோன்ற லென்னும் பிரயோகம் வருமிடங்கடோறும் இதுவே பொருளென்றும், உலக ஆரம்பமுதல் அந்தம்வரையிலுமுள்ள சருவ பலாபல காலங்களை யறிந்து கூறுவாரொருவரு மிலரென்றும், கூறினதற்கு ஒரு நூலுமின்றென்று அறிந்துகோடல் அறிவுடைமையாம்.

எ. நவநிதி = பத்மம், மஹாபத்மம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்பது வடமொழி நிகண்டு. மகரம், குந்தம், வரமென்பன நீக்கி கற்பம், நந்தம், மகா வென்பன சேர்த்துளர் சில தமிழர்.

கக. மாற்றருஞ்செய் வன்மனக் கல்லைப்—பத்தி
மார்க்க குகைதனில் வைத்தே யுருக்கி
ஊற்று குகன்பதந் தன்னி—லந்த
வுத்தம மான மனோலய மெய்தும். (ஆனந்த)

கஉ. வீட்டுக் குடையவ னீயே—யந்த
வீட்டிற் சுகிக்கவிவ் வீட்டைநம் பாதே
ஊட்டு மறுசுவை போக்கிச்—சிவ
னூட்டு முருசியை யுட்கொண்டு தேக்கு. (ஆனந்த)

கங. தோன்றிடு தூக்கமுந் தள்ளிக்—கெட்ட
சோம்பலுந் தள்ளிச் சுகமெல்லாந் தள்ளி
ஊன்றிய யோகத்தி னில்லங்—கேநின்
றுண்டாகு மானந்த மெல்லாநீ கொள்ளே. (ஆனந்த)

கச. கொண்ட தவத்திலே நின்றுன்—னெரி
கொண்ட பசிக்கெதிர் வாய்த்ததை யுண்டவ்
வண்ட வெளியிலே சென்று—கண்ட
வற்புத மெல்லா மடக்கஞ்செய் துய்யே. (ஆனந்த)

கரு. சீர்மலி யானந்த வீட்டின்—பத்தைச்
சேர்ந்த வண்ணமலைப் பேரெந்தை யீசன்
கூர்வடி வேலுடை யைய—னென்னுட்
குடிகொண்ட வொருவன்ற னடியென்றும் வாழி (ஆனந்த)

---

# எச. திருவுருமலைக்கோமகன்

## பஞ்சவிம்சதியதிக சதபங்கி.

---

க. *கலைச்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

க. தனதன தானன தானன தானன
தானன தானன தானன தானதந்
தனதன தானு தனனு தனனு தனனு
தனதன தனதன தானதனு

(க)

திருமலி † தாரணி சீர்முரு காவடர்
சேனைய னேயொளிர் சேயவ னேமாவொண்
டெருளர தீதா வரதா திருவே பரிவே
திடமுடை மயில்வரு சேவகனே

---

* கலை அறுபத்துநான்காதலின் கலைச்சீரென்பது : அறுபத்துநான்கு சீருடைய தாமாறு காண்க.

† தார் – கிண்கிணிமாலை.

திகழ்மறை பாடிடு தேமுத லேயதி
　　தீரமு ளோயறு தேசுரு வாவேதன்
செயல்புரி தேவா விமலா செனியா தவனே
　　சிறுமையில் பிரதம சேகரனே
சிதலையின் மாசுரர் சேதன னேசுக
　　தீபக மேயறு சீலமு ளோய்காலஞ்
செடிதபு காலா சிவனே செழுமா மணியே
　　சிவகண பதியிளை யோய்திணியா
சிலைவலர் சீய||ம தீவிர வேண்*மணி
　　சேரணி யோ†யுயர் தேகமு ளோய்போர்வெஞ்
சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
　　சிகிவரை யொலிமுனி தேசிகனே

தருமமெ யாரணர் சார்முனி யேகிளர்
　　தானைய னேநல தாயனை யாய்தூவின்
சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
　　தடநில வயவறு தாரகனே
சகவுயிர் நாடக சாமிச தாசிவ
　　தாரணி வோய்தொழு தாசர ஞா°நீதந்
தயவுளர் தாதா நிபுணா தனிவா னவனே
　　தறுகணர் கருதலர் சார்பிலனே
சதமுனை வாசவர் சாதப தீயொரு
　　தாபமி லோய்விரி சாலமு ளோய்வாலஞ்
சடுவரி வாழ்வே சதுரா §தழன்மா மகனே
　　சவணர்கண் முதியர்கள் சார்புளனே
சலமறு தூயவ சாவிலி யேமிகு
　　சாரிய னேகுண சாகர மேசார்திண்
டலைமையர் மீளீ சனதா சருவா பரனா
　　தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்

|| அதிதீவிரவேள் எனற்பாலது "அதீவிரவேள்" எனப் பொருந்திற்று.

* மணிசேரணி = திருக்கண்மணிமாலை.

† உயர்தேகம் = மகாவிசுவரூபவடிவு.

○ நீதம் = விளையாடல்; வடசொல்.

§ தழல் = கார்த்திகை.

செருமலி யாரயில் சேர்கர னேநிறை
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின்
றெரிய*ல தீசா பரமா திருமான் மருகா
†திடகுக செயிரறு சீடர்கணு
சிகலறு பாடகர் சேமமு தாலுயர்
தேரமர் வோய்பல தேசம ணுகாதுஞ்
செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
சிறுகறு மருமறை தேடிறையே
சிதடறு பாசகர் தீதடு கோபர
சீபதி யேபுகழ் சீலா ணுலாதுஞ்
செடிநகையாளீ திதியோய் ‡செழியோ னிறைவா
சிவைசுத நதிசுத தேமமுதே
சிலதர்க ணுயக சீவனி யேதுதி
தோரது லாவறு சேகர னேசீர்வண்
டிலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
திகில்வெலும் வலியருள் சீறடிதா

குருமலி நாரருள் கூர்மதி யோயொரு
கோனைய னேபல கோயிலு ளோய்கூவுங்
குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா
குடமுனி வியனிலை கூறரசே
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர்
கூரமி லோய்சுடர் கோசிக னேபோதங்
குயினிச போதா குழையோய் குனி°சா னகனே
குறமகள் சுரமகள் கூடருளோய்
குதலையென் மாசுகொல் கோதிலி யேநிமிர்
கோபதி யேயெணில் கோலமு ளோய்சீலங்
கொடுகொடு சீங்வா குதியே குழகா புலவா
குவிபகை மதியினர் கோளரியே

---

* அதீசன் = தனக்கோரீசனில்லாத் தலைவன்.

† திடம் = உண்மை.

‡ செழியோன் = பாண்டியன்.

° சானகன் = வில்லுடையோன்; (ஶராஸந:) சராசனனெனும் வடமொழி விகாரம்.

குலமிலி மாயமில் கோவண னேயிழி
கோரமி லோ*யொரு கோகருள் கோர்†ஞர்வங்
குலேமருள்‡கோலா வனகா குரவார் புயனே
குகையுரு மலேவளர் கோமகனே.

### உ. வஞ்சிவிருத்தம்.

உ. தனதன தானன தானதன

(உ)

திருமலி தாரணி சீர்முருகா
தருமமெ யாரணர் சார்முனியே
செருமலி யாரயில் சேர்கரனே
குருமலி நாரருள் கூர்மதியோய்.

(ங)

திகழ்மறை பாடிடு தேமுதலே
சகவுயிர் நாடக சாமிசதா
சிகலறு பாடகர் சேமமுதால்
குகைதொறு மாடிடு கோமுருகே.

(ச)

சிதலேயின் மாசுரர் சேதனனே
சதமுனே வாசவர் சாதபதீ
சிதடுறு பாசகர் தீதடுகோ
குதலேயென் மாசுகொல் கோதிலியே.

(ரு)

சிலேவலர் சீயம தீவிரவேள்
சலமறு தூயவ சாவிலியே
சிலதர்க ஞயக சீவனியே
குலமிலி மாயமில் கோவணனே.

ங. தனதன தனதன தானதன

(சு)

திடமுடை மயில்வரு சேவகனே
தடநில வயவறு தாரகனே

---

* ஒரு கோகருள்கோன்=ஒரு கழுதைக்கு நல்லருள் பாலித்த பெருமான். அரு பாலித்த வரலாற்றை ஸ்ரீசுப்பிரமணிய வியாசத்தின் அஎ ஆங் கடாவிடையிற் காண லாம். கோகு=கழுதை.

† மருள் ஆர்வம்=மயக்கமுடை (எனது) ஆசையை, குலே=கலேயச்செய் மருள் ஆர்வம் எனக்கூட்டுக.

‡ கோலா=தண்டாயுதபாணியே. கோல்=தண்டம்.

திடகுக செயிரறு சீடர்கணு
குடமுனி வியனிலை கூறரசே.

(எ)

சிறுமையில் பிரதம சேகரனே
தறுகணர் கருதலர் சார்பிலனே
சிறுகறு மருமறை தேடிறையே
குறமகள் சுரமகள் கூடருளோய்.

(அ)

சிவகண பதியிளை யோய்திணியா
சவணர்கண் முதியர்கள் சார்புளனே
சிவைசுத நதிசுத தேமமுதே
குவிபகை மதியினர் கோளரியே.

(கூ)

சிகிவரை யொலிமுனி தேசிகனே
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திகில்வெலும் வலியருள் சீறடிதா
குகையுரு மலைவளர் கோமகனே.

ச. தானன தானன தானதனு

(கo)

சேனைய னேயொளிர் சேயவனே
தானைய னேநல தாயனையாய்
தேனைய னேகமழ் தேயமுளோய்
கோனைய னேபல கோயிலுளோய்.

(கக)

தீரமு ளோயறு தேசுருவா
தாரணி வோய்தொழு தாசரனு
தோமர் வோய்பல தேசமனு
கூரமி லோய்சுடர் கோசிகனே.

(கஉ)

தீபக மேயறு சீலமுளோய்
தாபமி லோய்விரி சாலமுளோய்
சீபதி யேபுகழ் சீலரனல்
கோபதி யேயெணில் கோலமுளோய்.

(கங)

சேரணி யோயுயர் தேகமுளோய்
சாரிய னேகுண சாகரமே
தோரது லாவறு சேகரனே
கோரமி லோயொரு கோகருள்கோன்.

(௧௪)

சீர்முரு காவடர் சேனையனே
சார்முனி யேகிளர் தானையனே
சேர்கா னேகிறை தேனையனே
கூர்மதி யோயொரு கோனையனே.

(௧௫)

தேமுத லேயதி தீரமுளோய்
சாமிச தாசிவ தாரணிவோய்
சேமமு தானுயர் தேரமர்வோய்
கோமுரு கேயிடர் கூரமிலோய்.

(௧௬)

சேதன னேசுக தீபகமே
சாதப தீயொரு தாபமிலோய்
தீதடு கோபா சீபதியே
கோதிலி யேகிமிர் கோபதியே.

(௧௭)

தீவிர வேண்மணி சேரணியோய்
சாவிலி யேமிகு சாரியனே
சீவனி யேதுதி தோதுலா
கோவண னேயிழி கோரமிலோய்.

௫. தனன தனன தானதன

(௧௮)

திருவே பரிவே சேவகனே
சருவே சுரனே தாரகனே
திருமான் மருகா சீடர்கண
குருகுழ் குமாா கூறரசே.

௬. தனதன தான தனன

(௧௯)

தெருளா தீதா வாதா
சருவார் தாழ்தாய் துணையே
தெரியல தீசா பாமா
குருகில கோர்மா துகிலோய்.

(௨0)

செயல்புரி தேவா விமலா
தயவுளர் தாதா நிபுண
செயமுனி சேயே கழலோய்
குயினிச போதா குழையோய்.

(உக)

செடிதபு காலா சிவனே
சடுவரி வாழ்வே சதுரா
செடிநகை யாளீ திதியோய்
கொடுகொடு சீர்வா குதியே.

(உஉ)

சிலைவகிர் சேடா பொருநா
தலைமையர் மீளீ சனதா
திலகவு லாசா திமிசோய்
குலைமருள் கோலா வனகா.

## ௩. வஞ்சித்துறை.

எ. தானதன தானதன

(உ௩)

சேனையனே சேயவனே
தானையனே தாயனையாய்
தேனையனே தேயமுளோய்
கோனையனே கோயிலுளோய்.

(உச)

தீரமுளோய் தேசுருவா
தாரணிவோய் தாசரன
தோமர்வோய் தேசமன
கூரமிலோய் கோசிகனே.

(உ௫)

தீபகமே சீலமுளோய்
தாபமிலோய் சாலமுளோய்
சீபதியே சீலானல்
கோபதியே கோலமுளோய்.

(உ௬)

சோணியோய் தேகமுளோய்
சாரியனே சாகரமே
தோரதுலா சேகரனே
கோரமிலோய் கோகருள்கோன்.

அ. தானதனன தனன

(உஎ)

சீர்முருகாசே னையனே
சார்முனியேதா னையனே
சேர்கானேதே னையனே
கூர்மதியோய்கோ னையனே.

(௨அ)

தேமுதலேதீ ரமுளோய்
சாமிசதாதா ரணிவோய்
சேமமுதால்தே ரமர்வோய்
கோமுருகேகூ ரமிலோய்

(௨௯)

சேதனனேதீ பகமே
சாதபதீதா பமிலோய்
தீதடுகோசீ பதியே
கோதிலியேகோ பதியே.

(௩௦)

தீவிரவேள்சே ரணியோய்
சாவிலியேசா ரியனே
சீவனியேதே ரதுலா
கோவணனேகோ ரமிலோய்.

௯. தானன தானதனா

(௩௧)

தாரணி சீர்முருகா
ஆரணர் சார்முனியே
ஆரயில் சேர்கரனே
நாரருள் கூர்மதியோய்.

(௩௨)

பாடிடு தேமுதலே
நாடக சாமிசதா
பாடகர் சேமமுதால்
ஆடிடு கோமுருகே.

௧௦. தானதனா தனனா

(௩௩)

மாசுரர்சே தனனே
வாசவர்சா தபதீ
பாசகர்தீ தடுகோ
மாசுகொல்கோ திலியே.

(௩௪)

சீயமதீ விரவேள்
தாயவசா விலியே
நாயகசீ வனியே
மாயமில்கோ வணனே.

கக. தனனதன தனன

(௩௫)

மயில்வருசே வகனே
வயவறுதா ரகனே
செயிராறுசீ டர்கண
வியனிலகூ றரசே.

(௩௬)

பிரதமசே கரனே
கருதலர்சார் பிலனே
அருமறைதே டிறையே
சுரமகள்கூ டருளோய்.

கஉ. தனதன தானதன

(௩எ)

பதியிளை யோய்திணியா
முதியர்கள் சார்புளனே
நதிசுத தேமமுதே
மதியினர் கோளரியே.

(௩அ)

ஒலிமுனி தேசிகனே
புலிமுனி தாழ்பெரியோய்
வலியருள் சீறடிதா
மலைவளர் கோமகனே.

கங. தனதன தான

(௩௯)

தெருளர தீதா
சருவரர் தாழ்தாய்
தெரியல தீசா
குருகில கோர்மா.

(௪௦)

செயல்புரி தேவா
தயவுளர் தாதா
செயமுனி சேயே
குயினிச போதா.

(௪க)

செடிதபு காலா
சடுவரி வாழ்வே
செடிநகை யாளீ
கொடுகொடு சீர்வா.

(௬௨)

சிலைவகிர் சேடா
தலைமையர் மீளீ
திலகவு லாசா
குலைமருள் கோலா.

கச. தனனா தனனா

(௬௩)

திருவே பரிவே
சருவே சுரனே
திருமான் மருகா
குருசூழ் குமரா.

(௬௪)

செனியா தவனே
தனிவா னவனே
இனைமா வுணியே
குனிசா னகனே.

(௬௫)

செழுமா மணியே
தழன்மா மகனே
செழியோ னிறைவா
குழகா புலவா.

(௬௬)

திரிகு லதரா
சருவா பரனா
திருநீ றணிவோய்
குரவார் புயனே.

## ௪. வேண்டலையான்வந்த தாவுகோச்சகக்கலிப்பா.

கரு. தானதனா தானந் தனனதனா தானதனா

(௬௭)

சேயவனே மாவொண் டெருளரதீ தாவரதா
தாயனையாய் தூவின் சருவார்தாழ் தாய்துணையே
தேயமுளோய் பாவின் றெரியலதீ சாபரமா
கோயிலுளோய் கூவுங் குருகிலகோர் மாதுகிலோய்.

(௬௮)

தேசுருவா வேதன் செயல்புரிதே வாவிமலா
தாசரனு நீதந் தயவுளர்தா தாகிபுனா

தேசமனு காதுஞ் செயமுனிசே யேகழலோய்
கோசிகனே போதங் குயினிசபோ தாகுழையோய்.

(சுக)

சீலமுளோய் காலஞ் செடிதபுகா லாசிவனே
சாலமுளோய் வாலஞ் சடுவரிவாழ் வேசதுரா
சீலாணு லாலுஞ் செடிநகையா ளீதிதியோய்
கோலமுளோய் சீலங் கொடுகொடுசீர் வாகுதியே.

## ரு. கலிவிருத்தம்.

கசு. தானந் தனதன தானு தனனு

(ரு0)

மாவொண் டெருளா தீதா வரதா
தூவின் சருவரர் தாழ்தாய் துணையே
பாவின் றெரியல தீசா பரமா
கூடவுங் குருகில கோர்மா துகிலோய்.

(ருக)

வேதன் செயல்புரி தேவா விமலா
நீதந் தயவுளர் தாதா நிபுணு
காதுஞ் சேயமுனி சேயே கழலோய்
போதங் குயினிச போதா குழையோய்.

(ருஉ)

காலஞ் செடிதபு காலா சிவனே
வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா
ஆலுஞ் செடிநகை யாளீ திதியோய்
சீலங் கொடுகொடு சீர்வா குதியே.

(ருங)

போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா
சார்திண் டலைமையர் மீளீ சனதா
சீர்வண் டிலகவு லாசா திமிசோய்
ஆர்வங் குலைமருள் கோலா வனகா.

கஎ. தனதன தனதன தானதனு தானதனு

(ருச)

திடமுடை மயில்வரு சேவகனே தேமுதலே
தடநில வயவறு தாரகனே சாமிசதா
திடகுக செயிரறு சீடர்கணு சேமமுதால்
குடமுனி வியனிலை கூறரசே கோமுருகே.

(ருரு)

சிறுமையில் பிரதம சேகரனே சேதனனே
தறுகணர் கருதலர் சார்பிலனே சாதபதீ
சிறுகறு மருமறை தேடிறையே நீதடுகோ
குறமகள் சுரமகள் கூடருளோய் கோதிலியே.

கஅ. தனதன தனதன தானதனை தனனா

(ரு௬)

சிவகண பதியிளை யோய்திணியாதீ விரவேள்
சவணர்கண் முதியர்கள் சார்புளனேசா விலியே
சிவைசுத நதிசுத தேமமுதேசீ வனியே
குவிபகை மதியினர் கோளரியேகோ வணனே.

(ருஎ)

சிகிவரை யொலிமுனி தேசிகனேசார் முனியே
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்சேர் கானே
திகில்வெலும் வலியருள் சீறடிதாகூர் மதியோய்
குகையுரு மலைவளர் கோமகனேசீர் முருகா.

கக. தானதனா தானந் தனதன தானா

(ருஅ)

சேயவனே மாவொண் டெருளர தீதா
தாயனையாய் தூவின் சருவரர் தாழ்தாய்
தேயமுளோய் பாவின் றெரியல தீசா
கோயிலுளோய் கூவுங் குருகில கோர்மா.

(ருகூ)

தேசுருவா வேதன் செயல்புரி தேவா
தாசரனா நீதந் தயவுளர் தாதா
தேசமனா காதுஞ் செயமுனி சேயே
கோசிகனே போதங் குயினிச போதா.

(கூ௦)

சீலமுளோய் காலஞ் செடிதபு காலா
சாலமுளோய் வாலஞ் சடுவரி வாழ்வே
சீலானா லாலுஞ் செடிநகை யாளீ
கோலமுளோய் சீலங் கொடுகொடு சீர்வா.

(கூக)

தேகமுளோய் போர்வெஞ் சிலைவகிர் சேடா
சாகரமே சார்திண் டலைமையர் மீளீ
சேகரனே சீர்வண் டிலகவு லாசா
கோகருள்கோ ளுர்வங் குலைமருள் கோலா.

௨௦. தனனு தனனு தனனு தனனு

(௯௨)

திருவே பரிவே செனியா தவனே
சருவே சுரனே தனிவா னவனே
திருமான் மருகா திணைமா வுணியே
குருசூழ் குமரா குனிசா னகனே.

(௯௩)

செழுமா மணியே திரிசூ லதரா
தழன்மா மகனே சருவா பரனு
செழியோ னிறைவா திருநீ றணிவோய்
குழகா புலவா குரவார் புயனே.

## ௯. கலிநிலைத்துறை.

௨௧. தனனு தனனு தனதன தனதன தானதனு

(௯௪)

திருவே பரிவே திடமுடை மயில்வரு சேவகனே
சருவே சுரனே தடநில வயவறு தாரகனே
திருமான் மருகா திடகுக செயிரறு சீடர்கனு
குருசூழ் குமரா குடமுனி வியனிலை கூறரசே.

(௯௫)

செனியா தவனே சிறுமையில் பிரதம சேகரனே
தனிவா னவனே தறுகணர் கருதலர் சார்பிலனே
திணைமா வுணியே சிறுகறு மருமறை தேடிறையே
குனிசா னகனே குறமகள் சுரமகள் கூடருளோய்.

(௯௬)

செழுமா மணியே சிவகண பதியிளை யோய்திணியா
தழன்மா மகனே சவணர்கண் முதியர்கள் சார்புளனே
செழியோ னிறைவா சிவைசுத நதிசுத தேமமுதே
குழகா புலவா குவிபகை மதியினர் கோளரியே.

(௯௭)

திரிசூ லதரா சிகிவரை யொலிமுனி தேசிகனே
சருவா பரனு தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திருநீ றணிவோய் திகில்வெலும் வலியருள் சீறடிதா
குரவார் புயனே குகையுரு மலைவளர் கோமகனே.

௨௨. தனதன தானு தனனு தனனு தனனு

(௯௮)

தெருளா தீதா வாதா திருவே பரிவே
சருவார் தாழ்தாய் துணையே சருவே சுரனே

தெரியல தீசா பரமா திருமான் மருகா
குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா.

(௬௯)

செயல்புரி தேவா விமலா செனியா தவனே
தயவுளர் தாதா நிபுணா தனிவா னவனே
செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
குயினிச போதா குழையோய் குனிசா னகனே.

(௭௦)

செடிதபு காலா சிவனே செழுமா மணியே
சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா
கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா.

(௭௧)

சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
தலைமையர் மீளீ சனதா சருவா பரனே
திலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
குலைமருள் கோலா வனகா குரவார் புயனே.

௨௩. தானன தான தந்தன தனன தானதன

(௭௨)

தேகமு ளோய்போர் வெஞ்சிலை வகிர்சே டாபொருநா
சாகர மேசார் திண்டலை மையர்மீ ளீசனதா
சேகர னேசீர் வண்டில கவுலா சாதிமிசோய்
கோகருள் கோனர் வங்குலை மருள்கோ லாவனகா.

௨௪. தனதன தானன தானன தானன தானதன

(௭௩)

திகழ்மறை பாடிடு தேமுத லேயதி தீரமுளோய்
சகவுயிர் நாடக சாமிச தாசிவ தாரணிவோய்
சிகலறு பாடகர் சேமமு தாலுயர் தேரமர்வோய்
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர் கூரயிலோய்.

(௭௪)

சிலைவலர் சீயம தீவிர வேண்மணி சேரணியோய்
சலமறு தூயவ சாவிலி யேமிகு சாரியனே
சிலதர்க ளுயக சீவனி யேதுதி தேரதுலா
குலமிலி மாயமில் கோவண னேயிழி கோரயிலோய்.

௨௫. தானன தானன தானன தானன தானதன

(௭௫)

சீர்முரு காவடர் சேனைய னேயொளிர் சேயவனே
சார்முனி யேகிளர் தானைய னேநல தாயனையாய்
சேர்கர னேநிறை தேனைய னேகமழ் தேயமுளோய்
கூர்மதி யோயொரு கோனைய னேபல கோயிலுளோய்.

(எசு)

சேதன னேசுக தீபக மேயறு சீலமுளோய்
சாதப தீயொரு தாபமி லோய்விரி சாலமுளோய்
தீதடு கோபா சீபதி யேபுகழ் சீலாணல்
கோதிலி யேநிமிர் கோபதி யேயெணில் கோலமுளோய்.

உசு. தான தனதன தான தனதன தானதனு

(எஎ)

தீவி ரவேண்மணி சேர ணியோயுயர் தேகமுளோய்
சாவி வியேமிகு சாரிய னேகுண சாகரமே
சீவ னியேதுதி தோ அலாவறு சேகரனே
கோவ ணனேயிழி கோர மிலோயொரு கோகருள்கோன்.

## எ. கட்டளைக்கலித்துறை.

உஎ. தனதன தானன தான தனதன தானதனு

(எஅ)

திருமலி தாரணி சீர்மு ருகாவடர் சேனையனே
தருமமெ யாரணர் சார்மு னியேகிளர் தானையனே
செருமலி யாரயில் சேர்க ரனேநிறை தேனையனே
குருமலி நாரருள் கூர்ம தியோயொரு கோனையனே.

(எக)

சிதலையின் மாசுரர் சேத னனேசுக தீபகமே
சதமுனை வாசவர் சாத பதீயொரு தாபமிலோய்
சிதடுறு பாசகர் தீத டுகோபா சீபதியே
குதலையென் மாசுகொல் கோதி லியேநிமிர் கோபதியே.

உஅ. தான தனதன தானன தானன தானதனு

(அ௦)

தேமு தலேயதி தீரமு ளோயறு தேசுருவா
சாமி சதாசிவ தாரணி வோய்தொழு தாசரணு
சேம முதாலுயர் தேரமர் வோய்பல தேசமணு
கோமு ருகேயிடர் கூரமி லோய்சுடர் கோசிகனே.

## அ. நேரிசைவெண்பா.

உக. தானதனு தானந் தனனதனு தானதனு
தானதனு தானந் தனனதனு—தானதனு
தானதனு தானந் தன.

(அக)

சேயவனே மாவொண் டெருளாதீ தாவாதா
தாயனையாய் தூவின் சருவார்தாழ்—தாய்துணையே

தேயமுளோய் பாவின் றெரியலதீ சாபரமா
கோயிலுளோய் கூவுங் குரு.

### ௯. இன்னிசைவெண்பா.

௩௦. தானதனா தானந் தனனதனா தானதனா
தானதனா தானந் தன

(அ௨)

தேசுருவா வேதன் செயல்புரிதே வாவிமலா
தாசானா நீதந் தயவுளர்தா தாநிபுனா
தேசமனா காதுஞ் செயமுனிசே யேகழலோய்
கோசிகனே போதங் குயில்.

(அ௩)

சீலமுளோய் காலஞ் செடிதபுகா லாசிவனே
சாலமுளோய் வாலஞ் சடுவரிவாழ் வேசதுரா
சீலரானா லாலுஞ் செடிநகையா ளீதிதியோய்
கோலமுளோய் சீலங் கொடு.

(அ௪)

தேகமுளோய் போர்வெஞ் சிலைவகிர்சே டாபொருநா
சாகரமே சார்திண் டலைமையர்மீ ளீசனதா
சேகரனே சீர்வண் டிலகவுலா சாதிமிசோய்
கோகருள்கோ னார்வங் குலை.

### ௧௦. நிலைமண்டில வாசிரியப்பா.

௩௧. தனனா தனனா தனனா தனனா

(அ௫)

திருவே பரிவே செனியா தவனே
செழுமா மணியே திரிசூ லதரா
சருவே சுரனே தனிவா னவனே
தழன்மா மகனே சருவா பரனா
திருமான் மருகா தினைமா வுணியே
செழியோ னிறைவா திருநீ றணிவோய்
குருசூழ் குமரா குனிசா னகனே
குழகா புலவா குரவார் புயனே.

### ௧௧. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

௩௨. தனதன தானன தானதனா தானன தானன தானதனா

(அ௬)

திருமலி தாரணி சீர்முருகா சேனைய னேயொளிர் சேயவனே
தருமமெ யாரணர் சார்முனியே தானைய னேநல தாயனையாய்

செருமலி யாரயில் சேர்கானே தேனைய னேகமழ் தேயமுளோய்
குருமலி நாருள் கூர்மதியோய் கோனைய னேபல கோயிலுளோய்.

(அஎ)

திகழ்மறை பாடிடு தேமுதலே தீரமு ளோயறு தேசுருவா
சகவுயிர் நாடக சாமிசதா தாரணி வோய்தொழு தாசரனு
திகலறு பாடகர் சேமமுதால் தோமர் வோய்பல தேசமனு
குகைதொறு மாடிடு கோமுருகே கூரமி லோய்சுடர் கோசிகனே.

(அஅ)

சிதலையின் மாசுரர் சேதனனே தீபக மேயறு சீலமுளோய்
சதமுனை வாசவர் சாதபதீ தாபமி லோய்விரி சாலமுளோய்
சிதடுறு பாசகர் தீதடுகோ சீபதி யேபுகழ் சீலராறல்
குதலையென் மாசுகொல் கோதிலியே கோபதி யேயெனில் கோலமுளோய்.

(அகூ)

சிலைவலர் சீயம தீவிரவேள் சோணி யோயுயர் தேகமுளோய்
சலமறு தூயவ சாவிலியே சாரிய னேகுண சாகரமே
சிலதர்க ளுயக சீவனியே தோரது லாவறு சேகரனே
குலமிலி மாயமில் கோவணனே கோரமி லோயொரு கோகருள்கோன்.

௩௩. தனதன தானு தனனு தனதன தனதன தானதனு

(கூ௦)

தெருளா தீதா வாதா திடமுடை மயில்வரு சேவகனே
சருவார் தாழ்தாய் துணையே தடநில வயவறு தாரகனே
தெரியல தீசா பரமா திடருக செயிரறு சீடர்கனு
குருகில கோர்மா துகிலோய் குடமுனி வியனிலை கூறரசே.

(கூக)

செயல்புரி தேவா விமலா சிறுமையில் பிரதம சேகரனே
தயவுளர் தாதா நிபுண தறுகணர் கருதலர் சார்பிலனே
செயமுனி சேயே கழலோய் சிறுகறு மருமறை தேடிறையே
குயினிச போதா குழையோய் குறமகள் சுரமகள் கூடருளோய்.

(கூஉ)

செடிதபு காலா சிவனே சிவகண பதியிளை யோய்திணியா
சடுவரி வாழ்வே சதுரா சவணர்கண் முதியர்கள் சார்புளனே
செடிநகை யாளீ திதியோய் சிவைசுத நதிசுத தேமமுதே
கொடுகொடு சீர்வா குதியே குவிபகை மதியினர் கோளரியே.

(கூ௩)

சிலைவகிர் சேடா பொருநா சிகிவரை யொலிமுனி தேசிகனே
தலைமையர் மீளீ சனதா தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திலகவு லாசா திமிசோய் திகில்வெலும் வலியருள் சீறடிதா
குலைமருள் கோலா வனகா குகையுரு மலைவளர் கோமகனே.

௩௪. தனதன தானு தனனு தனதன தானு தனனு

(௯௪)

தெருளார தீதா வாதா செயல்புரி தேவா விமலா
சருவார் தாழ்தாய் துணையே தயவுளர் தாதா நிபுணு
தெரியல தீசா பரமா செயமுனி சேயே கழலோய்
குருகில கோர்மா துகிலோய் குயினிச போதா குழையோய்.

(௯௫)

செயல்புரி தேவா விமலா செடிதபு காலா சிவனே
தயவுளர் தாதா நிபுணு சடுவரி வாழ்வே சதுரா
செயமுனி சேயே கழலோய் செடிநகை யாளீ திதியோய்
குயினிச போதா குழையோய் கொடுகொடு சீர்வா குதியே.

(௯௬)

செடிதபு காலா சிவனே சிலைவகிர் சேடா பொருநா
சடுவரி வாழ்வே சதுரா தலைமையர் மீளீ சனதா
செடிநகை யாளீ திதியோய் திலகவு லாசா திமிசோய்
கொடுகொடு சீர்வா குதியே குலைமருள் கோலா வனகா.

௩௫. தானன தானன தானதனு தனதன தானு தனனு

(௯௭)

சேனைய னேயொளிர் சேயவனே தெருளார தீதா வாதா
தானைய னேநல தாயனையாய் சருவார் தாழ்தாய் துணையே
தேனைய னேகமழ் தேயமுளோய் தெரியல தீசா பரமா
கோனைய னேபல கோயிலுளோய் குருகில கோர்மா துகிலோய்.

(௯௮)

தீரமு ளோயறு தேசுருவா செயல்புரி தேவா விமலா
தாரணி வோய்தொழு தாசரனு தயவுளர் தாதா நிபுணு
தேரமர் வோய்பல தேசமனு செயமுனி சேயே கழலோய்
கூரமி லோய்சுடர் கோசிகனே குயினிச போதா குழையோய்.

(௯௯)

தீப்க மேயறு சீலமுளோய் செடிதபு காலா சிவனே
தாபமி லோய்விரி சால்முளோய் சடுவரி வாழ்வே சதுரா
சீபதி யேபுகழ் சீலரனுல் செடிநகை யாளீ திதியோய்
கோபதி யேயெணில் கோலமுளோய் கொடுகொடு சீர்வா குதியே.

(௧௦௦)

சோணி யோயுயர் தேகமுளோய் சிலைவகிர் சேடா பொருநா
சாரிய னேகுண சாகரமே தலைமையர் மீளீ சனதா
தோது லாவறு சேகரனே திலகவு லாசா திமிசோய்
கோரமி லோயொரு கோகருள்கோ குலைமருள் கோலா வனகா.

௩௬. தானந் தனதன தானா தனனா தனனா தனனா

(௧0௧)

மாவொண் டெருளர தீதா வரதா திருவே பரிவே
தூவின் சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
பாவின் றெரியல தீசா பரமா திருமான் மருகா
கூவுங் குருகில கோர்மா துகிலோய் குருகூழ் குமரா.

(௧0௨)

வேதன் செயல்புரி தேவா விமலா செனியா தவனே
நீதந் தயவுளர் தாதா நிபுணா தனிவா னவனே
காதுஞ் செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
போதங் குயினிச போதா குழையோய் குனிசா னகனே.

(௧0௩)

காலஞ் செடிதபு காலா சிவனே செழுமா மணியே
வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
ஆலுஞ் செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா
சீலங் கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா.

(௧0௪)

போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
சார்திண் டலைமையர் மீளீ சனதா சருவா பரனா
சீர்வண் டிலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
ஆர்வங் குலைமருள் கோலா வனகா குரவார் புயனே.

௩௭. தனதன தானன தானதனா தனதன தானன தானதனா

(௧0௫)

திருமலி தாரணி சீர்முருகா திகழ்மறை பாடிடு தேமுதலே
தருமமெ யாரணர் சார்முனியே சகவுயிர் நாடக சாமிசதா
செருமலி யாரயில் சேர்கரனே சிகலறு பாடகர் சேமமுதால்
குருமலி நாரருள் கூர்மதியோய் குகைதொறு மாடிடு கோமுருகே.

(௧0௬)

திகழ்மறை பாடிடு தேமுதலே சிதலையின் மாசுரர் சேதனனே
சகவுயிர் நாடக சாமிசதா சதமுனை வாசவர் சாதபதீ
சிகலறு பாடகர் சேமமுதால் சிதடுறு பாசகர் தீதடுகோ
குகைதொறு மாடிடு கோமுருகே குதலையென் மாசுகொல் கோதிலியே

(௧0௭)

சிதலையின் மாசுரர் சேதனனே சிலைவலர் சீயம தீவிரவேள்
சதமுனை வாசவர் சாதபதீ சலமறு தூயவ சாவிலியே
சிதடுறு பாசகர் தீதடுகோ சிலதர்க ணாயக சீவனியே
குதலையென் மாசுகொல் கோதிலியே குலமிலி மாயமில் கோவணனே.

## கஉ. எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

௩௮. தனதன தானன தானன தானன தானன தானன தானதன

(௧௦௮)

திருமலி தாரணி சீர்முரு காவடர் சேனைய னேயொளிர் சேயவனே
தருமமெ யாரணர் சார்முனி யேகிளர் தானைய னேநல தாயனையாய்
செருமலி யாரயில் சேர்கர னேநிறை தேனைய னேகமழ் தேயமுளோய்
குருமலி நாரருள் கூர்மதி யோயொரு கோனைய னேபல கோயிலுளோய்.

(௧௦௯)

திகழ்மறை பாடிடு தேமுத லேயதி தீரமு ளோயறு தேசுருவா
சகவுயிர் நாடக சாமிச தாசிவ தாரணி வோய்தொழு தாசரனு
சிகலறு பாடகர் சேமமு தாலுயர் தேரமர் வோய்பல தேசமனு
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர் கூரமி லோய்சுடர் கோசிகனே.

(௧௧௦)

சிதலையின் மாசுரர் சேதன னேசுக தீபக மேயறு சீலமுளோய்
சதமுனை வாசவர் சாதப தீயொரு தாபமி லோய்விரி சாலமுளோய்
சிதடுறு பாசகர் தீதடு கோபர சீபதி யேபுகழ் சீலரனுல்
குதலையென் மாசுகொல் கோதிலி யேநிமிர் கோபதி யேயெணில் கோலமுளோ

(௧௧௧)

சிலைவலர் சீயம தீவிர வேண்மணி சேரணி யோயுயர் தேகமுளோய்
சலமறு தூயவ சாவிலி யேமிகு சாரிய னேகுண சாகரமே
சிலதர்க ணுயக சீவனி யேநுதி தேரது லாவறு சேகரனே
குலமிலி மாயமில் கோவண னேயிழி கோரமி லோயொரு கோகருள்கோன்

௩௯. தானன தானன தானன தானுதந் தனதன தானு தனனு

(௧௧௨)

சேனைய னேயொளிர் சேயவ னேமாவொண் டெருளர தீதா வரதா
தானைய னேநல தாயனை யாய்தூவின் சருவரர் தாழ்தாய் துணையே
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின் றெரியல தீசா பரமா
கோனைய னேபல கோயிலு ளோய்கூவுங் குருகில கோர்மா நுகிலோய்.

(௧௧௩)

தீரமு ளோயறு தேசுரு வாவேதன் செயல்புரி தேவா விமலா
தாரணி வோய்தொழு தாசர னுநீதந் தயவுளர் தாதா நிபுண
தேரமர் வோய்பல தேசம னுகாநுஞ் செயமுனி சேயே கழலோய்
கூரமி லோய்சுடர் கோசிக னேபோதங் குயினிச போதா குழையோய்.

(௧௧௪)

தீபக மேயறு சீலமு ளோய்காலஞ் செடிதபு காலா சிவனே
தாபமி லோய்விரி சாலமு ளோய்வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா
சீபதி யேபுகழ் சீலர னுலானுஞ் செடிநகை யாளீ திதியோய்
கோபதி யேயெணில் கோலமு ளோய்சீலங் கொடுகொடு சீர்வா குதியே.

(௧௧௫)

சோணி யோயுயர் தேகமு ளோய்போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா
சாரிய னேகுண சாகர மேசார்திண் டலைமையர் மீளீ சனதா
தோது லாவறு சேகர னேசீர்வண் டிலகவு லாசா திமிசோய்
கோரமி லோவொரு கோகருள் கோனூர்வங் குலைமருள் கோலா வனகா.

௪௦. தானன தானதந் தனதன தானு தனனு தனனு தனனு

(௧௧௬)

சேயவ னேமாவொண் டெருளா தீதா வாதா திருவே பரிவே
தாயனே யாய்தூவின் சருவார் தாழ்தாய் துணையே சருவே சுரனே
தேயமு ளோய்பாவின் றெரியல தீசா பரமா திருமான் மருகா
கோயிலு ளோய்கூடவுங் குருகில கோர்மா துகிலோய் குருகூழ் குமரா.

(௧௧௭)

தேசுரு வாவேதன் செயல்புரி தேவா விமலா செனியா தவனே
தாசர ணாதந் தயவுளர் தாதா நிபுணு தனிவா னவனே
தேசம ணுகாதுஞ் செயமுனி சேயே கழலோய் தினமா வுணியே
கோசிக னேபோதங் குயினிச போதா குழையோய் குனிசா னகனே.

(௧௧௮)

சீலமு ளோய்காலஞ் செடிதபு காலா சிவனே செழுமா மணியே
சாலமு ளோய்வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
சீலர் ணுலாலுஞ் செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா
கோலமு ளோய்சீலங் கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா.

(௧௧௯)

தேகமு ளோய்போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
சாகர மேசார்திண் டலைமையர் மீளீ சனதா சருவா பரனு
சேகர னேசீர்வண் டிலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
கோகருள் கோனூர்வங் குலைமருள் கோலா வனகா குரவார் புயனே.

௩௩. எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

௪௧. தனதன தானு தனனு தனனு தனனு தனதன தனதன தானதனு

(௧௨௦)

தெருளா தீதா வாதா திருவே பரிவே திடமுடை மயில்வரு சேவகனே
சருவார் தாழ்தாய் துணையே சருவே சுரனே தடநில வயவறு தாரகனே
தெரியல தீசா பரமா திருமான் மருகா திடகுக செயிரறு சீடர்கனு
குருகில கோர்மா துகிலோய் குருகூழ் குமரா குடமுனி வியனிலை கூறரசே.

(௧௨௧)

செயல்புரி தேவா விமலா செனியா தவனே சிறுமையில் பிரதம சேகரனே
தயவுளர் தாதா நிபுணு தனிவா னவனே தறுகணர் கருதலர் சார்பிலனே

செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே சிறுகறு மருமறை தேடி
குயினிச போதா குழையோய் குனிசா னகனே குறமகள் சுரமகள் கூட

(௧௨௨)

செடிதபு காலா சிவனே செழுமா மணியே சிவகண பதியிளை யோய்திண்
சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே சவணர்கண் முதியர்கள் சார்பு
செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா சிவைசுத நதிசுத தேய
கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா குவிபகை மதியினர் கோளரி

(௧௨௩)

சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா சிகிவரை யொலிமுனி தேசிக
தலைமையர் மீளீ சனதா சருவா பரனு தகைகெழு புலிமுனி தாழ்பெரி
திலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய் திகில்வெலும் வலியருள் சீற
குலைமருள் கோலா வனகா குரவார் புயனே குகையுரு மலைவளர் கோமக

**௧௯. ஒன்பதின்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

௪௨. தானன தானன தானன தானதந்
தனனு தனனு தனதன தனதன தானதனு

(௧௨௪)

சேனைய னேயொளிர் சேயவ னேமாவொண்
டிருவே பரிவே திடமுடை மயில்வரு சேவகனே
தானைய னேநல தாயனை யாய்தூவின்
சருவே சுரனே தடநில வயவறு தாரகனே
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின்
றிருமான் மருகா திடகுக செயிரறு சீடர்கணு
கோனைய னேபல கோயிலு ளோய்கூவுங்
குருகூழ் குமரா குடமுனி வியனிலை கூறரசே.

(௧௨௫)

சேரணி யோயுயர் தேசுமு ளோய்போர்வெங்
திரிசூ லதரா சிகிவரை யொலிமுனி தேசிகனே
சாரிய னேகுண சாகர மேசார்திண்
சருவா பரனு தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
தோரது லாவறு சேகர னேசீர்வண்
டிருநீ றணிவோய் திகில்வெலும் வலியருள் சீறடிதா
கோரமி லோயொரு கோகருள் கோனுர்வங்
குரவார் புயனே குகையுரு மலைவளர் கோமகனே.

௬௬ ஆம் பிரபந்தத்துள் பத்துச்செய்யுளை யுள்ளடக்கிய எரிவரைக்குகன் தச
யெனும் ஒரு பாட்டை ஆசிரியர் பாடித் தமக்கு முன்பாக விருக்கின்ற ஒரு நண்ப
காட்டினர். சென்னை வாசியாய அவர், நூறு செய்யுளை யுள்ளடக்கிய சதபங்
இரண்டு மாதத்திற் கதிகமான காலங்காறும் பிரயாசப்பட்டு, பண்டிதர் — வேல

முதலியார் செய்து முடித்தார். அதனை யான் காணக்கிடைக்கவில்லை யென்று கூறினதைக் கேட்ட ஆசிரியர், அவ்வியப்புக் கருதி இறைவனைச் சிந்தித்திருந்து ௧௨௫ - வண்ணச் செய்யுள்களை யடக்கியுள்ள இம்மகா விசித்திர விசேட கவியை இரண்டரைக் கடிகையுட் பாடியருளினர். இத்திறப்பாட் டொன்றனை எந்நூலகத்துங் காண்டல் கூடுமோ? இது, துறவற நிலையடைந்தபின் பாடப்பட்டு இப்பாடலோடு சேர்க்கப்பட்டதாம்.

இப்பங்கியுள் அலகிடப்பட்டவைகளுள்—சில வஞ்சிவிருத்தம் ௨ - பங்கியும், தாவு கொச்சகக்கலிப்பா ௬ - பங்கியும், கலிவிருத்தம் ௪ - ௩ - பங்கியும், கலிநிலைத்துறை ௪ - ௬ - ௩ - பங்கியும், கட்டளைக்கலித்துறை ௪ - ௩ - பங்கியும், அறுசீராசிரிய விருத்தம் ௯ - ௫ - ௭ - பங்கியும், எழுசீராசிரிய விருத்தம் ௭ - ௧௦ - பங்கியும், எண்சீராசிரிய விருத்தம் ௮ - பங்கியும், ஒன்பதின்சீராசிரிய விருத்தம் ௧௧ - பங்கியுமாகத் தனித்தனி நிற்கு நிரலுமுணர்க.

---

| | |
|---|---|
| ஆகப்பிரபந்தம் எழுபத்துநான்கினும் போந்த திருப்பாடல் — | ௧௨௬௩ |
| கடவுள் வணக்கச் செய்யுள் | ௩ |
| ஆகத்திருப்பாடல் | ௧௨௬௬ |

---

## ச மா தா ன ச ங் கீ த ம்.

இராகம் — முகாரி. அடதாளம்.

பல்லவி.

சஞ்சல மேன் மனமே சிவனடித்
தஞ்ச மான பினுமே.

அனுபல்லவி.

என்செயலாலொன்று மில்லையென்றேநின்றால்
ஏதந் துயரில்லையே—யிந்தச்
சூதை யறிகில்லையே. (சஞ்சல)

சரணம்.

வானமிடிந்து தலையில்விழும்படி
வம்புவந்தாலுமென்னை—யந்தக்
கானமயின்முருகையன்றிருவருள்
கைவிடமாட்டாதே. (சஞ்சல)

பன்னிருசூரிய ரொன்றாயெரிக்குங்கற்
பாந்தம்வந்தாலுமென்னை—யந்தப்
பன்னிருகட்சிவன்றண்ணளிநம்மைப்
பராமரித்துக்கொள்ளுமே. (சஞ்சல)

செப்பவொண்ணுப்பிழையெத்தனையோமுன்னர்ச்
செய்திருந்தாலுமென்னை—நம்மை
எப்பொழுதும்புரந்தாள்குகப்பிரமத்
திகலருண்முன்னிறுமே. (சஞ்

நாலேழுநாலுந்தெளிவாகவோதிமெய்ஞ்
ஞானஞ்சொன்னுலுமென்னை—யந்த
மூலப்பிரணவசாமிதயாவின்றி
முன்னேறுவதில்லையே. (சஞ்

காஷாயம்வற்கலைபூண்டுசன்னுசியாய்க்
காடுறைந்தாலுமென்னை—யந்தக்
காலுந்தலையுங்கடந்தநிலைதன்னைக்
கண்டபின்பன்றேகிட்டும். (சஞ்

பொன்னுசைபெண்ணுசைமண்ணுசைமூன்றையும்
போக்கடித்தாலுமென்னை—கேளுன்
தன்னைஞானமொன்றேதன்னைக்காட்டுந்
தலைவனிடங்கூட்டும். (சஞ்

ஒன்பதுபத்தாறுதத்துவமெல்லா
மொடுக்கியிருத்தலினுங்—குகன்
அன்பருள்கொண்டுசின்முத்திரைதன்னினில்
லானந்தங்கைவல்யமே. (சஞ்ச

முத்திதருங்குகப்பிரமத்தைவாழ்த்திய
முத்தனண்ணுமலையா—னிரு
பத்மவடிக்கன்புபண்ணிடுதாசர்
பரகதியெய்துவரே. (சஞ்சல)

---

முதன்மண்டலமாகிய

குமரகுருதாசசுவாமிகள்பாடல் முற்றிற்று.

---

**குமரகுருபரன் றிருவடி வாழ்க.**

திருச்சிற்றம்பலம்.

ஓம் குஹப்ரஹ்மணே நம :

தேவையம்பதியேனுந் திருவிராமேச்சுரத்தைச்சார்ந்த பாம்பன் :

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத

வைதிக சைவசித்தாந்த ஞானபானு

# குமாரசுவாமியென்னும்

ஸ்ரீமத் - குமரகுருதாசசுவாமிகள்

அருளிச்செய்த

# திருவலங்கற்றிரட்டு

முதற்கண்டம்.

---

இது

சென்னை: சாது பிரசில்

பதிப்பிக்கப்பட்டது.

Second Edition - 500 Copies.



1929.

திருவலங்கற்றிரட்டு

# முதற்கண்டம்.

---

வினவுத்தரம். நேரிசைவெண்பா.

பின்னையின்பே ராவதெது பீட்டின்சொல் லென்பழகி
யென்னுமொழி யென்கவரி யேந்திமிக்கார்—முன்னைசைத்தே
உய்பவனே யேவுரையா தோஞ்சேய்பண் ணுலெனுரை
செய்திருவ லங்கற் றிரட்டு.

நேரிசை வெண்பா.

பதக்கண்டா பண்பா வலங்கற் றிரட்டின்
முதற்கண்டம் பாடு முருகோன்—பதக்கண்டாம்
இன்புனது கண்ணுறுமா றேதி லருளோக்கும்
அன்பருநின் முன்வருகு வார்—காசியாத்திரை.

---

பீடு=வலி. இதுவே "வலம்" சே- திவாகரங் காண்க.

குமாரகுருப்யோநம:

# பா ரு மு றை.

---

ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள் சாக்ஷாது பரப்பிரமமென்பதை வேதாகம புராணேதிகாசங்கள் விளக்குமாயினும், அவற்றிலெழுஞ் சங்கை யொழித்து இந்நூலாசிரிய ரருளிச்செய்த ஸ்ரீ சுப்பிரமணிய வியாசமும் முதன் மண்டலமும் ஆறுவது மண்டலங் காறுமுள்ள மற்றை மண்டலங்களும் உரைகளும் இச்சுப்பிரமணியத்தின் மேலொரு தெய்வஞ் சொல்ல வேண்டியதில்லை, சச்சிதானந்தப் பிரமம் இதுவேயெனச் சுருதி யுக்தி அனுபவவாயிலாக இனிது விளக்குமன்றோ. அத்தகைய பரம்பொருளது திருவருணெறி நின்று பாடியருளிய இத்திருப்பாடல்களி லெதனையேனு மன்போடு அக்கடவுள் சன்னிதியிலேனும் மற்ற விடங்களிலேனும் பாடித் துதிப்பார்க்குப் பாவநாசம், ரோகநாசம், சத்துருநாசம், ஆயுள்விருத்தி, தைரியவிருத்தி, வீரியவிருத்தி, வித்தைவிருத்தி, புண்ணியவிருத்தி, புத்திரவிருத்தி யுண்டாம். அன்றிச் சர்வார்த்த சித்தியுமுத்தியும் வாய்க்கு மென்றலும் வாய்மை.

விரதாதி விசேஷ தினங்களினும் தினந்தோறும் தேவாலயத்தின் முன்னர்ப் பாடுவதாயின், பாடுவோர் ஸ்ரீ அருணகிரி நாத சுவாமிகள் திருவாக்காகிய திருப்புகழ் பாடிய பின்னர் இத்திருப்பாடலுள் க்ஷேத்திரத்திற்குரிய திருப்பதிகத்தை யினிதுபாடி யிறுதிக்கண்ணுள்ள திருக்கந்தர் திருப்பல்லாண்டு கூறி முடித்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து தரிசித்துப் பிரசாதமேற்றுக் கந்த மூர்த்தியைக் கருத்திருத்தியிருப்பிட மெய்தக் கடவர்.

தேவாலயமன்றிக் கிருகம் பொதுவிட மென்பவைகளு ளொன்றிற் சரவண சுவாமியைப் பூஜிக்கத் துணிநரும், மேற்பிரகாசப் படுத்தியவாறே முன்னர்த் திருப்புகழ் செப்பிப் பின்னர் இத்திருப்பாடற் போதுத் திருப்பதிகங்களுள் ஒன்று அல்லது பலபாடி இறுதியிற் பல்லாண்டோதித் துதித்துப் பூஜையை முடித்துக்கொள்ளக் கடவர். திருப்புகழ் பாடமில்லாதார், இத்திருப்பாடல்களையே ஆரம்பமாகப் பாடித்துதித்து முடிவு பெறக்கடவர்.

பெரிய புராணத்தில் "அர்ச்சனை பாட்டேயாகும்" எனவும், திருவாதவூரர் புராணத்தில் "அன்பிலாத பண்பினரெனினுந் தன்னைப் பாடி

னர்க் கிரங்கும்" எனவும், திருஞானசம்பந்த சுவாமிகள் திருமுறையில் "பாடுவார்க்கருளுமெந்தை" எனவும், திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறையில் "தமிழோடிசைபாடன் மறந்தறியேன்" எனவும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுறையில் "பொய்ம்மையாளரைப்பாடாதே யெந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்" எனவும், மாணிக்கவாசககசுவாமிகள் திருவாசகத்தில் "என்புருகிப்பாடுகின்றிலை" எனவும், தாயுமானசுவாமிகள் பாடலில் "பாடுகின்ற பனுவலோர்க டேடுகின்ற செல்வமே" எனவும், அருணகிரிநாதசுவாமிகள் கந்தரலங்காரத்தில் "முத்தமிழால் வைதாரையு மங்கு வாழவைப்போன்" எனவும், குமரகுருதாசசுவாமிகள் பாடலில் "பாட்டிலுனைப் பழிச்சவொரு பாக்கியமும் பெற்றதன்றி" எனவும், ஷண்முகஸஹஸ்ர நாமத்திற் குமாரக்கடவுள் திருநாமம் "கீதக்ஞன்" "கத்யபத்யப்ரியன்" எனவும் வருதலின்; அன்புடையார் யாவரும் பாமனைப் பாவாற்றுதிக்கவேண்டு மென்றல் தடையற்ற தீர்வையெனச் சற்சங்கத்தார் யாவரு மறிவரன்றே.

---

சிவமயம்.

குஹப்ரஹ்மணே நம:

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது மண்டலமாகிய

# திருவலங்கற்றிரட்டு

## முதற்கண்டம்.*

### காப்பு.

குறள்வெண்பா.

பொன்னாரந் துன்னும் புயத்தானை மாமுகவன்
பின்னோ னிதற்கருள்காப் பே. (௧)

கோளில் புகழ்க்கயிலைக் கோன்முருகை யேத்தவவன்
தோளுங் கடம்புந் துணை. (௨)

அஞ்ஞத்வம் வீடற் கலங்கற் றிரட்டாற்ற
மஞ்ஞையிவர் வோன்காக்க வந்து. (௩)

வள்ளல்சே யின்றாளை வாழ்த்தவருட் டெய்வானை
வள்ளியுங் காக்கவே வந்து. (௪)

அயில்வேலன் மேனானு மாற்றுந் துதிக்கேர்
மயில்சேவ னுங்காக்க வந்து. (௫)

சுகநிலையைச் சூழ்ந்து சொலற்குச் சுரேசன்
மகிழ்வொடுங் காக்கவே வந்து. (௬)

நற்றா டொழக்கூட னாரிக் கிளமுருகாய்
உற்றோ னருள்வா னுவந்து. (௭)

---

* கண்டம் (வணு°) = கூறுபாடு; கூட்டமெனும் பொருள் பயக்கத்தக்க (வணு°) காண்டம் என்பதற்கு இதுவேறாம்.

அருளா ரடிபோற்று மன்பர்க் கருள்சேய்
அருளே நமக்காதிக் கம். (அ)

ஒப்புவமை யில்லாமெய் யுற்றவடி வேலரசிங்
கெப்படியும் வந்தாளு மே. (௯)

குமாரகுரு தானே கொடுக்குமென லங்கால்
குமாரகுரு தாசன் குறிப்பு. (௧௦)

---

இசைத்தமிழிற் பாடக்கூடிய இம்முதற் கண்டமும், இயற்றமிழாயுள்ள இரண்டாங் கண்டமும் சம்பந்தத்தால் திருவலங்கற்றிரட்டு எனும் பெயர்பெற்றுள்ளன வென்பதை இக்கண்டத்தின் முதற்கண் இயற்றமிழைச் சார்ந்த இவ்வெண்பாக்கள் போந்து காட்டுவ வாயினவே.

---

## தௌத்தியம்.

பண் – கொல்லி.

அரஹார மந்திர வமல நிரந்தர
சரவண சம்பிரம சங்கர புத்திர
சுரபதி பூம சுகோதய போதக
பரிபுர சததள பாத நமஸ்தே. (௧)

ஆதி யனாதியு மான வரோதய
சோதி நிலாவு சடானன சுபகர
வேதக சமரச விண்டலர் பண்டித
பாதக கண்டன பாத நமஸ்தே. (௨)

இந்துள லம்பக விங்கித மங்கல
சுந்தரரூப துவாதச கரதல
சந்திர சேகர தடதா கிடதடப்
பந்திகொ ணிர்த்தன பாத நமஸ்தே. (௩)

ஈசுர நந்தன வீசுர புங்கவ
தேசுறு குண்டல சித்திர பந்தன
ஆசறு சஸ்திர ஹஸ்த சரோருக
பாச விமோசன பாத நமஸ்தே. (௪)

உச்சித மஞ்ஞையி லூரதி மோகன
நிச்சய வுத்தர நித்ய மனோலய
சற்சனர் மித்திர சத்துரு கண்டன
பச்சையம் புஷ்கர பாத நமஸ்தே. (௫)

---

௩. பந்தனம் = அரைஞாண்.

௫. பச்சையம் புஷ்கர பாதம் = அன்றலர்ந்த அழகிய தாமரை மலரொத்த அடி.

ஊர்த்துவ நாடகர்க் கோதிய தேசிக
ஆர்த்த தயித்திய ரடறெறு காதக
கூர்த்திகை வீரிய குக்குட கேதன
பார்க்க வருங்குக பாத நமஸ்தே. (௬)

எண்ணறு வைபவ விந்த்ர விசேஷண
புண்ணிய வுத்தம பூரண பச்சிமக்
கண்ணில குஞ்சிவ கந்தகிரு பாசன
பண்ணவர் பூஜித பாத நமஸ்தே. (௭)

ஏரக நாயக வென்குரு நாயக
தாரக நாயக சண்முக நாயக
காரக நாயக கதிதரு நாயக
பாரக நாயக பாத நமஸ்தே. (௮)

ஐங்கர சோதர வம்பிகை காதல
மங்கள வல்லி மனோரத குஞ்சரி
இங்கித காவல விகபர சாதக
பங்கயன் மால்பணி பாத நமஸ்தே. (௯)

ஒகர மஹாரத வொளிர்புய வமுதர்கள்
புகழுப வீதவி பூதிகொண் முண்டக
ரகித விதூன லலாட விலோசன
பகருஹ பாவக பாத நமஸ்தே. (௧௦)

ஓமர ஹரசிவ வோஞ்சர வணபவ
ரீமர ஹரசிவ நிகம்பரி புரபவ
ஸ்ரீமர ஹரசிவ திரள்பவ மொழிவளர்
பாமகள் புகழருட் பாத நமஸ்தே. (௧௧)

கலியுகம் ௪௯௯௩ (கி. பி. 1892) ஹூ மார்கழி மாதம் உ௪உ சுக்கிரவாரம்.

பாம்பன் சீடர்களுள் கல்வியறிவுடையவராயும் உத்தியோகத்தி விருப்பவராயு மிருந்த L. D. முத்துக்கருப்ப பிள்ளை, முதன்மண்டலத்திலுள்ள நவரத்தின மீக்கூற்று முதலிய குழிப்புடைச் சந்தப் பாட்டுக்களைப் பார்த்துவிட்டு இவ்விதமாகப் பாடுவதாயின் அவை, எளிதாக யாவரும் பாடவும் பொருளறியவும் இயையாதனவாமே, திருஞான சம்பந்தர் முதலியோர் பாடிய பாட்டுக்களைப் போலக் குமாரபிரான் மீதும் பாடுவதாயின் அவை, என்போல்வார் பலருக்கும் பயன்படுவனவாமே என்றுரைத்ததை அங்கீகரித்தவாறாகவே ஆசிரியர் இம்முதற் கண்டத்தைப் பாடத் தொடங்கினர் என்க.

---

௬. கூர்த்திகை = ஆயுதம் : சே – திவாகரம் காண்க.

௧௦. புயவமுதர்கள் – தமிழ் நூன்முடிபு.

(வ்யுத்தாநம்) வ்யுத்தாகம் என்னும் வடசொல் "விதூனம்" என விகாரப் பட்டதெனல் வேண்டும். விரோதம் புரிதலுக்கு இது பெயராம். விரோத மில்லாத எனும் பொருள் பொருந்த விதூனரகித என மாறுக.

# க. திருவருளடிமைப்பிரார்த்தனை.

பண் – நட்டபாடை.

பொய்யாமுகத் தின்வாழ்விற் புகாதுன்னடி யாருய்
மெய்யாமுகத் தினுக்கேவா மிருமாவலிங் குள்ளேன்
ஐயாரடிக் கமலந்தொழ லானேனரு ளின்றி
உய்யேனினி யுய்யேன்மயி லூரும்பெரு மானே. (க)

தண்மாத்தட வாராணசி தனிற்போமுயிர் களுக்கன்
றெண்மாமறை மூலஞ்சொலி யுருவார்கதி நல்கும்
கண்மூன்றுடை யாற்கன்புள கறையில்குரு வான
கண்மாமணி யேயுன்னடி காணாமலுய் யேனே. (உ)

பாலாழியன் சிவபூசனை பண்ணுந்திறற் காழி
சாலூரம தாய்நல்கிய சசிவேணியன் பொருளென்
றுலோவித முளமாமறை யறையுஞ்சிவ னருண்மேல்
மாலாகியு ளேனின்னருள் வாராமலுய் யேனே. (ந)

மூன்றாகிய பிணியாற்பசி முனிவாலின்மைப் பிணியால்
தோன்றாநின்ற வனூர்மேவிட றெழுமாதவர்க் குளதோ
ஈன்றாளுட னீன்றானென விலகுங்கிருபைக் கடலே
தேன்றேடவிழ் தண்ணார்கூச் சிரமாலிகை யோனே. (ச)

சங்காழியு ளாற்கன்றொரு தலைவேதனை யுஞ்சீர்
மங்காமறை யோற்கின்னல்செய் வயின்வேதனை யுந்தான்
தங்காதனூர் புரிந்தூர்ந்ததை யங்காண்டமுஞ் சாற்றும்
நுன்காலடி யார்க்காமய நுழையாதயி லோனே. (ரு)

தவநீடுவி யாதன்சகோ தரர்சண்முனி களுமீன்
பவமாறியு னடியேகதி பதியேயெனு மந்நாள்
சிவமானதை யுறுமுன்னருள் சேரும்படி செய்தாய்
நவபேதமு ளான்முன்னிச நவிலும்பெரு மானே. (சா)

---

ந. சாலூரம்=மேன்மை, சூ – நிகண்டு நோக்குக.

ச. தேன்றேடவிழ் தண்ணார் கூச்சிரமாலிகையோனே = குளிர்ந்த மணமலர்க் கூட்டங்களென அலர்ந்துள்ள ஒரு கூச்சிரமாலையை யுடையானே. கூ=பூமி, சிரம்= வானமாகலின் விண்ணும் மண்ணுமே அவனுடைய பாரமேசுவரப் பேருருவில் மாலை யென மிளிர்வன என்க.

நுன்காலடி தாழ்ந்தேத்திவ னுகர்சூர்தடி யாயேல்
எங்கேயினி யுய்வானுன திதமாமரு ளிதுவோ
கொங்கார்மலர் புனையுஞ்சுரர் கோமான்பணி கொண்ட
செங்காவிரி பாயும்பொழிற் சீகாழியன் மகனே. (௭)

ஏரார்பழ நிக்கேகவென் றெணுமென்றனை யிதுநாள்
வாராதிரு வாராயென வருள்வேமன்று வருவாய்
கூராய்விய சனமென்றன்று கூறிச்சென்ற வணமே
ஆராரரு ளென்றேவரு மயில்வேன்முரு கோனே. (௮)

கண்ணுவிருந் துந்தன்முகங் காணத்தகு மோகேழ்க்
கண்ணுடியி னுலேயது காணத்தகு மதுபோல்
தண்ணுருமுன் னருளாலுயிர் தனைநானறி யாதே
பண்ணுநிற்ப தொன்றும்மிலை பரனேகுரு பரனே. (௯)

தன்னையறி வேனேற்கொளுநன் றன்னையறி வேனின்
றென்னையறி யாதேயினிச் செயுமாறென நொடியாய்
மன்னேமயி லேறுங்குரு மணியேகிரி புகழ்ந்த
அன்னேயெனை யாளுந்திரு வருளேதிரு வருளே. (௧௦)

நந்தனஹு மாசிமீ உ௯ உ புதவாரம்.

---

# ௨. நின்றநிலை விண்ணப்பம்.

---

பண் – பழம்பஞ்சுரம்.

நித்த முன்றனைப் பாவித் தோர்ந்தது நிச்ச யம்மென் றுணர்த்தவே
சத்தி யத்தொடு மென்மு னேவங்கென் றுச வாவெனு நாளெதாய்
நத்து மோவன்று தானன் றேவென்ற னுட்டங் கூடுத லாகுநாள்
முத்த னேமுரு கைய னேபர மோன னேயறி வாயரோ. (௧)

மண்ணி னுசை மடங்கி நானந்த விண்ணி னுசையை வெளவுநாள்
எண்ணு கின்ற படிக்கு நீவந் திணக்கி யன்பொ டுரைக்குநாள்
ஒண்ணு மேலருள் பண்ணு மேயென் னுயிரிரி னுக்குயி ராய்மிளிர்
அண்ண லார்விழி பன்னி ரண்டுடை யண்ண லேயறி வாயரோ. (௨)

மாத ராற்றத்தித் தத்தித் தாவு மனக்கு ரங்கென் வசத்திலே
ஏத நீத்துள் ளடங்கு நாளது வீச னீவந் துரைக்குநாள்

---

௧௦. கிரி = அருணகிரிநாதர்.

௧. நந்துமோவென்பது "நத்துமோ"வென வலித்தல்விகார மாயிற்று.
நந்தல் = உண்டாதல்.

பாத நம்பிய தாசன் பாலருள் பண்ண வேண்டுமிந் நேரமே
வேத னேகரு ணால யாவடி வேலை யாவறி வாயரோ. (௩)

செய்யும் யோகந் தவறி னாயெனச் செப்பி னாயிரண் டறிகுறி
மையு ளேயொன்றை யேம றந்து மருண்ட துண்டதை மீட்டுமென்
ஐய நீயருள் செய்த தாயிலை யாவர் பாலிதை யோதுவேன்
பொய்யி லாவயில் வேல னாபரி பூர ணாவறி வாயரோ. (௪)

யோக நிலைபற்றி அடிகளுக்கு இறைவன் அறிவித்த அறிவிப்பு, இந்த ௪–ஆம் நூலிற் காணப்படுகின்றதன்றே. சரித்திரக்கண்ணும் கூறப்பட்டதாம்.

ஏகு மூச்சை யிழுத்து நானுள் ளிருத்தி யேகட்ட வென்னினும்
தேக மோதிட மில்லை யவ்வழி தேர வும்மிலை யிவ்வுயிர்
போகு நாளென்ன செய்கு வேனின் பொறுப்பி லேயெனை யொப்பித்தேன்
மாகர் போற்றிடு மாம னாசிகி வாக னாவறி வாயரோ. (௫)

ஈச னாகவுஞ் சீவ னாகவு மெண்ணின் மாசக மாகவும்
நாச மேது மிலாத தாய்நிற்கு ஞாயத் தீர்வையி னானுமோன்
றேசி லாதெனை யாக்கும் பண்பிங் கெனக்கொன் றேதின் றுனக்குண்டே
பாச நாசகிர் பாநி தீமிளிர் பாவ கியறி வாயரோ. (௬)

என்று முன்றனைக் கண்டு கொண்டடி யேத்தும் பாடு பெறுதவர்
ஒன்றி னுந்திட முற்றி டார்களி துள்ள தேபொது வாகவே
அன்று சொன்ன படிக்கு நீவந் தழைக்கு நாளதி தூரமோ
குன்றி யேமனங் கன்று கின்றது கொள்கு காவறி வாயரோ. (௭)

வாக்கிற் பொய்யு மனத்தில் வஞ்சமு மல்கு மென்றென் றொழிலெலாம்
போக்கி நின்பத மேத்தி யுய்வது போது மென்றுனை நம்பினேன்
காக்க வுன்பர மேப ரங்குளக் கண்ணு ளோயிக விண்ணுளோய்
ஆக்க நீடு சடக்க ராசர வாட்டை யாவறி வாயரோ. (௮)

தந்தை தாயுஞ் சகோத ரங்களுந் தார முஞ்சுகு மாரரும்
பந்து வும்மித்ர சொந்த மும்பல் பவுள்சு நின்பத மாகவே
சிந்தை செய்ததைத் தேடி னேனன்றித் தேடி வைத்ததொன் றில்லையே
கந்த னேயிரும் பாவ லாவள்ளி காவ லாவறி வாயரோ. (௯)

ஊரும் பேருரு வுஞ்செல் லாகவென் றாரும் பேருரு வுந்தரித்
தாருஞ் சொல்லற் கருஞ்சொல் லொன்றை யருள்செய் தங்கிச மாக்கொளுஞ்
சீரு டைக்குரு மூர்த்தி யேயிவன் செய்யும் விண்ணப்ப முய்யவே
சாரு டைப்புகழ் பாடி னேன்கண்ட சண்மு காவறி வாயரோ. (௧௦)

நந்தனஸு மாசிமீ உ௬வ புதவாரம்.

---

௧. மித்ரம்=வடதூன்முடிபு.

# ௩. அருண்மாட்சிமை.

பண் — நட்டராகம்.

ஆரொண் கங்கைபுனை யர னாருடை வான்பொருளே
ஊரும் பொன்மயிலில் வந் தொளிர்சிவ ரத்தினமே
தேருந் தொன்மறையின் பொருள் சேரருண் முத்தேநின்
காருண் யம்மிலையேற் கணப் போதினி யுய்யேனே. (க)

விண்ணா டுய்பவர்கள் விரை வெண்மல ராற்புசிதம்
பண்ணா நின்றவுன் றன் றிருப் பாதம் வழிபடுவோர்
நண்ணார் சன்மவுவ ரயி னாயக னேயுனருட்
கண்ணோக் கில்லையெனிற் கணப் போதினி யுய்யேனே. (உ)

விண்ணோர் தம்பதியே மிளிர் விண்மணி யின்மணியே
அண்ணா வென்னுயிரே யறு மாமுக ரத்தினமே
பண்ணார் பொக்கிஷமே யெங்கள் பாக்கிய வைப்பேநின்
தண்ணீ ரம்மிலையேற் சணப் போதினி யுய்யேனே.

பூக்கும் வெண்பொடிதான் மிகப் பொலிசெம் மேனியனே
தூக்கங் குண்டலங்க டணி துதைய வெண்டிசையும்
தேக்கச் சாரிவருஞ் சிகித் தேருடை யண்ணாவுன்
நோக்கொன் றில்லையெனி னொடிப் போதினி யுய்யேனே. (௪)

மின்னார் வேற்படையாய் விரை வீசுநற் றண்கதம்பா
பொன்னேர் கொள்சிலம்பா புரி மூன்றுடைப் பொன்மார்பா
மன்னார் தெய்வானை வள்ளி மாணிக்க மேயுனருள்
இன்னே யில்லையெனி னிமைப் போதினி யுய்யேனே. (௫)

நல்லார் போற்றுசிதஞ் செறி நாவி லெழும்பொருளே
பொல்லா நித்திலமே புரை போகா ரத்தினமே
கல்லா வெற்கருள வந்த கண்மணி யேயுனருள்
இல்லா தேயொழியி னிமைப் போதினி யுய்யேனே. (௬)

ஐயங் கோள்கடியப் பன்னு மாரண வாரியனே
தெய்வங் கட்கரிய வொரு தெய்வமே சின்மயமே
பையார் கோபதியே பர பாவகி யேயருணீ
செய்யா யேலிங்கியான் றினைப் போதினி யுய்யேனே. (௭)

---

க. காருண்யம் = வடநூன்முடிபு.

பொய்யா வாழ்வுடையாய் புர மூன்றெரித் தோர்புதல்வா
ஐயார் தென்பொதியப் பதி யமர்மு னிக்கினிய
மெய்யா பொன்பழநித் துரை வேலா வெற்கினருள்
செய்யா யேலிங்கியான் றினைப் போதினி யுய்யேனே.

இன்பார் சாகரமே யென தின்ப மனோரதமே
பொன்பூ மேனியனே பரி பூரண வானவனே
என்பூ சைச்சிவனே வெயி லேறயிற் கையாவுன்
அன்பே யில்லையெனி னனுப் போதினி யுய்யேனே.

வாளா ரக்ஷியெழில் வளர் வள்ளி மனோகரமே
நீளா திக்கமெனுஞ் சிவ நேசகிர் பாகரமே
கோளீ னங்குறுகாப் புகழ் கூறின வன்பரனே
ஆளா தேபோனு லனுப் போதினி யுய்யேனே.

நந்தனவரு மாசிமீ உ௯௨ மந்தவாரம்.

## ௪. அடைக்கலம்.

பண் — இந்தளம்.

அஞ்சு மாகி யாறு மாகி யாதி யந்த நாப்ப ணின்றி
விஞ்சி யேநி றைந்த தாகி வேலு டைக்கை யானென் றாகித்
துஞ்ச றேற்ற நீத்த தீத சுப்பிர மணிய மான தேவே
தஞ்ச மேவுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே.

பெண்ணு மாகி யாணு மாகிப் பேத மோட பேத மும்மாய்
மண்ணு மாகி விண்ணு மாகி மற்று மேற்ற செயல்க ளாகி
எண்ணெ ணுச்சை தன்ய மும்மா மீச னேசு ரேச னேநல்
தண்ண மேவுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே.

நந்தி யாட கேசு ரர்நீ லன்க ரன்செம் பானு கம்பன்
தந்தி பூணுங் காள கண்டன் சங்கு கர்ணன் றண்டி குண்டன்
கொந்து சூட னேக ருத்ர கூளி சூழச் சிகண்டி யூர்ந்தோய்
சந்த மேவுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே.

துங்க வார ணங்கச் சையாச் சூடி யேமப் பொடிதி மிர்ந்தை
அங்க மாக யோக தண்ட மான தொன்று கரம்பி டித்துச்
செங்க மேய சிறிய சிக்கந் திகழ நின்ற பழநிச் சித்தா
சங்கை வீட்டுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே.

௪. கம் = தலை.

செப்பொ ணாத பரம பத்தி செய்துள் ளீர மேற்ற வர்க்கும்
ஒப்பி லாத பிராண யோக முற்ற வர்க்கும் ராஜ யோகம்
முப்பொ ருள்கொண் டாடி னோர்க்கு மூல னான பழநிச் சித்தா
தப்பி லாவுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே. (௫)

கும்ப யோனி வரைக ளிங்குக் கொணர்தி யென்ற படிகொ ணர்ந்த
வம்ப ருவு மாவி டும்பன் வாழ வேநல் லடிமை கொண்டோய்
நம்பி ரானென் றேத்த விந்நா ளாயி னேற்குங் கிருபை செய்தோய்
தம்பி ரானின் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே. (௬)

ஆரல் போலுங் காவி வட்ட மரையில் வீக்கி யதற்கி யைந்த
சீரி லங்கு ருத்ர சின்னந் தேச மோடு மிலக வுள்ளோய்
ஆர ணங்க ளாக வுள்ளோ யைந்தொ டேயொன் றதிக முள்ளோய்
தார காவுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே. (௭)

அண்டர் கோற்குத் திருவ ளித்தோ யாறு பேர்க்கன் றருளி கைத்தோய்
தொண்டர் தம்முட் பதிவி ருந்தோய் சுருதிச் சென்னி மீதி ருந்தோய்
துண்ட மாறு மோரு ருக்கட் டென்ன வங்க விண்டு றைந்தோய்
தண்ட மேவுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே. (௮)

பிரம னைத்தா ளாலு தைத்தோய் பிரம சிட்டி தனையி ழைத்தோய்
பரம னுக்கொன் றோதி நின்றோய் பதும நாபன் பரவப் பெற்றோய்
கரம திற்பொன் வேலி யங்கக் கருதார் தம்மைச் செறுத்து கந்தோய்
சரண மேவுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே. (௯)

சிட்டி காவ லொடுந சிப்புந் திரோப வஞ்செவ் வருட்ட யாவும்
மட்டி லாம லேந டாத்த வல்ல மையுள் ளோய்வி னோதச்
செட்டி யாக வடிவு கொண்டோய் சீர்த்தி சொனவற் கருள் புரிந்தோய்
தட்டி லாவுன் னடிப்பண் போதுந் தாச னானின் னடைக்க லம்மே. (௧௰)

நந்தனஸு பங்குனிமீ ௫௨ குருவாரம்.

---

# ௫. துக்கரகிதபிரார்த்தனை.

---

பண் — பழம்பஞ்சுரம்.

மூந்நா னயனு முந்நா லரியா மொழிசேர் மறைநாவா
இன்னா வணுகா விறைவா சூரவா விறையோர் பணிபாதா
மன்னார் மயிலில் வருமா பாலா மடியா வாழ்வாளா
அன்னே யயனே யெனுமென் கவலை யறநீ யருள்வாயே. (௧)

---

௧. அரி = ஆயுதம்.

ஒழியா விசதப் பொடியாய் பொடியா வுரையார் பொற்கழலாய்
பழிசேர் சிதடத் தனுவோர் பகைஞா பகல்சேர் வேற்கையா
பொழிலார் பழநிப் பதியாய் நிதியாய் புனிதா மாப்பொறையா
அழியா மொழியா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. (௨

சொல்லுஞ் சுருதிப் பொருளே யருளே சுடர்சேர் மெய்ம்மெய்யா
செல்வங் கட்குயர் செல்வக் கயிலைச் சிவமே செவ்வேளே
நல்லந் திகழுங் கேதா ரமிசை நடனஞ் செய்யேறே
அல்லும் பகலும் படுமென் கவலை யறநீ யருள்வாயே. (௩

மாலும் விதியும் பரவுஞ் சரணு வளர்சங் கப்புலவா
வேலுங் குளிரு மிளிர்செங் கையா விரையா ரணிமார்பா
சேலும் வசியு நாணுங் கணிஞுள் சேயா தண்ணளியா
ஆலுந் தளையா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. (௪

மூத்தே மணியே முழுமா நிதியே முதிரா யௌவனமே
சத்தே ரசமே தனியின் னமுதே தவமே தவப்பேறே
வித்தே முளையே முளையுள் ளுயிரே விபுவாய் விரிசோதீ
அத்தா வயில்வே லவனே கவலை யறநீ யருள்வாயே. (௫

தாதா நீபத் தொடரா குமரா சரணு யுததுவசா
போதார் முடியா புனிதா தனியா புயமுந் நாலீசா
வேதா வடிதாழ் விமலா சபலா மிறலார் வேளாளா
ஆதா ரவையா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. (௬

புனலார் கங்கைக் கிடையோர் புதல்வா பொன்னூர் கண்ணாளா
எனையா டண்டைச் சரணு புரணு விகல்சேர் சகநாதா
தினைசேர் குன்றக் குறமா னினியைச் சேரும் பவுள்சாளா
அனலார் மெய்யா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. (எ

மூட்டா வாட்டா மொழியா நாத்தே முடியாச் சிவலோகா
கட்டா ரறிஞா கருதா மனசா கருணு கரவேலா
எட்டா நிலையா விறையோர் தலைவா விருளெல் லில்லாதோய்
அட்டா வடிவா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. (அ

௩. கேதாரம் = மயில்.

௪. தளை = சிலம்பு; நிகண்டுகள் காண்க.

௬. தொடர் = சங்கிலி. சங்கிலி போன்ற மாலையுடையானே என்பார் "தொடரா ன்றூர்.

மீறல் - "மிறல்" எனக்குறுகிற்று.

எ. சேர்தல் = அத்துவைதமாக விரவல்.

அ. மொழியா நாத்தே = மோனநிலைக்கடவுள்.

எஞ்சா வடியார் தொடர்பா வடல்சே ரிறைவா சட்கிரீவா
துஞ்சா வெழிற்கே கயமூர் குழகா சுகூர்தா சுயஞ்சோதீ
பஞ்சா ரடிச்சேல் விழியா டனயா பரிபூ ரணபாதா
அஞ்சா விறலோ யென்றன் கவலை யறநீ யருள்வாயே. (௯)

விண்ணு டுறைநா ரதனு சிரியா வியன்வா ருணியீசா
மண்ணார் முசுமன் னனையாள் சிவனே மதியீ புண்ணியனே
பண்ணார் புகழ்பா டினவன் பதியே பரனார் குருநாதா
அண்ணு வடிபே ணியவென் கவலை யறநீ யருள்வாயே. (௧௦)

நந்தனஞு பங்குனிமீ ௧௨௨ குருவாரம்.

---

# ௯. ஆறெழுத்துண்மை.

---

பண் — காந்தாரபஞ்சமம்.

அற்புத மாகிய வருமறை மொழிபோல்
வெற்புயர் புவனம்பல் விளங்கிடு மாறு
பற்பல தேவர்கள் படர்ந்தவிண் ணுறினும்
தற்பர மாவது சரவண பவவே. (௧)

பத்தியு ஞானமும் பரவிடு மார்க்கம்
எத்தனை யோவகை யிருக்கினு மிகத்தில்
முத்திதந் தனுதின முழுப்பல னல்கச்
சத்திய மாவது சரவண பவவே. (௨)

பூசிக்கும் வானவர் புரவல னுவி
வாசிக்கு மாவடி வழிபடி னென்றும்
பாசத்தை நசித்திவண் பரப்பிரம வாழ்வைத்
தாசர்பங் காக்கிடுஞ் சரவண பவவே. (௩)

அருணல முள்ளவ னுதிமுன் னுள்ளான்
பொருணல முள்ளவன் பூசித வடியார்க்
கிருணில மெய்தினு மிதமுட னேயத்
தருணத்திற் காப்பது சரவண பவவே. (௪)

பொடிபொலி மேனியன் புரண வியோம
வடிவுடை யயிலுடை மனனடி கைகூப்

---

௩. ஆவி = வாசனை; **வகரவேதுகை** காண்க.

படியவர்க் கிடுக்கணிவ் வவனியிற் குறுகின்
சடிதியிற் றடுப்பது சரவண பவவே.

மஞ்சிகைச் செவியோன் மயிற்பரி யூர்வோன்
தஞ்சமென் றவர்க்கரு டருசம ரூரான்
செஞ்சரண் வாழ்த்துநர் திருவடி சேர்வார்
சஞ்சலந் தவிர்ப்பது சரவண பவவே.

பொங்கிடு புனலிலம் பூவில்வெங் கனலில்
எங்கணு முளவெளி யில்வளி பகலிற்
கங்குலி லடியவர் கருத்துநன் காகச்
சங்கடந் தீர்ப்பது சரவண பவவே.

தென்றிசைக் கோன்விடு திரிவிதத் தூதர்
குன்றெனும் புயமலை குலுங்கமுக் குடுமி
வென்றிகொள் கடந்தடி வீசிவெம் பிடினும்
தன்றுணை யாவது சரவண பவவே.

தேவியுந் தேவனுந் திருவுரு வருவம்
மேவி யனுதியாய் மிளிர்தல்சண் முகமென்
றுவலுற் றுணர்பவ ரழிவுறு வண்ணஞ்
சாவினைத் தடுப்பது சரவண பவவே.

இந்திரன் முனிவர்க ளேத்துபொற் சரணன்
செந்திரு நகரிடஞ் சேர்ந்ததில் வாழ
அந்திருப் புகழ்பா டினவருக் கபயம்
தந்ததைத் தருவது சரவண பவவே.

நந்தனஹு பங்குனிமீ ௩௨ உ சுக்கிரவாரம்.

---

## எ. ஆறெழுத்துண்மை.

---

பண் — கௌசிகம்.

எண்ணில் பல்வித மாக விருந்திடு
மண்ணொ டைந்து வகைப்படு பூதமும்
பண்ணி வைத்துப் பராபர மாய்நிற்றல்
அண்ண லார்பெய ராறக்க ரங்களே.

---

அ. முக்குடுமி = முத்தலைச்சூலம்.
கடம் = கயிறு. "கடங்கயிறு" என்பது டகரவேதுகை.

பூரு வந்தக் கிணம்புகழ் வாருணம்
சீரு யர்ந்த வுந்தக்கடி சேணுநல்
பூர ணச்செய விற்பொலி வுற்றுள்ள
ஆர ணன்பெய ராறக்க ரங்களே. (௨)

துய்ய மூலமுங் குய்யமுந் தொப்புளும்
மெய்ய னாகத மும்மின் விசுத்தியும்
மைய மான லலாடமு மாய்நிற்கும்
ஐய னார்பெய ராறக்க ரங்களே. (௩)

ஓது மாரண மாகம முன்னரும்
கோதி லாத புராண குலங்கணல்
நீதி யாமற நூனிக மங்களும்
ஆதி யின்பெய ராறக்க ரங்களே. (௪)

ஊறி கந்தசைத் தோதி யழுங்கலை
நூறி நல்லக நோன்புறு வார்கட்காம்
கூற ருஞ்சத்த கோடிநன் மந்த்ரமும்
ஆறு ளோன்பெய ராறக்க ரங்களே. (௫)

ஒப்பின் மாவசி யஞ்செவ் வழைப்பொரு
துப்பு றுமோக னந்தம்ப னஞ்சொலத்
தப்பி லாதவுச் சாடன மாரணம்
அப்ப னார்பெய ராறக்க ரங்களே. (௬)

சுத்த மான சுகப்பொரு ளொன்றனைச்
சித்த மீதிருத் தித்தினந் தோறுநல்
பத்தி செய்தவும் பர்க்கரு டந்தவை
அத்த னார்பெய ராறக்க ரங்களே. (௭)

விண்ட லத்துறை விஞ்சையர் கந்தர்வர்
தெண்டு டைத்தெருட் சித்தர் முனீசுரர்
கொண்ட வின்பு பெறற்கருள் கூர்ந்தவை
அண்டர் கோன்பெய ராறக்க ரங்களே. (௮)

செம்பொ றிக்கண் விழித்துச் சினந்தடற்
றும்பெ குத்தடி சூலம் பிடித்தெமன்
கெம்பு கிங்கரர் கன்மங் கெடுப்பவை
அம்ப ரன்பெய ராறக்க ரங்களே. (௯)

---

௩. துய்ய = தூய்மை யென்னும் பண்பினடியாகப் பிறந்த பெயரெச்சம்.
௯. கெம்புதல் = கிளர்தல். இஃதொரு நாட்டுச்சொல்லாகலாம்.

நீண்ட வாழ்வுடை நித்த வகத்தியன்
பூண்ட மாவனு பூதி புகன்றவன்
காண்டல் கூர்பலர் கண்ணு யிருந்தவை
ஆண்ட வன்பெய ராறக்க ரங்களே. (௰)

நந்தனஹு பங்குனிமீ கஙு ஆதித்தவாரம்.

---

# அ. திருப்பரங்கிரி.

---

பண் – பஞ்சமம்.

எந்தையே யிறையே யிணையரு ளிலையே
 யிங்கியா னுய்ந்திலே னந்தோ
சிந்தைசேர் வானே திகழ்விழுப் பொருளே
 திருப்பரங் கிரியுறை சிவனே
பந்தமே போக்கிப் பதவரு ளாக்கிப்
 பகலிர வணவிடா நிலையிற்
சந்ததஞ் சேர்க்கத் தயவுசெய் யாயோ
 சரவண சுயம்பெரு மாளே. (க)

ஏசுறு வருளா மிதநல மிலையே
 யிங்கியா னுய்ந்திலே னந்தோ
தேசுசே ரெழிலே திகழ்விழுப் பொருளே
 திருப்பரங் கிரியுறை சிவனே
பாசமே போக்கிப் பதவரு ளாக்கிப்
 பராபரி பூரண நிலையில்
நேசமாய் நிலைக்கச் செயும்வகை புரியாய்
 நிகழுயிற் சுயம்பெரு மாளே. (உ)

இன்றுநா ளெனவி லாவரு ளிலையே
 யிங்கியா னுய்ந்திலே னந்தோ
சென்றுதே யாவை திகழ்விழுப் பொருளே
 திருப்பரங் கிரியுறை சிவனே
அன்றுநீ சொனவா றடிமையை யழைத்துன்
 னடித்தொழும் பாயுறும் வேலை
ஒன்றையே விதிப்பா யயிற்படை பிடித்தே
 யொளிர்சுப சுயம்பெரு மாளே. (௩)

எங்கணு யகநீ யிடுமரு ளிலையே
    யிங்கியா னுய்ந்திலே னந்தோ
திங்களா னனனே திகழ்விழுப் பொருளே
    திருப்பரங் கிரியுறை சிவனே
கங்குல்போ லுளவா ணவமல மறவே
    கருணைசெய் தேயெனை யாளாய்
அங்கணு புரணு வணியலர்ச் சரணு
    வயிலுடைச் சுயம்பெரு மானே. (௫)

இசையியல் கூத்தென் றுளதமிழ் நாதா
    யிங்கியா னுய்ந்திலே னந்தோ
திசைபுக ழாதீ திகழ்விழுப் பொருளே
    திருப்பரங் கிரியுறை சிவனே
வசைதரு மாழும் மலமற நீதான்
    வருவது கடினமெ னுதே
உசிதமொ டுதடுத் தாள்வது கடன்கா
    ணுயரயிற் சுயம்பெரு மானே. (௬)

இச்சையான் மறற்கே யடிமையென் றுனு
    யிங்கியா னுய்ந்திலே னந்தோ
செச்சைசேர் பிணையாய் திகழ்விழுப் பொருளே
    திருப்பரங் கிரியுறை சிவனே
பட்சமே யுரித்தாய்ப் பழமல மகற்றிப்
    பகரரு மானந்த நிலையில்
நிச்சயா திக்கமா நிறுத்தவா ராயோ
    நெடுமயிற் சுயம்பெரு மானே. (௬)

என்னையாள் வானே யோரரு ளிலையே
    யிங்கியா னுய்ந்திலே னந்தோ
தென்னர்மா கூற்றே திகழ்விழுப் பொருளே
    திருப்பரங் கிரியுறை சிவனே
இன்னலா மைவகைப் பாசவல் லொழித்துன்
    னிணையடி யென்முடி சூட்டி
நல்னலங் கொளற்குப் பன்னவா ராயோ
    நறுமயிற் சுயம்பெரு மானே. (எ)

---

௬. மறல்=பிணக்கு, யமன்.

எ. தெறுநர் என்பது "தென்னர்" என மருவிற்று பகைவரென்பதுபொருள்.

எம்பிரா னேயுன் னன்பனுக் காயே
 யிங்கியா னுய்ந்திலே னந்தோ
செம்பொருட் கடலே திகழ்விழுப் பொருளே
 திருப்பரங் கிரியுறை சிவனே
நம்பினே னுனையே யைந்தரு மாயை
 நலிவுறத் தடுத்தா ளாயோ
உம்பர்கா வலனே யுமையவள் சுதனே
 யுணர்வயிற் சுயம்பெரு மானே. (அ)

இஞ்சையா ணவப்பாம் பின்னமுங் கறிக்கி
 னிங்கியா னுய்ந்திலே னந்தோ
செஞ்சடா னனனே திகழ்விழுப் பொருளே
 திருப்பரங் கிரியுறை சிவனே
அஞ்சிடா யெனவே யாதரித் தணைத்துன்
 னடித்தொழும் பாக்கவா ராயோ
மஞ்சுவாழ் கயப்பெண் மயன்மண வாளா
 வடிவயிற் சுயம்பெரு மானே. (௯)

இட்டமா மருடா னில்லையே யாயி
 னிங்கியா னுய்ந்திலே னந்தோ
சிட்டர்பா லனனே திகழ்விழுப் பொருளே
 திருப்பரங் கிரியுறை சிவனே
கட்டுமா ணவமாங் கயிற்றினை யறுத்தென்
 கவலையின் றிறங்கடி யாயோ
மட்டிலா வகுப்பை யுரைத்தவ னிறைவா
 மதியயிற் சுயம்பெரு மானே. (௧0)

நந்தனஞூ பங்குனிமீ ௧௬வ சோமவாரம்.

---

## ௬௯. திருச்சீரலைவாய்.

---

பண் — பஞ்சமம்.

**ப**னியருட் சேஷா பவளச்செவ் வாயா
 பச்சைமா யன்பணி பாதா
புனித குணாளா புகழ்பவர் தோழா
 பொன்றிடா வுண்டர்கம் பரனே

---

௧. மயம் "மயன்" எனப்போலியாயிற்று. அழகென்பது பொருள்; நிகண்டுகேள் காண்க.

ஏனைமறக் காதிங் கருளிசைப் பவனே
யெழிற்செழுஞ் சீரலை வாயா
தனிநிலைச் சுகனே யுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவனே. (௧)

நண்ணுவா ருறவே யெண்ணுவா ரிறையே
நான்மறை முடிவிற்சொல் பொருளே
மண்ணும்வா னகமும் பண்ணுமாள் வினைஞா
மட்டிலா நடனவெம் பரனே
உண்ணும்வா னமுதே கன்னலா ரமுதே
யுயர்நிலைச் சீரலை வாயா
தண்ணமார் சரணு வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவனே. (௨)

துடியிடைக் குறமா தணிமடச் சுரமா
துடையரு மாமணத் தோழா
நடமயிற் பரியா பிரியகப் பிரியா
நானடி தொழுநறும் பரனே
சுடர்மணித் தனையா வடலயிற் றலைவா
துணிநிலைச் சீரலை வாயா
தடவருட் புரணு வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவனே. (௩)

அருளகக் கலியே லயமுதிப் பிலியே
யமுத சுகோதயப் பிழம்பே
தெருண்மணித் திரளே குருமணிப் பொருளே
தீவினை தீக்குமெம் பரனே
மருமலர்க் கரனே யடிகளுக் கரனே
மணிநிலைச் சீரலை வாயா
தருணதற் பரனே யுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவனே. (௪)

இளர்சிவக் கொழுந்தே தவர்மனக் கரும்பே
கெழுவருண் மாமணிக் குலமே
வளர்நலக் கிழியே யகவிளக் கொளியே
மனமய றீர்க்குமெம் பரனே

---

௩. பிரியகம்=கடம்பு; ப்ரியகம் என்பது வடமொழி.

களிமனத் துமையா ளருள்ரசக் கனியே
கயநிலைச் சீரலை வாயா
தளைமணிச் சரணு வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே.

தமநிறங் காட்டா வியன்வெளிக் கூத்தா
சங்கரா பண்டைமா தேவா
சுமனச மௌலீ திமிரமில் சோதீ
சுந்தரா தொண்டனேன் பரனே
இமையவர் ஞாட்பா நிறைவுடை யாப்தா
வெழினிலைச் சீரலை வாயா
சமரச சுகுண வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே.

சுகுணபொக் கிஷமே விகதபெட் டகமே
சுதைபழுத் தொழுகுகற் பகமே
இருளையுற் றுயர்வோர் பிரபலப் பொருளே
யெந்தையே தொண்டனேன் பரனே
விகலமற் றொளிர்மா தவபலச் சுடரே
வியனிலைச் சீரலை வாயா
சகலவற் புதனே யுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே.

புலனெடுக் கிடுவோ ரகநடிப் பவனே
புந்தியார் பூத வனீகா
சிலைமதன் படிவம் பொடிபட விழித்தோர்
செல்வனே வல்லவெம் பரனே
அலைகடற் றிரைவீ சொலிமலி வளநா
டகழ்நிலைச் சீரலை வாயா
சலமலர்ச் சரணு வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே.

---

௫. கயநிலை=நீர்நிலை.

எ. விகதம்= (பூதம்—) தூய்மை, ஏகாந்தம்; விவிக்தம் என்பதன் விகாரம் "விவிக்தே பூத விஜநௌ" என்பது நாநார்த்தவர்க்கம்.

சுதை=அமிர்தம்; தகரவேதுகை காண்க.

விகலம்=குறைபாடு: பிங்கலந்தை காண்க.

துதிபணிப் படிப்போர் விதியினைக் கிழிப்போய்
சுபகரச் செருக்கினைத் தருவோய்
முதுமறைக் கவைக்குண் ணிதமொளித் திருப்போய்
மொடுமொழி கூறுமெம் பரனே
இதமரைக் கமலா சனத்துறை குமரா
விளைநிலைச் சீரலை வாயா
சததளச் சரணு வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. (௯)

பவமழிப் பவனே சிவமளிப் பவனே
பரிவுடைத் துவிநவ நயனு
நவமொழிப் புகழ்ப்பாச் சொலினவர்க் கிறையே
நச்சினர்க் கினியவெம் பரனே
உவமையிற் படியா வடிவுடைத் திருவே
யுறைநிலைச் சீரலை வாயா
தவவருட் சனகா வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. (கO)

நந்தனஹு பங்குனிமீ௳ கஎஉ மங்களவாரம்.

---

## கO. திருவேரகம்.

---

### திருவிராகம்.

பண் — கௌசிகம்.

நஞ்ச முண்ட கண்டனர் நயந்து தந்த செல்வனே
பஞ்ச பாத கந்தணந்த பண்பி னோர்தொ ழுங்குகா
இஞ்சிசூழ்த டங்கண்மேய வேர கச்சு ரேசனே
தஞ்ச மென்ற டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே. (க)

வாசு வன்றி ருக்குசத்து நீழ வில்வ ழுத்திய
ஈச தூஷ ணைக்கிணங்கி னோர்பு ரந்த கித்துளோர்

---

க. கவை=காடு ; "கவருங் காடுங் கவையெனலாகும்" என்பது பிங்கலந்தை. இளை=மேகம் ; நிகண்டுகள் காண்க.

கO. உறை=விழுமம்.

உ. வாசுவன்திரு=வாசு+வன்+திரு எனப் பிரித்துக்கொள்க. வாசு—"வாஸு" என்னும் வடமொழி விகாரம், விஷ்ணுவுக்கு இஃதொரு பெயர். நிகண்டு— விச்வ மேதினீ காண்க. வன்திருக்குசம் வலிய அரசமரம். குசம் — மரம் என்பது சூ — நிகண்டு, "திருமரம்" என்பது பி — நிகண்டு.

ஏசு ரூத ளித்தசெல்வ வேர கச்சு ரேசனே
தாச னென்ற டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே.

புண்ட ரீக லோசனன்பொன் பூத்த வேத னுலமார்
கண்ட னென்னு மூவகைக் கருத்த ருந்தொ ழும்படிக்
கெண்ட கைக்கு ணங்கணீடு மேர கச்சு ரேசனே
தண்ட னிட்ட டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே.

அங்க ணர்சி காவளத்தி லேறு கின்ற வாண்டவா
மங்கை பாக னர்க்குவேத வாக்கு மூலஞ் சொன்னவா
எங்கு லந்த ழைக்கவந்த வேர கச்சு ரேசனே
சங்கை யுற்ற டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே.

மாக ரோடு நாகரும் வயங்கு மண்ட லத்தரும்
போகு முன்னெ மக்கடைக்க லம்பு கிற்ச மன்றிசைக்
கேகி டார்மெய் யென்றுரைத்த வேர கச்சு ரேசனே
தாக முற்ற டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே. (ரு

இந்த நாளு னைக்கருத் திருத்தி யென்க ணேயுள
பந்தம் யாவு மற்றிடாத பண்பி னைப்பொ ருந்தினுன்
எந்த நாளு நன்குறேனல் லேர கச்சு ரேசனே
தந்தை யென்ற டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே.

நாத வொண்சி லம்பலம்ப நாட கம்பு ரிந்திடும்
பாத பங்க யங்களைப் பணிந்து மிந்த நாளையோ
ஏது மின்றி மாய்வனோநல் லேர கச்சு ரேசனே
தாதை யென்ற டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே.

பூமி யந்த ரத்தினும் பொருந்து மேன்மை பூக்கவே
யாமி யக்கை லாயநாதற் கோமு ரைத்த வையநீள்
ஏமு றந்த வத்த ரேத்து மேர கச்சு ரேசனே
சாமி யென்ற டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே.

மங்கை நாடிய் பஞ்சவன் மகட்கு மாமு கங்கரந்
தங்க மான நன்முகங் கொடுத்த வாதி யன்பினல்
எங்கு லங்கொ ளீசனேநல் லேர கச்சு ரேசனே
சங்கம் வேட்ட டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே.

---

அ. யாமியக்கைலாயம் = பொதியமலை. யாமியம் = தெற்கு ; சூ — நீகண்டு கோக்

உம்ப ரும்பு கழ்வகுப் புரைத்த வன்றொ டுத்தசீர்
பம்பு மாலை யைத்தினந்தி னம்பு னைந்த பாவகீ
எம்பி ரானெ னக்குணிற்கு மோர கச்சு ரேசனே
சம்பு வென்ற டுத்தவென் றனைப்பு ணர்ந்து கொள்வையே. (௧௦)

நந்தனஸூ பங்குனிமீ ௧௮௨ புதவாரம்

---

ஆகப்பதிகம் பத்தினும்போந்த திருப்பாட்டு — ௧௦௦
காப்பும் தௌத்தியமும் ௨௧
ஆகத்திருப்பாட்டு ௧௨௧

---

# ௧௧. பலகிரி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் – பஞ்சமம்.

நினைகழ னிலவிடு சததள விணையடி கருதிடு தவமுடையோர்
மனவெளி தனினட மிடுமர ஹரசிவ வடிவுடை யயிலரசே
பனிமலி யிதழவிழ் தொடைய லணிபெரும பலகிரி யுறைமுருகா
இனிமைசெய் புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (௧)

களிகிளர் முசுமுக னெனுநிரு பனரிய கடவுளர் கதியினுமேற்
கொளவரு ளினனென வழிபடும் விபுதர்கள் குலவுற வுளசிவனே
பளக வதரவுமை கரம்வள ரழகிய பலகிரி யுறைமுருகா
இளைமலி புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (௨)

அருமறை புகழ்நிறை குருபர மிதுவெனு மமைவொடு தினமுணர்வாய்ச்
சரவண பவகுக வெனவழி படுபவர் சனன மரணமறவே
பரிவுட னடிமைகொ ளகணித பசுபதி பலகிரி யுறைமுருகா
இருசுறு புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (௩)

துணிசெ யிரவிகுல வர்ச னொருவனுயர் சுசியொடு தபசுசெயாத்
திணிமணி மதுரையி னரனது தொழினனி செயவென நசைஇயவா
பணிய குமரகுரு பிரணவ வுருவொளிர் பலகிரி யுறைமுருகா
இணையறு புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (௪)

---

௧. பலகிரி = குன்றுதோறாடல்.
௨. பளகம் – பவளம் என்பதன் மரூஉ.
இளை = தலைக்காவல்; பி – நிகண்டு காண்க.
௩. இருசு = செவ்வை; ரகரவேதுகை காண்க.

இலகு கயனயன வுமையனு தினம்வள ரிளமலி மணி மதுரைப்
புலவர்க டலைவனே யறுமுக வருணெறி புகவரு ளியபரனே
பலநவ மணிநிறை வளமுட னுயரிய பலகிரி யுறைமுருகா
இலவச வளியுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (ரு)

நடமயின் மிசையொரு சுடர்மணி யெனவரு நவசபை களின்முதல்வா
தடவிடின் னிசைமுனி பகிரத னடிமைகொள் சமரச நிலையிறைவா
படமுடை மணியர வணிபவர் மனமகிழ் பலகிரி யுறைமுருகா
இடரறு புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (சு)

சகல கலைகளையு முணர்வுறு வலிமலி தவமிகு குறுமுனியைச்
சுகுர்த வடிமையுறி கொளுமொரு குருபர சுருதிகள் புகழ்சிவனே
பகநிறை சரவண பவமறை யவர்புகழ் பலகிரி யுறைமுருகா
இகழ்வறு புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (எ)

புதுமல ரளக வனிதையரும் விழைவுகொள் பொருவறு குறமயிலாள்
அதிமது ரவரவ ரசநுகர் தலைவவொள் ளமுதவி புதர்பரனே
பதும நனைநிரைக ளவிழும் வளமொழுகு பலகிரி யுறைமுருகா
இதமிகு புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (அ)

வியனென வெயில்விரி விமலர் கயிலைமலை மிசைநிறை கொலுவுடையோய்
மயறெறு கவுணியன் விடமமு தெனநுகர் வலியுள னழகுடையான்
பயிறமி ழுணிபுனை பசுபதி யுடன்மொழி பலகிரி யுறைமுருகா
இயல்புறு புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (கூ)

மூரணறு புகழ்சொன வருண கிரியைநிஜ முடிபுடை யறிஞனெனத்
தரணிய ருவணையர் புகழ வருளினவொர் தகரவெ ளியிறைவனே
பரவரு நெடுவள மலிய முகில்கள்கவி பலகிரி யுறைமுருகா
இரிபறு புரிவுட னெனையு மடிமைகொள விதுநல தருணமரோ. (கo)

நந்தன௵ பங்குனிமீ உகவ மந்தவாரம்.

---

அ. அரவம்=ஒலி.

# ௧௨. திருச்சோலைமலை.

---

னகரவெதுகைக் கலிநிலைத்துறை.

பண் — இந்தளம்.

நின்னையே சிவமா யறுமுனி வருந்துதி நிகழ்த்திப்
பன்ணொ நலமே படைத்துய்ய வருளிய பரனே
மன்னுமா சோலை மலைமணா வுன்பதம் வணங்கற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் றலையே. (௧)

சென்னிநா லுடையா னனுதினம் பழிச்சிடு தெய்வம்
என்னவே துலங்கிப் பவளத்தின் றிரளென வியங்கும்
நென்னடைச் சோலை மலைமணா நின்மொழி கேட்க
என்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் செவியே. (௨)

வன்னிசேர் நுதற்கண் ணுறுடை யோய்கதிர் வடிவேல்
மின்னுபூங் கரனே வானவ ரேத்தருள் விதுரா
பன்னமார் சோலை மலைமணா நின்னிலை பார்க்க
என்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநல் விழியே. (௩)

அன்னையா யயனா யனுதினம் வழிபடு மடியேன்
தன்னுளே யுணர்வாய்ச் சுடர்பொரு ளாயுள்ள சாமீ
முன்னைசேர் சோலை மலைமணா நின்சரண் முகக்க
என்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் மூக்கே. (௪)

மின்னுவா னவர்மன் மயிலென வரவதன் மேலே
உன்னியே றிமகா நிசிசர ருயிர்தொலைத் துள்ளோய்
மன்னுமா சோலை மலைமணா நின்னடி வாழ்த்தற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் னாவே. (௫)

பின்னைகேள் வனயன் பிறங்கெழின் முனிவரர் பிறரும்
உன்னியே கணித்தற் கமைவறு பெருந்தகை யுடையோய்
துன்னுமா சோலை மலைமணா நின்சரண் டொழுமுன்
என்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் கரமே. (௬)

தென்னிலா வொளிவிஞ் சறுமுகத் திளமையந் தேவாய்ச்
சொன்னநீ ளயிற்கை யிலகடி கேண்மனத் தூயோர்

---

௨. நென்னடை — நெல்+நடை யெனப்பிரிக்க;
நடை — செல்வ மென்னும் **டகரவேதுகை.**

மின்னிவாழ் சோலை மலைமணு நின்றல மிதிக்க
என்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் காலே. (எ)

முன்னைநா ளரியவ தாரவல் லேனத்தின் முரணூர்
சென்னிகே டறவொண் மருப்பினைப் பறித்தவொர் திறலோய்
அன்னமூர் சோலை மலைமணு நின்பொடி யணிய
என்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநல் லுடம்பே. (அ)

அன்னவா கனனை யருஞ்சிறைப் படுத்திமெய் யறிவால்
பன்னகா பரணற் கோமுதற் பொருடனைப் பகர்ந்தோய்
கன்னல்சூழ் சோலை மலைமணு நின்கழல் கருதற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் மனமே. (கூ)

பன்னுறுப் புகழ்தான் படித்தவன் றனைத்திருப் பரிவால்
இன்னனீத் திருக்க வுரைத்தநின் மயதின வெழிருன்
மின்னுமா சோலை மலைமணு நின்னருள் வேண்டற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் னெஞ்சே. (க0)

நந்தனஹூ பங்குனிமீ உ௩உ சோமவாரம்.

---

# கந. திருப்பழநி.

---

பண் — நட்டராகம்.

சிங்கா நன்குதவுந் திரு வாறெ ழுத்தாளா
கங்கா ளன்குருவே நினை யேக ருத்தில்வைத்தேன்
மங்கா வாழ்வுடையா யெனை வாவென் றேயழையாய்
தெங்கார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (க)

எல்லா ருந்தொழுது நல மேற்க வென்றிலறம்
இல்லா மாதுறவா யில காறெ ழுத்திறைவா
வல்லார் வானவனே யெனை வாவென் றேயழையாய்
செல்வா தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (உ)

நாயே னுய்யவென்று நவில் வேன்வ ருகவென்று
நேயா நீவரலா நிஜ மாநம் பென்றுசொன்ன
வாயா வெம்பரனே யெனை வாவென் றேயழையாய்
சீயார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (ந)

என்று வின்றுதியை யினி தேற்றெ னக்காக
நன்று வையசைத்து நல மேயு ரைத்தெனையாள்
மன்னர் சின்மயனே யெனை வாவென் றேயழையாய்
தென்னார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (௪)

சூடே னின்னடியை யன்றித் துதித்து நானெதையும்
பாடே னெம்மானே பர மார்த்த சன்யாசி
வாடா விண்மலரே யெனை வாவென் றேயழையாய்
சேடார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (௫)

தந்தார் சித்தர்களுந் தனி ஞான விற்பனரும்
வந்தே தாள்பணிய நிற்கும் வரத மாமுனியே
மந்தா ரத்திருவே யெனை வாவென் றேயழையாய்
செந்தார்த் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (௬)

மின்னார் கௌபீனந் தனை வீக்கி மஞ்சழகார்
சன்னு சக்குருப்போற் றனி யாக நிற்குமருள்
மன்னே மாமுனியே யெனை வாவென் றேயழையாய்
தென்னார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (௭)

நானு சாதிகுல முரு நாமம் பாராமல்
ஊனுர் சீவனெலா மரு ளுயிரென் றேமதிக்கும்
வானோர் தேசிகனே யெனை வாவென் றேயழையாய்
தேனார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (௮)

சத்தா நீறணிந்து கையிற் றண்ட மொன்றுடைய
கத்தா வாயெவர்க்கும் பர கதிநல் கையபதா
மத்தார் பூணழகா வெனை வாவென் றேயழையாய்
சித்தா தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (௯)

மண்ணார் சீவனெலா மினு மாண்டெ டூாதவகை
பண்ணு நிற்குமருட் பர மேயண் ணுமலையான்
அண்ணு வென்னுயிரே யெனை வாவென் றேயழையாய்
தெண்ணார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. (௧௦)

நந்தனஸ்ரீ பங்குனிமீ ௨௪௳ மங்களவாரம்.

---

௫. சேடு=அழகு, நன்று, பெருமையெனும் பல்பொரு ளொருசொல்; பிங்கலந்தை காண்க.

௬. தந்து=சாத்திரம்; வகாரவேதுகை காண்க.

# கச. திருப்பழநி.

---

தக்கராகம்.

பண் — கொல்லிக்கௌவாணம்.

இடையிறந்த நிலையையருள் சிறந்தகந்த வோங்கல்
என்னுமொரு சிலைச்சிமயங் களிற்றமிழ னெடுத்த
புடைமலிந்த சத்திகிரி சிவகிரியைத் தண்டிற்
பூட்டியிருங் காவடியெ னச்சுமந்தி டும்பன்
மடைமலிந்த வாவினன்கு டிக்கண்வைத்த போது
மகியிலுற வனைந்துசிவ கிரியின்மிசை நின்ற
படைமலிந்த தலமெனுநற் பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே. (க)

மணியரவிற் கண்வளரு மாமரைக்கண் ணனும்
மலர்த்தவிசு மீதுமிளிர் வாணிதலை மகனும்
அணிகயிலை யருநெறியி லாணிருந்துள் ளானும்
அருணன்பதி னோருருத்திர ரசுவனிதே வருமாத்
திணிமருவு சேடனுடன் றிகழிருநால் வசுவும்
சிந்தைசெய்த பெருங்கருணைத் திருவடியைத் தொழுதேன்
பணியிதுவென் றுரைத்தருடி பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே. (உ)

அந்தகனுஞ் செஞ்சுடரு மிந்திரனீ சானன்
அனிலனிரு திபுனலிறை யளகையிறை யோனுஞ்
சந்ததமுங் கைதொழுத தரமறிந்தே யுரிய
சம்பத்துக ளளித்தவுன்றன் றுள்குராங்கு கின்றேன்
கந்தமுத லைந்தினிலை க்டத்திநெறி கொடுத்துக்
கருவினுழை யாமலென்னைக் கலந்தடிமை கொள்ளாய்
பந்துரப்பொன் வண்டறையும் பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே. (ங)

---

க. படை = கலப்பை; நிகண்டுகள் காண்க.

பவுடியம் "பௌஷ்ய:" என்பதன் விகாரம். புஷ்ய: என்னும் வடசொல் ஆதிவிருத்தி சந்தியிற் பௌஷ்ய: எனவாயிற்று. புஷ்யம் = மங்களம் = சம்பத்து; **விச்வப்பிரகாசம்** காண்க.

ங. பந்துரம் = பந்துபோன்ற திரட்சியும் உரமும்.

திங்களுமெல் லாதவனுஞ் சீவன்மழைக் கோளும்
சேய்சனியுந் தூதுவனுஞ் சீறரவி ரண்டும்
அங்கைதனி லளியலர்கொண் டருச்சனைமிக் காற்றி
யனந்தநுதி செய்தவுன்ற னடிதொழுது துதித்தேன்
மங்களமொ டேகருணை வாரிதியி லென்னை
மனமுவந்து குடையவிட்டு வழியடிமை கொள்ளாய்
பங்கயங்கண் மடலவிழும் பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே. (ச)

சலமடந்தை நிலமடந்தை சாரதையுஞ் சசியும்
சாயையொ டனன்மனைவி தண்ணளின மாதும்
திலகநுத லூர்வசியுந் திருமலிந்த ரம்பை
திலோத்தமையு மேத்துனது திருவடியைத் தொழுதேன்
சலமிருந்தே யலைமலிந்த சனனக்கட னடுவே
தத்தளிக்கு மெனையுனது தண்ணருளோ டத்திற்
பலஙிமிர வேற்றிக்கொளாய் பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே. (ரு)

அத்திரியுங் கௌசிகனு மகத்தியன்கா சிபனும்
அரியதவ மார்க்கண்ட னுமாங்கிரச முனியும்
புத்திமலி சமதக்கினி புலத்தியமா முனியும்
பொருவிகந்த வசிட்டனொடு பரத்துவச முனியும்
சத்தியமா வணங்கியவுன் றுள்குறங்கு கின்றேன்
தயவுடனல் லருளளித்துத் தாழடிமை கொள்ளாய்
பத்தர்கணஞ் சூழவுள்ள பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே. (சு)

சனகன்சுகன் பிருகுமுனி சனற்குமர முனியும்
ததிமுனியு நாரதனுஞ் சத்தகுனன் முனியும்
வினையொழிந்த பதஞ்சலியும் வியாக்கிரக்கான் முனியும்
வியாசனும்ப ராசரனும் விரதபற்ப முனியும்
தினமுவந்து கண்டவுன்றன் திருவடியை வலித்தேன்
திருவுளத்திற் கேற்றதொண்டு செயவடிமை கொள்ளாய்
பனிகிளர்ந்த கருவிகவி பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே. (எ)

---

ச. சீவன்=வியாழன். தூதுவன்=புதன்.
எ. கருவி=மேகம்; ரதாவேதுகை நோக்குக.

இயம்பரிய வருந்தவஞ்சா லிரணியமா முனியும்
இறைமையுள்ள துருவாச னோரண்டன்பி ருகி
வயங்குசச்சி தானந்தனல் வான்மீகி ரோமன்
மாதவங்கொள் கலைக்கோட்டு மாமுனியு மதிக
நயம்பெறவென் றுவந்துவந்து நாளுந்தரி சித்த
நறுமணஞ்சா லுன்சரணை நானும்வழி பட்டேன்
பயன்படமா றருள்புரிதி பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே.

வாரிறுக்குங் கொங்கைவளர் மாதுமைகா லரியின்
மணியுதித்த நவசத்திகண் மக்கணவ வீரர்
சீரிருக்கு மோரிலக்கர் தேசுதிக பூமார்
சிவகணமுங் கந்தருவர் சித்தருங்கின் னரரும்
ஏரிருக்கு நாகரொடு தானவர்மா னுடரும்
மேத்துனது பூம்பதத்தை யெணுமெனைக்கண் பாராய்
பாரிருக்கும் வரைவளங்கொள் பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே.

ஆரியசித்தி யவிர்மதங்க ராசிறந்த வகுளி
யனுதிநத ராதிநத ரமருமச்சேந் திரரும்
கரிலறுகோ ரக்கரொடு ககனநடை யுடைய
கடேந்திரர்ச தோகநதர் கருத்துறுசத் தியரும்
அருணகிரி யானுநினைந் தனந்தசித்தி படைத்த
அன்புகண்டு நின்பதத்தை யனுதினம்வந் தித்தேன்
பரிவுடனல் லருள்புரிதி பழநிப்பதி மேவும்
பவுடியதண் சரவணத்தம் பரமயவெம் மானே.

நந்தனஹு பங்குனிமீ உ௬வ புதவாரம்.

---

௧. அரி=சிலம்பு, "அரிதளைநெகிழி" என்பது பிங்கலந்தை.

# கரு. திருவாவினன்குடி.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பண் — பழம்பஞ்சுரம்.

அண்டர் யாவரு மறியொ ணாப்பொரு
ளாதி யந்தரந் தெரியொ ணாப்பொருள்
பண்டை நூலெலாம் பகரொ ணாப்பொருள்
பார மார்த்திக ஞான வான்பொருள்
எண்ட கைப்பொரு ளாகு நீதடி
யேந்து கின்றசன் னாசி போன்றதென்
தொண்ட னேனையிங் காண்டு கொள்வனந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. (க)

(திரு) ஆவினன்குடியென்பது பழநிமலை யடிவாரத்தலம். அதிலிருக்கும் ஸ்ரீ சுப்பிரமணியத்தை நோக்கிப் பாடியுள்ள இத்திருப்பதிகத்தில் என்னாண்டவனாகிய நீ மலைமீது தண்டபாணியாகத் தனி நிற்கும் காரணம் யாதென ஆக்கியோர் வினவிய பொருள் காணப்படுதலின், இங்ஙனம் அடிகள் அவ்விரண்டு மூர்த்திகளையு மிணைத்துத் துதித்தனரென வறிக.

நேரி லாவுய ராக்க வெள்வரை
நிலய முட்சிவ கணங்க ளேத்திடப்
பேரி லாக்கொலு விருந்து நின்பதம்
பெறவ ருந்திரு வடிய வர்க்கருள்
சூரி லாச்சைவ தெய்வ நீயொரு
துறவி போற்றனி நிற்ப தென்னதி
தூர மின்றெனை யாண்டு கொள்வனந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. (உ)

பரிதி பல்லொளி சுடர்கி ரீடமும்
பதும பாதவம் பரிபு ரங்களும்
மிருது மல்கெழின் மடியு டுக்கையு
மிறையி லொண்செவி யணிக ளுந்தன
தருகி னல்லிரு தேவி யும்மிலா
தாண்டி வேடம தான தென்னதி
துரித மாவெனை யாண்டு கொள்வனந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. (ங)

---

ங. மிறை=குற்றம்; நிகண்டுகள் காண்க.

அடல்கொள் பூதரும் வீர வாகுவொ
டமரும் வீரரு மோரி லக்கரும்
புடைசெ றிந்திடச் சரண மஞ்ஞையிற்
பொருவி லாதெழு தருப ராபரம்
தடவி சும்புயர் வரையி லேயொரு
தனிமை யாநனி நிற்ப தென்னுனைத்
தொடரு மென்றனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே.

உலகி லேயுனைப் பாடுந் தொண்டள
ருய்ய வோதவ ருய்ய வோமனச்
சலமில் யோகிக ளுய்ய வோநிகழ்
சருவ சீவருந் தவத்தி னுய்யவோ
தலையிற் பின்சிகை யரையிற் கோவணந்
தண்ட மங்கையிற் கொண்டு நின்றனை
தொலைவி டாதெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே.

பொய்யு ளேனுயிர்க் கொலையு ளேன்பெரும்
புலையு ளேனெடுங் களவு ளேனிதம்
மையி டுங்கணி மயலு ளேன்மட
மருளு ளேன்பட ிருளு ளேனினன்
உய்யு மாறருள் கூர்ந்து வந்தென்மு
னேது நின்னொர்த யாள மென்சொலத்
தூய்ய னேயெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே.

செப்பொ ணாதவைம் பாச சாகரச்
செதும்பு ளேகிடந் தழுங்கி நன்னெறி
ஒப்பு றுவிழி நாய னேனிங
னுய்வ னோதிரு வருளி லாதுமெய்
அப்ப னீயென மைந்த னெனென
வாமொர் தொன்முறை காட்டி னுயிவண்
துப்ப னேயெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே.

---

எ. செதும்பு=சேறு.

கழுதை யிற்கடை யாய நானுனைக்
கருத நன்னெறி கழறி னுய்நொடிப்
பொழுது நின்மறந் திருப்ப னேவினிப்
புகழ்சொ லாமொழி படிப்ப னேவுனை
முழுது மென்னக மாக்கி டாதினு
முளைப்ப னேமணிற் பதத்தை யல்லது
தொழுவ னேயெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. (அ)

மாக நின்றுளை தீயி னின்றுளை
வளியி னின்றுளை மழையி னின்றுளை
போக நந்திரும் புவியி னின்றுளை
புகரின் மாமதி யிரவி நின்றுளை
ஆக நின்றிடு முயிரி னின்றுளை
யடிய னேனய லாவ தெங்ஙனம்
சோகம் வென்றெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. (௯)

குலமி லாதவன் றலமி லாதவன்
கோளி லாதவ னுளி லாதவன்
மலமி லாதவ னுரு நீநெடு
மலையி லேறிய மார்க்க மென்கொலோ
சலமி லாப்புகழ் பாடி னேனகந்
தாண்ட வம்புரிந் தாண்ட தேவெனைச்
சுலப மாகவிங் காண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. (௰)

நந்தனஸ்ரீ பங்குனிமீ ௩௦உ சோமவாரம்.

---

## கசு. அடிமை.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பண் — புறநீர்மை.

கற்றவர் தொடுத்துக் கனிவுடன் சூட்டுங்
கவித்தொடை யேற்றெழின் மறைதான்
சொற்றிடு கதியை வழங்கருண் மாவிண்
சோதியே சொலற்கருஞ் சுடரே

இற்றைநா ளுன்காற் போதினை யேத்தற்
கெனதவஞ் செய்திருந் தேனோ
அற்றையெற் கதிர்த்த வணமருள் வானே
யப்பனே யொப்பிலா தவனே.

கல்வியங் கடலைக் கடந்துமேன் மிளிருங்
கருத்துடை யெளவைமூ தாட்டி
சொல்வண முலகிற் பழுதறு பெரியோர்
தொண்டரென் றதிர்த்ததே சரதம்
ஒல்கிடா வீரப் பெருந்தகை யுடையோ
யுனதடித் தொழும்புமெற் குறுமோ
அல்கலில் லாதெனை யாண்டுகொள் வானே
யப்பனே யொப்பிலா தவனே.

பேயினுங் கடையேன் பிணத்தினுந் தீழ்ப்பேன்
பிறங்குநற் குணமெது மில்லேன்
நாயினுங் கடையே னலனுற வெனநீ
நறுநெறி குயிற்றிய வருளாம்
நேயநல் வரவுக் கொருகர மாறிந்
நெடுநிலப் பரப்பிடை யுண்டோ
ஆயத வயில்வேற் குருபர வெனையா
ளப்பனே யொப்பிலா தவனே.

உன்னெறி துறந்தே யுன்னடி மறந்தே
யுளுற்றிடு பெரும்படர்த் தீமை
தன்னையுந் துறந்தே தன்னையு மறந்தே
தன்னையு மறிந்துய்யு மாறல்
என்னைநீ கலந்தா ளெம்பெரு மானே
யிணையறு மாசிலா மணியே
அன்னையே யருள்சா லறுமுகச் சிவனே
யப்பனே யொப்பிலா தவனே.

சனகனுஞ் சனனி பிதாமகன் பெருமான்
றமயனுஞ் சிவனென நினைத்து
மனைவிநி ராசை மகர்வள ருயிர்கள்
மலரடித் தொழும்பர்க ளுறவோர்

௩. ஆயதம் = நீளம் ; ௩ - நீகன்று நோக்குக.

எனமதித் தயுநா ளெந்தநா ளாகு
மெனக்குநீ யருளிய வண்ணம்
அனகனே யருள்கூ ராறெழுத் திறையே
யப்பனே யொப்பிலா தவனே. (௫)

ஊரெலாஞ் சமைக்குஞ் சோறுய ருணவிவ்
வுலகமெ லாம்விரி பாயல்
ஏருலா முடையியாண் கோவண மாமறை
யியம்புவெண் பொடிநறுஞ் சாந்தம்
சீருலா முருத்தி ராக்கமெய் யணிகலன்
செபிப்பது சடக்கர மெனநீ
ஆர்வமொ டெனக்காக் கிடவென்று காண்பே
னப்பனே யொப்பிலா தவனே. (௬)

தாளிணைப் பழிச்சு மேழையே னின்றே
சாகினுஞ் சாகுக வினியெந்
நாளுமிங் கிருக்கினு மிருக்குக சுவர்க்கமோ
நரகமோ சேரினுஞ் சேர்க
கோளுறு பிறப்பே யாயினு மாகுக
குறைவறு நின்சரண் மறவா
ஆள்வினை யொன்றை யளித்தருள் யாண்டு
மப்பனே யொப்பிலா தவனே. (௭)

தாவர நீர்வாழ் வனநகர் வனவிண்
சகுனம்வல் விலங்கெழின் மாந்தர்
தேவரென் றறையேழ் தோற்றமு ளெதனிற்
செனிக்கவுன் ஞக்கினை செயினும்
சேவடித் தொழும்பி விருப்பதே குறைவில்
செல்வமென் றுருதுணி படைந்தேன்
ஆவது புரியாய் சரவணத் தரசே
யப்பனே யொப்பிலா தவனே. (அ)

கிரியையிற் சரியை தனில்வளர் யோகிற்
கெழுதகை யறிவினி லுனைவிட்
டரியபஃ றவங்க ளாற்றுதல் பயனின்
றுமென வோர்பிடிப் பானேன்

மாவலர்க் கொந்தள வள்ளி மையலிற் சிக்கிய மாயக்
காவல வுன்னடி யாரைக் கண்டவர்க் குந்துயர் தீரும்
தாவில கங்குளிர் கொள்ளுஞ் சத்திய கேவலம் விள்ளும்
கூவிய பூங்குமென் கோவே குன்றக் குடியுறை தேவே. (௫)

எட்டுருத் தெய்வமு நீயே யெட்டுக்க தீதமு மாயே
தட்டுப்ப டாதவ தீத சாமியு நீயென வோர்வார்
முட்டுப்ப டாமல்வந் தென்று முற்றுச்செ யுமருட் பொன்னைக்
கொட்டிக்கொ டுக்கின்ற கோவே குன்றக் குடியுறை தேவே. (௬)

பாட்டினு னைப்புகழ்ந் தேமண் பாட்டையொ ழித்துள்ள வன்பர்
நாட்டிலி ருக்கினுங் காட்டை நண்ணியி ருக்கினு மன்றே
கேட்டதெல் லாமளித் தென்றுங் கேடில ரும்பொரு டன்னைக்
கூட்டிக்கொ டுத்திடுங் கோவே குன்றக் குடியுறை தேவே. (௭)

ஈடிலி னைமலர்த் தாள்க ளெண்ணுவ துங்கழ லன்பர்
தேடொரு ஞானமு நல்லோர் சேர்க்கையு மேகிலை யாமென்
றோடிடு சிந்தையை வாங்கி யுன்னும கசிவ யோகிற்
கூடிய ளாவொரு கோவே குன்றக் குடியுறை தேவே. (௮)

சுக்கில வாக்கையி னுள்ளே சூழும லவிரு ளுள்ளே
பக்குவ மின்றியெந் நாளும் பந்தப்பட் டேயுள்ள வென்னைச்
சிக்கென வேபற்ற வந்து திருத்திய வுன்பத மீதி
குக்குட கேதனக் கோவே குன்றக் குடியுறை தேவே. (௯)

நற்றமிழ் பாடுநக் கீரன் ஞானவெ ளியனு பூதி
சொற்றவ னேத்தரு ளோனே தோகைம யிற்பரி யானே
இற்றையெ னக்கருள் வோனே யெங்கள் சிவபெரு மானே
குற்றமி லாமறைக் கோவே குன்றக் குடியுறை தேவே. (௧௦)

மன்மதஞு (கி. பி. 1895) ஆடிமீ ௩௨ புதவாரம்.

---

௫. மையல்=உன்மத்தம்; "உன்மத்த மாழ்கல் கருதிய வனந்த ரேமங் கலன் பேது மையல்" என்று **சூடாமணிநிகண்** டுரைத்தலின் இதனையறிக. இவ்வுன்மத்தம் "உணராமை" ஆமென்று **பிங்கலந்தை** கூறும். இவற்றான் தினைப்புனப் பரண்மிசை நிற்கும் வள்ளிமாதேவி, குமாரரே விவாகம் விழைந்து தன்னோடு வாதிடுகின்ற வேடரென உணராமையும், வாதிடுதல் காரணமாக அவள் அவரை நிந்தித்த பின்னரும் அவர் அவ்விடம் விட்டு விலக மனமில்லாது நிற்கு நிலையையும், அவ்வேட வடிவு மாயவித்தையைச் சேர்ந்த தென்பதையு முணர்த்தவே "வள்ளி மையலிற் சிக்கிய மாயக் காவல" என்று தெரித்தாரென்க. மையலும், சிக்கிய தன்மையும் உண்மையில் இன்னனவென வுரைத்தது தானே இங்ஙனம் நுட்பமா யறியக் கிடப்பது.

# ௧௮. திருத்தோத்திரம்.

பண் — பஞ்சமம்.

திருமலி முதுமறை நுவல்பொருளுந்
தினசைவ முறைமுறை யிடுபொருளும்
பொருண்மலி மிருதிகள் புகல்பொருளும்
புகரில்பு ராதன சரிதமறை
அருமுறை பலநவில் கிறபொருளு
மறிஞர்க ளறைதரு மொருபொருளுந்
தெருண்மலி குகனென மொழிபொருளுஞ்
சிவசிவ சிவசிவ சிவசிவவே.

இறுதியி லியல்பரு ளதுபிரியா
விணையிலி யாமொரு பதியெனவும்
குறுகிய வறிவுடை யுயிர்களிடங்
குறியற மருவிய பொருளெனவும்
அறிவறு பொருளினை யுயிருருவா
யமைவுற வணைகிற விறையெனவும்
சிறுகில்கு கனெனவு நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே.

தடமிகு பிருதிவி யாதிசிவ
தத்துவம் வரைதிரி தசமாறும்
மடலவிழ் பதுமமெ னுவரனூன்
மறைசொலு மேயதி லேபுவன
விடய்முறும் விடய் வதீதமுமே
மேம்பட வதிதரு பெரியபொருள்
திடமலி குகனென நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே.

மகளினு தரமுறை குழவியென
மலரொரு மாயையின் மிகுதுயரோ
டகமற வேகிடந் துளவெளிய
வணுக்களை வேதனை யறவிறக்கிப்

---

௧. சிவ எனுமாறும் அறுஞுக் சிவமெனவுணர்த்துங் குறிப்பென்வாம்.

பகாரு மயனமு முயர்திதியும்
பண்ணிடு மிறையவ னீடமுகு
திகழ்முரு கோனென நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. (௪)

மலவிரு ளுறையுயிர் பதியுறவே
வனையுமொ ரைந்தொழில் களையுடைய
நலவிறை யெனவு மனேகமத
நவில்வரை யறையினில் லாவிபுவாய்
இலகிடு மொருபொரு ளெனவுமெனை
யிதமுட னடிமைகொண் முருகெனவும்
செலல்வா வறுநிலை நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. (௫)

பாதல மேழையு மேதள்ளிப்
பரவொரு நிலையிலே திருவடிகள்
ஓதவொ ணுநிலை தனின்முடிதா
னுடையவ னடியவ ருளநோவ
வேதனை தருபவர் பானமறுப்
மேவியி தம்புரி வோர்பாலிற்
சீதள முருகென நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. (௬)

பரிவுடை யடியவர் திருவடிவாம்
படிவம துகழிவு ருதபடி
அரியமெய் யருள்வலி யாலதனை
யரனுரு வாமொரு திருவுருவாய்
உரிமை யொடுபணுசன் மார்க்கநெறி
யோதிறை யருண்முரு கோனெனவே
திரிபற வனுதின நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. (௭)

பொன்மய வானவ ருறுமனுரும்
பூதல மானுட ருறுமனுரும்
நன்மையி னரகர்க ளுறுமனுரு
நலியவு மளவறு பெரியவருள்

---

௫. பதி = இடம். இச்சித்த இடம்.

இன்மய மாகவு மருள்வடிவ
 மிதவொடு கொள்குரு பரமசிவ
சின்மய முருகென நிலவுவது
 சிவசிவ சிவசிவ சிவசிவவே.

உனையல தொருகதி யிலையெனவே
 யுனிவழி படுமடி யவர்கருமத்
துனிவலி கடியவு மனமருளாற்
 சொலும்வழு வையுநசை கிளர்நினைவால்
இனியில் வினைகள்புரி வழுவையுமே
 யிரிய வருளிறைவன் முருகனெனுந்
தினகர னெனநனி நிலவுவது
 சிவசிவ சிவசிவ சிவசிவவே.

கயல்விழி மறிமகள் கணவனெனக்
 கருதியிவ் வகிலமு ளேதமிழிற்
பயில்புகழ் சோடச நூறுதசம்
 பன்னிய வறிஞனை யாளடிமை
தயவொடு கொண்டது போலெனையுந்
 தடையறக் கொண்டிடு குருமுதன்மைச்
செயலுடை முருகென நிலவுவது
 சிவசிவ சிவசிவ சிவசிவவே.

மன்மதஹூ ஆடிமீ உகஉ ஆதித்தவாரம்.

---

## கக. திருவுருமலை.

---

பண் — பஞ்சமம்.

பூமக ளகமே குளிர்ந்தெழில் குலவும்
 பொருப்புயர் புவனங்க டாமார்
மாமிகு பெரியண் டங்களெல் லாமுன்
 மயிர்நுனி தோறுநின் றிலக
ஓமய வடிவா யுளமறை முதல்வா
 வுனதடித் தொழும்பினி லெனையாள்
சாமிநீ யருள்செய் திருவுரு மலைவாழ்
 சண்முகப் பெரும்பரம் பொருளே.

---

க. துனி = துன்பம்; நிகண்டுகள் காண்க.

நாகர்க ளலக்கண் டீர்த்துநல் லுறுவர்
நலம்பெற வருளிய விறைவா
சூகர மதனை நசித்துல கனைத்துஞ்
சுகப்பட வருளிய வீரா
தாகமாய் வலிப்போர்க் கினியதண் மழையைத்
தருமருட் கதம்பமே யமுத
சாகர மேயா டிருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. (௨)

எங்கணு மருள்சா னெறிசிறந் திடுமா
றிறைவனுஞ் சீடபா வந்தான்
அங்கமாக் கொளுங்கா லவற்குமோர் குருவென்
றுயினை யகத்தியன் முதனல்
புங்கவர் பலர்க்கு மருளினை யிதுநாள்
புரையுடை நான்கடைத் தேறச்
சங்கரகித் துரைத்தாய் திருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. (௩)

பொய்யனே னெனினும் புலையனே னெனினும்
புரையுறு கொலைஞனே னெனினும்
ஐயனே யுனக்கே யடைக்கல மானே
னுதவி னெனைக்கழி யாமல்
உய்யவே புரத்தல் கடமையுன் னடியே
னுளத்திடை யளவற வெழுமா
சையெலா மறுத்தா டிருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. (௪)

பெண்பதி யறுத்த காத்தினை வளர்த்தாய்
பேசிடுஞ் செயலொழிந் திருந்த
பண்புடைக் குமர குருபரன் யாப்புப்
படித்திட வருளினை மதுரைத்
திண்புதர் தலைவ னுறுமனு ரொழித்தாய்
சிறியனேன் மனுவிற்கு மிரங்கித்
தண்பத மளித்தா டிருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. (௫)

---

உ. கதம்பம்=மேகம் ; பி – நிகண்டு காண்க.

ரு. புதர்=பண்டிதர்=புலவர்.

விரிதிரைத் திருச்சா னவியமைத் தவன்பேர்
　　வேந்தனின் பகைவலி கடிந்தாய்
எரிமகத் தகரைப் பரியென வேகொண்
　　டெழும்முனி வரர்துனி யொழித்தாய்
பரிமுகத் தொருத்திக் கெழின்முக மீந்தாய்
　　பத்தனேன் மனுவிற்கு மிரங்கித்
தரிசனங் கொடுத்தா டிருவுரு மலைவாழ்
　　சண்முகப் பெரும்பரம் பொருளே.

மிருபலத் தனுசோ ருயிர்குடித் திடுநே
　　மியினையன் றரிக்களித் தவனும்
சிகுழுயிர்த் தொகைசேர் நிரயமன் னவனைச்
　　சிதைத்துயி ரளித்தமுக் கணனும்
திகழ்மதி யிடர்தீர்த் தவனுநீ யேயிச்
　　சிறியனேன் மனுவினுக் கிரங்கித்
தருதிரு வளித்தா டிருவுரு மலைவாழ்
　　சண்முகப் பெரும்பரம் பொருளே.

நண்ணிய வோர்மயி லினுக்குமஞ் சிகிக்கு
　　நாளுநற் றிருவடி கொடுத்துக்
கண்ணில கொருகே கயஞ்சிகி தனைமுற்
　　கருதிய வணம்பரி கொடியாப்
பண்ணிய பரனே பரமபுங் கவனே
　　பத்தனேன் மனுவிற்கு மிரங்கித்
தண்ணளி யளித்தா டிருவுரு மலைவாழ்
　　சண்முகப் பெரும்பரம் பொருளே.

செயிருறு வோர்க ளலக்கணைத் தீர்ப்போய்
　　சேவடித் தொழும்பரைக் காப்போய்
குயிலுமிவ் வேழை மனுவினுக் கிரங்கிக்
　　கொடுதினங் குளிர்ந்ததண் ணளியைக்
கயல்விழிக் காந்தி மதியுட னரனுங்
　　களிகெழு துர்க்கையு மேவுந்
தயவுடை நெல்லைத் திருவுரு மலைவாழ்
　　சண்முகப் பெரும்பரம் பொருளே.

---

௭. சிகுழுயிர் – சிறுகுழுயிர் என்பதன் விகாரம்.

வாலுளக் குறமா னினிமதர்ச் சுரமா
மடவரன் மாமணத் தலைவா
வேலுடைச் சயத்தோய் விரைத்தொடைப் புயத்தோய்
வியன்புகழ் நொடித்தவன் பரனே
தோலுயர் வறுசொல் லுடையெளி யேனின்
றுயர்வலி கடிந்துநற் சுகமே
சாலுமா றருளாய் திருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே.

மன்மதஹு ஆடிமீ ௨௰௨ குருவாரம்.

---

## ௨௦. திருநெல்வேலிக்கோவில்.

---

பண் – நட்டராகம்.

சீருடை யாரியனே யெனைச் சேர வணைப்பவனே
ஏருடை வானவர்க ணித மேத்தும் பராபரனே
ஆருடை வேலவனே நெல்லை யப்பர் விமானமுறை
நாருடை யோமயனே யென்ற னுட்டத்தைப் பூர்த்திசெய்யே. (௧)

கச்சணி மாமுலையாள் குறக் காரிகை காவலனே
சொச்சமெய் யோகருளந் தனிற் சொந்தப்பட் டுள்ளவனே
அச்சமில் சிற்பரனே நெல்லை யப்பர் விமானமுறை
எச்சமி லெம்பரனே யென தெண்ணத்தைப் பூர்த்திசெய்யே. (௨)

ஏத்தி யிறைஞ்சுபவர் மிகை யேக வருள்பவனே
கோத்திர மற்றவனே குணக் கூறினை கூறவொண்ணு
ஆத்தும நாயகனே நெல்லை யப்பர் விமானமுறை
ஊத்தையில் சேயவனே யென துள்ளத்தைப் பூர்த்திசெய்யே. (௩)

உம்பரைத் தொண்டு கொளுங் கனவுத்திப் பெருக்குடையாய்
எம்பெரு மானெனவே நித மேத்துநர் பங்குடையாய்
அம்பர வேதியனே நெல்லை யப்பர் விமானமுறை
செம்பர வேலுடையா யென்றன் சிந்தையைப் பூர்த்திசெய்யே. (௪)

கங்கையுங் கொன்றையு மார் கிடைக்கண்ணுத லானவொரு
சங்கர னார்குமாரா வந்தச் சங்கர னாரிறைவா

---

௧. நெல்லையப்பர் திருக்கோயில் வியனுலகம் போலிருத்தலின் அதனை "விமானம்" என்றார். "வியனுலகந் துறக்க மேலுலகம் விமானம்" என்பது சூடாமணி நிகண்டு.

அங்கத மற்றவனே நெல்லை யப்பர் விமானமுறை
புங்கவ னேகுகனே யென்றன் புந்தியைப் பூர்த்திசெய்யே.

கான மலர்க்குழலி தெய்வ குஞ்சரி காவலனே
தானவர் மாபுரியைச் சல ராசியான் மூடிவிண்ணோர்
ஆனவர்க் காக்கமிட்டோய் நெல்லை யப்பர் விமானமுறை
ஞானமில் வேதியனே யென்ற னேக்கத்தைப் பூர்த்திசெய்யே.

பத்த்ருட் புத்தமுதே யெங்கள் பாக்கியப் பொக்கிஷமே
சித்தெனுஞ் சத்திதனை யொரு துண்டத்திற் சேர்த்துளனே
அத்தனே யற்புதனே நெல்லை யப்பர் விமானமுறை
நித்தனே சண்முகனே யென்ற னெஞ்சத்தைப் பூர்த்திசெய்யே.

பூவளங் கொண்டொழுகச் சிவ புண்ணியந் தான்றழைக்கத்
தாவற வேதினமு நல்ல தாம்பிர வன்னியெனும்
ஆவகை தான்பெருகு நெல்லை யப்பர் விமானமுறை
வீவி லயிற்கரனே யென்றன் வேண்டலைப் பூர்த்திசெய்யே.

சந்ததம் வந்திப்பவர் பத்திச் சாலத்திற் சிக்கிக்கொளுஞ்
செந்திரு வன்புடையா யுமை செல்வச் செழும்பொருளே
அந்தரர் நாயகனே நெல்லை யப்பர் விமானமுறை
நந்தலி லெம்பெருமா னென்றன் ஞானத்தைப் பூர்த்திசெய்யே.

சங்கையி லுன்புகழைத் தினஞ் சாற்றிய வெந்தைபிரான்
இங்கெனை யுய்வித்தவ ருனை யன்றி யெவருளரால்
அங்கியின் மேனியனே நெல்லை யப்பர் விமானமுறை
பங்கமி லாயெனது வழி பாட்டினைப் பூர்த்தி செய்யே.

மன்மதஹூ ஆடிமீ உஅஉ ஆதித்தவாரம்.

திருநெல்வேலிச் சிவாலயத்திலுள்ள சண்முகமூர்த்தி திருக்கோவில் பூதி யிருத்தலைத் தேசிகர் கண்ணுற்று உளம் வருந்துநராய் அற்றைப் போதாகிய உஅஉ "சீருடையாரியனே" என்றற் றொடக்கத்து இவ்விருபதாந் திருப்பதிக மருளினர். இதன்கண் முதற்கட் சீருடைமை தோன்றி நிற்றலும், எனதுள்ள பூர்த்திசெய் என்னும் வேண்டுகோள் பெருகி நிற்றலும் காணக்கிடக்கின்றனவே கோவிலும் அடுத்த ஆண்டிற்றுனே செழுமை பூத்து விளங்குதலைத் தேசிக ணுற்று உவகை பூத்தாரென்னும் விவரம் சரித்திரத்துங் காணலாம்.

---

| | |
|---|---|
| ஆகப்பதிகம் இருபதினும் போந்த திருப்பாட்டு | உ௦௦ |
| காப்பும் தௌத்தியமும் | உக |
| ஆகத்திருப்பாட்டு | உஉக |

# உக. பூரணம்விழைந்திரங்கல்.

கலிநிலைத்துறை

பண் — இந்தளம்

பொன்கொண் மாமயி லாருயர் புண்ணிய மூர்த்தி
உன்கண் ணீரமின் றிங்கிவ னுய்வது முண்டோ
புன்கண் மாய்த்தருள் புரிகிலை யேனுனை நம்பும்
என்கண் ணீரினை யேதுடைப் பவரினி யெவரே. (க)

ஞான்று நந்தலில் சத்தையுஞ் சித்தையு நீங்கா
ஆன்ற வின்பசொ ரூபம தாயவி ருன்னைப்
போன்ற தெய்வமுண் டோவெனைப் புணர்கிலை யாயின்
தோன்று மென்விழி நீரினைத் துடைக்குந ரெவரே. (உ)

தீதில் சத்தெனுந் தாதையுஞ் சித்தெனுந் தாயும்
ஆதி யந்தமி லானந்தக் குழவியு மாமென்
ஆதி யாமடி கேளெனை விரவிக்கொ ளாயேல்
வீதி தோறுமென் விழிப்புன றுடைக்குந ரெவரே. (ங)

பெற்று ளோர்பிறந் தோர்மனை மகர்தமர் பிறரும்
சற்று நம்முற வலவென வுன்னியுன் சரட்கன்
புற்று ளேனெனைப் புறம்பெனக் கழிக்கினின் புரிவிங்
கற்று நானிருந் தழும்புன றுடைக்குந ரெவரே. (ச)

அன்பர் தங்கருத் தேயுணர்ந் தருள்புரி யருளால்
என்புன் னெஞ்சுணர்ந் துரைத்தவள் ளயிற்கர விறையே
இன்பி னின்னமு மிடையறப் புணர்ந்துகொ ளாயேல்
துன்பி னுனழும் விழிப்புன றுடைக்குந ரெவரே. (ரு)

நிதற்க ணுறுடை நூனமி லறுமுகங் கரந்தன்
றிதத்தை யேபுகன் மானுட வுருவென வென்முன்
புதித்து மெய்ம்மொழி யுரைத்தனை முழுதுங்கொ ளாயேல்
பதத்தை யேநினைந் தழும்புன லெவர்துடைப் பவரே. (சு)

வேரி யங்கடம் பணிபுயத் தோய்வினை மேவும்
பூரி யோர்புகு மிருணில மின்னமும் புகுதா
தேரி யங்கடி யுறநினை யென்னைநீ கழிக்கின்
மாரி போன்முகம் வடிப்பது துடைக்குந ரெவரே. (எ)

பொய்மை யோர்பவர் பொருந்துமிப் பூதல வாழ்வை
மெய்மை யோர்பவர் சேர்வர்கொன் மெய்ப்பொரு ளாமுன்
செய்ய பாதநம் பியவெனைச் சேர்த்துக்கொ ளாயேல்
உய்யு மாறெனக் கருள்பவ ருலகினி லெவரே. (அ

கோல வாரணங் கூறுரு பரம்பொரு ணீயென்
றுலு மங்கழற் பரமனு மருளின னதுபோல்
சீல வுன்சரண் சிந்தைசெ யெனைக்கொளு கிலையேல்
தால மீதெனக் குன்னடி தருபவ ரெவரே. (க

அரிய விண்ணவர் புன்கணை வீட்டிநல் லருணை
கிரியி ருந்தவற் கருளிய கிருபைவள் ளாலுன்
உரிமை கொண்டெனக் கடைக்கலம் புகுந்துள நாயேன்
பரிவு கண்டரு ளாவிடி னெவரருள் பவரே. (க[illegible]

மன்மதஞூ ஆடிமீ ௩௧வ புதவாரம்.

---

# ௨௨. மெய்ப்பற்று.

---

கலிவிருத்தம்.

பண் — தக்கேசி.

சொல்லு யர்ந்தமறை சொன்முடி வாமோர்
சொல்லி யம்புதுரை யாவரு முருகா
இல்லி டப்புரிவை விடநினை வேன்கோள்
வெல்லு முன்புரிவை விடநினை யேனே. ([illegible]

சரண நம்பினவர் சததமு முய்ய
அருளு மன்புடைய வயிலவ யாணர்
இரத மூர்புரிவை விடநினை வேனுள்
விரவு முன்புரிவை விடநினை யேனே. (உ

தேவ தேவனெனுஞ் சிற்சபை முருகா
ஆவி போலுமுள வார்வலர் மகவோ
டேவ லார்புரிவை விடநினை வேனுள்
மேவு முன்புரிவை விடநினை யேனே. (ந[illegible]

---

க. புரிவு=அன்பு; "அன்பாம் புரிவாண நேயமும்பேர்" என்பது சூ — நிகண்[illegible]
௩. ஆர்வலர்=காதலித்தார்.

தஞ்ச மென்பவர்கள் சார்சர ணுமென்
நெஞ்சு ணின்றுணர்வை நீட்டொரு குகனே
வஞ்சி யின்புரிவை யேவிட வலிப்பேன்
விஞ்சு முன்புரிவை விடநினை யேனே. (௪)

அமல வந்தணர்கள் பழிச்சிடு மயில்வேற்
குமர சம்பிரம குருபர கேட்டி
தமர்க டம்புரிவை யேவிட நினைவேன்
விமல வுன்புரிவை விடநினை யேனே. (௫)

மாசிக் குங்கும பயோதர வள்ளி
பேசு மின்சொலமு துண்செவிப் பெரியோய்
நாசி யின்புரிவை நான்விட நினைவேன்
நேச நின்புரிவை விடநினை யேனே. (௬)

அரனோர் பங்குடைய வங்கயல் விழியாள்
முருக வென்கவிகொண் முழுமுத லடிகேள்
இரத நாப்புரிவை யேவிட நினைவேன்
விரத வுன்புரிவை விடநினை யேனே. (௭)

சீத விந்துள வலங்கல்கொள் சேயோய்
ஓத ரும்பரிவ ருளத்தவி சுறைவோய்
ஏதில் கட்புரிவை யேவிட நினைவேன்
வேத வுன்புரிவை விடநினை யேனே. (௮)

மாலு மந்தணனும் வழிபடு முதல்வா
கால மெல்லவினை கடந்த வதீதா
தூல மெய்ப்புரிவு துறந்திட நினைவேன்
வேல வுன்புரிவை விடநினை யேனே. (௯)

தூய நின்றகவி ஞற்புகழ் சொன்னேன்
ஐய கேட்டிசெவி யகக்கர ணங்கள்
உய்யொ ணுமனனி யுறங்கிட நினைவேன்
மெய்ய னுன்புரிவை விடநினை யேனே. (௧௦)

மன்மதஸ்ரீ ஆவணிமீ ௧௨ சுக்கிரவாரம்.

---

௧௦. தகவு = தயை.

# உ௩. பொய்ம்மார்க்க நீக்கம்.

பண் — தக்கேசி

திருமி ருமகள் பூமக ளோத்தச்
சிறந்த நீரா மகளிரம் பணிபல்
புரிய வடியவர் துதிசெய மாண்பு
பூத்த விண்கஜ நாயகி காந்தா
பொருவி லாவுனை யேகினை யாதார்
புடவி மீதனு தினமல முண்ணுந்
திருமிக் குங்கடை யாகுவ ரவரைக்
கிஞ்சித் தும்மதி யேன்மதி யேனே.

பழுதி லாரண நூலளப் பின்றிப்
பரிந்து சொன்னிலை கனிலு மடங்கா
முழுவி யோமசம் பூரண முருகா
முனிவ ரந்தணர் குரங்குமெம் மானே
தொழுநல் லார்க்கரு ளுணேயிலை யென்றே
சொல்லு வோர்கள்வண் ணுன்பொதி சுமக்குங்
கழுதைக் குங்கடை யாகுவ ரவரைக்
கனவி லும்மதி யேன்மதி யேனே.

பரந்த மாயையின் பாசமுட் கிடந்து
பதைத்து நொந்தரு ளுடிடு பசுக்கள்
தரங்கண் டருள்செய நீநனி கொள்ளுந்
தாவில் பதியுரு வைப்பழி பகரத்
திரங்கொள் வோரெனை யாண்முரு காநற்
றிருவி லாது சதாமுகஞ் சுரித்த
குரங்குக் குங்கடை யாகுவ ரவர்சொல்
கூற்றை நான்மதி யேன்மதி யேனே.

தாய்க்குந் தந்தைக்கு மேதந்தை தாயாய்த்
தனக்கொர் தந்தையுந் தாயு மிலாமல்
மாய்க்கு மிச்சையை வென்னுணி யோர்க்கு
வாய்க்குஞ் சிவக்கொழுந் தாய்ச்சுக மாங்காய்
காய்க்குங் கற்பக மாமுனைத் தீழ்ப்பாக்
கழறு வோர்க ளறாத நக்கும்
நாய்க்கு மேகடை யாகுவ ரவர்வீ
றுப்பை நான்மதி யேன்மதி யேனே.

பெருமை யிற்பெரும் பெருமைகொள் பொருளாய்ப்
பிறங்கி யைந்தொழி லாலுல கெங்கும்
அருமை யாநடு வாணையைப் பிரேரித்
தறிஞ ருண்மறைப் பீடிகை யுறங்கும்
உரிமை யொண்குக னேயுனைப் பரமென்
றுள்கி டாதவர் தாமதி வரண்ட
எருமைக் குங்கடை யாகுவ ரவரை
யென்று நான்மதி யேன்மதி யேனே. (௫)

வீயு திப்பு விகாரமில் சுயம்பு
விமல மாயசஞ் சலவிபு வாய்நல்
தூய நான்மறை யின்சிரப் பொருளாய்த்
துவித சூனிய பூரண வெளியாய்
ஆயு மனர்க்கிறை யாயுள்ள வடிவே
ஐய வுனைப்பணி யாதவ ரீனப்
பேயி னுங்கடை யாகுவ ரன்னோர்
பெருமை நான்மதி யேன்மதி யேனே. (௬)

என்று நீக்கமின் றெங்கணு மிருந்து
மெவருங் காணவொ ணுப்பர சிவத்தில்
நின்று தோன்றொரு சேயெனு நினது
நீட ருட்டிற மதைவிடுத் துயிரைக்
கொன்று தின்றுடல் வளர்த்திடு வோர்பல்
கோடி வித்தக ரெனினு மலமுண்
பன்றிக் குங்கடை யாகுவ ரன்னோர்
பரிவை நான்மதி யேன்மதி யேனே. (௭)

பாரிற் பாடுறு பசுக்களி னிமித்தம்
பரம ஞானநின் பரிவது விளங்கச்
சூரி றிருவுருக் கொண்டறி வுறுத்துஞ்
சுதந்தி ரத்தையு முன்னடி யாரிப்
பாரிற் கொள்சிவ சின்னங்க டமையும்
பழிக்கு மடாமூக் கார்புழைத் தூம்பின்
நீரிற் குங்கடை யாகுவ ரன்னோர்
நெறியை நான்மதி யேன்மதி யேனே. (௮)

---

௫. பீடிகை=பீடம்; பி - நிகண்டு காண்க.

குலத்தை நீத்துயர் குடியினை நீத்துக்
குணத்தை நீத்துயிர்க் கூற்றினை நீத்துப்
பலத்த தவமிழைப் போர்களு முனது
பரம நாமமுச் சரிப்பதுண் டதனை
வலத்தி டாதவர் திருக்குழ காகேண்
மதியி லாது புலானுகர் புலையன்
மலத்திற் குங்கடை யாகுவ ரன்னோர்
மதியை நான்மதி யேன்மதி யேனே.

விருப்புற் றன்புகழ் பாடியு னருளை
மேவி யேதமி லமுதமுற் றோர்கன்
றிருப்புச் சொல்லிய வெம்பெரு மானே
யிணையில் பூரணத் திருமுரு காவல்
மருப்புப் பன்றியை மாய்த்தவல் லோயுன்
மார்க்க மேகரு தார்சித டன்காற்
செருப்புக் குங்கடை யாகுவ ரன்னோர்
செருக்கை நான்மதி யேன்மதி யேனே.

மன்மத௵ ஆவணி௴ ௨௨ சோமவாரம்.

---

## ௨௪. அடியாரகம்.

---

பண் – சாதாரி.

**மா**மணிமு டிச்சுரர்கள் கோனனும்வ னப்புடைய
மாமயிலி ருந்தசுரர்கோன்
பேமுறவெ திர்த்துநெடு வேல்கொடவ னீருடல்
பிளந்திறவ யர்ந்தவிறலோய்
ஆமய மிலாதுபர வோமயம தாகவடி
யாரகமி ருக்குமுருகா
போமுனம ணைத்திரிபி லாதநிலை யானபரி
பூரண மெனக்கருடியே.

---

௧. வலத்தல் = கட்டல், யாத்தல். ஈண்டு, யாத்துக்கூறற் பொருட்டு; "வலைவ
தன்ன" "நூலின் வலவா நுணங்கின்மாலை" என்றார் பொருநராற்றுப்படையினு

௩. பேம் = அச்சம்.

பாதலமனைத்தையு நடத்தடல்கொ ளாடகரும்
பாரநர கங்களெவையும்
மாதிதி புரிந்திடுகூர் மாண்டருமண் ணுயபிர
மாண்டமதை நீண்டகாவல்கொண்
டாதரித் *திருப்பவரு மேத்துமுத லாகியடி
யாரகமி ருக்குமுருகா
போதவொளி யைப்பெருக்கி யாசினிலை யானபரி
பூரண மெனக்கருடியே. (உ)

துங்கமெய்ச் சதருத்திர ருங்ககனே சாதிகளுந்
துன்றுமண்ட லாதிபர்களும்
பங்கமற்ற வெளவடு வஷடுநமா வுஞ்சுவாகா
பட்சுதா வெனப்பகருமே
மூங்கமுள்ள சத்தகொடி மந்திரரு மெச்சவடி
யாரகமி ருக்குமுருகா
பொங்கிரு ளறுத்தருள்வி ளங்குநிலை யானபரி
பூரண மெனக்கருடியே. (௩)

சுந்தரமல் கண்டநிரை யத்தனையு முச்சியிற்
சுமந்திடுமா தாரசத்தியும்
அந்தவொரு சத்தியுட னார்ந்தசுத்த மாயையை
யனாதநட த்தனந்தரும்
அந்தமுயர் சூக்குமரு மேனையரு மெச்சவடி
யாரகமி ருக்குமுருகா
புந்தியைய கண்டவெளி யாகநனி செய்துபரி
பூரண மெனக்கருடியே. (௪)

சீர்த்தியுள்ள பிரணவர்தே சேசரிறை காலருஞ்சு
தீர்த்தரெழில் கொண்டசுசிவர்
கீர்த்திகொள்சா தாக்கியர்நற் சூக்குமரோண் காரணரெ
னக்கிளத்து கின்றவொர்தச
மூர்த்திக ளனாதம னந்தமுறை மெச்சவடி
யாரகமி ருக்குமுருகா
பூர்த்தியெனுஞ் சிற்பர வெளிக்குளே யடங்குபரி
பூரண மெனக்கருடியே. (ரு)

---

* காலாக்கினி ருத்திரர்.

௩. கோடி "கொடி" எனக்குறுகிற்று.

வித்தைபெறு காடகரென் மூர்த்திக்கதிட் டானராம்
வியாபகர்கூர் மாண்டமூர்த்தியின்
உத்திக்கதிட் டானரென்வி யோமருயர் குண்டலியென்
றோதிடுமா தாரசத்திமேல்
அத்தனெனக் கூறவுள ளுதரிவர் மெச்சவடி
யாரகமி ருக்குமுருகா
பொத்தையுடல் விட்டிடுமுன் முற்றுநிலை யாகுபரி
பூரண மெனக்கருடியே.

ஏசறுவி யாபகரும் வியோமவடி வோரனந்த
ரென்பவரு மன்பனுதரும்
நேசமொடு நாற்புடையு மேத்தநடு வேயமர்ந்து
நீடழக னந்த்ரைநடாத்
தாகிலிறை யாயவிர னுசிருத ராயுமடி
யாரகமி ருக்குமுருகா
பூசுரார்பு கழ்ந்திடுமொர் வாழ்வெனு மகண்டபரி
பூரண மெனக்கருடியே.

மிக்கநெறி யத்திரியின் கண்ணயன் சிருட்டிபெரு
விண்டுநெஞ்சு வெங்கனன்முகம்
சொக்கவமு தக்கடலெ னும்புலங்க ளில்விரிந்து
தோன்றினதெ னச்சொன்மதியை
எக்கலையுந் தோன்றவணி வோன்குமர னுகியடி
யாரகமி ருக்குமுருகா
பொக்கமில்சு வர்க்கர்புகழ் சிற்சுகவ கண்டபரி
பூரண மெனக்கருடியே.

மண்ணுலகும் விண்ணுலகு நண்ணிநண்ணி யுன்னவொரு
மன்னெனவி ருந்துமொருவர்
எண்ணிடவும் பன்னிடவு முள்ளகுறி யொன்றுமின்றி
யெவ்வுயிர்த்தி ரட்குமுயிராம்
அண்ணலெனும் விண்ணெனநி லாவியுள்ள சோதியடி
யாரகமி ருக்குமுருகா
புண்ணியர்வி ரும்புசுக சின்மய வகண்டபரி
பூரண மெனக்கருடியே.

நீச்சுநிலை யற்றசன னக்கடலை நின்றனரு
ளென்றபுணை கொண்டுகடந்து
பேச்சொடு பிணக்கில்சுக மேவியவெட் டாதமலைப்
போனிறை யானதுரையே

ஆச்சரிய வாயிரம் பெயர்ப்பிரம மாகியடி
யாரகமி ருக்குமுருகா
பூச்சியமி லாதவொரு பூச்சிய வகண்டபரி
பூரண மெனக்கருடியே. (௧௦)

மன்மதஞூ ஆவணிமீ ௬௨ புதவாரம்.

---

# உரு. திருச்சிந்துபுரம்.

---

பண் — நட்டராகம்.

கார்முகி லுன்பொழியு மிந்தக் காசினி மீதெனெதிர்
நார்முனி யென்னவந்தே யொரு நாட்டத்தில் வைத்ததுபோல்
ஆர்மதி யுந்தருவோ ருனை யன்றி யெவருளரே
சீர்பெற வாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. (௧)

பொய்கொலை சூத்திரங்கள் செய்து பூரித்த புன்மையினேன்
உய்வண மாதவர்போல் வந்தவ் வுண்மைசொன் னயினமும்
ஐயவிங் கெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெய்வமென் றாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. (௨)

கொள்ளு நிலைவிளக்கிச் சிறு கோவணத் தோடிருந்தே
உள்ளென வைத்தவனே யென துள்ளத்து ளேமருவி
எள்ளிடா திங்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெள்ளிதி னாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. (௩)

காரண மாயையிருந் தெழு காரிய மாமுடம்பைப்
பூரண மாயளித்திங் குனைப் போற்ற விதித்தவருள்
ஆரிய வெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
சீருட னாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. (௪)

ஆசைகொள் பொய்யுலகப் பட ரானதை நச்சியுழல்
பாசர் வழியையொரு சற்றும் பற்ற விடாதுசெய்தோய்
ஆசையொ டெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தேசுட னாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. (௫)

இந்த வுடம்பெடுத்தே யிவ ணேற்றபொல் லாங்கனைத்தும்
வந்த புலந்தெரியா தற மாய்த்தவ னேயினுமென்
அந்தர மோர்ந்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
சிந்தைசெய் தாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. (௬)

---

௧, சிந்துபுரமென்பது திருச்சீரலைவாயென்னுந் திருச்செந்தூர். சிந்து = சமுத்திரம்.

புன்மன தைப்பெரிதாப் பணிப் புன்றொழி லத்தனையும்
என்மன திற்படியா திறச் செய்தவ னேயினமும்
அன்னம னைத்தடுப்போ ருனை யன்றி யெவருளரே
தென்னுட னட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே.

பெற்றவ ரும்மறப்பார் பிறந் தார்மக ரும்மறப்பார்
உற்றவ ருமம்மறப்பா ரொரு காலமு நீமறவாய்
அற்ற மறுத்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெற்றென வாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே.

மண்ணினும் விண்ணினுநான் கென மல்கு திசைகளினும்
அண்ணிய வுன்னடியா ருடை யன்பிலுள் ளோயெனதுள்
எண்ண மறிந்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெண்ணர லைக்குரைசா கிருச் சிந்து புரத்தானே.

துப்புறழ் வாய்க்குறமா னினி தோட்டமு வுங்குகனே
அப்பனே யின்பநுகர்ந் தனு பூதிசொன் னேன்குரவா
ஒப்புட னெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
செப்பமொ டாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே.

மன்மதஞு ஆவணிமீ கஉ மந்தவாரம்.

---

## உ௬. ஐக்கியமன்றாட்டு.

---

பண் — பழம்பஞ்சுரம்.

திங்கள் வேணியன் மைந்த னேசிவ னேயெ னுருயிர் நாதனே
மங்கு மஃறிணை யாவி யாக வகுத்தி டாதிந்த மானுட
அங்க மாக வகுத்த நின்னருட் பாட்டை நான்மற வேனினுஞ்
சங்கை காதரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே.

மின்னும் வேலமர் கைய வெம்பெரு வேந்த னேவள்ளி காந்தனே
நன்னர் சேர்மனு யாக்கை யேற்று நலம்ப டாவுறுப் பீனர்போல்
என்னை நீவனை யாம னன்குசெய் திட்ட வீர மறக்கிலேன்
தன்னு ளாரரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே.

---

கூ. குரை=ஒலி; "குற்றல்........குரையென்ப திடைச்சொல் லோஉ என்பது நகா வேதுகை.

௧௦. தோடழுவல்=கைப்பற்றல். இதனையே பாணிக்கிரகணமென்ப. இது வ காலத்தில் நிகழுமொரு சம்பவம். தோள்=கை.

பேழ்கெ டாவரும் பேறு சால்சிவை பிள்ளை யேசெழுங் கிள்ளையே
வாழ்வ ருவொரு வாள்வி லேதின மல்க யோக்கிய மேயிலாத்
தாழ்கு ழல்வடி வின்றி யாணுட றந்த வீர மறக்கிலேன்
தாழ்வி லாவரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே. (௩)

கோல வாற்சிகி வாக ளுவருள் கூர்ந்தெ னைக்கொளு மோமனு
மாலு லாவு மனத்தர் போலெனை வைத்தி டாதுயர் சித்தனுய்
ஞால மீதெனை வைத்த வுன்றெரு நட்பை நான்மற வேனினுஞ்
சால நல்லரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே. (௪)

தேவர் நாயக வோமெ னுநினை செல்வர் நாயக வம்மனை
ஆவண் மோட்டு ளிருந்த நாண்முத லிந்த நாள்வரை யார்துயர்
யாவும் வீட்டியுய் வித்த தண்ணளி நட்பை நான்மற வேனினுந்
தாவி லுன்னரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே. (௫)

ஆரல் போலவிர் மேனி யாயெங்க ளாரி யாவள்ளி காரியா
ஏரு லாங்கலை யில்வி போலெனை யுஞ்செ யாததி யின்பமே
சேர ருந்தமி ழோடு செய்தவொர் தெய்வ வீர மறக்கிலேன்
சார மாமரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே. (௬)

மாசி லக்கர மாறு மேற்பவர் வற்ச லாவதி யற்புதா
ஆசி லாப்பொறி கற்று நூலுணர் வற்ற மூடர்கள் போலெனை
நீசெ யாதுணர் வாகு மாசெய்த நேய வீர மறக்கிலேன்
தாசர் மூழ்கரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே. (௭)

சிட்டர் காவல னேக டம்பணி சேர்ந்த னேதிவ்விய சாந்தனே
மட்டி னூல்கள் படித்து மேபொய் வழிச்செல் வோர்களை யொப்பவே
சிட்ட னேனை விடாதுன் மெய்வழி சேர்த்த வீர மறக்கிலேன்
தட்டி லாவரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே. (௮)

அஞ்சொ லாளெங்க ளம்மை யாங்கஜ நாய கிக்கு மணாளனே
கிஞ்சி னும்முனை நாடி டாது கிடக்கை மீதிழி வேலைசெய்
பஞ்சை போலெனை விட்டிடாது பணித்த வீர மறக்கிலேன்
தஞ்ச மாமரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே. (௯)

மண்ணும் வானமு மெச்ச வேபுகழ் பாடி னேனக மாமணீ
கண்ணி லாமட வோர்சி னேகித நீக்கி புன்றெரு காமரே
எண்ணி நாளு மிருக்க வாக்கிய விட்ட நான்மற வேனினுந்
தண்ண ருவரு ளுந்தி மூழ்கியுன் றன்னை மேவ விழைத்தியே. (௧௦)

மன்மதளுு ஆவணிமீ ௧௨௨ மங்களவாரம்.

---

ரு. அம்மனை = தாய்; சூ - நிகண்டு காண்க.

# உஎ. அங்கப்பேறு.

பண் — நட்டராகம்.

ஆதித்த னாம்பரிதி தலம் யாவும் விளக்குதல்போல்
தீதற்ற மெய்யடியார் சிந்தை தன்னை விளக்கியுண்மை
போதிக்கும் பாவகியே யுனைப் போற்றிப் பழிச்சியென்னாப்
பேதிப் பிலாப்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்ததன்றே.

கூரா ணப்படையா யண்ட கோடியெல் லாம்பயக்கும்
ஆரண வற்புதனே யறி வாய்விபு வானவனே
சீருட னாளவந்த திரு மேனியைக் கண்டுகண்கள்
பேருல கிற்பெறும்பே றன்று பெற்றுக் களித்தனவே.

வாச நறுங்கடம்பா வெழில் வாண்மணி யார்சிலம்பா
தாச னெடுத்தவிந்தச் சன னங்கடைத் தேறிடுமா
தேசிக வாக்கியமாச் செப்பக் கேட்டென தஞ்செவிதான்
பேசற் கரும்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்ததன்றே.

முன்னைப் பழம்பரமே முழு மூலச் சிவக்கொழுந்தே
என்னுட் கணேயிருந்தே யெனக் கின்பிகைக் கும்பொருளே
கொன்னழ குன்னடியை நனி கூப்பியென் கையிரண்டும்
பின்ன மிலாப்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்தனவே.

மட்டங் குயக்குறத்தி மண வாளனே தாழுநர்தங்
கட்டஞ் செகுப்பவனே கரு ணாகர வேலவனே
வட்டம தாச்சூழ வலம் வந்திரு தாள்களுமே
பெட்டி லரும்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்தனவே.

ஓய்வி லரும்வெறுக்கை யுள்ள வுத்தம னேயரனார்
சேயெனுஞ் செம்பொருளே சிவ ஞானப் பெருந்தகையே
காய மெலாமுனது கழ லைக்குரங் கிக்குரங்காப்
பேய்கள் பெறாப்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்தனவே.

மூத்தர் முதுக்குறைவே சிவ மோன வருட்பரப்பே
எத்திசை யுஞ்செறிந்த விறை யேயெனை யாள்குகனே
நித்தலு நின்சரணை யென்ற னெஞ்சம துள்கியுள்காப்
பித்தர் பெறாப்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்ததன்றே.

---

ரு. பெட்டு=பொய்; ஆ - நிகண்டு காண்க.

மாடுடை யண்டர்பிரா னெனு மாசில் சதாசிவனே
வீடுடை யாய்விமலா விரை வீசு கடம்பணியாய்
தாடரு முன்னிலைமை யைவி சாரித்தென் புத்திகெடாப்
பீடுடை நற்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்ததன்றே. (௮)

ஏர்மலி யெம்பரனே யிணை யில்விசும் பானவனே
தார்மலி மொய்ம்பரனே சிவ சண்முக சங்கரனே
சீர்மலி யுன்னருளை யென்றன் சித்தம தெண்ணியெனுப்
பேர்கள்பெறாப் பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்ததன்றே. (௯)

தெள்ளறி விற்சிறந்தே யனு பூதி தெரித்தவெந்தை
உள்ளறி விற்கலந்தே யொரு மோதநல் குங்குழகா
பொள்ளற் சடங்கெடுமுன் புரி வுற்றழுங் கென்னைபுகி
கொள்ளும் விதம்பணித்தா னனி கூடிக் களிப்பேனே. (௧௦)

மன்மதளூ ஆவணிமீ ௧௯உ மந்தவாரம்.

---

# ௨௮. உள்வைப்பு.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் – பழம்பஞ்சுரம்.

**உ**லகம் யாவும் படைத்தவனை யுகந்தெவ் வுலகும் புரப்பவனை
இலகு முயிருட் கலந்தவனை யெங்கு நீப்பின் றிருப்பவனை
நிலவு மயிலைப் பிடித்தவனை நிகரில் சிகண்டி யூர்பவனை
உலவா வெங்க ளுத்தமனை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (௧)

காதற் கியைந்த காதலனைக் கருணைக் கடலைக் கண்மணியைச்
சீதப் பாலைத் தேங்கனியைத் தெவிட்டா வின்பத் தீஞ்சுவையை
ஆதிப் பெருமா னயவனை யாறு முகத்துச் செம்மணியை
ஓதற் கரிய வெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (௨)

அம்பொற் சிலம்பா ரடியழகை யடியா ரகத்தி னாமுதைப்
பைம்பொற் கவலை காத்தவளின் பரிவுக் குவந்த கட்டிமுத்தைச்
செம்பொற் சோதிச் செழுங்குருந்தைத் திகழ்மாணிக்கத் திருவரையை
உம்பர்க் கருளெம் பெருமானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (௩)

---

௧௦. மோதம் = சந்தோஷம். (मोदः) மோதம் வடசொல்.

௧. உலவா = ஒழியாத.

௩. கவலை = செந்தினை ; "கவலை செந்தினையோர் வல்லி" என்பது **வகரவேதுகை.**

தேனிற் சிறந்த மொழியானைத் திருவிற் சிறந்த வுருவானை
வானிற் சிறந்த பதியானை மதியிற் சிறந்த பெரியானை
மானிற் சிறந்த விழியாளம் மலைமா தேந்தும் பைங்கிளியை
ஊனிற் போருயி ரெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (ச)

அன்னைக் கனையா யுள்ளானை யயனுக் கயனு யிருப்பானைத்
தன்னைப் போலொன் றில்லானைச் சாவில் பிறப்பி னில்லானை
முன்னைப் பின்னைப் பிறழானை மூவா முருகப் பெருமானை
உன்னற் கரிய வெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (ரு)

மெய்யின் மெய்யாய் நிற்பவனை விரிபு மகண்ட வெளியானைப்
பொய்யில் வேதப் பொறையாளர் போற்று மபேத வுணர்வானைச்
செய்ய கோழிக் கொடியானைச் சிறந்த ஞானத் திருவானை
உய்யு மாறெம் முத்தமனை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (சு)

செச்சைத் தாரார் மொய்ம்பானைத் திருமான் மருமா னென்பானை
இச்சைக் கலிக்கு ளாழ்ந்தோரை யெடுத்துக் கரையேற் றிகலானைப்
பிச்சைத் தலைவன் பிள்ளைதனைப் பிரமா பேணும் பேழ்மறையின்
உச்சிப் பொருளா மெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (எ)

ஏட்டின் மொழிக ளளவின்றி யியம்பி யியம்பி முடிபுரையாத்
தாட்டி கந்தா னுடையானைச் சகல கலாவல் லோனையுயிர்
நாட்டி யஞ்செய் பவனையனு நடுவா னவனை நவிவிலருள்
ஊட்டி யெனையிங் காள்பவனை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (அ)

அரிய மாலிற் கரியானை யயனைச் சிறையிட் டருள்கோனை
நரியைப் பரியா வயர்ந்தவனை நமவென் றிறைஞ்ச விதித்தவனைப்
பெரியர்க் கருளும் பெரியானைப் பிறங்குங் கழுகு மலையானை
உரிமைப் படுமெம் பெருமானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (க)

வெள்ளிக் கயிலை மலைவாழ்வை வியனூர் மோன ரகக்கழையைக்
கள்ளிற் பெரிய திருப்புகழைக் கழறி யிரியா வாக்கமுற்ற
வள்ளற் குள்ளங் குளிர்வித்த மழையா முகிலை வான்மணியை
உள்ளற் கரிய வெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. (க

மன்மதவருஷ ஆவணிமீ௳ கஅவ சோமவாரம்.

---

# ௨௯. மெய்ம்மார்க்க விளக்கம்.

திருநேரிசை.

பண் — கொல்லி.

நீரகம் பெருகு நாக நிருபனார் சுதைவார்க் கொங்கைப்
பீரகங் குளிர மாந்திப் பிரமனார் சிரசிற் குட்டி
ஏரகத் தமர்ந்த தேவை யிகனிசி சரரைக் காய்ந்த
தீரனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (௧)

மாவலை யரிக்கு நேமி வழங்கிய தணிகைச் சேயைக்
கோவரர் பதியை ஞானக் குழவியைக் குமர வேளை
ஆவியர் தேவா வானை யறிஞர்க ளகத்திற் றாங்குந்
தேவனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (௨)

பொய்தபு மயோத்தி ராமன் போற்றிய குருந்தை ஞானச்
சைவனைத் தார கத்தின் சதுர்தனை விளக்கி னானைப்
பையுளில் பரம யோகர் பரிவினில் வெளியாந் திவ்விய
தெய்வம தன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (௩)

தன்னிக ரில்லா தானைத் தனிப்பரஞ் சுடரை ஞான்றும்
மன்னுயி ரனைத்து மோம்பி மலரடி யிருத்தும் மானை
என்னக மிருக்கும் வேந்தை யோர்ச்சிகா வளத்தி லேறு
தென்னனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (௪)

வெறிநுக ரளிகண் மூசு மென்சுருட் குறமின் னேந்து
பொறிமுகை யழுந்து மொய்ம்புப் புனிதனைப் புனிதர் கோனைக்
குறிதிரி பேத மில்லாக் குகனைமஞ் சுமையாள் பங்கன்
சிறுவனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (௫)

கவலைமா கடலில் வீழ்ந்த கறையனேன் கரிசை நூறி
அவனையே யேத்த வாணை யயர்ந்ததண் கருணை யானை
மவுனிக ளகநி லாவு மாணிக்க மதனை வேற்கைச்
சிவமதை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (௬)

---

௫. பொறிமுகை ஏந்து குறமின் எனக் கூட்டுக. தேமல் படர்ந்த தனங்களைத் தாங்கிய குறமகளாகிய பிராட்டியிடம் என்னும் பொருள் கொள்க.

அழுந்தும் = அத்துவைதமாக விரவி நிற்கும்.

மொய்ம்பு = வன்மை.

வல்வினை துமிக்குந் தேவை மறைகளை நொடித்த தேவை
நல்வினை யாளர் நாவி னவின்மனு வினுக்காந் தேவைப்
பல்கணம் வாழ்த்தும் வேளைப் பரமபுங் கவர்க ளேத்துஞ்
செல்வனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (எ)

காந்திசெய் யாணத் தானைக் கனைகழற் சரணத் தானைச்
சாந்தர்க ளறிவிற் றேன்று சவியுடைச் சுடரை யன்பர்
வேந்தனை விபுதர் கோனை விமலனை விமலர் வாழ்த்துஞ்
சேந்தனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (அ)

துண்ணெனத் துடிதான் கொட்டி யாடிடு துரையை யூனக்
கண்ணினர் காணாக் கானக் கமலநான் முகன்மா லேத்தும்
விண்ணென விரிந்து ளானை மிளிர்வடி வேல்கூ லேந்து
திண்ணனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (கூ

காய்சரு கருந்து முவ்வோர் கருத்தினுக் கிசைந்து ளானை
ஓய்வறு புகழ்சொன் ஞேன்சொல் லொருவனைப் புறம்பா மார்க்கப்
பேய்கடா முணராச் சூரைப் பெருஞ்சிவ யோகர் பேணுஞ்
சேய்தனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. (க0

மன்மதவூ ஆவணிமீ ௧௯உ மங்களவாரம்.

---

# ௩0. சுப்பிரமணிய ரகசியம்.

---

திருத்தாண்டகம்.

பொன்னொளிவே ணிவிர்த்திபிர திட்டை வித்தை
　　பொதிதீபச் சாந்திதிகழ் சாந்த்யா தீதை
நன்னார்நிரோ சாதைநா தாந்தை சத்தி
　　நாதைவியா பினிசமனை வியோமரூபை
உன்மனையோள் ளொளியனந்தை யனாதை மிக்க
　　வொளிசெயனு சிருதையெனுங் கலைகண் மேலாய்
என்னகத்தி னீயுதித்தா லன்றோ சுப்பிர
　　மணியமது தோன்றிற்றென் றிசைப்பேன் மன்னே. (க

---

க. பொதிதல்=வீங்குதல்; மிகுதலெனவுமாம்.

முனிவுகெழு தாரகனா மாயை யோடு
மோசவன்மைக் கிரௌஞ்சனையு ஞான வேலால்
நனிமுருக்கிச் சிங்கமுக னென்னுங் கன்ம
நசித்தடல்கொள் வச்சிரசத்தி யானல் லோர்க்குப்
பணிபுரிந்த சூரபன்ம னெனுமாங் காரம்
படராண வத்தைநெடுங் கூர்வே லென்னுந்
தனிஞானத் தாற்பிளந்தா லன்றோ சூர
சங்கார நடந்ததெனை நவில்வேன் மன்னே. (௨)

அருளாகு மகண்டசிவ ஞான சத்தி
யதனாலே பிளப்புண்ணு மாண வந்தான்
இருபகுதி படுங்கால மொருபா கத்தி
லெழுந்துவரு முபாதியைக்கீ ழடக்கி மேற்கொண்
டொருபாகத் தெழுந்துவரு முபாதி தன்னை
யுயர்மாயை யடக்கியுல கெல்லா மெந்தம்
பொருளெனவே காட்டுகொடி போட்டா லன்றோ
புள்ளிமயி லூர்ந்துகொடி போட்டா ரென்பேன். (௩)

அகங்கார மலமடங்கி யமர்ந்த பின்ன
ரதுவிருந்த வவித்தியா புரத்தின் மேலும்
சகம்பேணு மாயையுடை வலியால் வாதை
தழைக்கும்வா சனைமுளையா வண்ண மாறப்
பகம்பேணு மனோநாச மெனும்வெள் ளத்தைப்
பரவநனி செயினன்றோ சூர பன்மன்
உகம்பலவா யாண்டிருந்த புரத்திற் றண்ணா
ருததிபோய்ப் படிந்ததெனை யுரைப்பேன் மன்னே. (௪)

மாயைவரு மகங்கார மலத்தி னாலே
வவ்வப்பட் டளப்பறுகா விடுக்க ணுற்றுப்
பேய்கள்போற் சீர்குலைந்து வருந்து மென்றன்
பிரியமுளோ ரோடெனக்கும் பெரிய வீடு
நோயமொடு கொடுத்தாண்டா லன்றோ வானோர்
நெடுநாளா யடைந்தபட ரறுத்தன் னோர்தந்
தூயபதி தனைக்குமரப் பெருமா ளென்பார்
சுதந்திரமா யளித்தாண்டா ரென்பேன் மன்னே.* (௫)

---

௨. பணி = துன்பம்; "பணியென்ப நடுக்கந் துன்பம்" என்பது ணகரவேதுகை.

* இவ்வைந்து பாட்டுக்களிலும் வருகின்ற இரகசியங்கள், இந்நூலாசிரியரது **ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம்** ௧௪-வது வினாவிடையில் மிகவும் விளக்கப்பட்டிருக்கின்றன.

அழியாத வானந்தம் பிரம மென்றே
யறைசுருதிப் படிசுவ்வே யவ்வா னந்தம்
பழிசேராப் பிரமவெனல் விகார மேதும்
பகரவொண்ணுப் பெரியபர வத்து வென்றும்
பிழைதீர்ந்த ணியமென்று னதிலே தோன்றிப்
பிறழ்வதென்று மிவைசுப்பிர மணிய மென்று
மொழியவரு மாகலினு னந்தந் தானே
சொரூபஞ்சேய்க் கெனவறிஞர் மொழிவார் மன்னே. (௬)

குகமெனுமோர் கூற்றினுக்குப் பொருளான் மாவின்
குகையென்னு மிருதயமென் றுத லானே
குகனெனுமோர் திருநாமக் கடவு ளெல்லாக்
குவலயத்து முளவான்ம கோடி நெஞ்சாங்
குகையிருக்கும் பரமான்மா வெனவா மாலிக்
குகசத்தம் பிறிதொருதே வனுக்கு முண்டோ
இகபரமுந் துலக்கியரு ளடிகே ளென்ற
னிதயநடு வமர்ந்தவருட் டிருவே மன்னே. (எ)

என்றுநிலை பரமான பொருளாந் தெய்வ
மிணையில்லா வனுபவத்தில் வெளியாந் தன்மை
துன்றுமிலை மறைந்திருக்குங் காய்தா னந்தத்
தொடக்கான விலைவிலகத் தோன்று மாபோல்
நின்றுவெளி யாமதனுற் சுப்பிர மணிய
நித்தியமல் லாதுபுதி தன்றென் றோர்வார்
குன்றலற வாழ்வாரே யாண்டு மென்றன்
குற்றேவல் கொண்டருளுங் குருவே மன்னே. (அ)

பூணாரம் புனைதெய்வத் தந்தி தானே
புரைதணந்த குகவேட்கு ஞான சத்தி
நாணுனு மிடைவள்ளி யம்மை தானே
நாதாந்த பரம்பொருட்குக் கிரியா சத்தி
காணுமல் வருந்தியரு ளுடு வார்க்குக்
கரிசிலந்த விரண்டுசத்தி வாயி லாகச்
சேணுடர் கணிக்கரிய போக மூட்டிச்
சேர்த்திடுமெப் பரப்பிரமக் குழவி மன்னே. (௯)

௬. பிறழ்தல்=பிரகாசித்தல்.

அ. தொடக்கு=கட்டு. கட்டலிற் "பிணித்தல் சுருக்கல் தொடுத்தல்" எனப் பிங்கலந்தை கூறுதலுமோர்க.

உருநிலையிற் குழவிவடி வுடனி ருந்தே
　　யுயர்தந்தைக் கோம்பொருள்சொன் னதுவி யப்பே
அருநிலையி லுயிர்தோறு மிருந்து மந்த
　　வாவிகட்கெட் டாதிருத்த லதிவி யப்பே
பெருநிலையி லரியனுமான் வீர வாகுப்
　　பெயருடையான் கொண்டவுருக் களைக்க டந்து
கரசிரங்கள் பலவோங்க நின்ற நீர்மை
　　கணிப்பவரார் திருப்புகழ்சொன் னவனுண் மன்னே.　　(௧௦)

மன்மதஞு ஆவணிமீ ௨௦உ புதவாரம்.

---

பதிகம் முப்பதினும் போந்த திருப்பாட்டு—௩௦௦
காப்பும் தௌத்தியமும்　　௨௧
ஆகத்திருப்பாட்டு　　௩௨௧

---

## ௩௧. நமன்றமர் நணுகாநெறி.

---

பண் – கட்டபாடை.

ஆதித்தரெ னச்சொல்சுரர் களினீள்பகை யறுத்த
சோதிச்சுடர் வடிவேலவர் சுகுர்தத்திரு நாமம்
ஓதிப்புவி மீதேநித முவந்தாரரு ணுடிச்
சாதித்திடு வோர்பானமன் றமர்தாநணு காரே.　　(௧)

என்பார்தசை செந்நீர்நரம் பெனவேய்ந்தபொய் யாக்கை
துன்பாலழி முனமேசிவ சுதனை குகேசன்
அன்பாவதை யன்போடெண்ணி யன்பிற்படி யுமவன்
தன்காளிணை வோர்பானமன் றமர்தாநணு காரே.　　(௨)

பாளைச்சுருண் மீதஞ்சிறை யளிதானளி பருக
வாளைப்பொரு தத்தாரைக ளிலகும்வன மகளார்
தோளைத்தழு வுங்காமரி னுழல்சேயிரு தூய
தாளைப்புகழ் வோர்பானமன் றமர்தாநணு காரே.　　(௩)

---

௩. தோளைத்தழுவுங் காமர் = விவாககால பாணிக்கிரகண அழகு. இதுபற்றி ௨௫ – ௧௦ – ன் குறிப்புரையிலும் விளக்கப்பட்டதன்றே. "காமர் அந்தமே மயமே யொண்மை" என்பது சூ – நிகண்டு.

மரணஞ்சன னஞ்சூழ்கவன் மருளேதுமி லாவோர்
புரணந்தனை யுடையாரடை பொருளாவிக ளுள்வாழ்
கரணன்மர கதரூப கலாபச்சிகி யூர்வோன்
சரணந்தொழு வோர்பானமன் றமர்தாநணு காரே. (௪)

நிதம்வந்தனை புரிவோரக நிகழுங்கிரு பாரூ
மதவங்கய முகனுரிள வலெனுங்குரு மேசன்
பதபங்கய வியன்மான்மிய மொழிசீரிய பாடல்
சததஞ்சொலு வோர்பானமன் றமர்தாநணு காரே. (௫)

மனைபன்னிய ருஞ்சேயுற வோடேவிரி மண்ணில்
வினைபண்ணியு ழல்வோருரு மிளிர்வேன்முரு கோனன்
பினையுன்னடி யார்க்கேகளி பெருகும்படி தொண்டு
தனையேபுரி வோர்பானமன் றமர்தாநணு காரே. (௬)

பலிக்கப்பரை கொண்டேமறு கூடின்னிசை பாடிப்
புலிப்பொற்புரி யரையாத்தொரு பூவெண்கிரி யுறைவோர்
வலிக்கொப்புறு குகதேவயர் சரிதங்களை மனமே
சலிக்கப்படிப் போர்பானமன் றமர்தாநணு காரே. (௭)

அவமாமதி பாவம்பல வயர்ந்தோர்குழு வுள்ளூம்
நவமாமணி முடியும்பர்க ளுளுஞ்சலி யாமற்
சிவமேயென நினைகின்றவொர் செவ்வேளடி நேடித்
தவமேபுரி வோர்பானமன் றமர்தாநணு காரே. (௮)

மதங்கட்டிய மருப்புக்கரி யைப்பாய்முகை மகடூஉ
நிதம்பப்புழை வீழாவொரு நெறிநின்றறு முகவேள்
பதஞ்சிக்கிட விலையேயென பணுவோமென விழிநீர்
ததும்பத்திரி வோர்பானமன் றமர்தாநணு காரே. (௯)

தேர்ந்தோர்துதி செய்யுந்திருப் புகழ்சொன்னவ னெஞ்சம்
ஓர்ந்தேயருள் புரிந்தோனெனு முமையாள்சுத னடிக்கண்
வார்ந்தோடுநன் மதுநச்சிடு வரிபோலவ னன்பிற்
சார்ந்தேயிருப் போர்பானமன் றமர்தாநணு காரே. (௧௦)

மன்மதஹு ஆவணிமீ ௨ உ௨ சுக்கிரவாரம்.

# ௩௨. வழிபாட்டின்மாட்சி.

பண் - இந்தளம்.

கிரியுரி போர்த்தவர் காதல ஞய
விரிகதிர் வேலுடை யாயுனே வேண்டித்
திரிபவ ருலகினிற் றீதடை வாரோ
பரிவுடை யின்னருட் பாடடை யாதே. (௧)

வானத்துய் வோரிறை யோனென மாண்பு
ஞானப்பொன் வேலுடை யாயுனே நாடி
யேனிற்கு மேசில ரிழிவடை வாரோ
தேனிற்கு மேலுயர் சேணடை யாதே. (௨)

பொய்யுரை சீத்தருள் புரிகுரு நாதா
தொய்யலில் வேலுடை யாயுனேத் தொழுவோர்
வையமு ளேகடி மடியடை வாரோ
மெய்யதி மேதக வீறடை யாதே. (௩)

செறிசிறு கிங்கிணி சேர்சர ணுனாய்
அறிவுடை வேலுடை யாயுனே வாழ்த்தும்
பொறியுடை யோர்மறு புதையடை வாரோ
வறிதறு வாழ்வினே யேயடை யாதே. (௪)

நுண்ணிடைச் சசிமகள் பதியென நுதலார்
கண்ணுடை வேலுடை யாயுனேக் கருதி
மண்ணிடைத் திரிபவர் மருளடை வாரோ
விண்ணிடை நிறுவொரு வீடடை யாதே. (௫)

சகலச ராசர தாரக தேவா
இகலயில் வேலுடை யாயுனே யெண்ணிப்
புகலிலே யென்பவர் புலவடை வாரோ
நிகரறு பூரண நிலேயடை யாதே. (௬)

அறைமறை யாறங்க நெறியின ரேத்தும்
பொறையுடை வேலுடை யாயுனேப் போற்றும்
குறையில ரோகையில் குறைவடை வாரோ
நிறைவெனு மின்புறை நிலேயடை யாதே. (௭)

---

௪. வறிது = அறியாமை; நிகண்டுகள் காண்க.

துவிதமி லாதவத் துவிதமெய்ஞ் ஞானச்
சவியுடை வேலுடை யாயுனைத் தாழ்ந்து
கவிகுயில் வோர்களுங் கறையடை வாரோ
விவிதமி லாவிப வம்மடை யாதே. (அ)

தேட்டமொ டன்றறு வருக்குயர் தேற்ற
நீட்டிய வேலுடை யாயுனை நீங்கா
நாட்டமிக் குடையவர் நலிவடை வாரோ
ஆட்டுமுன் னொடிரண் டறவடை யாதே. (௯)

திருப்புகழ் நாவலன் றிருப்புக ழணிக்கு
விருப்புடை வேலுடை யாயுனை மறவாக்
கருத்துளர் பிறிதொரு கருப்புகு வாரோ
உருக்கிய வுடம்புட னுனையடை யாதே. (௧0)

மன்மதஞு ஆவணிமீ உ௩௨ மந்தவாரம்.

---

## ௩௩. தாசப்பிரகாசம்.

---

பண் — கொல்லிக்கௌவாணம்.

பொன்மருவு பொடிமேனிப் புலவற்குத் தாசன்
புகரற்ற நறுநீபம் புனைவோற்குத் தாசன்
தென்மலய மாமுனிவன் குரவற்குத் தாசன்
செழுந்தூவி மயிலூருஞ் சிவனுக்குத் தாசன்
கன்மவினை போக்கியருள் கந்தற்குத் தாசன்
காங்கேயத் திருநாமக் கடவுட்குத் தாசன்
என்மனத்தி னுள்ளவயி லிறைவற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே.

சங்குமிலை சங்கரர்சு வாமிக்குத் தாசன்
றண்ணளியி னவர்தந்த குமரற்குத் தாசன்
பொங்கரவ ணிந்தவுமை மைந்தற்குத் தாசன்
பொருவற்ற வேணுமைப் புனிதற்குத் தாசன்

---

அ. விபவம்=செல்வம்; பி — நிகண்டறிக.

௯. எங்குநிறை விண்குமர குருதாச னனே=ஞானாகாசமாய் எங்கு நிறைந்துள்ள குமர குருவுக்கு நான் தாசனே.

திங்கண்முக வள்ளிமண வாளற்குத் தாசன்
றிவ்வியசுர குஞ்சரியின் றலைவற்குத் தாசன்
இங்கிதகு ணப்பரம முருகற்குத் தாச
னெங்குநிறை விண்குமார குருதாச னேனே. (௨)

தீரமலி தேவசே னனிக்குத் தாசன்
றிருவேறு செம்பாதச் சிலம்பற்குத் தாசன்
வீரமலி யொருசூரன் பகைவற்குத் தாசன்
வித்தார வடிவுள்ள குழகற்குத் தாசன்
ஆரமலி தோள்ராம நாதற்குத் தாச
னயிரம காநாம வாதிக்குத் தாசன்
ஈரமலி யிதயச்செவ் வேளுக்குத் தாச
னெங்குநிறை விண்குமார குருதாச னேனே. (௩)

வென்றிவேல் கொடுகுன்று போழ்ந்தோற்குத் தாசன்
வெயின்மிக்கி லங்குகர வேலற்குத் தாசன்
பொன்றாத நித்தியசு ரேசற்குத் தாசன்
புகலரிய வித்தைதரு புலவற்குத் தாசன்
தென்றிசைந மன்பரவு சேந்தற்குத் தாசன்
செம்மைகெழு சேவலங் கொடியாற்குத் தாசன்
என்றுநிமிர் முசுகுந்த னிறைவற்குத் தாச
னெங்குநிறை விண்குமார குருதாச னேனே. (௪)

தகவுற்ற வொருதார காரிக்குத் தாசன்
றமோத ரற்காழி தந்தோற்குத் தாசன்
பகமுற்ற நந்தீசர் குருவுக்குத் தாசன்
பாவகியெ னுந்தூய பெயரோற்குத் தாசன்
அகமற்ற சுகர்வாம ரடிகட்குத் தாச
னசறும காலோக குருவுக்குத் தாசன்
இகலுற்ற வொருகங்கை மைந்தற்குத் தாச
னெங்குநிறை விண்குமார குருதாச னேனே. (௫)

சேடுடைய திருவிஞ்சு செட்டிக்குத் தாசன்
சேயென்னுந் திருநாமச் செல்வற்குத் தாசன்
மாடுடைய மணிகண்டன் மகனுக்குத் தாசன்
மாமாய மாயோனின் மருகற்குத் தாசன்
பீடுடைய மலைமேவு பெரியோற்குத் தாசன்
பிணங்காவி யன்வாகு லேயற்குத் தாசன்
ஏடுடைய வெட்சிகொள்வி சாகற்குத் தாச
னெங்குநிறை விண்குமார குருதாச னேனே. (௬)

சீர்கொண்ட செங்கார்த்தி கேயற்குத் தாசன்
நீதற்ற குடைக்கூத்துத் தேவற்குத் தாசன்
நார்கொண்ட நலனோங்கு கடம்பற்குத் தாச
னல்லாறு முகமுள்ள நம்பிக்குத் தாசன்
தார்கொண்ட சரஜன்மப் பெருமாற்குத் தாசன்
தாழ்வற்ற தமிழ்ச்சங்கத் தலைவற்குத் தாசன்
ஏர்கொண்ட கதிரேசப் பெயரோற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. (எ)

அக்கினிக ருப்பனெனு மண்ணற்குத் தாச
னனந்த மாஞ்சுப்பிர மணியற்குத் தாசன்
பொக்கமறு முத்தையப் பெயரோற்குத் தாசன்
பொருவின்மா யாமாயக் குழவிக்குத் தாசன்
துக்கமறு துடிக்கூத்துக் கடவுட்குத் தாசன்
றொன்மைய ஞர்சிட்டி செய்தோற்குத் தாசன்
இக்குவளர் கந்தகிரி யீசற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. (அ)

பணைநகில வனமகளின் பட்சநனி நச்சிப்
படிமீது புளிந்தனைச் சென்றோற்குத் தாசன்
திணைமீது திமிசாக நிமிர்ந்தோற்குத் தாசன்
றெய்வமுது சன்னசி யானோற்குத் தாசன்
பிணையலணி யத்திமுகன் றம்பிக்குத் தாசன்
பேசரிய யாழ்முனிவன் பெருமாற்குத் தாசன்
இணையளவை யில்லாத குகனுக்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. (கூ

கல்லாலி னிறைபோல வோங்குபர வோதிக்
கண்ணறு பெயர்க்கறிவு தந்தோற்குத் தாசன்
வில்லாரும் பழநிமிசை வெண்கச்சை சார்த்தி
மிளிர்கின்ற வொருதண்ட பாணிக்குத் தாசன்
நல்லார்கள் போல்வைக்க நினைத்தென்னை நேடி
நன்னவிர முண்டிதமாய் வந்தோற்குத் தாசன்
எல்லாரு மேத்தருண கிரிகோற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. (கo

மன்மதஞு ஆவணிமீ உருஉ மந்தவாரம்.

---

எ. கதிரேசன் - கதிரையீசன் என்பதன் மரூஉ.

## ௩௪. திருக்கருணைப்பிணக்கம்.

---

பண் - பழம்பஞ்சுரம்.

மண்டலம் விண்டல மேத்த மாதர் மயலே கொளுங்குறத்தி
கொண்ட மஞ்ஞை ரரும்பொன் வேலர் குறள்கள் பலகோடி
தெண்ட னிடுஞ்சிகி யீசர் நல்கு திருவிற் சிறிதுகொளின்
பிண்ட முடையநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (௧)

ஆச்சரி யத்திருக் கூத்தி ஞலைய னங்காப் பீறுதிரை
ஏச்சி லனுக்கிரக மென்னு மைந்து மிழைக்கு மயூரேசர்
பூச்சர மொய்ம்பவிர் செவ்வே ணல்கு பொறியிற் சிறிதுகொளின்
பேச்சடங் காதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (௨)

சீரிய மாதர்க ளொன்று கூடிச் சிலம்பணி தாள்வணங்கிக்
கோரிய மோவுற வாண்டு கொண்ட குமார குருபரனார்
பாரினி லேயருள் கூர்ந்து நல்கு பவுள்சிற் சிறிதுகொளின்
பேரறி வற்றநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (௩)

காழடி மேலெழிற் றண்டை வீரக் கழல்க ளோலிடமா
மாழைகொள் கேகய மீது சாரி வருங்கு மாரகுரு
ஊழிக லோயவுள் ளுள்ளி யீபு முவப்பிற் சிறிதுகொளின்
பேழறி வற்றநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (௪)

ஆறிளஞ் சந்திரன் கொக்கி னிறைகொ ளலங்கா ரத்தலையோ
டேறு நடத்திடுஞ் சம்பு மைந்த ரிருஞ்சே வற்கொடியார்
ஈறறு பேரரு ளானல் கமுத வின்பிற் சிறிதுகொளின்
பேறடை யாதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (௫)

செத்தவர் சேரிடஞ் சென்றி டாது சிவானந் தம்பெறுவோர்க்
கத்த னருட்டிரு மேனி கொண்டரு ளாறு மாமுகவேள்
சித்த மகிழ்ந்தளிக் கின்ற தெய்வத் திருவிற் சிறிதுகொளின்
பெத்த முடையநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (௬)

சீதரன் பங்கய னீரைஞ் ஞூறு திட்டி யன்சசிவீ
சாதவன் மண்மகன் மந்தன் பொன்னு மகிக ளரிபுகருங்
காதலி னேத்திடு கந்த வேள்செய் களிப்பிற் சிறிதுகொளின்
பேத மறாதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (௭)

---

௩. கோரஇயம் — "கோரியம்" எனப்பொருந்திற்று. அச்சந்தரத்தக்க ஒலி எனும் பொருளது.

விரிதிரை வாரிதி சூழ்கி டக்கு நிலத்தில் வேதநெறி
திரிபு படாவகை செய்த யோகர் தினமுந் தொழுதணைந்த
பரிவுடைச் சண்முக நாதர் நல்கு பவுள்சிற் சிறிதுகொளின
பெருமை பெறுதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (அ

சாதி குணம்பெயர் குட்டை நெட்டை சனிப்பு நாப்பணந்தம்
ஆதி யவத்தையி லாம வுள்ள வகண்ட குமாரேசர்
போத மகிழ்ந்தளிக் கின்ற தெய்வப் பொறியிற் சிறிதுகொளின்
பீதி விடாதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (க

மறந்தரிப் புற்றுளிர் தேடி நாடி மருவி யிப்புவியில்
இறந்துதிக் கின்றதை நீத்தி ருமினென் றேசில் புகழ்பாடிச்
சிறந்தவன் றம்பிரா னென கந்தர் திருவிற் சிறிதுகொளின்
பிறந்தலுத் திட்டநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. (க௰

மன்மதஹூ ஆவணிமீ உ௪௨ ஆதித்தவாரம்.

## ௩௫. மிகைவெல் வயவை. *

யாழ்மூரி.

மாமலைச் செல்வியையொர் புறம் வைத்துயர் வெண்டிகழ்
வரை யுறை யிறை யவ ரருளி னுய்யுநறுங்
கோமளிர் வானவர்கள் பழிச் சிப்பணிந் தாம்வரங்
கொள வுள கட வுள ரெனவி ளங்கியொண்மை
நாமகள் காமுறுமே ழிசைப் பூதக ணம்பல
சரி கம பத நியென் றரிய வணம்பாட
ஏமவு ளங்களிந்து நடஞ் செய்குகன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.

மைமச்சல ராசிவளை நில மேவுப சுக்களை
மறு புதை புக வயர் பிரம னார்சிரசிற்
கைச்சுமங் கொண்டுகுட்டித் திருக் காலுதை யுந்தருங்
கரு ணையை யுள விறை பிறக யன்புரியும்

---

* இம்முப்பத்தைந்தாந் திருப்பதிகநடை, திருஞானசம்பந்த சுவாமிகளது "ம மடப்பிடியும்" என்றற்றொடக்கத்துத் திருப்பதிக நடையை யொத்திருத்தலின் பதிகத்திற் கிடப்பட்ட **யாழ்மூரி** என்னும் பெயரே இத்திருப்பதிக ஒலிக்கும் இ படுவதாயிற்று.

துச்சமி லாததவந் தனைக் கண்டவன் செய்யொரு
　　தொழி லினை நனி யுத வியபி ரானெனவே
மெச்சிநி தங்குறைவி லருள் வேட்டவன் மெய்யடி
　　தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. (௨)

எரிதனி லேட்டையிட்டன் றெரி யாமலு மேடற
　　லெதிர் செல வுமை மறை விபின மாக்கதவம்
இரிபற மூடிடவும் வள ராண்பனை பெண்பனை
　　யென வமை யவும் விட மறவு மொருபுத்தன்
பெரியவு டம்பிறவும் பழ வத்திபெண் ணாகவும்
　　பணி னவர் பர சிறை பிரிய மோடுதந்த
விரிசுட ரானவடி வுடை வேலவன் மெய்யடி
　　தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. (௩)

அக்கினி வத்திரத்தான் கையின் மாண்டச கோதர
　　ரெழு வர்க டருகென வடல்கொ ளம்பொன்றில்
அக்கண மேவமைந்து நம னுக்குவி டுத்தபின்
　　பவ ரொடு மற வியு மருகில் வந்துபிர
தக்கிண மாப்பரவு முயர் வுற்றவொர் வீரனின்
　　றலை வனோர் நிக ரறு சரவ ணப்பெருமாள்
மிக்கெழின் மேவியவிர் திருப் பங்கய மெய்யடி
　　தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. (௪)

ஊனுழை கன்மமுடை யுயிர்க் கூளியைக் கொள்ளைகொள்
　　வலி மலி மற லழி வுறவு தைத்தகழல்
வானவன் வேண்மகிமை தனைக் கோடிநூ றுண்டள
　　வறை தரி னுமுடிவு பெறுவ தின்றெனவோ
ரேனமி லம்பிகைமுன் சொன வேற்றம தற்குடை
　　யவ னெவ னவன் மயி லிவரு மீசனவன்
மீனுறழ் பொற்சதங்கை மிக வேங்கிடு மெய்யடி
　　தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. (௫)

---

௨. துச்சம் = அற்பம்; வடசொல்.

௩. "செலவுமை" என்னுந் தொடரில் ஐ = அழகு.

இத்திருப்பாட்டில் வருவிடயங்கள் திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரத்தி லுள்ளவாறு கூறப்பட்டனவாம். சரித்திரநிலை வேறுபடின் நூலாசிரியர் பொறுப் பொன்று மின்றென்க.

எண்டிசை யும்பெருமை நனி கொண்டவொர் தக்கனீ
ளெரி மக மதில் வசு விரவி யிந்துபருங்
குண்டைய ரன்றேழன் புனல் வேந்தனு யிர்ப்புநி
ருதி சத மக னில குசனி மூலையிறை
சண்டன ருந்தமனெண் கண ணுதிபல் பண்ணவர்
தர மற வடன் மற லதுவி ளைத்தமகா
மிண்டனு நானெனவே மிளிர் வேலவன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.

எண்ணறு சிட்டிபுரி விதி தன்னையுந் தண்டுமா
யிறை யையு நுதல் விழி யெரியி னுலெரித்தவ்
வெண்பலி யைப்பூசி முழு வென்பொடு வெண்டலை
மிலைந் தலைந் தெழூந் துழன் றிறுதிந டம்புரியும்
கண்ணொரு மூன்றுடைய கறைக் கண்டனு நானென
மிளிர் சர வண பவன் கனித மில்புகழை
விண்ணவ ருவியக்கத் துதித் தன்னவன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.

சீறதி சீற்றமுடைக் கிர வுஞ்சனென் போனெடுந்
திரி புர மென வெழ வவையு ளானைமுகன்
கூறரு மூன்றசுர ரெனத் தோன்றிய போதொரு
குறு நகை கொடு பொடி படவெ ரித்தவர்கள்
மாறுப டுந்தொழிலாற் செயு மாயமெ லாங்கெடும்
வகை பணி யுயி ரையு நொடியி லுண்டகுகா
வேறுப டாமலருள் புரி யென்றவன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.

மட்டில டங்காத வண்ட பிண்டச ராசர
வகை முழு வது மவ னுருவி ருந்தநிஜம்
தட்டவி லோசனத்திற் சத யூபனுக் கன்றருள்
புரிந் தவன் பெரும் பயந் தணிய ஞாங்கரெறிந்
திட்டகு கேசனெனுஞ் சிவ னண்ணலை யெண்ணிநின்
றர ஹர சிவ சிவ வெனவி ளம்பியவன்
விட்டக லாதவண மவன் றுய்யநன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.

---

௬. வசு = அக்கினி.

அருந்தமன் = விட்டுணு; விட்டுணு பெயர் கூறுமிடத்தே "அருந்தமனெ பது மாங்கவன் பெயரே" என்னும் பிங்கலந்தை.

தங்கிள ரண்டநிரை களைத் தன்பெருங் கர்ப்பமுட்
சிறு சிறு துக ளென நிறுவி யங்ஙனமே
தாங்கியு மப்பொருளி லுயிர் போலவி ராவியே
தகு குணங் குணி யெனச் சமைய வேவிரித்தும்
ஓங்கிடு மக்குணமொன் றிலி யென்னவு முள்ளதே
வொரு குக னென வருணகிரி யுன்னிமகா
வீங்கல ணைந்தபடி யவன் றய்யநன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. (௧௦)

மன்மதஞு ஆவணிமீ உ௭ உ புதவாரம்.

## ௩௬. மெய்ப்போதகம்.

னகரவெதுகைக்கலிவிருத்தம்.

திருவிராகம். பண் — வியாழக்குறிஞ்சி.

ஆனையி னதளரி யதள்வரி யதளொ லும்
பேன வெயிறுகம டமயிலை யினயனம்
மானணி பசுபதி மகன்மயில் வருபெரு
மானடி களைநினை மலைவிலை மனனே. (௧)

வானவ ரதநிலை யரசல மனுடரும்
ஈன வுயிருமவ னிணையடி யுறவரு
டானரு ளுயர்சர வணபவ னெனுமொரு
கோனடி களைநினை குறைவிலை மனனே. (௨)

ஊனமி லறிவுள ருளநடு வழிபடு
மீனுறழ் ஞெகிழிகண் மிலைமல ரிணையடி
யானெழில் வயவரி யடிமுனி பணிகுகன்
ஒனட வடிநினை யுலைவிலை மனனே. (௩)

வானவர் தொழுதிடு மகிமையை யுளபெரு
மானிவ னெனநனி மருவமு னெணியவொர்
கானவர் மகளது களிறுகர் வுறவெதிர்
போனவ னடிநினை புகரிலை மனனே. (௪)

---

௧. ஏனம்=பாவம்; வடசொல்.

௩. வயவரி யடிமுனி=புலிக்கால் முனிவர்.

ஒலிடு நடவடி — ஒல் + நட + அடி = ஒனடவடி எனப் பொருந்திற்று. ஒலி டல்=ஒலித்தல்.

மானமி லரனடி மலர்களை யெணிவெளி
யானவ ரனுருழி யபயமி டுசமயம்
ஏனென வருமரு ளெழின்மழ மயிலிவர்
கோனடி நினையொரு குறையிலை மனனே. (௫)

ஊனுக ருணர்வில ருறவற வொழியுயர்
தேனுக ருணர்வுளர் திருமலி யுளமெனும்
வானுழி யவிருண் மணியெனு மயிலிறை
ஆனகை¹யடிநினை யலவிலை மனனே. (௬)

கூனில வனநுதன் மடவரல் குலமணி
ஏனமி லிறையவ ரிடமுறை யுமையவள்
சூனுவெ னுமமுத சுகமுத வொருகுரு
கானடி களைநினை கறையிலை மனனே. (௭)

ஆனுகொல் கனுடமொ ரளவற வுளவனும்
ஞானநெ டியவயி னணுகுகை யிறையடி
யேனுமு னபயமெ னினமன மடிமைகொள்
வானவ னடிநினை மமரிலை மனனே. (௮)

நானென தெனுமக நலிவுற வனுதினம்
மேனிலை கருதியுய் வியனறி வுடையருள்
ஞானிக ளகநடு நடமிடு மொருபக
வானவ னடிநினை வழுவிலை மனனே. (௯)

மோனர்கள் புகழருண் மொழியரு ணகிரியன்
வானவ ரினுமதி யமுத மதியையுற
ஏனமி லருளரு ளினகுக னெனுமபி
தான னடிகணினை தளையிலை மனனே. (௧௦)

மன்மதளூ ஆவணிமீ உ௮உ குருவாரம்.

---

௬. "ஆனகை" என்பதை ஆல்+நகையெனப்பிரிக்க. ஒலிக்கும் ஆபரணம் எனும் பொருள் பயக்கும். "ஆல லாடுத லொலிப்பேர்" என்பது லகரவேதுகை.

௭. கானடி எனுந்தொடரிற் "கான்" = நல்மணம்.

௮. ஆனு "ஆனு" என எதுகை நோக்கிய விகாரமாம். "அரம்பை...ஆனுவே யிரத நன்மை" என **ரகரவேதுகை** நவிறலின் ஆனு – இனிமை, நன்மையெனும் ஒண்பொருள் பயத்தலோர்க. யாணரெனுங் கிளவி ஆணரெனவுமாம். இதன் விகாரமே "ஆனு" என வாயதென்னலாம்.

# ௩௭. திருவாலவாய்.

---

பண் — கௌசிகம்.

பொன்னைப் பூமியைப் புன்புல வாக்கையை
பின்னை நாடி யுழன்றுள்ள வீணனேன்
தன்னை யாண்டவொர் தன்மையென் னாலவாய்
அன்னை யேயரு ளேகுகப் பிரமமே. (௧)

கட்டு மாடை கழற்றினை கந்தனை
மொட்டை யிட்டனை மோக மறுத்தனை
எட்டி நீமறைந் திட்டதென் னாலவாய்ச்
செட்டி யேயருள் செய்குகப் பிரமமே. (௨)

இஞ்ஞான்று ஜடாமஸ்தகராயுள்ள அடிகள், சில ஆண்டுகட்கு முன்னர் முண்டக மஸ்தகராயு மிருந்தாரென்பதை இவ்விரண்டாந் திருப்பாட்டிற் "கந்தனை மொட்டை யிட்டனை" என்றருளிச் செய்தமை காட்டுகின்றதன்றே. கம் = தலை.

புண்ணி யந்தெரி யாவெறும் பொக்கனேன்
எண்ண மோர்ந்தரு ளெந்தையிங் கேயுனை
நண்ணி னேன்சுக நல்கருட் காலவாய்
அண்ண லேயெனை யாள்குகப் பிரமமே. (௩)

ஆக மோடென தாவியு முன்றனக்
கேகொ டுத்துய்ய வெண்ணிய வென்னகத்
தேகு ளிர்ந்தரு ளீயெழி லாலவாய்
ஏக னேயெனை யாள்குகப் பிரமமே. (௪)

எட்ட நில்லென நீயென்னை யேதள்ளச்
சிட்ட னானபின் ஞாயஞ் செலுங்கொலோ
நட்ட மின்றரு ணல்குதி யாலவாய்
இட்ட னேயெனை யாள்குகப் பிரமமே. (௫)

பருதி முன்னிரு ணிற்குங்கொல் பக்கமாம்
அருளின் முன்மல நிற்குங்கொ லவ்வருட்
பொருளைத் தந்தொரு பூர்த்திசெய் யாலவாய்ப்
பெருமை யேயெனை யாள்குகப் பிரமமே. (௬)

நித்த லுங்கழ னெஞ்சக மாக்கியால்
எத்த லத்துமு னேணருள் காத்திடச்

சித்தம் வைத்தருள் சீருய ராலவாய்
அத்த னேயெனை யாள்குகப் பிரமமே. (எ)

பாச மும்பசு வுந்திறம் பாவொளி
வீசு நின்னரு ளின்றிவி ளங்குமோ
ஆசை யாயின னேயதற் காலவாய்
ஈச னேயெனை யாள்குகப் பிரமமே. (அ)

என்ன கப்புல மென்று மிருக்குநீ
என்னை யின்னுமி ரண்டறக் கோடலின்
றன்னி யஞ்செய னீதிகொ லாலவாய்
மன்னெ னத்திகழ் மாகுகப் பிரமமே. (௯)

குற்றம் யாவும்பொ றுத்தருள் கூர்தியால்
அற்ற மற்றலங் காரம திர்த்துளோன்
முற்றும் வாழ்த்திய மூர்த்திநல் லாலவாய்
உற்ற வொப்பில ருட்குகப் பிரமமே. (௧0)

மன்மதஞூ புரட்டாதிமீ ௨௨ மங்களவாரம்.

---

## ௩௮. திருக்கன்னிநாடு.

---

கலிநிலைத்துறை.

பண் – இந்தளம்.

சீருளா ரேத்துஞ் சீருடை நஞ்சிவ பெருமான்
கூருலாம் வேற்கை யோடன வரதமுங் குறைவில்
பாரெலா மேத்துங் கன்னிநா டுறைதரு பாங்கை
ஓரெலா வார்ப்பு மொருங்கியுய் வாயென துளமே. (௧)

வாக்குவன் மனதான் மதிக்கரு நஞ்சிவ பெருமான்
நோக்கொரு பனிரண் டிலகொரு றூனமி லுருவாய்ப்
பாக்குகு பொழிலார் கன்னிநா டுறைதரு பாங்கை
ஊக்கமொ டுணரின் வாழ்குவை நாளுமெ னுளமே. (௨)

ஞானிகள் விழையொண் பொருளெனு நஞ்சிவ பெருமான்
மேனிலை விழைவோர்க் கருளவெ ளுமையின் மீது

---

௧0. அற்றம் = மறைவு, சோர்வு; சே – திவாகரங் காண்க.

பானிற வனம்வாழ் கன்னிநா டுறைதரு பாங்கை
நீநினை வாயே னிதநனி யுய்குவை நெஞ்சே. (௩)

நந்தலின் மறைகள் பழிச்சிடு நஞ்சிவ பெருமான்
செந்திரு முகமா றவிரரு ளுருவொடு தீமைப்
பந்தரைப் புரப்பான் கன்னிநா டுறைதரு பாங்கைச்
சிந்தைசெய் வாயேன் மனமினி துய்வது திடமே. (௪)

மாதவ னளித்த மதிப்பொரு ணஞ்சிவ பெருமான்
ஏதமி லடியர்க் கருளவெ ளுமுரு கெனமா
பாதகந் தீர்த்த கன்னிநா டுறைதரு பாங்கை
நீதெரி வாயேன் மருடபுத் துய்குவை நெஞ்சே. (௫)

எக்குணங் குறியு மிலாமுத னஞ்சிவ பெருமான்
பக்குவர்க் கருளும் பரிவொடு தேவிய ருபய
பக்கமும் விளங்கக் கன்னிநா டுறைதரு பாங்கைச்
சிக்குடை நெஞ்சே கருதிடிற் சார்வது சிவமே. (௬)

பூவினில் வெறிபோற் பொருந்திய நஞ்சிவ பெருமான்
கோவிலி னிலவோர் வடிவொடு குகப்பெயர் பூண்டு
பாவிகள் பழிதீர் கன்னிநா டுறைதரு பாங்கைத்
தாவிலை நெஞ்சே கருதிடி னிலைநமன் றமரே. (௭)

எங்கணு நிறைவா யிருந்துள நஞ்சிவ பெருமான்
சங்கரன் மகவாய்ச் சரவண பவப்பெயர் சார்ந்து
பங்கமி னதிபாய் கன்னிநா டுறைதரு பாங்கை
இங்குழ னெஞ்சே நினைவுறின் மறலுனக் கிலையே. (௮)

அழிவுதிப் பணவா வறிவெனு நஞ்சிவ பெருமான்
இழிமனச் சீவர்க் கருள்வண மயின்மிசை யிந்த்ரன்
பழிதனை நூறுங் கன்னிநா டுறைதரு பாங்கை
எழிலொடு நெஞ்சே நினைவுறின் வருபிறப் பிறுமே. (௯)

தத்துவா தீதத் தனிப்பொரு ணஞ்சிவ பெருமான்
வித்தைசால் புகழ்பா டியமுனி பாத்தொடை விரும்பிப்
பத்தர்பா டிடவே கன்னிநா டுறைதரு பாங்கைச்
சித்தமே நீயுள் கிடிலடை வதுவிழுச் சிவமே. (௧௦)

மன்மதஞு புரட்டாதிமீ எஉ ஆதித்தவாரம்.

---

௧. இந்த்ரன் — வடநூன்முடிபு.

# ௩௯. திருக்கொடுமளூர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் — சாதாரி.

சிந்துசுல விந்தநிலை தன்னிலும தன்புடையர்
சேவடி புகழ்ந்துதொழவோ
நந்திரு விரும்புபரி பக்குவர்கண் மும்மலமு
நாறியருள் செய்யவெனவோ
அந்தமடி யற்றபர மங்கள வகண்டசிவ
மாகவுள நீர்கழனிசூழ்
சுந்தர மலிந்துயர் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே.

சத்திய மதர்ப்பதர் நடத்துகிரி யைக்குரிய
சத்தியென நால்கணுவலும்
புத்தமுத வாய்மையுடை வள்ளிதொழி லெண்ணிநினை
புந்தியர்க ளுக்கருளநீர்
இத்தரைய ரென்கொழுந ரென்றறிய நின்றிடு
மெனச்சொலுரை கொண்டபடியோ
சுத்தமுறு பத்தருய் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே.

வானவரு நாடரிய ஞானமய மானபெரு
வானென விருக்குமொருநீர்
ஏனலி லிருந்தமட மானினி நலங்கருதி
யேசறு புளிந்தவடிவம்
ஆனவ னறும்புரிவி ஞனிஊனவர் நோய்களை
யறுப்பவ னிமாசலசுதை
சூனுவென வோதவொ திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே.

பூர்த்திபுக லுங்கருணை யங்கட லெனத்தவர்
புகன்றிட விருக்குமொருநீர்
பார்த்திப னருந்தவ நிரம்பிட வுரப்புடைய
பன்றிதொடர் வுற்றபெரிய

மூர்த்திமக னுமிவர் நினைப்பவர்கள் வாழ்வரென
மூவுலகு நன்கறியவோ
தூர்த்தர்க ளிலாவொரு திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. (௪)

வானிலவு பானுவென வேயுயிர்க ளுள்ளிட
மதிக்குமுத லாகுமுணர்வா
யேநிலவு கின்றவொரு நீர்தமிய னுக்குநிக
ரேழைகள் புரக்கவெனவோ
மீனிலவு கண்ணிமலை மாமக டனக்கினிய
மெய்க்குழவி யாகிவிளைவுச்
சூனிய மிலாதுயர் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. (௫)

இப்புடவி யிப்பிறவி வேண்டுகில மென்றுமுள
வீசவுனை யேயடைகுவோம்
எப்படியு மென்றுபணி யுத்தம ரகத்திடை
யெழுந்துலக கானமுலவும்
ஒப்பறு மகந்தைமுத லாமறவர் வெல்லவென
வோதனிமை வாளுழுவர்போல்
துப்புடைய கார்மலி திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. (௬)

மாலயனும் வந்தனைசெ யற்புத விலாசபர
மாகவொளிர் கின்றவொருநீர்
மூலமல வாவிகளி னீலமல வாதனை
முருக்கிநினை வுந்திருடுமோர்
சாலமுல கோரவென வோநிமல மானசிவ
சண்முக மறைத்துநெடிய
தூலவுடை நீழலொர் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. (௭)

விற்றிற மியங்கிரவி யுஞ்சசியு மங்கியும்
விளக்குமறி வித்திடவொணா
முற்றறி வெனுமறை முழக்கவுள நீருயிர்கண்
மொய்வினை முருக்கியருள்வான்
உற்றவுரு வம்பல வுளும்மிதுவு மொன்றென
வுணர்த்தவென வோநிலவளந்
துற்றுமெழின் மிக்குறு திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. (௮)

ஓருருவு மீருருவு மூவுருவும் வேறுருவு
மோய்வில்பல தேவருருவும்
பாருருவு நீருருவு மாரல்வளி வானுமறை
பன்னிட விருக்குமெவையும்
பேருருவில் வைத்துளவொர் நீருல குயிர்த்திரள்
பிடிக்கவென வோவுடைமரத்
தூரடியி லேருயர் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே.

சொன்னய மிருந்தகலை வேண்டுகில மேகலைகொள்
சுந்தரிக ளாசையுலகம்
பொன்னழி புலைப்புணர்வு வேண்டுகில மெய்யடி
பொருந்தவரு ளென்பவர்களின்
நன்னினை வறிந்தருள வோபுனித சோணகிரி
நாதர்குரு வாயவொருநீர்
தொன்னில வளங்கிளர் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே.

மன்மதஞு புரட்டாதிமீ கசுஉ மங்களவாரம்.

---

# சு0. திருப்போற்றி

---

திருத்தாண்டகம்.

ஆவனிதனி லன்னைகர்ப்ப மமைந்த வன்றே
யருநலமுந் தீமையுமுண் டென்று மான்மா
நவமாகச் செயப்பட்ட தாலே முன்போர்
ஞான்றுமது விருந்ததிலை யென்றுஞ் சீவன்
புவியின்மிசை மரித்தபினு மிருக்கு மென்றும்
பூருவமு மியையுமின்றிப் புலம்பு மார்க்கம்
அவமெனவே யென்னறிவி லுணர்த்தி யந்த
வறிவாக நிற்குமரு ளரசே போற்றி.

---

க. தூர்=வேர்; சூ—நிகண்டு காண்க. வேர் அடி மாத்தைப் புலப்படுத்து கின்றது.

அதிர்த்தபடி நலந்தீதோ டமைந்த வான்மா
வயர்பாவ வினைக்குநர கெய்து மென்றும்
விதித்தவனி யாயவழி தனிலே செல்லும்
வியனுணர்வி லார்பின்னுந் தாதை யன்னை
மதத்துவலி கொடுசெய்த வினைக்கே பிள்ளை
மடமாக வந்ததென்று வழுத்தும் வார்த்தை
முதற்சிருட்டி யோடுலகை முடிக்கு மென்றே
முழுஞாய மெற்குணர்த்து முதலே போற்றி. (உ)

தாதையன்னை யிழைத்திட்ட தீமைக் காகச்
சந்ததிதான் கெட்டதெனிற் றாதை தாய்க்கும்
ஓதலினச் சந்ததிக்கு முடம்பு நெஞ்ச
மொன்றாக விருக்கினவர் சுகதுக் கங்கள்
பேதமின்றித் தோன்றிடும்வே றெனிலோ விந்தப்
பேச்சிறையு மொவ்வாதென் றெனதுள் ளூகப்
போதமதி லுணர்த்தியநல் லருளே நீதிப்
பூரணமே யானந்தப் பொருளே போற்றி. (௩)

மக்களையே யன்னைதந்தை வஞ்சித் தாலு
மகத்தான வவரையவர் வஞ்சித் தாலும்
தக்கபடி யரையருமே தண்டிப் பார்க
டகையுடைய புத்தேளு மதுபோற் செய்யும்
அக்கமுள ரறநூலு மிதுபோ லோது
மாக்கைநடு வுள்ளவுயி ரறிநீர் மைத்தாற்
பொக்கமுறு சடமன்று சித்தே யென்றென்
புந்தியினன் னூலுணர்வைத் தந்தோய் போற்றி. (௪)

நித்தியமா யுளவான்மா வைச்ச டம்போ
னிருமித்த தாய்நிகழ்த்து மனித மார்க்கம்
செத்தவரை யுலகமுடி வினில்வி சாரஞ்
செய்வதாய்ப் பிதற்றுவது பிசகே யென்ன

---

உ. முதற்சிருஷ்டி காலத்தில் மனுவாய்ப் பிறந்த தாய்தந்தை செய்த தவற்றிற்குப் பிள்ளை கெட்டதாகப் பிறந்ததென்னின், அஃது அவர்கட்கு அபராதப்பொருளே யாக வேண்டும். ஆயின், அவரளவில் அஃதிருந்து தொலைந்துபோக வேண்டுமேயன்றி அது செய்யு நன்று தீதுக்கேற்ப, பின்பு அதற்கும் பிள்ளை பிறந்ததெனப் பேச இட மில்லையெனவாம். அதனால் முதற்சிருஷ்டியிலுண்டான தாய் தந்தையரோடே உலகம் முடியவேண்டியதாய் அவ்வசன முடிக்கும், அது பொருந்தாதென்பது இங்கே பொருள்.

இத்தரையி லிஞ்ஞான்று செய்த தீங்கிற்
　　கிசையநடு வரசர்புரி தண்டத் தோடு
கத்தனுயர் தண்டமெனும் பிணியுள் வாதை
　　காண்பதுமுண் டெனவுணர்த்துங் கருத்தே போற்றி.

என்றுமுள்ள கடவுளுடை நீதி யென்று
　　மியங்குவதல் லாதிடையி லிறுவ தில்லை
தொன்றுவினைப் பிராரத்த மனுப விக்கத்
　　தோன்றுகன்ம வுயிர்புதிது மிழைத்துத் தூலம்
பொன்றியதன் பின்கடவு ணீதிக் குள்ளாய்ப்
　　புதிதிலெஞ்சி யுளகரும மனுப வித்துப்
பின்றாலஞ் சஞ்சிதத்தா லெடுக்கு மென்றே
　　பேசுநிச நூலுணர்வெற் களித்தோய் போற்றி.

சொற்றவுரை தனைநம்பிச் சாவி ரேனீர்
　　சுவர்க்கநிலை யடைகுவீ ரென்னு மார்க்கம்
உற்றவரு மதிசயிக்க வருளிற் கூடி
　　யுள்ளுக்குண் மறைந்திருக்கு முயிரைக் கண்டு
செற்றமிலா வாதார விறையைக் கண்டு
　　செனிப்புடனே யிறப்பறுத்துத் திகழு மார்க்கம்
குற்றமிலா நெறியெனவெற் குணர்த்து ஞானக்
　　குருந்தேயென் னுயிர்க்குயிராங் குகனே போற்றி.

மோக்கமெனல் வெறுஞ்சூன்ய மதனை வேண்டி
　　முயலுவதி லென்பயனிவ் வுடம்போ டென்றும்
போக்கியத்திற் காம்புவனந் தனிலே யுய்தல்
　　புரைதணந்த வின்பமெனப் புகல்வோர் போக்குத்
தேக்கெறியுங் கலவியின்ப மறியாக் கன்னி
　　தீழ்ப்பாக் வதைப்பேசு தரம்போ லாமென்
றூக்கமலி யறிவாள ருரைக்கு ஞாய
　　மதையெனக்கு முணர்த்தியவென் னரனே போற்றி.

கருவிசில் வடங்கியநித் திரையின் கண்ணே
　　காணுமொரு சுகம்போலக் கரணு தீதம்
மருவுசிவ யோகதிலுந் திரீசை யோக
　　மல்குமொரு சுகம்போலச் சீவ போதம்
அருவினுயர் சிவ்போதத் தடங்கி நிற்கு
　　மைக்கியத்து மெனவெணலா மவைக ளற்பம்
பொருவில்சிவ யோகவின்பு மோக்க வின்பும்
　　புகலரிதா மென்றுணர விதித்தோய் போற்றி.

எரிந்தபுரி யைப்போல வுடம்பி ருந்து
மில்லாத் வோங்கார சிவன் முத்தன்
பரிந்தவனு பவமதுதா னறையி னுள்ளே
பயில்கூத்தை யொக்குமந்த வுடம்பு நீங்கி
அரந்தையடு சிவத்தையடை விதேக முத்த
னனுபவமம் பலக்கூத்தை யொக்கு மென்றுள்
இருந்தறிவித் திட்டவரு ளறிவே சந்த
மியம்பியநல் லருணகிரி யிறையே போற்றி. (௪௦)

மன்மதஞு புரட்டாதிமீ உசஉ புதவாரம்.

---

ஆகப்பதிகம் நாற்பதினும் போந்த திருப்பாட்டு — ௪௦௦
காப்பும் தௌத்தியமும் உக
ஆகத்திருப்பாட்டு ௪உக

---

# சக. பிரப்பன்வலசை.

---

பண் — சாதாரி.

பூமக ளியங்குலகி னல்லதமிழ் நாவலர் புலம்பு கவிதைத்
தாமமணி நங்கடவு ளென்னுமுரு கையரடி தன்னை யெணியே
நாமுன மிருந்தவள மேகிளர் நயப்புள பிரப்பன் வலசை
ஆமிதனை நண்ணுபவ ரன்புடைய ராவர்பழி யஞ்சு மனமே. (க)

தொண்டரக நின்றுநிமிர் கின்றவரு ளின்பரிவு சொந்த முறவென்
றண்டரலர் கொண்டுபுசி தம்புரியு மாதிமுரு கைய ரருளைக்
கொண்டுசில வைகல்வதி தந்தவிட மென்றுயர்வு கூறு மடர்பூ
வண்டறை பிரப்பன்வல சைப்பதி யிதாகுமெனுண் மல்கு மனமே. (உ)

மெய்யடிக ணெஞ்சக மிருந்துவினை யாடியருண் மெய்ய ரெனுநம்
ஐயடிக ளாமுருக வேளடி நினைந்துதனி யாகி யளிநீர்
பெய்யிருகண் மூடியுளி ருந்துணர்வு கொண்டவொர் பிரப்பன் வலசைச்
செய்யபதி யீதறிதி மெய்யறிவை நாடிடு திறத்த மனமே. (ந)

சீதமதி யைச்சடையில் வைத்துமலர் வாளியுட றிய விழிசெய்
ஆதியிறை யாயகுரு சாமியெனு நம்பரனை யன்று கருதி

---

௪௦. விதேகமுத்தத்தன்மை இற்றெனவுணர்த்து விவரம், சேக்கர்வேளிருடாப்பில் உஅ, உகூ — ஆஞ் செய்யுள்களி லறியலாம்.

ஓதுமொழி விட்டக மொடுங்குநிலை கண்டவிட மென்று குயிலுங்
கோதறு பிரப்பன்வல சைப்பதி யிதாமுறுதி கொண்ட மனதே.

தஞ்சமென நிற்பவர்க ளஞ்சன்மி னெனச்சொலுரை தந்த ருள்புரி
நஞ்சிவ பிரானெனு மயூரமுரு கையரடி நண்ணி யுழலும்
நெஞ்சினை யொடுக்கியிர வும்பகலு நின்றவன முள்ள வளமே
விஞ்சிய பிரப்பன்வல சைப்பதி யிதாமடமை விட்ட மனதே.

அங்குலிக மம்பவள மென்பன வணங்கதர முங்க ருமைசால்
கங்குலினும் விஞ்சுகுழ லுந்திகழ்தெய் வானைபொரு கான வர்சுதை
தங்கவொரு கொண்கனெனு நங்கடவு ணன்னினைவு தந்த தகைமை
இங்கென விளம்பிடு பிரப்பன்வல சைக்களரி யீதென் மனதே.

உள்ளபடி யுன்னுபவ ருள்ளபடி யுய்யவென வுன்னு பெரிய
வள்ளன்முரு கையர்நடு நிற்குநிலை யைச்சொலி மறைந்த விடமும்
வெள்ளைகிளர் புட்டியி லெழுப்புகடல் வெள்ளலைகள் வீசு வளமும்
உள்ளவொர் பிரப்பன்வல சைப்பதி யிதேயுலகை யுந்து மனதே.

மித்தைபடு வாழ்வினை விடுத்துநிஜ வாழ்வினில் விளங்க நமையே
சுத்தமுறு கோவண முடன்றிரிய விட்டவொர் சுரேச ரடிசேர்
பத்தருயர் பூசனை புரிந்துவதி பண்புறு பிரப்பன் வலசை
இத்தலம தாமறிதி வைத்தநிலை நிற்குமென தேசின் மனதே.

துன்றுமறு பொன்மவுலி யெண்டிசைபு மின்னவதி சுந்த ரமலி
பொன்றொடையல் கிம்புரி வயங்குமெழின் மொய்ம்புடைய பூரண ரரு
ஒன்றைநனி யுன்னியுளொ டுங்குணர்வு கண்டவொர் பிரப்பன் வலசை
சென்றவ ரிருந்தவரு மன்புடைய ராவரறி தெய்வ மனதே.

நாடரிய தெய்வமென வேமறைசொ லாறுமுக னஞ்சி வனெனுப்
பாடல்பல பாடியவொர் சோணகிரி கண்டவிரு பத்ம வடியைக்
கூடவென நாமினிது கொண்டநடை கட்குதவி செய்த சுகுர்தர்
பீடணவி வாழிது பிரப்பன்வல சைப்பதி பிடித்த மனதே.

மன்மத௵ புரட்டாசி௴ ௨௪௳ புதவாரம்.

---

சு. குலிகம் = சாதிலிங்கம்.

களரி = தொழில் செய்யுமிடம், காடு; ளகரவேதுகை நோக்குக.

# ௪௨. பரமப்பிரகாசம்.

---

பண் — பழம்பஞ்சுரம். பண் — கொல்லி.

துங்கை சூடிறை புதல்வ ரோகன கந்த மாதன வீசரோ
அங்க மாறுடை யைய ரோதுடிக் கைய ரோவெறி சூலமே
செங்கை மீதணி தேவ ரோசிவை செல்வ ரோசுர குஞ்சரி
பங்க ரோவர துங்க ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே. (௧)

வேரி கொண்ட கடம்ப ரோகுற மின்னி டஞ்செ விடம்பரோ
வாரி யுண்டவர் குரவ ரோபவ னிறைவ ரோவறு மங்கைமார்
பீரை யுண்ட புனித ரோவடி பேணு மன்பர்க ளன்பரோ
பார ருந்தவ ரரைய ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே. (௨)

பால மீதொளிர் கண்ண ரோவுயர் பன்னி ரண்டுகை மன்னரோ
கோல நீறணி சீல ரோதுடி கொட்டி யாடிடு கூத்தரோ
நூல ரோவடி வேல ரோசுரர் நோவ றுத்தவ ரோசிலம்
பால வேதிரி யடிய ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே. (௩)

பூவ ருங்கிய மெய்ய ரோமணி பூண்ட கிம்புரி மொய்ம்பரோ
சேவ ருங்கிய கொடிய ரோவறு முடிய ரோவுயர் செல்வராம்
தேவர் தாங்கிய வடிய ரோவதி தேசி லங்கிடு வெண்மலைக்
கோவி ருங்கிய குமர ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே. (௪)

பூநி ரம்பிய வழக ரோபடர் போத னார்தொழு குழகரோ
மாநி ரம்பிய கருட கேதனன் மருக ரோநித முருகரோ
தூநி ரம்பிய பழநி வெற்புறை சுமுக ரோவெழி லார்தமிழ்ப்
பாநி ரம்பிய புலவ ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே. (௫)

அண்டர் தம்பகை நாச ரோவரு ணேச ரோமக ரப்பெயர்க்
குண்ட லஞ்செறி காத ரோகுக வென்று சொல்பவர் நாதரோ
விண்ட லம்புகழ் சேய ரோமுது வேத மந்திர வாயரோ
பண்ட ருஞ்சிகி யிறைவ ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே. (௬)

உலகெ லாந்தரு நாத ரோதிக ழுலகெ லாம்பணி பாதரோ
உலகெ லாந்தொழு மாத ரோநிலை யுலகெ லாஞ்சொலும் வேதரோ
உலகெ லாம்பட ரார்வ ரோசெறி யுலகெ லாங்கமழ் மார்பரோ
உலகெ லாங்கவ ரூழ ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே. (௭)

---

௭. ஆதன் (சூத ஃ) = போதலுடையன். நினைத்துழிச் செல்வோனாகலின் "ஆதரோ" என விளிக்கொண்டதும் சால்பிற்றேயாம்.

யோகஞ் செய்குந ரப்ப ரோநிறை யோகி லேவரு ளுப்பரோ
சோகம் பாவனை மூல ரோவளர் சோகம் பாவனை யாலருட்
போகஞ் சேர்கெனு நீத ரோபுரி பூர ணச்சிவ போதரோ
பாகங் கூர்பவர் தலைவ ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே.

பிறப்பி லாதவொர் பெரிய ரோபெரி யார்ப ழிச்சிட வுரியரோ
இறப்பி லாதவொ ரிறைவ ரோவது விதுவெ னச்சொல விசையுமோர்
குறிப்பி லாதவொர் நிலைய ரோவறு குணப ராபர வருளரோ
பறப்பி லாதவொர் முதுவ ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே.

ஏசி லாத சுரேச ரோசக தீச ரோபர மேசரோ
காசி லாவரு ளாள ரோவுழல் கான டாத்தொரு தேரரோ
ஆசி லாவரு ளுச லப்பெய ரானி னைந்த குகேசரோ
பாச மாமல நாச ரோநமை யடிமை கொண்டவொர் பரமரே.

மன்மதனூ புரட்டாதிமீ உ௮௨ ஆதித்தவாரம்.

## ௪௫. வாதவனை நீக்கமன்றாட்டு.

பண் — தக்கராகம்.

பூவா ரோர்முடி மலரய னரிமால்
புதுமா மலர்கொண் டருச்சித்தே
தேவா காவென விறைஞ்சிரு சரணு
சிவனே செவ்வேட் பெயர்நாதா
தாவா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தேனன்
றலைவா காவென் றுருவித்தாலே
வாவா வென்றெடுத் தணைத்தருள் புரியா
மனமேனோ நீவந் தருளாயே.

பேழ்வாய்ப் பூதர்கள் பலபல பறைகள்
பிசகா மேகொட் டிடநடமே
காழ்வீ ரார்கழ லொலிதர வுழல்வோர்
கமழ்தோ ளேறு மலர்ப்பாதா
தாழ்வா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தேன்
றலைவா காவென் றுருவித்தாலே
வாழ்வோய் வாவென வெடுத்தருள் புரியா
மனமேனோ நீவந் தருளாயே.

தூயோர் சொல்லினு நினைவினு முளவோர்
சுசிமா ஞானச் சுடர்மணியே
காயா புள்ளதைக் கனிந்திட விழைப்போய்
கருதா தார்க்கு மருள்குகனே
தாயாம் பிளூறு கவிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
மாயா மேயெடுத் தணைத்தருள் புரியா
மனனோ நீவந் தருளாயே. (ந)

பணியா ரஞ்செறி களச்சசி மகிழ்ச்சி
படவே கூடும் புருகூதன்
திணியார் கேகய மெனவரும் பொழுது
திருவோ டேறு மொருவீரா
தணியா நோவெனுங் கவிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
அணியோ டாதரித் தணைத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே. (ச)

பகவா னீயெனப் பனுவல்கள் பகர்மா
பரமா விளம்பூ ரணவேளே
சுகவா னுயவி ரொருபர சிவனே
துவர்சால் கோழிக் கொடியானே
சகவாழ் வாகிய கவிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
அகனே யோடிவந் தணைத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே. (ரு)

அருளா முத்திரை தனைப்பரங் கிரிப்பா
லறுபேர்க் காயன் றருளியமாக்
குருவே சத்திய சரவணப் பொருளே
குகனே தேவர்க் கரியானே
சருமேய் பாடடைக் கவிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
அருகே யோடிவந் தணைத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே. (கு)

---

கு. சரு = சோறு; நிகண்டுகள் காண்க.

நீங்கா வன்பர்கள் சததமு நினைமா
　　நிமலா வேலா வருளாளா
ஓங்கா ரப்பொரு ளெனமறை நவிலு
　　மூதியா மரியா முருகோனே
தாங்கா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
　　றலைவா காவென் றெலித்தாலே
ஆங்கோ டோடிவந் தணைத்தருள் புரியா
　　தவனோ நீவந் தருளாயே. (எ)

புலனோ ரைந்தையு மொடுக்குநுண் ணுணர்வோர்
　　புகழ்மா தேவா புலவாமா
வலனே யென்னிரு தயமலர்க் குகனே
　　மலைமா தேந்து மிளங்கோவே
சலமா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
　　றலைவா காவென் றெலித்தாலே
நிலமீ தாதரித் தணைத்தருள் புரியா
　　தவனோ நீவந் தருளாயே. (அ)

செப்பேர் மாதனக் கலைமக டுதிசெய்
　　திருவே தேஜோ மயமூர்த்தி
எப்போ தும்பெருந் தகையுடை யிளையோ
　　யெளியே னுடு மிறையோனே
தப்பா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
　　றலைவா காவென் றெலித்தாலே
அப்பா வாவென வெடுத்தருள் புரியா
　　தவனோ நீவந் தருளாயே. (கூ)

குமரா நீடொளி யருணையின் பெயரோன்
　　குருவே கோவே கூர்த்தவயில்
அமலா பாதக மடுசிவ மணியே
　　யடியேன் பாவிற் குரியோனே
தமமா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
　　றலைவா காவென் றெலித்தாலே
எமனீ வாவென வெடுத்தருள் புரியா
　　தவனோ நீவந் தருளாயே. (க0)

மன்மதஹு புரட்டாதிமீ உகூஉ சோமவாரம்.

---

# சச. துயாறுக்குமார்க்கவிளக்கம்.

---

பண் — நட்டராகம்.

மணிம தாணி மார்பினர் மாசில் பாசுப் படையினர்
திணிம யூர வாகனர் சீத மேய நீபவி
அணிவி சாகர் சேவடி யடைவ தேமெய் வீடெனுப்
பணிவி வேகர் தூவடி பரவச் சூர்கள் பாறுமே. (க)

நாத கீதப் பிரியர்மெய்ஞ் ஞான யோகத் திருவினர்
பூத நாதர் பொருவிலாப் பூதி திமிரு மேனியர்
வேத நீதர் வேய்ங்குழ லூது வாயர் வேலவர்
பாத நாடு வோரடி பரவச் சூர்கள் பாறுமே. (உ)

எண்ணு வார்க ணெஞ்சுணர்ந் தருளு மீடி லிருதய
அண்ண லேயென் றேத்துநர்க் கைய ராகு முருகவேள்
கண்ணி னுட்ட நிமிரவே கருதி ஞான யோகமே
பண்ணு வோர்கள் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. (ந)

ஈச னேசு ரேசனே யெனுநர்க் கின்பு பொழியவே
மூசு கருணை மேகமா முதல னாதி முருகவேள்
தாச ராயிவ் வுலகிலே சார்பி லாது திரிதரு
பாச நாசர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. (ச)

சீல யோகர் செல்வமாஞ் செல்வம் யாவு நல்கருட்
கோல மேநன் மேனியாக் கொண்டு லாவு குமரவேள்
காலை நம்பி விடயவெங் கனலி யாற்றின் மேன்மயிர்ப்
பால ஞான நிற்குநர் பரவச் சூர்கள் பாறுமே. (ரு)

தீங்கு ழூத சேடுடைச் செந்தி னாத ரருள்கொடு
வீங்க லின்றி வீங்கிடும் விமல யோக நிலையிலே
ஓங்கு சின்மூத் திரையினு லொன்றி ரண்டெ னாதகல்
பாங்கி னோர்தம் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. (சு)

அந்த மாதி நடுவிலா வமல ஞான மயசிவா
நந்த சரவ ணபவவே ணும மந்த்ர மோதியே
கந்த மாதி யைந்தையுங் கடியும் வன்மை யொடுநெடும்
பந்த நீத்து ளோர்பதம் பரவச் சூர்கள் பாறுமே. (எ)

சடில நாத ராஞ்சிவ சம்பு நன்கு நவின்றவா
நெடிய வேலி னிறைவரை நிமல னுநி னைந்துமா

கொடிய நெஞ்சை யொருமுகங் கூட்டி நினைவு கூர்ந்துகோட்
படிற கன்று ளோர்பதம் பரவச் சூர்கள் பாறுமே. (௯)

சுகுர்த ஞான தேசிகா சூர நாச காமகா
சிகியி ராச வோஞ்சிவ சிவசி வசிவ சிவசிவோம்
குககு கருக ஹரஹர குமர குருப ரவெனவே
பகரு மன்பர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. (௰)

நீஞ்சொ லருணை கிரிசதா சிந்தை செய்ச டானனு
ஓஞ்ச ரவண பவநம வோஞ்சி வாய நமகுகா
ஓஞ்ச ரவண குருபரா வோந மோந மவெனுமின்
பாஞ்சு சீலர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. (௧௰)

மன்மதஞு ஐப்பசிமீ ௩௨ புதவாரம்.

## ௪௫. எண்ணலங்கார லகரி. *

பண் — இந்தளம்.

ஒன்று மவ ரோதிய தாதிமுகம்
ஒன்று மவர் சூர னுடம்பெறிவேல்
ஒன்று மவ ருன்னத ஞானகதி
ஒன்று மவ ருண்மை வியாபகமே. (௧)

இரண்டா மவ ராடெழி லேறுகழல்
இரண்டா மவ ரேசறு தேவிவகை
இரண்டா மவ ரேறிள மஞ்ஞைவிழி
இரண்டா மவ ரேர்க்கொடி வீயடியே. (௨)

மூன்று மவர் சொல்லிய மூத்ததமிழ்
மூன்று மவர் தம்முக மொன்றுவிழி
மூன்று மவர் முத்திகொ ளான்மவகை
மூன்று மவர் மொய்ம்புர மின்னூலே. (௩)

நான்கா மவர் நல்கிய நாதமறை
நான்கா மவ ராகம நற்பிரிவு
நான்கா மவ ரூரு நறுந்தகர்க்கால்
நான்கா மவர் நட்பி னருள்வரமே. (௪)

---

* லகரி = இடைவிடாதோடிக்கொண்டிருக்கும் பிரவாகம்.
௪. வரம் = கனமின்மை, கண்டிப்பின்மை, கேடின்மை, விளக்கமெனவாம்.

ஐந்தா மவ ராற்று மருங்கருமம்
ஐந்தா மவ ராணைசெய் பாசவகை
ஐந்தா மவ ராறற வோர்க்குணர்த்தல்
ஐந்தா மவ ரால்விரி பூதமரோ. (ரு)

ஆறா மவ ரானன மென்றறைதல்
ஆறா மவ ருண்ட முகைச்சியரெண்
ஆறா மவர் முக்கிய மானதலம்
ஆறா மவர் மந்திர வக்கரமே. (சு)

ஏழா மவ ரெண்ண மிழைத்தகடல்
ஏழா மவர் சிட்டியி லேதோற்றம்
ஏழா மவ ரோர்க்கொடி யானவனு
ஏழா மவ ரின்னிசை யின்சுரமே. (எ)

எட்டா மவ ரூழியப் பாலரினம்
எட்டா மவர் குட்டு மிருஞ்சிரன்கண்
எட்டா மவ ரின்சிவ யோகாங்கம்
எட்டா மவ ரீறி னெடுங்குணமே. (அ)

ஒன்பா னவ ரைத்தொழு துய்வீரர்
ஒன்பா னவ ருத்திசொல் காதைரசம்
ஒன்பா னவர் நூபுர முற்றமணி
ஒன்பா னவ ராணை யுலாங்கோளே. (கூ)

பத்தா மவ ரைச்சிந்தை பண்ணுதிசை
பத்தா மவ ருக்கிதிற் பாடுகவி
பத்தா படி யாயென் றவர்சொனசம்
பத்தார் புகழ்ப் பாவலர் தேவவரே. (கo)

மன்மதஹூ ஐப்பசிமீ உஉ குருவாரம்.

---

## சசா. அருளானந்தலகரி.

---

பண் – பியந்தைக்காந்தாரம்.

சீரியர் பேணும் வேதஞ் சிறந்தசற் சைவப்
பெருமானென் றோது முரைகண்
டாரிய ரேத்தி யுன்ற னழிவற்ற திவ்ய
வடிதன்னை யெய்தி மகிழ்ந்தார்

பூரியர் கேண்மை யுற்றுப் புரையாய பொய்வாழ்
　　வதிலேச தாநா னுழன்றேன்
வேரியந் நீபத் தார்கொள் புயவெந்தாய் மேலுன்
　　வியனீரத் தாளுய் குவலே. (க)

தடங்கணி யெங்க ளம்மை யெனுந்தேவ சேனை
　　தழுவுந் திருத்தோ ளுடையோய்
மடங்கலின் றேலே மேலே கவினப்பூண் போர்தம்
　　மகளுமெய் யின்ப மழவே
அடங்கிடா மோக முள்ள வடியேனை யும்மோர்
　　தொழும்பாக்க வந்த கிருபை
விடங்கமே யுன்ற னுய்ந்தே னினமுநா னேத்துன்
　　வியனீரத் தாளுய் குவலே. (உ)

கற்பதுங் கேட்பதுஞ்சூ ழுனையன்றி யுண்டோ
　　கவினேறு வேடர் குலமான்
சொற்படி செய்யும் பெற்றி யுடையென்றன் சிந்தைச்
　　சுவதந்திர நட்பே தனுசர்
துற்செய லெல்லா மோயப் பெருஞ்சண்டை செய்த
　　சுடர்ஞாங்கர் வீரா வெளியேன்
விற்பன வுன்ற னுய்ந்தே னினமுநா னேத்துன்
　　வியனீரத் தாளுய் குவலே. (ங)

ஐம்முகத் தெய்வம் வேறே யறுதுண்டத் தெய்வ
　　மதுவேறென் றேதும் விகற்பு
மைம்மனத் தோர்கட் கந்தோ விரண்டாகத் தோற்றி
　　மயக்கத்தை யுண்டு செயுமப்
பொய்ம்மருள் வீட்டி யெற்குப் புரையற்ற பாலின்
　　றரம்போல் விளக்கி யவொரு
மெய்ம்மணி வேலின் மன்னே யினியீடி லாவுன்
　　வியனீரத் தாளுய் குவலே. (ச)

பேருரு வூரொன் றின்றிப் பிரிவற்ற சோதிப்
　　பெருக்கா நிலாவு நினையே
பேருரு வூரிங் குள்ளோர் பிறந்திற வடைந்தே
　　யுழலா துணர்த்த வெனவே

---

உ. "தழுவுந்திருத்தோள்" இப்பிரயோகம், விவாககால பாணிக்கிரகணத்தை யுணர்த்தவுள்ளது. இதுபற்றி ௩க—௩ - ன் குறிப்புரையிலும் விளக்கப் பட்டதன்றே.

ங. துர்ச்செயல் "துற்செயல்" என எதுகை நோக்கி விகாரப்பட்டது.

பேருரு ஆருங் கொண்டு பிரகாசிக் கின்ற
பெருமானென் றோர்ந்தேன் கருணை
மேருநல் லெந்தாய் நாயே னினியிடி லாவுன்
வியனீரத் தாலுய் குவலே. (ரு)

எள்ளினுள் ளெண்ணெய் போல விடையேது மின்றி
யிருக்கின்ற வுன்னை யுணராக்
கள்ளுள முள்ளோர் போலக் கணக்கில்லாக் காலங்
கழித்திட்ட வென்மேற் கருணை
உள்ளநீ தந்த நெஞ்சா லுணர்ந்தேனின் னீர்மை
யொளிசால் சிகண்டி யுகைப்போய்
வெள்ளியங் குன்ற வாழ்வே யினியிடி லாவுன்
வியனீரத் தாலுய் குவலே. (சு)

சுத்தசன் மார்க்க முக்கிய சுகானந்த வாழ்வுச்
சுவதந்திர னீயென் றறிந்த
முத்தரெல் லாம டைந்த முழுநன்மை நாடி
யுளநாள் கழிக்க வினனே
வைத்தநின் னட்புக் கோரா னளப்பில்லாத் தண்டம்
வழங்கும்பண் புக்கும் வலனே
வித்தகச் சேயே யெந்தா யினியிடி லாவுன்
வியனீரத் தாலுய் குவலே. (எ)

எண்ணிலா யாக்கை பெற்றே யுழிதந்த பாழ்த்த
விழிநெஞ்ச னேனை யொருநீ
நண்ணிவந் தன்று சொற்ற நலம்போல வின்னு
நறுநன்மை யெல்லா மருளும்
அண்ணலா யுள்ள திவ்விய வருட்கொண்ட லேமும்
மலச்சேற்றி லாழ்ந்த வெனதுள்
விண்ணினுள் ளன்பா மன்பே யினியிடி லாவுன்
வியனீரத் தாலுய் குவலே. (அ)

தேவருங் கானி னேன்பு செயுமைய ருங்கா
ணருஞ்சோதி யாய வுனைநான்
பாவினு லேத்த விந்நாண் முனரென்ன புண்யம்
பரிவிற்செய் தேனோ வறியேன்

---

க. புண்யம் — வடநூன்முடிபு.

ஆவியா யுள்ள வென்ற றுணர்ந்த வெள்ள
வமுதே யறுதிப் பொருளே
வீவறு கந்த சாமி யினியீடி லாவுன்
வியனீரத் தாலுய் குவலே.

மட்டறு பத்தி கொண்டு புகழ்சொன்ன நாதன்
மனம்போல வாக்க மளித்தோய்
சட்டியி னேன்பை முன்னுட் டவுறு செய்து
சயங்கொண்ட கோனுள் ளிறையே
தட்டறு மெங்க டேவே யடிநாடு வோரைத்
தயவாக நோக்கு மூனேயே
விட்டுவி டாம னன்கு பிடித்துக்கொண் டேனுன்
வியனீரத் தாலுய் குவலே.

மன்மதளூ ஐப்பசிமீ கஉ குருவாரம்.

---

## சஎ. பூரணப்பொருள்.

திருநேரிசை பண் — கொல்லி.

வேதத்தி னீறும் யாணர் மேயதந் திரத்தி னீறும்
போதத்தி னீறு ஞாலம் புகழ்பெரு யோகத் தீறும்
நாதத்தி னீறு ஞாட்புக் கலையுடை யீறு மென்றன்
போதத்தைக் கவர்சே யாமோர் பூரணப் பொருளே யன்றே.

தன்னுடை யியற்கை யாகத் தயங்கரு ளாகும் யானைக்
கென்னுடை நினைப்பி யாவுங் கவளமா வீந்து பற்றும்
மன்னுடை யிறையா யென்னுண் மறைந்திருந் தாட்டு வானுப்
பொன்னுடைச் சேயாய் நிற்போன் பூரணப் பொருளே யன்றே.

அறிவற்ற சடத்தி னுள்ளே யழிவற்ற பொருளாய் மேலோர்
அறிவித்தா லறியு மாவி யானதைச் சதசத் தென்று
வறிதற்ற வாக மங்கள் வழுத்துதல் பொருந்து மென்று
பொறிபற்ற வுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே.

நந்தலின் றிருத்த லானு ஞானமாய் விளங்க லானும்
சுந்தர வேதஞ் சத்தாய்த் துலங்கிடு சித்தா யோதும்
அந்தர மாத்து மாவிற் கமையுமென் றழுத்த மாகப்
புந்தியி லுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே.

பாசமா நினைவிற் குள்ளே பரநினை வமிழ்ந்து நிற்கும்
பாசமா நினைவை நீக்கிப் பரநினை வாலே யந்த
ஈசனை யறிதன் ஞான விளக்கம தென்று தேவ
பூசனை யுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே. (ரு)

தரணிவாழ் கம்பக் கூத்தர் தாஞ்செயுந் திறம்போ லந்தப்
பரநினை வதனிற் பாதி பரத்திலே யிருக்கப் பாதி
பரவினை யதனைச் செய்யப் பழகிமற் றதையுஞ் சேர்த்துப்
பொருதெனை வுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே. (சு)

பரநினை வதுவே ஞானப் பார்வையாத் திளைக்கு மந்தப்
பரநினை வில்லா தெல்லாம் பாசத்தி னினைவே யென்றும்
பரநினை வுதித்தாற் பாச நினைவது பாறு மென்றும்
புரையற வுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே. (எ)

பாசமா நினைவே தோன்று பகலென்று மதனை நீங்கி
ஆசுறு மலத்தி லாழ்த லறிவிலா விரவே யென்றுந்
தேசிலா விரண்டு நீத்த திரம்பர நினைவே யென்றும்
பூசகர்க் குணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே. (அ)

இத்திரம் வாய்க்கு மாறு விருவினை நீங்கி மோன
முத்திரை யதனி னின்றே முத்தியை யடைவா ரல்லார்
எத்திறத் தானுஞ் சேரா ரென்பது தீர்க்க மென்று
புத்தியி லுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே. (கூ)

கருத்தடங் காதார் ஞானங் கதைப்பது கருத்தி லாதான்
நெருப்பெனப் பொறித்த வேட்டை நேரடுப் பிடவைத் தூது
தாத்தினைச் சிவனு மென்றோர் பவரரி தாதா தேடும்
பொருப்பினு மத்தா ளுள்சேய் பூரணப் பொருளே யன்றே. (க0)

மன்மதஞு மாசிமீ ககூஉ மந்தவாரம்.

---

# சஅ. திருத்தேவை.

---

திருவிராகம். பண் - கௌசிகம்.

கார்கொள்வான நீர்கொள்வேலை கானலாரந் தெள்ளிடு
நீர்கொளோதம் வீசநாளு நீலஞால மெக்கணும்
நார்கொளன்பர் வந்துவந்து நன்குபோற்ற வுள்ளமாச்
சீர்கொணல்ல தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (க)

க. கானல் ஆரம் = ஒளியுடை முத்து.
தேவை = திருவிராமேச்சுரம்.

தேர்ந்தகல்வி யாளருஞ்சி வாகமங்கொள் செல்வருங்
கூர்ந்தபுந்தி யோருமுண்மை கூறும்வேத நாதமே
லோர்ந்தபேர்க ளும்பொன்வாகை யோருமீட்ட மீட்டமாச்
சேர்ந்துபோற்று தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (௨)

சைவமாவ னுக்கநல்கு தாழ்வின்ஞான மாம்பழம்
கையிலேற்ற ருந்தலேக ளங்கநீத்த வின்பமென்
றையம்வென்ற ஐணர்ந்துய்வோர்க ளாவலோ டிறைஞ்சுநல்
தெய்வமான தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (௩)

தீம்பழங்கை வாங்கிநன்கு தின்னும்வேலை யின்பமும்
தீம்பழந்தி னுதபோதஃ தின்மையுந்தி னைத்தல்போல்
மேம்படுஞ்சி வானுபோக மென்றுதேர்வி வேகிகாண்
தேம்பிறங்கு தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (௪)

ஆதிமுன்ன னாதியாம னாதியெங்கு முள்ளதென்
றேதநீத்த நெஞ்சிலேயி ருப்பதுண்மை யாகுமேற்
பாதகங்கள் செய்வதேது பந்தமேதென் போரவாம்
தீதிலாத தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (௫)

துன்புவந்த போதெம்மாதி சோதிசாமி யென்பதும்
துன்புதீர்ந்த போதுகாசு சோறுதெய்வ மென்பதும்
அன்பிலாவு லோகர்கொள்கை யன்புளோர்வி டாரவர்
தென்பராவு தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (௬)

பண்ணுமீச பூசைகண்டு பாரிமைந்தர் மெச்சவென்
றெண்ணல்வீணர் செய்கையந்த வீசனந்த ரங்தெரிந்
தெண்ணிலாத யாணர்நல்கு மீசனென்ற றைச்செயுந்
திண்ணரேத்து தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (௭)

அசபைமந்தி ரக்குருத்த திந்தனுர தஞ்செபித்
துசிதனேடு கூடுமோன வுண்மைகண்டு கொண்டவர்
விசனமூசு பூவும்வீவு மேவிடாரன் னோர்களைத்
திசையுமேத்து தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (௮)

ஒத்தபூமி மேலுறங்க லேசன்மார்க்க யோகமாம்
முத்தர்சொற்ற நூலெலாமவ் வாறெனவுண் முன்னுவோர்
இத்தலத்து வாஞ்சைநீத்தி ருக்கவேய வர்க்கொரு
சித்தநல்கு தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (௯)

---

௨. வாகை - ககரவேதுகை "வாகை பண்பொழுக்கம் வெற்றி தவம்" எனக் கூறுதலின் பலபொரு ளொருசொல்லாம்.

ஈட்டம் = கூட்டம்.

கல்வியம்ப ரப்பினெல்லை காண்கினும்வின் வேந்தெனச்
சொல்விளங்கி னுந்தனுண்மை காணொணாது சோதியி
நல்விவேக மன்னைதநல்கு மென்றுசூழ்பு கழ்க்கவிச்
செல்வனேத்து தேவைவேளென் சிந்தையைக்கொள் கள்வனே. (கo)

மன்மதஞூ (கி. பி. 1896) மாசிமீ உகஉ சோமவாரம்.

---

தேசிகர், திருத்தேவையெனுந் திருவிராமேச்சுர இறைவனை யெண்ணியே "கார் கொள்வானம்" என்றற்றொடக்கத்து இந்த சஅ-ஆந்திருப்பதிகத்தைச் சென்னைமா நகர்க்கண்ணிருந்து கொண்டே மாசிமீ உகஉ பாடியருளினர்.

---

# சக. திருப்புலியூர்.

---

பண் — நட்டபாடை.

மூத்த மன்னநகை மங்கைய ராடவர் மூழ்கி விளையாடுஞ்
சுத்த மன்னுசர சுக்களுஞ் சோலையுஞ் சூழ வனப்பேறும்
அத்த மின்னுமணி மன்று விளங்க வலங்கு புலியூரில்
நித்த மின்னுருக னென்மன தைக்கவர் நீர்மையறியேனே. (க)

மாசறு வானவர் மானவ ரேத்திட மங்கை சிவகாமி
ஏசறு தூவுள நன்கு களிக்க வியங்கு கரம்வீசி
ஆசறு மோர்சிவ னாருணடக மாடும் புலியூரில்
நேச மகாருக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (உ)

மாய மதர்ப்பின் மயங்குநர் காணரு மாண்பு பெருகீசர்
தூய வனற்கையர் மாலொடு நான்முகன் சூழுந் திருப்பாதர்
ஆய மதிச்சடை யாரருணடக மாடும் புலியூரில்
நேய முடைக்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (ங)

கோளி லருந்தவ மோங்கு பதஞ்சலி கூர்த்த புலிக்காலன்
நாளு மகிழ்ந்திட ஞான மணங்கமழ் நாத ருயர்வேள்வி
யாளர் புகழ்ந்திடச் சங்கரர் நாடக மாடும் புலியூரில்
நீள வயிற்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (ச)

விற்கர மன்னருங் கண்டு களிக்க வியன்கொள் பொருளீயும்
நற்கர மைந்தர்க ளாரு மவாமரு ணம்பர் திருப்பாதம்
பொற்கர மின்சடை யாடம காநடம் பொங்கு புலியூரில்
நிற்கிற வொண்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (ரு)

காண்ட னினைத்தலின் றெண்பொரு ளோடு கலாவு மறிவாளர்
ஆண்டவ னைத்துணை வேண்டுநர் யாவரு மன்பி னினிதோங்கத்
தாண்டவ நித்தலுஞ் செய்பர மேசுரர் தங்கு புலியூரில்
நீண்ட வயிற்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (சு)

மட்டில் சிதம்பரந் தில்லைபொ னம்பல மன்று நடக்கோயில்
தட்டி னறும்புண்ட ரீகபு ரந்தக ராலய மாவிதயம்
இட்டர் தொழும்பிர மப்புரஞ் சிற்சபை யென்னும் புலியூரில்
நிட்டை தருங்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (எ)

தகர மணக்கு நெடுங்குழன் மாதருஞ் சந்த மணிமார்புக்
*குமரர் குழுக்களுங் கந்தசு வாமி குகேச வெனக்கூவிச்
சிகரம் வளைத்துவந் திக்கு நறுந்தொழில் சேரும் புலியூரில்
நிகரி லருட்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (அ)

பலமுய ரச்சுதன் பங்கய னத்திரம் பங்க முறவுண்டே
உலவிய வச்சிர வேலர சேமிடி யோட்டி யெமையாளும்
வலமுயர் முத்தைய சாவென வேத்துநர் மல்கு புலியூரில்
நிலவு மயிற்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (கூ)

பொன்றிக ழுங்குய மான்மகள் வான்மகள் புந்தி களிகூர
என்று மியங்குமெம் மான்புகழ்க் கோனிறை யென்று துதிபாடு
கின்றவர் வெங்கவ னீங்கி நலங்கொளக் கேடில் புலியூரில்
நின்றரு ளுங்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே. (க0)

சார்வரிஞு (கி. பி. 1900) ஆவணிமீ உகஉ புதவாரம்.

---

## ௫0. திருப்போரூர்.

---

பண் — சீகாமரம்.

சொல்வி லாசம ருத நான்மறை
  தூய சோதியென் றேது மாகதி
நல்கி யாளவெனு ணட. மாட வாவரிய
கல்வி கேள்வியி னுல வாவலி
  காதி மேலடி பாடு மாதமிழ்ச்
செல்வர் நாயகனே திருப் போரு ரம்மானே. (க)

---

* இவ்வடி முதற்சீர் உயிரொதுகையும், மூன்றுமெழுத்தொன்றெதுகையுமாம்.

மூவர் சூழ்முத லாய வோர்சிவன்
　　மூல வோமுரு கோனென் றுனதை
யாவர் தாமறிவா ரடி யார லாமலுயர்
நாவர் பாடுன தேசி லாவடி
　　ஞான மீருதி கானல் வேலவ
தேவர் நாயகனே திருப் போரூ ரம்மானே. (உ)

பாட்டி லேபுக ழேழை யேன்மிடி
　　பாற வோரருள் கூர்தி மாமலை
ஆட்டி காதலனே யற வோர்சி காமணியே
நாட்டு மூடரு மாரி போலிசை
　　பாட வேயவர் நாவி லேவரி
தீட்டு நாயகனே திருப் போரூ ரம்மானே. (ங)

கருப்பு காநிலை கூட வேயிரு
　　காலை யேகரு தேழை யேனொரு
விருப்பு மேன்மையுற விரை யார்ப தந்தாராய்
இருப்பு மாதவ ரீச னேகும
　　ரேச னேயடி சேரு மாறுயிர்
திருப்பு நாயகனே திருப் போரூ ரம்மானே. (ச)

மாண்டு சூதக மேவு பாசறை
　　மாற வேநினை யேழை யேனனி
வேண்டு மீசுரனே விரை யார்ப தந்தாராய்
ஆண்டு சேர்மதி வார மோரையி
　　லாத பூரண வாசி லாவுயிர்
தீண்டு நாயகனே திருப் போரூ ரம்மானே. (ரு)

சீரு லாமடி சேர வேயரு
　　டேவ னேயெனு மேழை யே னுளம்
ஓரு மீசுரனே யெனக் கோகை யோடருளாய்
ஏரு லாமயி லீச கானவ
　　ரேழை பூவணி யேறு தோளது
சேரு நாயகனே திருப் போரூ ரம்மானே. (சு)

---

சு. சேர்தல்=புல்லுதல். ஆகலின் மணமாலை யேறும்படியான தோள் தீண்டு தலைவனென்னற்பாலது "பூவணி யேறு தோளது சேரு நாயகனே" என வியம்பப்பட்டதென்க.

புருட னைதுன் பால தாகவெ
ஞானி னைந்திடு போத னெனகக்
குருடு தானறவே யருள் கூரி ளங்கோவே
முருட ரிடை யோரி ராவெழின்
மூல நாயக மான மானினைத்
திருடு நாயகனே திருப் போரூ ரம்மானே. (எ)

குறுக்க நீடலி லாவு னேரருள்
கோட லேகதி யாமெ ஞகினை
சிறுக்க னேனைவிடா தடி சேரி ளங்கோவே
நறுக்கொ ணுவுர ஞல ருவயி
ஞத காவென வோது வார்வினை
செறுக்கு நாயகனே திருப் போரூ ரம்மானே. (அ)

நீர்க்கு ளேதிரி வாளை பாய்விரி
தாழை நீள்கமு கோதி சூழ்வளம்
ஆர்க்கும் வேதகிரி யர ஞர்தி ருச்சேயே
பார்க்கு ளேதிரி யேழை யேன்வினை
பாற வேயருள் பாடு வார்துயர்
தீர்க்கு நாயகனே திருப் போரூ ரம்மானே. (கூ

பொய்த வாவுரை யேனை மேனிலை
போக வேயருள் கூர்தென் மாகவி
பெய்த ஞானவெளிப் பெய ராணு ளத்தேவே
பைத லாலிரு தேவர் தேடிய
பார மாதிரப் பேரன் மாதுதி
செய்த நாயகனே திருப் போரூ ரம்மானே. (கO

சார்வரிஞூ ஆவணிமீ உஉஉ குருவாரம்.

---

ஆகப்பதிகம் ஐம்பதினும்போந்த திருப்பாட்டு — ருOO
காப்பும் தெளத்தியமும் உக
ஆகத் திருப்பாட்டு ருஉக

---

எ. திருடல் இன்னதெனக் குறிப்புரை யுழைக் கூறியாயிற்ருல்.

# ௫௧. திருத்தணிகைமலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் – பஞ்சமம்.

பொன்னா ரங்க டாங்கு கொங்கைப் பூவையர் மையலிலே
பன்னா ளும்பட் டுழை கொண்டு படுவனஞ் சேர்முன்னே
தென்னார் வண்டு பாடு தெய்வத் தணிகை நெடுங்கிரிவாழ்
மன்னார் ஞானச் சேய்செம் பாத மலரை வணங்குதுமே. (௧)

கூனி யாடிக் கோல தூன்றிக் குறுகி நடந்திளைனார்
பானெ கிழ்ந்த கஞ்சி யுண்டு படுவனஞ் சேர்முன்னே
தானி யார்த்தச் செல்வர் சேருந் தணிகை நெடுங்கிரிவாழ்
ஆனி யற்ற சேய்செம் பத்ம வடியை வணங்குதுமே. (௨)

ஈழை கீர்கீ றென்றி ழுக்க விரும லெழும்புமுனே
தாழை வாழை யீனும் வண்மைத் தணிகை நெடுங்கிரிவாழ்
ஏழை வள்ளி கொண்கன் மாலுக் கிகல்வளை தந்தபிரான்
மாழை ராம நாதன் பாத மலரை வணங்குதுமே. (௩)

கண்கண் மங்கிக் காத டங்கிக் கருத்து மயங்குமுனே
தண்கொள் பங்க யங்கள் விள்ளுந் தணிகை நெடுங்கிரிவாழ்
பண்கள் பாடு வாயன் சேயன் பனிமலர் மன்பணிகோ
கண்க ளீரா றெந்தை பாத கமலம் வணங்குதுமே. (௪)

கேச மெல்லாம் வெண்மை பூத்துக் கீழ்நடை காண்முன்னே
தாசர் பல்லோ ரேத்த வுள்ள தணிகை நெடுங்கிரிவாழ்
ஈச னீசர் பால னாத னிமையவர் கோனம்மான்
வாச மொய்ம்ப னெந்தை பாத மலரை வணங்குதுமே. (௫)

மூளை குன்றி மாழை கொண்டு முழுது மடங்குமுனே
தாளி தண்டு மல்கு வண்மைத் தணிகை நெடுங்கிரிவாழ்
காளை காளை யான னத்தான் கடவு ணறுந்தகரப்
பாளை யோதி வள்ளி மன்றாட் பதுமம் வணங்குதுமே. (௬)

---

௬. தாளி = ஓர் கொடி.

தண்டு = தொளையுடைப் பொருள். இது புறக்காழெனும் புல்லெனவும் புகலப்படும். "புறக்காழெல்லாம் புல்லென மொழிப" என்பது தொல்காப்பியம். பனை மூங்கில் முதலியன புல்லைச் சார்வனவாம்.

கால்கை யோய்ந்து கின்மு டங்கிக் கவலை யழுந்துமுனே
சால்பு வீங்கு நேச ரேத்துந் தணிகை நெடுங்கிரிவாழ்
வேல்கொள் கையன் புள்ளி ருப்போன் விடவ ரவந்தொழுத
வால்கொள் பாதன் சுந்த ரன்றுண் மலரை வணங்குதுமே. (எ)

வெள்ளை யாய பல்வி ழுந்து விரைவு தளர்ந்திடுமுன்
வள்ள னம்பன் பிள்ளை யேயெம் மனதை யுணர்ந்தருளும்
தள்ளை யேயென் றன்பி னேத்தித் தணிகை நெடுங்கிரிவாழ்
மள்ளல் வேலன் மாசில் பாத மலரை வணங்குதுமே. (அ)

பாய்கி டந்து பல்வீ பெய்து பையல்கள் சீயெனுமுன்
காய்கி ழங்குண் போர்க ளுத கருணை யிரங்கியருள்
தாய்கி ரந்தி றாறை யென்று தணிகை நெடுங்கிரிவாழ்
சேய்கி ளர்ந்த வேரி யந்தாட் டிருவை வணங்குதுமே. (கூ)

உண்ணீ ரன்னஞ் செல்ல வின்றி யுயிரு ளடங்குமுனே
தண்ணீ ரென்று முள்ள வண்மைத் தணிகை நெடுங்கிரிவாழ்
தெண்ணீர் மைச்சு ரேசன் சந்தத் தெருள னிறைஞ்சியகோன்
கண்ணீ ராள ரன்பன் பாத கமலம் வணங்குதுமே. (க0)

சார்வரிஞூ ஆவணிமீ உ.அவ புதவாரம்.

---

# ரு௨. மயிலமலை.

---

வெண்டளையான்வந்த தரவுகொச்சகக்கலிப்பா.

பண் – பஞ்சமம்.

சீரார் தெருளாக்கச் சேவடியே சேர்வேனென்
றாரார் மனைவிமகா ருற்றுரெல் லாமகன்றேன்
காரார் மனத்திடைநீ நல்லன்பு வையாயேல்
வாராதோ கண்ணீர் மயிலமலை வாழ்குகனே. (க)

நன்றுகறை பெண்ணு நிடேதனர்போ லுளுமுயிர்
கொன்றுபுசித் தோருமிழி கொங்குகுடித் தோருமென்றும்
பொன்றுதலி லாவுனைச்சூழ் புண்ணியத்தி னுய்ந்தார்நான்
மன்றுபட்டு மெய்த்தேன் மயிலமலை வாழ்குகனே. (௨)

---

உ. கொங்கு=கள்; பி – நிகண்டு காண்க.

கட்டுரையில் லாதாருங் காமிகளுங் கள்வருநற்
சிட்டரென வானுருஞ் சேவடிபா வித்தளவில்
நெட்டுலகி னின்னடியே நெஞ்சிருத்தி யுன்னொருநான்
மட்டுமலை கின்றேன் மயிலமலை வாழ்குகனே. (௩)

நல்காவன் னெஞ்சருநன் ஞாயம் பிறழ்ந்தவரும்
செல்கால மெய்துமுனுன் சேவடிசிந் தித்துய்ந்தார்
பல்காலு நின்னடியைப் பாடுமெனக் குன்னருடான்
மல்காத தென்னே மயிலமலை வாழ்குகனே. (௪)

ஆராய வொண்ணு வதிபாவ மேபுரிந்த
நீராரு நின்னுருவை நெஞ்சிருத்தி யுய்ந்தார்கள்
தாராள மாவுனிரு தாடுதிக்கு மெற்குனருள்
வாராத தென்னே மயிலமலை வாழ்குகனே. (௫)

பாழ்வேட னம்பிப் பதிதரென நின்றோரும்
சூழ்வேக முள்ளோருந் தோத்திரித்து வாழ்ந்ததுண்டு
தாழ்வேது மில்லாவுன் றன்னைநனி கூடினல்லால்
வாழ்வேனோ நான்றுன் மயிலமலை வாழ்குகனே. (௬)

காட்டார்க்கு நாட்டார்க்குங் காசில் கருணையினால்
தாட்டா மரைகொடுத்தாய் தாள்பழிச்சு மென்னைவினை
ஆட்டாது பேரருளா லாட்டி யளாவவரா
மாட்டாயோ மாண்பார் மயிலமலை வாழ்குகனே. (௭)

வெண்பாவுஞ் செம்பாவும் வித்தாரப் பொன்பாவும்
பண்பார் கரும்பாவு நின்பேரிற் பாடுவேன்
கண்பார்வை வந்தெனது கம்பலையைக் காதியருள்
வண்பாத வஞ்சான் மயிலமலை வாழ்குகனே. (௮)

நின்னைமிகப் பொச்சாந்து நீளுலகி னில்லாமல்
தென்னிளமை யிற்றானே சேரவந்த பாக்கியநீ
என்னையிது நாண்மறக்க ஞாயமிலை யெங்கணுமாய்
மன்னுமதி தாராய் மயிலமலை வாழ்குகனே. (௯)

சிந்தைமயங் காமலெனைச் சித்தாந்த வீட்டிடைவை
கந்தமணி தெய்வமகள் காட்டார் மகள்கொழுநா
சந்தமுனி நெஞ்சத் தடங்கமல மேயமுதால்
மந்திருதி கொள்ளு மயிலமலை வாழ்குகனே. (௧௦)

சார்வரிளு ஆவணிமீ உகஉ குருவாரம்.

---

# ௫௩. திருச்செங்கோடு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் — நட்டராகம்.

நீரு லாநெடு வேணியன் மேல்விழி நின்றெழு சுடராகிச்
சீரு லாம்வர கங்கைப டிந்தறு தெரிவையர் முலையுண்டே
ஏரு லாமுரு வம்பல காட்டிமெய் யிறைவியின் பாலருந்திச்
சூரி லான்மலை சென்றவ னாலயஞ் சுடர்திருச் செங்கோடே.

இரவி யேழ்பசுங் கொய்யுளை சந்திர னிரதமென் பவைகளிலும்
நிருதி வாயுகு பேரனு தாசன னீரிறை யிந்திரன்மா
தரும னீடுகைம் மாக்களி லும்பல சாரி புரிந்தருகன்
கருது வார்க்கருள் செய்பதி நன்மணங் கமழ்திருச் செங்கோடே.

சார்த்தூ லத்திலும் யாட்டெழி லேற்றிலுஞ் சரபவி ராசனிலும்
ஏர்ச்சி யத்திலு மான்கரு டன்சுசி யெகினமென் பவைகளிலும்
பார்த்தோர் விம்பிதங் கூரவி ருந்துபல் பவனி புரிந்தருகன்
சீர்த்தூ யன்பரை யாள்பதி நல்லறஞ் சேர்திருச் செங்கோடே.

ஒப்பி லாச்சிறு பிள்ளையென் றாகியெவ் வுலகவுஞ் சியராலும்
தப்பி லாசையி னாலெடுத் தெக்கழுத் தங்கொள வவரவர்முன்
செப்ப மோடுசென் றேபினர் மூப்புயர் தேகியைப் போலாகிக்
கப்பி லாத்தடி யூன்றிநின் றோன்சின கரந்திருச் செங்கோடே.

பட்ட தாரு துளிர்த்திடக் கானுறை பருவிலங் கெல்லாமும்
கிட்ட வந்திசை கேட்டவ சங்கொளக் கின்னர நனிமீட்டி
வட்ட மாமுலை யார்விர கங்கொள வார்குழ லினிதூதி
மட்டி லாவிளை யாட்டயர் சேயுறை மலைதிருச் செங்கோடே.

எண்ணி லாமுக மெண்ணறு காதுக ளெண்ணறு நறுநாக்கள்
எண்ணி லாவிழி யெண்ணறு நாசிக ளெண்ணறு கரதலங்கள்
எண்ணி லாவடி வுள்ளகு கேசர னெண்ணறு கருணையினால்
எண்ணி லாவடி யார்க்கருள் செய்பதி யெழிறிருச் செங்கோடே.

பன்னா ளும்பல துன்பினை யேதரு பகைஞர் குழாமறுத்தே
என்னோ டண்டரெ லாரையு மாண்டரு ளென்றறி வேண்டினகால்
நன்னார் மிக்குடை யீர்சொன வாறினி நாமருள் செய்துமெனாச்
சொன்னோ னன்பரை யாள்பதி யம்பொழில் சூழ்திருச் செங்கோடே

நம்ப னீபடை வேந்தினை வாங்கிவின் றைடருஞ் சிவகணமும்
கும்ப லாவெழு தாப்புவி வந்தொரு குன்றையும் வலிசான்ற
தும்பி மாமுகன் றன்னையு மாய்த்துயர் சூரன தூர்போந்த
எம்பி ரான்றளி யாவது நீர்வள மெழுதிருச் செங்கோடே. (௯)

சிங்க மாமுகன் பானுமு னிந்தவன் சிரமறுப் புண்டபின்னர்த்
துங்க வேல்கொடு சூரனை யீர்ந்துயர் துசம்பரி யெனவாக்கிப்
பொங்கு வீரர்க ளோடுசெ யந்திபுக் கிருந்துப ராசலம்போந்
தங்க ணுறற வோர்குரு வானவ னமர்பதி செங்கோடே. (௧௦)

மாறி லாக்கஜ நாயகி தன்னைநன் மணம்புரிந் திந்திரற்கோர்
ஊறி லாமுடி சூட்டுபு வள்ளியை யுவப்பொடு கைப்பிடித்துக்
காறி லாப்புகழ் பாடிய வெந்தையின் கருத்தினை நிறைவேற்றி
ஈறி லாதொளிர் கின்றவ னன்கிருப் பதுதிருச் செங்கோடே. (௧௦)

சார்வரிஹூ ஆவணிமீ ௩௦உ சுக்கிரவாரம்.

---

# ருச. கழுகுமலைபாதி கந்தகிரிபாதி.

---

கலிவிருத்தம்.

தக்காரகம். பண் — கொல்லிக்கௌவாணம்.

உலகவெம்மைக் கடல்கடக்கு முறுதியினைத் தாராய்
கலகமிகந் தவர்கருதுங் கழுகுமலை முருகா
விலகலற்ற விருத்தியெற்கு விரைவினினி தளியாய்
பலகவிஞர் பரசுகந்த பருவதத்துப் பரமே. (௧)

வருதாவெல் லாங்களைதி மனதினிலைப் போர்க்கும்
கருதார்க்குங் களிப்புதவுங் கழுகுமலை முருகா
ஒருதாழ்வுஞ் சொலவிசையா வுவப்பிலெனை வையாய்
இருதார்த்த ருள்குகந்த கிரியிருக்குங் கிளியே. (௨)

அன்றுசொன்ன படியெனைவந் தாண்டுகொள வேண்டும்
கன்றுதலில் லார்குரங்குங் கழுகுமலை முருகா
என்றுமெனைத் திருவடிக்க ணிருத்தியிட வேண்டும்
குன்றுதலில் லாதகந்த குவடமருங் குருந்தே. (௩)

தாட்டாம ரைத்திருவிற் றங்கவெனை வையாய்
காட்டார்வ முனிவருள்குங் கழுகுமலை முருகா
வீட்டாசை யேற்கொளுதி விரைவினில்வல் லார்க்கும்
மாட்டார்க்கு நல்லகந்த மலையிருக்கு மணியே. (ச)

நாதநிலை ஞாங்கரெனை நன்கிருத்தி யாளாய்
காதலொடு நானேத்துங் கழுகுமலை முருகா
பாதகமெல் லாமுருக்கும் பரிவிலெனை வையாய்
மாதவர்கள் வணங்குகந்த மலையிருக்கு மணியே. (ரு)

எள்ளுதலில் லாநெறியி லெனையிருத்தி யருளாய்
கள்ளுதலுள் ளார்மறந்த கழுகுமலை முருகா
துள்ளுதலில் லாதமதி துலங்கவெனக் களியாய்
பொள்ளுதல்கொள் ளாதகந்த பொருப்பிருக்கும் பொருளே. (சு)

திடம்பிறங்கு தெருளிலெனைத் தினமுநனி வையாய்
கடம்புமலர் கமழ்வளங்கொள் கழுகுமலை முருகா
விடம்பொருவென் மலமவித்துன் விரையடியைத் தாராய்
தடம்பொழில்கொள் கந்தகிரி தனிலிருக்குந் தகையே. (எ)

நான்பாடு பாட்டைநவில் பவர்க்குநல நல்காய்
கான்பாடு வண்டறையுங் கழுகுமலை முருகா
தேன்பாகு கண்டெனவந் தென்னுணனி சேராய்
மேன்பாடு மல்குகந்த வெற்பிருக்கும் வேளே. (அ)

எனைத்தள்ளி னுலுமெனை நம்பினவர்த் தள்ளேல்
கனைத்தண்டை சிலம்பவருங் கழுகுமலை முருகா
தினைத்தனையு நீங்காத திருவிலெனை வையாய்
நினைத்தவரு நல்குகந்த கிரிக்கருணை நிதியே. (கூ)

அ — ல் "நான்பாடு பாட்டைநவில் பவர்க்குநல நல்காய்" எனவும், இந்த கூ — ல் "எனைத்தள்ளி னுலுமெனை நம்பினவர்த் தள்ளேல்" எனவும் அருளிச் செய்தமையை நோக்க அடிகளுடைய காருண்ணிய நீர்மை நன்கு புலனுகின்ற தன்றே. ஆவதேல், நம்பாதார்க் குறுபயன் யாது கூறலாங்கொல்? உணர்வா ருணர்க.

குருப்புகழர் விரும்புமருட் கூத்தினென்னை யாட்டாய்
கருப்புகழர் காணரிய கழுகுமலை முருகா
அருப்புகழர் நாடறிவி லனவரத மெனைவை
திருப்புகழர் புகழ்ந்தகந்த சிகரியுறை சிவமே. (க0)

சார்வரிஸு புரட்டாதிமீ நஉ மங்களவாரம்.

# ருரு. திருவுடுப்பை.

கலிநிலைத்துறை.

பண் — இந்தளம்.

மலையெ லாம்விளை யாடரு ளான்மலை மாமகள்
தலைவ ரூர்தலை மாமுளை தம்பி தவத்தினூர்
அலைவி லாவித யாசன மீதம ராண்டவன்
உலைவி லாவடி வேல னிருப்ப துடுப்பையே. (க)

தேவ சேனையை வேடர் குலத்துயர் செல்வியை
ஆவ லோடு மணந்துயிர் நன்மை யனைத்துமோர்
தாவி லாது பயந்து நிதப்பிரம சாரியும்
ஓவ லில்லியு மானவன் வாச முடுப்பையே. (உ)

சரைகொ ளாத சதாகதி சாரதி யாயமர்
புரையி லாயிர நூறு பெரும்பரி பூட்டிய
இரத மேலயி லேந்திறை யாக விருந்தமெய்
உரையி னூன்பல வாடல்செய் தான முடுப்பையே. (ங)

பிரம னாருள் பேணிமுன் வைத்திடு பாதுகை
சரண நன்கு சுமக்க நடாவிய சாமியே
பரம னேயெமை யாள்கெனு நல்லவர் பாலுலாம்
உரமு ளானெனை யாள்குகன் வாச முடுப்பையே. (ச)

இந்தி ரன்றிகழ் சாமர மேந்தி யிரட்டவொண்
சந்தி ராதபர் வெண்டர ளக்குடை தாங்கமால்
அந்த ணன்மலர் மாரி சொரிந்திட வங்கைவேல்
உந்து சீரொ டெழுந்தவன் கோவி லுடுப்பையே. (ரு)

எரியின் மன்பகல் வத்தி பிடித்திட வேமனூர்
சுரிகை யேந்திட முக்கணன் மூவிலை தூக்கவால்
நிருதி காகள மூத வெழுந்தவ னீடொளி
உருவு ளான்மயி லீச னிருக்கை யுடுப்பையே. (சு)

அளகை யாளி யடைப்பை சுமக்கவு மங்ஙனே
கிளரு நீரிறை கேடில் படிக்கம தேந்தவும்
வளரு மேனையர் பீலி பிடிக்கவும் வந்தவாரப்
புளர்சி லம்படி வேல னிருக்கை யுடுப்பையே. (எ)

---

சு. முக்கண்ணர் = திக்குப்பாலகரு ளொருவராய ஈசானமூர்த்தி.

மாட்டி லேறு மகேசுரர் தந்தவொர் மாமணீ
காட்டி னுலறி வோமரு ளென்பவர் கட்டிடர்
வாட்டி யாள்குமரேச னெனுது மயக்கெலாம்
ஓட்டி யாளரு ளாள னிருக்கை யுடுப்பையே.

நாங்க ணின்னடி நம்பிய வாவிக ளாயினும்
ஈங்கெ மக்கருள் வாரில ரேணயி லீசனே
தாங்கி யாளென முன்னுநர் வாதை தபுத்துவாழ்
வோங்க வேசெயு மெந்தை யிருக்கை யுடுப்பையே.

நீறு மேலணி நேயர்க ணித்தனு மேத்துமோர்
ஆறு மாமுக னன்பரு ணைப்பெய ராரியன்
கூறு மாதுதி கொண்ட பிரானெரு கோதிலான்
ஊறி லானுயிர் நாத னிருக்கை யுடுப்பையே.

சார்வரிஞ புரட்டாதிமீ அஉ ஆதித்தவாரம்.

---

# ருசு. குமாரானந்தலகரி.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பண் — மேகராகக்குறிஞ்சி.

**க**ங்கையினீ வந்ததனு லன்றேவக் கங்கைதனிற் படிவார்க் கெல்லாம்
பொங்குகறை போக்கிநறும் புனிதமளித் திடுமரிய புண்ணி யத்தை
மங்குதலில் லாமலடைந் தாளெனவே லையவுனை மருவு கின்ற
புங்கவர்க ளறிகின்ற ரெனினினதொள் ளருமகிமை புகல்வோர் யாரே

**ஆ**தியறு பேரொளிநீ கடவுளுக்கு மகனெனுஞ்சொ லணைந்த தாலே
சாதிபல வாயிருக்கும் பெண்ணுயிர்க ளெல்லாமுந் தவத்தி னுகு
நீதிவழி மலடுதவிர்ந் துய்ந்தனவே யெனவறிவார் நிபுண ரெல்லாம்
வீதிதொறு நினைநாடி நிற்குமெனை யாள்குமர வேளே மன்னே.

தனதடியி னூபுரமா மணியிரவி களிலொன்றின் சன்னி தானம்
எனுமொளிமுன் னுலகம்விளக் கிடுமிரவி முதலியன விலகா வென்றே
அனகவொளி யுருமுருகன் பகிர்முகம்விட் டகமுகம தானு னென்பார்
நினதடியைப் புகழ்புனிதர் குமரகுரு பரனேயென் னினைப்பு ளானே.

உன்றனடி நூபுரத்தி னொலிதானே பெரியவர்கட் குரிய பேராட்
டின்றிடுநின் னடிசுமந்த புள்ளுறையு மிடமதுவே நேடிய சொர்க்கம்
என்றறியு மறிவாள ருன்றனிரு தாண்மகிமை யினைத்தென் றேத்து
நின்றவலி யுள்ளாரு முளரோவென் பார்கருணை கெழுவே லோயே. (௪)

எண்ணரிய வுயிர்களெலா நீயிருக்கு மூர்த்தமென வியம்பு நூலோர்
தண்ணளிசால் சாமியெனும் பெயருனக்குஞ் சொலியிருக்கத் தானே யோர்க்கும்
விண்ணவர்க்கும் விளம்பிடுதல் சம்புவெனு மிறைமொழியை ஏர்க்கு மீப்போம்
வண்ணவிப நாவலுக்கும் வழுத்துதலை யொக்குமென்பார் வடிவே லோயே.

மும்மூர்த்தி களுமுன்ற னாணைவழி முத்தொழிலும் புரிகின் றாரென்
றெம்மூர்த்தி களுக்குமுதன் மூர்த்தியா யுளபரம னிபம்பி னானென்
றம்மூர்த்தி சரிதநவில் காந்தமறை தருமாயி னமரரெல்லாம்
நம்மூர்த்தி குகனெனவுன் னருள்பணியா தென்புரிவார் நறிய வேலோய். (௬)

பொருவிலிறை யாமுனது பெரியவிபூ தியிற்சிறிதே புகலவொண்ணுச்
சருவவுல கயிச்சுரிய மெனப்பரம னுரைத்தவுரை தனைமா காந்தச்
சுருதிவிளக் கிடுமாயி னினதுதிருத் தகைமையனுத் துணையுங் கூறு
குருவெவர்கொன் மூவுலகத் தினுமுலக குருவாய குமர வேளே. (௭)

தவமுடைய தேவர்களைத் தன்னுருவா வுடையசிவன் றானே யுன்னைச்
சிவமெனவுண் மதித்துரிய சீடனென வாயினன்முன் னெனினே னொருநாள்
எவருனடி வணங்காத பெயரெவரும் வணங்கினவ ரெனவே யாவார்
தவளமலர் முடிமுருகா நினதடிமண் ணவர்பணியத் தடையோன் றுண்டோ.

சேயெனச்சொன் மழவுருவைப் பரமேச வடிவெனநீ செய்த காலை
மாயனெட்டு விழியன்முதல் விண்ணவரெல் லாருமந்த வடிவு மின்னின்
ஆயிரத்தி னோரமிச மட்டுமறிந் தனரல்லா லதிக மின்றே
பேயகத்த னையவெனைப் பேணுகுக வதுவென்னுற் பேசற் பாற்றே. (௯)

சமாதான முடனுன்னை நினைத்தாலென் னுள்ளமெலாந் தண்ணென் றாகும்
உமாதேவி சுதனுமுன் னடிபாடி வணங்கிலென துணர்வுள் ளோங்கிச்
சமாராத னைக்குரிய வருணகிரி தண்ணளியுந் தானே யெய்யும்
குமாராய நமவென்னு மாறெழுத்து முச்சரிப்பார் குருவே யன்றே. (௧௦)

சார்வரிஞு புரட்டாசிமீ ௧௧உ புதவாரம்.

---

# ௫௭. சத்தியபோதகம்.

கொம்பில்லாக்கலிவிருத்தம்.

பண் — கௌசிகம்.

தண்ணா வன்கலை மானச் சனிப்புமால்
நண்ணு சாவு நமக்கணை யாமனீள்
கண்ணன் மாமரு கன்முரு கையனை
அண்ண வாரு மழுங்கல்விட் டன்பர்காள்.

நிதிக்கு லம்பல கூட்டினு நீணிலம்
மதிக்க மாளிகை கட்டினு மாயமாம்
துதிக்கு மன்பிலின் பீருகன் றாத்துதி
அதிர்க்க வாரு மழுங்கல்விட் டன்பர்காள்.

திணையி னாசை யவித்தருட் சீரடித்
துணையி னிற்பவர்க் கீறில் சுகந்தரும்
இணையி லாக்குக னாண்டவ னின்பினை
அணைய வாரு மழுங்கல்விட் டன்பர்காள்.

சிறியர் மானத் தினம்பல காரமும்
வறிய கூழு னுகர்ந்து வருந்தலிர்
நறிய ஞானப் பிழம்பயி னாதனின்
பறிய வாரு மழுங்கல்விட் டன்பர்காள்.

விடங்க லன்னவுள் ளுள்ளவர் வீழ்கதி
அடங்கு வாரதை யாரரு ளாற்றலால்
தடங்கல் பண்ணித் தயாமுரு கையனின்
படங்க வாரு மழுங்கல்விட் டன்பர்காள்.

கொம்பில்லா நிரோட்டகம்.*

தில்லை நந்தியி னந்தனன் றிண்ணியன்
நல்ல கண்ணார்க ளாடயி லங்கையான்
அல்ல லில்லடி யாசையி னார்க்கலை
இல்ல ரந்தை யனந்தர்க ளில்லையால்.

---

௨. அதிர்த்தல்=சொல்லல்; பி — நிகண்டு காண்க.
அழுங்கல்=துன்பம்.

* நிரோட்டகமாவது, இதழ்குவிக்கும் உயிரெழுத்தும் மெய்யெழுத்துந் தீண்டாய பாடுவது.

௬. அரந்தை=துன்பம். அனந்தர்=மயக்கம்.

கதிரை நாயகன் காசினி யாசினி
அதிர நீலண்ட சத்தை நடாத்திறை
கதிர முநகைக் கானசை யார்க்கடல்
இதர நீட விடர்த்தளே யில்லேயால். (௭)

கச்ச ணிந்த தனத்தியர் காட்டகல்
இச்சை நீத்தயி லீச னிருக்கழல்
நச்ச ணேந்தநல் லார்க ளருக்கலி
அச்ச நீங்கிநன் கண்ணிட லாணையால். (௮)

நாட்டத் திற்கினி யான்சிகி நாதன்கால்
காட்டத் தக்ககண் ணுளன் கணக்கில்சீர்
நீட்டத் தக்கசை யானிணே நீரர்கள்
ஈட்டத் தன்கதி ரைத்தளி யீசனல். (௯)

அந்தத் தானடி யார்க்கினி யானல்ல
கந்தத் தான்கதிர் காலணி யானகைத்
தந்தத் தானறை தாங்கிய தாரினன்
சந்தத் தானஞர் சாடயி ஞதனல். (௧௦)

சார்வரிஇ புரட்டாதிமீ கஉ ஆதித்தவாரம்.

# ருஅ. திருக்கந்தர் திருப்பல்லாண்டு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பண் - பஞ்சமம்.

பொன்னுயர் நாட்டிறை புத்திரி தனைமன்றல் புரிந்துசெந் தினைகாத்த
மின்னினை மாமணஞ் செய்தரு ளுடைய வித்தகர் தமையாண்டு
நன்னல நல்கருள் வேந்தென விளங்குபு நான்மறை களும்விரித்துப்
பன்னரும் பரமென விருக்குநந் தேவுக்குப் பல்லாண்டு கூறுதுமே. (௧)

மூப்பறு கட்டிள மைத்திரு மேனியு மூப்புடை யார்க்கெல்லாம்
மூப்புடை மேன்மையு மூப்புடை யாவிகண் முழுவது மூப்பிளமை
யாப்பறு மாறெமை யாள்கும ராவென நாடிறை மையுமல்கு
பாப்பணை யான்மரு மானெனும் வேலற்குப் பல்லாண்டு கூறுதுமே. (௨)

நீர்வள மார்பரங் குன்றிலு நீடெழி லிமிர்திருச் செந்திலினும்
சீர்வள மார்திரு வேரகந் தன்னிலுந் தீதறு பழநியிலும்
ஏர்வள மார்திருச் சோலையங் கிரியிலு மிருந்தடி நினைவார்க்குப்
பார்வள மேல்வள நல்கருட் குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே. (௩)

தணிகைகந் தாசலஞ் சமரா புரிதிருச் சயிலமி லஞ்சியரு
அணிகெழு வேள்வியங் கிரிபொதி யாசல மரிப்பா டுடுப்பைமகா

திணியகத் தேவைசெங் கோடுகுன் றக்குடி திருவுரு மலையாரூர்
பணியுயர் கூடலம் பதியுறை குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

சித்தர்கள் காண்கதிர் காமமண் ணுமலை சீசயி லங்கயிலை
எத்தவ ரும்புகழ் மேரு சிராசல மோர்த்திரு நீற்றுமலை
உத்தம நீள்கழு கோதியெண் கண்ணெனு மொண்டலங் களின்மேவிப்
பத்தருக் கருள்புரி கின்றசெவ் வேளுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

நேசர்கள் வாழெழின் மயிலவொண் மாதிர நீர்மலி பெரும்பேறு
கோசரர் சூழ்கந்த கோட்டங் குமாரவொண் கோட்டநல் வேற்காடு
மாசில்கு மாரபு ரம்பெரு வயலிரு கொடுமளூர் வதிந்தடியார்
பாசறை தீர்த்தருள் புரிமுரு கோனுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

துப்புறு பூண்டிபுள் வேணகர் வேனகர் தூயவர் புகழாண்டார்
குப்பமி ருதபொ னம்பல மெனவே குயினில யங்களிலும்
ஒப்பக நாடுகள் காடுகள் கீழ்மே லுலகுயிர்த் திரள்களிலும்
பப்புவர் மீக்கூ றிடநிறை குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

கட்சியி லேபடுத் துத்துயில் கொண்டிருட் காரியி னுங்கொடிய
அட்சிகண் மோகன மாழ்ந்துள வாயுளே யவம்பணி யவியாமல்
வெட்சியுங் கோடையு மணிதிரு மொய்ம்புகள் விளங்கிட மென்றாவிப்
பட்சியில் வருமுரு கோனெனு மாதிக்குப் பல்லாண்டு கூறுதுமே.

எண்ணுந ரெண்ணம தோர்ந்தரு ளேந்தலு மிரவொடு பகலிறந்த
கண்ணார்கள் பின்றொடர் காதலுள் ளானுமொர் காலமு மிடர்நாசம்
நண்ணுத லில்லுயர் பெருந்திற லோனுமெஞ் ஞாலமு நினைவொன்றால்
பண்ணிடு மீசனு மாயுள்ள குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

அன்னையின் மேம்படு கருணையி னுற்குக னடிகளைப் புகழ்தாசன்
தன்னைமெய் யடியவ னுக்கவென் றகம்புறஞ் சார்ந்துவந் தேற்றமதி
சொன்னவ னையனு பூதிசொன் னவற்குறு சூாறுத் தெவராலும்
பன்னவொ ணுநல நல்கிய குகனுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

சார்வரி௵ புரட்டாதி௴ ௧௮௳ விஜயதசமி புதவாரம்.

---

| | |
|---|---|
| ஆகப்பதிகம் ௫௮ - னும் போந்த திருப்பாட்டு — | ௫௮௦ |
| காப்பும் தௌத்தியமும் | ௨௧ |
| ஆகத் திருப்பாட்டு | ௬௦௧ |

---

## திருவலங்கற்றிரட்டு முதற்கண்டம் முற்றிற்று.

---

குமரகுருபரன்றிருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

௬. கோசரர் = காணத்தக்கவர்.

௭. பப்புவர் = புகழ்வோர்.

ஓம் குஹப்ரஹ்மணேநம:

தேவையம்பதியெனுந் திருவிராமேச்சுரத்தைச்சார்ந்த பாம்பன்:

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத

வைதிக சைவசித்தாந்த ஞானபாநு

# குமாரசுவாமியென்னும்

ஸ்ரீமத்-குமரகுருதாசசுவாமிகள்

அருளிச்செய்த

# திருவலங்கற்றிரட்டு

பல்சந்தப்பரிமளமாகிய

## இரண்டாங்கண்டம்.

---

இது

சென்னை: சாது பிரசில்

பதிப்பிக்கப்பட்டது.

Second Edition - 500 Copies.



1929.

# இரண்டாங்கண்டம்.

---

**நான்காரைச்சக்கரம். நேரிசைவெண்பா.**

குடிலைமெய் கூறு குருவடிக ளீயுங்
கொடியனபோ மாறு குயிலூ—மிடிமடன்
கொய்குகனை நாடு குமர குருதாசன்
செய்திருவ லங்கற் றிரட்டு.

**நேரிசைவெண்பா.**

யாப்பி னிலக்கணமும் யாத்த விலக்கியமும்
யாப்பொலிபல் சித்திரமு நச்சியல்போய்—மூப்போ
தலங்கற் றிரட்டினிரண் டாங்கண்டம் பாருன்
விலங்கைத் தறித்து விடும்.—காசியாத்திரை.

*“ பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல*
*சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்*
*வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்”*

**என்பது நன்னூல்.**

உ

குஹப்ரஹ்மணேநம :

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது மண்டலமாகிய

# திருவலங்கற்றிரட்டு

பல்சந்தப்பரிமளமாகிய

## இரண்டாங்கண்டம்.

### க - வது வெள்ளியல்.*

#### க. நேரிசைவெண்பா.

*ஏந்திசைச்செப்பலோசைபெற்றுவரு*
*மீராசிடை யிருகுற ளிருவிகற்பம்.*

சீராரு நன்னெஞ்சே செங்கமலக் கட்கடவுள்
ஏராரு மாமருக னென்,றுகிக்—கூராரும்
வேலேந்தி மாற்றலரை வென்றமரர் கட்குச்செங்
கோலீந்த கோன்றுணையைக் கொள். (க)

மேற்படி, ஒருவிகற்பம்.

அன்னைக்கோ ரன்னையுமா யப்பனுக்கோ ரப்பனுமாய்
முன்னவற்கு முன்னோனு மா,யுரிமை—பன்னவுள்ள
அன்பினர்கட் கன்பினனு மாய்நிற்கு மாறுமுகன்
தன்பதநெஞ் சேநினைந்து தாழ். (உ)

---

* வெள்ளியல்=வெள்ளையியல் (=வெண்பாவியல்); "ஒருபொரு ளுநுதலிய வெள்ளடி யியலாற் றிரிபின்றி வருவது கலிவெண்பாட்டே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தில் 'வெள்ளடி' என்றதற்கு "வெள்ளையடி" என நச்சினார்க்கினியத்தில் உரை செய்யப்பட்டிருத்தலுங் காண்க. "இயற்றளை வெள்ளடி" என யாப்பருங்கலக் காரிகையினருங் கிளத்தினர்.

தூங்கிசைச்செப்பலோசைபெற்றுவரு
மிருகுறளொருவிகற்பம்.

சீலந் தருஞ்சதா சித்தமே கச்சைகொண்
டாலும் பராமரித் தன்,னையோற்—சாலவும்
பாலொடு சாதம் பகுக்கும் பரிபுரம்
ஆலும் பதவே ளருள்.

மேற்படி, ஓராசிடையொருவிகற்பம்.

நாளுமுள் ளேநினை நச்சிய யாவுமுன்
ஞளலா நல்குநன் னட்,பொடு—கோளுரு
வாளஞ் சிலம்பார் மலர்ச்சரண் டங்கெதனை
ஆளுங் குகவே ளருள்.

மேற்படி, இருவிகற்பம்.

பாவம் பொடிக்குமே பத்தியை யீட்டுமே
சாவுந் தொலைக்குமே தா,ரக—மாவருள்
கூட்டுமே முத்தியைக் கூட்டுடன் காணெனக்
காட்டுமே சண்முகன் கால்.

இருகுறட்குமிடையில் தனிச்சொற்கு முன்னே வரு மீரசை யீராசென ஓரசை யோராசெனவும் பெயர்பெறும். விவரம்—மேல்வந்த பாக்களிலிடப்பட்ட இக்குறிக்குப்பின் அவை நிற்குமாற்ற னறிக.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்றுவரு
மிருகுறளொருவிகற்பம்.

திங்கட் கிடையானின் சேயாகுஞ் செவ்வேளின்
அங்கழற் கேயடிமை யாளுயே—யிங்குநனி
தங்கமன மின்றேகத் தானெண்ணு நெஞ்சேசீ
எங்கிருந் தாலுமினி யென்.

மேற்படி, இருவிகற்பம்.

பெரிதிற் பெரிது பிரமாண்ட மேயப்
பெரியபிர மாண்டம்பல் பெம்மான்—முருகன்
உரோமநுனி நிற்குமெனி னெஞ்சே யுருவம்
விரோதவுரு வன்று விபு.

தற்புருட மீசானஞ் சத்தியோ சாதமதி
அற்புத வாம மகோரநறும்—பொற்பார்
முகமெனுஞ் சத்தி முகமொன்ருய் நிற்கும்
முகமே யிறைசண் முகம்.

உ. வாள் = ஒளி.

பூமியினைப் பொன்னதனைப் பூவையரைப் புத்திரரை
நாமிடலை வெற்றியினை நாகமதை—யோமில்
விரிவித்தை முத்திகளை வேட்போர்க் கருள்செய்
கருணைநிலை யேகந்தன் கண். (௯)

நூல்கடா யாம்வேத நூலாக மங்கட்கும்
வால்கெடா மெய்ம்மைக்கும் வாக்குவலி—யால்வெளியாம்
எல்லா மொழிமூலத் திற்கு மிருக்கைநிதம்
நல்லார் தொழுங்குமர னு. (௧௦)

அடிகே ளடிகே ளடியீயென் றேத்தும்
அடியார் கவிச்சுவையை யன்பா—லுடனுகர்ந்து
நல்வற் சலம்பெருகு நாதசத் திக்கிருக்கை
செல்வக் குமரன் செவி. (௧௧)

அன்பூற் றெடுக்க வடிநாடி நிற்பவர்கட்
கின்பூற் றெடுக்க வினிதருளித்—துன்போட்டும்
மாசி லபய வரதங்க ளென்பனவே
காசின் முருகையன் கை. (௧௨)

ஆன்மாக்க ளேக்க மறியுங் குணமொன்றே
தான்மீக்கொண் ஞானமெனுஞ் சத்தியுமவ்—வான்மாக்கள்
ஊழ்வினைக ளூட்டியரு ளொண்கிரியா சத்தியுமே
காழ்வடிவுச் சேயிரண்டு கால். (௧௩)

சதாநினைவோர் நெஞ்சத் தவிசிருக்குங் கந்தன்
அதீதசொரு பந்தா னளப்பி—விதாகிதமாந்
தானங் கடந்தவுண்மைச் சைதன்ய நீங்காத
ஆனந்த மாம்பரமான் மா. (௧௪)

திருவாரும் பைங்கடம்புத் தேங்கண்ணி சூடி
வருவானே புள்ளி மயிலோன்—குருவாகிக்
கூடிக் களிப்பானே கோட்டாலை தீர்ப்பானே
பாடிப் பழிச்சுவார் பால். (௧௫)

என்றுமுள்ள கந்தவே ளிட்டபல னைப்புகித்
தொன்றென்னு நல்வீ டுறுகாறு—மொன்றனையும்

---

௯. மிடல்=வலிமை.
நாகம்=தேவலோகம்.
௧௧. வற்சலம்=தயை.
௧௪. சைதன்யம் - வடநூன்முடிபு.

எண்ணு திருந்துள் ளிதயநடு வேருகனை
எண்ணுவது தானே யிதம். (கக

மாமாய லோக மயக்கப் பெருக்கிற்காங்
காமாதி யாறையுங் கைவிட்ட—தூமாண்
பொறியாளர் சிந்தைப் புலத்திலெஞ் ஞான்றுஞ்
செறியாறு மேமந் திரம். (கஎ

வீட்டெண்ண மாட்டெண்ணம் வித்தாரம் பேசெண்ணந்
தேட்டெண்ண மாகவே செப்பனைத்து—மோட்டியருட்
கந்தன் குமரன் கதிர்வேலன் பாதநனி
சிந்தித்த லேநற் செபம். (கஅ

தந்தாரர் மக்களினந் தாரமும் வாழவெறு
எந்நாளும் பொய்புகன் றீட்டிவார்—தந்நேயம்
பண்ணுமன மோய்த்துப் பதியிளம் பூரணன்கால்
எண்ணியுயிர் வாழ்வதுதா னின்பு. (கக

வையம் புரந்துய்யும் வாட்பொருந ஞறுலும்
ஐயமெடுத் துண்பவனே யானுலு—மெய்யுணர்ந்து
தண்ணிருக்கும் பூங்கடப்பந் தாரான் பதப்போதை
எண்ணியிருக் கின்றதுதா னின்பு. (உ0

மாணிக்கப் பொற்குழையு மாசற்ற சண்முகமுங்
காணப் பசுஞ்சிகிமேற் காதலுளார்—காணவதி
உல்லாச மாகவரு மோமுருகை நாடியவா
இல்லா திருப்பதுவே யின்பு. (உக

நல்வினையுந் தீவினையு நாடா நடுநிலையில்
தொல்வினைக டயளவுஞ் சோர்வின்றிப்—பல்புவிவாழ்
மிச்சையிலா வாவிகளை மெய்க்காப்பில் வைத்தருள்சேய்
இச்சைவிடா துய்வதுவே யின்பு. (உஉ

காமமுங் கள்ளுங் கரப்பும் பராசனமும்
நேமவொண் சற்குருவி னிந்தையும்—பூமிதனில்
ஆற்றுவா ரோடுசேர்ந் தான்முனிவ ருக்குநனி
தோற்றுஞ் சகிக்கொணுத் துன்பு. (உந

உந. காப்பு=களவு.

பாாசனம்=கொலை; பராஸநம் என்பது வடசொல்.

விளைவென்ஞா னப்பொதிய வேந்தரையிற் காவி
புனையவிலே யென்றே புகன்றான்—முனைநந்தி
மார்க்கண்ட மாமுனிக்கு மண்டலத்தின் மும்மலமும்
வேர்க்கொண்டார்க் கேது விதி. (உச)

இச்சையொழித் தேசிவிளம் பூரணனுக் காட்படுநல்
நிச்சயசன் யாச நிலையறியாப்—பிச்சரெல்லாம்
நீண்டசடை முண்டனமாய் நீறுமணி காவியுடை
பூண்டறையும் யாவுமுழுப் பொய். (உரு)

தூக்கநிலை யிற்கண்ட சொப்பனம் போலவே
சாக்கிரமு மென்றறியாத் தன்மையர்தாம்—யாக்கையை
மெய்யென் பெயர்கண்டு மெய்யெனக்கொண் டேமெய்யைப்
பொய்யென்ப தேபெரும் பொய். (உசு)

மாக்காயம் வாக்கு மனந்தூய்மை யாய்நின்று
நீக்கா தெனைக்கொள்ளு நிர்மலவே—ளாக்கமருள்
பொய்யா வெழுத்தைப் புகன்றிவட் பொய்யாகு
மெய்யைமெய் யாக்கலே மெய். (உஎ)

நற்றொண்டர் கேண்மையு ஞானமும் வாய்மையும்
அற்பர்கட் கின்பமா யாராவே—சிற்சபையுற்
றுய்யவொரு சேய்நோன் புளுற்றுநர்க் காருமிது
மெய்மெய்மெய் மெய்மெய்மெய் மெய். (உஅ)

ஆக்கித் தரம்பார்த் தளித்துயிர்கள் யாவுமறு
போக்கோடு மீட்சி பொருந்தாம—லாக்கவடி
சேர்த்துக் கொளற்குள்ள தெய்வத்தைத் தான்மறக்க
நாத்திக ரல்லமே நாம். (உகூ)

ஆசற்ற வண்டத்து மாச்சரிய பிண்டத்தும்
மாசற்ற ஞான மணியாகித்—தாசர்க்குட்
பூத்துவிரி கின்றவருட் புண்ணியனைப் பொச்சாக்க
நாத்திக ரல்லமே நாம். (௩0)

நித்தக் குமர னினைப்போ ரகத்திருந்து
சித்தப் படிக்கருளுஞ் சீர்வள்ள—வித்தரையிற்
பஞ்சமூ றுற்றாலும் பாலித்திங் காட்கொள்ளும்
நெஞ்சே மயங்காம னில். (௩க)

உரு. சன்யாசம் – ஸந்ந்யாஸம் என்பது வடசொல்.

அருவா யுருவா யருவுருவ மாயெங்
குருவா யிலங்குங் குகேசன்—திருவடியின்
இட்டஞ் சதாவுள் ளிருக்கவுள் கிற்பட்ட
கட்டையுஞ் சேருங் கதி.

பூவின் மணம்போலப் புந்தியகத் தேமறைந்து
மேவிக் கமழும் விறல்வேலோய்—கூவியழும்
என்னெண்ணம் போன்முடியா தென்றூது மென்விரதம்
உன்னெண்ணம் போன்முடியா தோ.

[பின்முடுகு]

நினைத்தார் வினைத்தா னெரிக்குமரு ளைத்தா
வெனைத்தா வுனைத்தா வெனத்தா—வனத்தார்கள்
சேர்புவளர் மாதரசி சேர்தலைவ வாசிறலை
யேர்புமயி லேறிறைவ னே.

[முன்முடுகு]

ஞானவயில் வேலிறைவ நாகமயி லேறிறைவ
வானவர்பி ரானிறைவ மாலிறைவ—கோனிறைவ
என்று துதிப்பா ரிருமையு மேல்வாழ்க்கை
ஒன்றுவ ருள்ளே யுணர்.

[மொழிமாற்றுப்பொருள்கோள்]

காத்திற் சிலம்பிரண்டு காலி னெடுவேல்
உரத்திற் குழைசெவியி லொண்ணூ—லுரத்த
தலையிலரை ஞாணிடையிற் சார்முடியுண் டென்ப
மலைவிலர்மா தேவன் மகற்கு.

இதற்கு வேறாய், செய்யுட்கண் முதலினு மீற்றினு நிற்கு மொழிகள் தம் பொருளேக்க முடையனவாயுள்ள பூட்டுவிற்பொருள்கோள் நடையை, இவ் ந-வ்து பாவிலும், முதன்மண்டலத்திற் "பகலெல்லாம்" என்னும் சக-ஆம் ப தத்து கூ-கஎ-உஉ ஆம் வெண்பாக்களிலு மறிக.

[இரதபந்தம்]

இருள்பொருதா வம்பலச்சித் தென்னுமுரு காநீ
டிருவிண்ணோர் தேடுமருந் தேமாண்—பொருவாச்சீர்
தேசுதருஞ் செந்திநமுந் தீர்த்தவிற லோங்குசிதா
வாசிறந்த மாவின் பருள்.

---

கூச. சேர்தல்=அத்துவைதமாய் விரவல்.
தலை=பெருமை; "வியலுந் தலையு நெய்தையு மாவும்........பெருவ பெயரே" என்பது பிங்கலந்தை.

வா
தா சி கு
த வி ற லோ ங
த் ர் தீ ங் று ந தி
தி ர் தே சு தி ரு ஞ் செ ங்
ச் வா ரு பொ ண் மா தே ங் ரு ம டு
கா நீ டி ரு வி ண் ணே ர் தே
ரு மு னு ன் தெ த் சி
வ ம் ப ல ச்
தா ரு பொ
ள்
இ ரு

## உ. இன்னிசைவெண்பா.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்றுவருமொருவிகற்பம்.

உள்ளபடி யெவ்வுயிர்க்கு மோவலற்ற வன்னையப்பன்
வள்ளிகொழு நன்றானே மாறான் முடிபுமிது
வள்ளலவ னைத்தான் மறந்தொருவன் மற்றவர்க்குப்
பிள்ளையெனச் சொல்லல் பிழை.

இகலுலகி லீன்ற விருவர்க்குந் தாதை
வகைமுறையெண் ணிற்றே வரைபோ மொருவன்
தகவின் றிடைநீங்கு மன்னார்க்கே தன்னை
மகனென்று சொல்லல் வழு.

மேற்படி, * பலவிகற்பம்.

செய்தவினைக் கீடாகச் சேர்ந்திட்ட வன்னைபிதா
மெய்யையன் றுயா விளங்கா ரனைத்திற்கும்
ஈசுரனே யன்னைபிதா வென்றுணரா மேவேறு
பேசுவது மாதப் பிதம்.

வாளன்ன கண்மகண்மெய் வாழ்க்கைத் துணைவியல்லள்
வேளென்னு மெம்பெருமான் வேலோன் பதம்விழைந்து
நிற்பார்க் கனிச்சையே நித்தவாழ்க் கைத்துணைவி
அத்துணைவி வாய்ப்ப தரிது.

இரண்டாமடியிற் றனிச்சொற்பெற்றுவரு
மேற்படி, பலவிகற்பம்.

எச்சீவ னெச்சித்தி பெற்றாலு மென்றெய்வத்
தச்சன்போ லேதுந் தருமன்றி—யச்சிவம்போற்
பேரண்டஞ் செய்திடுமோ பேராருளை வென்றிடுமோ
நல்லுணர்வி னுய்ந்து நவில்.

விரிபுவன வத்துக்கண் மூலமா மேன்மான்
பெரிததனுன் மாயை பிரமங்—கருதுமறி
வில்லா வதற்கஃ திருக்கு முயிர்பிரமம்
அப்பிரமத் தின்மே லது.

---

* ஒன்றல்லனவெல்லாம் பலவென்பது தமிழ்வழக்கு.

அதுவாம் பரப்பிரம மான்மாவுக் கான்மா
அதனாலே யத்துவித மாகு—மிதுதானே
உண்மைச் சிவானுபவ முள்ளடங்கி நின்றீ
தறியா ரிரண்டொன்றென் பார். (௪௪)

மேற்படி, மூன்றாமடியிற் றனிச்சொற்பெற்றுவருவது.

தெவ்விறந்த தெய்வநா மென்போய்கேள் சிற்றறிவாம்
எவ்வுயிர்க்கண் ணுந்தே விருப்பதுபோ லுன்கண்ணும்
அவ்வரிய தேவுள்ள தாகலினீ—யவ்வுயிரு
ளொன்றெனவெண் ணிக்குகனை யுள்கு. (௪௫)

மேற்படி, அடிதோறுந் தனிச்சொற்பெற்றுவருவது.

ஆதாரமார் நெஞ்சு மதன்மூல—போதமுநற்
சாதனையி னிர்ச்சலனஞ் சாருமேற்—பேதச்
சரியைகிரி யாயோகந் தாண்டோர்—விரியறிவாம்
அவ்வறிவே யோஞ்சே யருள். (௪௬)

ஒரூஉத்தொடைபெற்றுவரு மேற்படி, பலவிகற்பம்.

ஞானமின் றேன்முத்தி நண்ணாது ஞானமும்
யோகமின் றேல்வந் துதியாதவ் யோகமும்
மெய்ப்பத்தி யின்றி விளையாது மெய்ப்பத்தி
இன்கருணை யின்றெய்தா தே. (௪௭)

இப்பாக்களானே, நான்கடியா யிரண்டாமடியிற் றனிச்சொற் பெற்றுவரு நேரிசை வெண்பாவிற் சிறிது பேதப்பட்டு வருவது இன்னிசைவெண்பா வென வறிக.

---

## ௩. பஃறொடைவெண்பா.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்று
ஐந்தடியான்வருமொருவிகற்பம்.

பத்தி மிகுமாயிற் பற்றொன்று மிங்கில்லை
பத்தி மிகுமாயிற் பண்ணரிய யோகதுவே
பத்தி மிகுமேற் பதிமுருகன் ஞானமெய்தும்
பத்தி மிகுமேற் பரமசுக முத்தியெய்தும்
சித்தமே யித்தைத் தெளி. (௪௮)

---

௪௬. ஆதாரம்=ஆசை ; சூடாமணி நிகண்டு காண்க.

மேற்படி, ஆறடியான்வரும் பலவிகற்பம்.

நாம்பிரம மென்று நவிலொருவன் வீணேமெய்
ஆம்பரம தேசிகனு வானேநன் னெஞ்சேசொல்
ஓங்குக வேளவன தொள்ளருள ருன்னினிங்ஙன்
நீங்குமல மெல்லா நிறைவுமுறு மாதவினோர்
ஏசி லுருவை யிதயத் தமர்த்தந்த
ஆசில் குணமுனக்கு மாம்.

மேற்படி, ஏழடியான்வரும் பலவிகற்பம்.

பிரமக் குழவியின் பேரருளிற் சித்தி
வருமே வராவிடினு மாகதிருன் ருதிதனுக்
கப்பூதி மெய்ப்பொருள ராறுய ரேறுதி
துப்பேறு நீலநக்கர் சோமாசி மாறாருட்
. சாக்கியர் வாயிலார் சத்தி குலச்சிறையர்
மூர்க்கர் முருகர் பெருமிழலை யார்மாறர்
காரிகண நாதர் கரி.

மேற்படி, பன்னீரடியான் இடையிடையே
தனிச்சொற்பெற்றுவரும் பலவிகற்பம்.

சின்மைசொல் செய்வயதிற் றேடியெனை யாளவந்த
பொன்மையயில் வேலோய் புகலக்கேண்—முன்னர்நான்
சென்றுசென்று நின்ற செயலெல்லாம் யோசிக்கின்
என்றனக் கேயிறும் பூதுண்டாய்—நன்றில்
விசன மவமானம் விஞ்சுமவை யெல்லாம்
உசிதமுள்ள நீதா ளொழித்துன்—சுசியடியே
ஏத்தியினி துய்யவென் றிட்டநன் றிக்காகத்
தோத்திரஞ் சொல்வேன் றொழுவேனுன்—கேத்திரஞ்
சென்றுசே வித்துச் செபிப்பேனின் றிருமெழுத்
தென்றனையு மந்திரமு மென்கோவே—பொன்ரு
வழிதந்து முன்சொற்ற வாக்கைநிறை வேற்றாய்
இழிவொன் றிலாதனைத் தே.

---

௪௧. சொல்=புகழ்.

## ௪. சவலைவெண்பா.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்றுவரு
மிருகுறளொருவிகற்பம்.

கூடவுஞ் சரணு யுதக்கொடியோய் கூரயிலோய்
யாவும் புரக்குமுனை யாப்பினவில்
நாவுந் தொழுமுடனு நாளுநினை யுண்ணெஞ்சுந்
தூவுண்ணுந் தோமுண்ணு வே. (௫உ)

மேற்படி, இருவிகற்பம்.

வளைதுகிலை வாயுடம்பைச் சுத்தியாய் வைத்துக்
கொளல்போலுள் வைத்துக் கொளநினைவோர்
உன்னை மறந்து மிருப்பாரோ வோகைதரற்
கென்னை விழுங்குமுரு கே. (௫௩.)

---

## ௫. சிந்தியல்வெண்பா.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்றுவரு
நேரிசைச்சிந்தியல் ஒருவிகற்பம்.

கேழ்த்தா ரகதேவைக் கேகயமூர் கேடிலியைத்
தாழ்த்தா தெனையாளுந் தாளானை—யூழ்த்திநிதம்
வாழ்த்தா திராதெனது வாய். (௫௪)

என்று மியலாதா வெண்ணுவது போற்செயவென்
றந்நா ளுறுதிசொன்ன வள்ளிலைவேன்—மன்னுர்வின்
எந்நாள் வருமோ வினி. (௫௫)

மேற்படி, இருவிகற்பம்.

நாற்றச் சரீரத்தை நன்குசெய வென்றுகுகன்
நீற்றினையெற் கிட்டானந் நேமத்தை—யாற்று
திருப்பேனோ வேழை யினி. (௫௬)

வெண்பொடியை யேயடியேன் மேனி மிசைத்திமிர்ந்து
கண்களிரண் டிற்குமிடைக் கைகாட்டி—நண்போ
டுரைத்தோ னெனைக்காவா னே. (௫எ)

---

௫௪. ஊழ்த்தல்=நினைத்தல்; தகரவேதுகை காண்க.

௫௬. நேமம்=நியமம் என்பதன் விகாரம். விதிமுறையெனும் பொருண்மைத்து; யகரவேதுகை காண்க.

பிறக்கும் பொழுதே பெயரொரு மன்புஞ்
சிறக்கவிதித் தேதன்னைச் சேர்ந்துய்—நெறிக்கணே
வைத்தருக ளாளனே வந்து. (ருஅ)

மேற்படியோசைபெற்றுவரும்
இன்னிசைச்சிந்தியல் ஒருவிகற்பம்.

பாராளும் வேந்தர்க்கும் பண்ணோர்பா வாணர்க்கும்
வீராதி வீரர்க்கும் விண்ணோர்க்கு மேயதிகம்
ஆரா ரயிலனடி யார். (ருகூ)

மேற்படி, இருவிகற்பம்.

எமக்கபரா தம்புரியி னுஞ்சகிப்போ மெந்தம்
அடியர்க் கிடுமபரா தஞ்சகியோ மென்றல்
செடியறுசேய் வாக்கதனைத் தேர். (கூ0)

மேற்படி, பலவிகற்பம்.

இருட்டை யருவருத்திங் கெல்லொளிக ளிச்சிக்கும்
பெற்றியுள்ள நெஞ்சே பிறங்கொளியெல் லாஞ்சடமா
மென்றுருகச் சோதிவிரும் பே. (கூக)

இங்கு வந்த ருகூ – கூ0 – கூக ஆம் பாக்களானே, மூன்றடியாய்த் தனிச்சொற் பெற்றுவரு நேரிசைச்சிந்தியற்குப் பேதமாய்த் தனிச்சொற் பெறாது வருவதே யின்னிசைச்சிந்தியலென வறிக.

---

## கூ. குறள்வெண்பா.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்றுவரும் ஒருவிகற்பம்.

இருட்டளையின் * றியாதனையின் றேயிருக்க நெஞ்சே
கருத்திற் குமாற் கருது. (கூஉ)

*இங்கே காய்முன் நிரைவந்து கலித்தளையாய் வெள்ளைத்தன்மை குன்றுதலின், "சீருந்தளையுஞ் சிதையிற்சிறியஇஉஅளபோ – டாருமறிவரலகுபெறுமை" எனவரு **யாப்பருங்கலக் காரிகை** விதியானே குற்றியலிகரம் அலகுபெறாதென வதனைக் களைந்து மெய்போற்கொண்டிடுகால், முதற்சீர் : வெண்டளைபெறுமாறறிக. குற்றியலுகரம் வரினு மிவ்வாறேகொள்க. அன்றி, இவ்வுகரங் குற்றெழுத்தேபோனின் றலகு பெறுதலை யிதன்பின்னுள்ள செய்யுளின்கண் "வெனக்கென்று" என்பது மேல் விதிப்படிப் புளிமாவாகாது புளிமாங்காயாகி நிற்றலினுணர்க. "வந்துநீ சேரி னுயிர் வாழும்" எனவரு ‡பிறரது வெண்பாட்டினுள்ளும் 'வந்துநீ' என்பதிலுள்ள குற்றுகாமு மவ்வாறலகுபெற்றுக் கூவிளமென நிற்றல்காண்க. இவ்வாறு குற்றியலிகாமும் அலகுபெறுமென்றறிக. ஓசைநயம்பற்றி, இவ்வாறலகுபெறுதலே, இந்நூற்குப் பெரும்பாலுமுடம்பாடு.

தூஉ விசாகாவுன் றேமற்ற நல்லருளைத்
தாஅ வெனக்கென்று தாழ். (௬௩)

இதில், "தூஉ" "தாஅ" என அளபெழுந்தனவுளுள்ள குறில்கள்: "நெடிலொ டுன்றொடு நட்டளபாய்விடினேர்நேர்" எனும் யா - காரிகையின்படி நேரசைகளாகி யக்
கிருசீருந் தேமாவாயினமை காண்க.

களிப்போஒ* களிப்பென்று கூறிவில் லார்சே
யொளிப்போத ரன்னவர்சார் புய். (௬௪)

* இதில், காய்முன் நிரைவந்து கலித்தளையாதலின், இங்ஙனம் அளபெடையல்கு
பெறுதெனும் விதியாலதனைக் களைந்துழி முதற்சீர் புளிமாவாகி வெண்டளைபெறுமா
றறிக.

பொய்ய் விழியிச்சை பொன்னயிலோன் றண்ணருளின்
மெய்ய் விழியில்லார் மேற்று. (௬௫)

இதில், அளபெழுந்த ஒற்றெழுத்துக்கள் "ஒற்றளபாய்விடினேரலகாம்" எனும்
யா - காரிகையின்படி, குறின் மாத்திரை பெற்று நேரசையாகித் தேமாவாயினமை
காண்க.

எஃஃஃ கயிலேந்து மெந்தை திருவடியை
வெஃஃஃ குவார்க்கில் வெறிது. (௬௬)

இதில், அளபெழுந்த ஆய்தவெழுத்துக்கட்கும் மேல்விதி கொள்க.

மேற்படி, கூன்பெற்றுவருவது.

சததம்—குகனே குகனே குகனேயென் றோதிற்
சுகமே சுகமே சுகம். (௬௭)

இதில் "சததம்" என முதலிற் கூன்வந்தது. இதனைத் தனிச் சொல்லெனவுங்
கூறுப. இதனால் வெண்பா: இடையுங் கடையுங் கூன்வரப் பெறுதெனக் கொள்க.

பிறப்பென்னும் வாய்பாட்டான் முடிபவை.

துப்புரவு நாடுயிரே சுப்பிரமண் யத்தின்மேல்
எப்பிரம முள்ள தியம்பு. (௬௮)

சிறுருவைப் பேருருவாச் செய்யு மதைமறைக்கும்
நீறுகொண்மெய்ச் சேயோர் நினைப்பு. (௬௯)

ஆயு மிகவோங் கரிபிரமர் வாழ்வளப்பில்
சேயுருவன் வாழ்விற் சிறிது. (௭௦)

---

௬௪. ஞானிகள், "ஞானம் எம்பாலுளது" எனக்கூறி விற்கமாட்டார்கள் என்பது
இச்செய்யுளில் வெளிப்படுதலின் அஃதெதத்துணை இரகசியத்தது? எவர்பாலுளது? என
வறிதல் முழுமகனுக்கு மெளிதாமோ?

# திருவலங்கற்றிரட்டு.

காவென்னும் வாய்பாட்டான் முடிபவை.

திண்மைத் திருவருள்சிந் திப்போ ரெவர்க்குஞ்சேய்
வண்மைத் தரிசனமே மாண்பு.

இறந்துபிற வாக்குழவி யெந்தையறி யார்க்கில்
சிறந்த சிவானுபவச் சித்து.

என்னறிவா யாண்டு மிருக்குமொரு சேயென்னும்
மின்னறியார்க் கில்லையுயர் வீடு.

காறில் சிவயோகக் காட்சியுளா ரெவ்வருக்கும்
ஊறில் குகனருடா னுண்டு.

கேழார் திருமேனிக் கேடிலியின் சேயவனைத்
தாழாத தெய்வமுண்டோ சாற்று.

அல்காத வோங்கந்த ளுகமவ னன்பர்க்கேன்
பல்கா தருளறிவே பன்னு.

நாளென்னும் வாய்பாட்டான் முடிபவை.

சிவஞ்சத்திக் கன்னியமாச் சேயை யுரைப்போர்
பவம்பற்றிப் பாசறைகொள் வார்.

சேய்நீயு நானுமே யோமென்று செப்பினன்
பாய்மா வுரியணிநம் பன்.

நன்று ரணஞ்சொலல்போ னற்குமர நானேநீ
என்றான் பரமசிவ னே.

மலரென்னும் வாய்பாட்டான் முடிபவை.

ஆதியில்சே யாண்மை யளப்பவரா ரென்றறியும்
ஓதுரைகள் காந்தத் துள.

ஓதியுணர் வோய்சேய்விட் டோமறையா கங்குருவுஞ்
சோதியு முண்டோ சொலாய்.

அருக்கம் புனைபவன்சேய்க் கன்னியம தாக
இருக்கும் பொருளொன் றிலை.

மடற்போதன் மான்முதலோர் மாமுருகெண் ணுரேற்
கடப்பாரோ துன்பக் கடல்.

விளங்கயன்மால் விண்டு படைகளிருந் தென்சூர்ப்
பிளந்ததவன் வேலே பிற. (அச)

புகவற்குச் சேய்சிறிதென் பார்க்கு விகார
வகநிற்கு மைந்து மறு. (அரு)

மேற்படி, இருவிகற்பம்.

ஒன்றை யிரண்டு செயுமிரண் டொன்றுசெயுங்
கொற்றக் குமார குரு. (அசு)

இதுகாறும், காய்முன் நேர்முதலாகிய காய்ச்சீர்வரு வெண்சீர்வெண்டளையாய ஏந்திசைச்செப்பலோசைபெற்றும், மாமுன்நிரைமுதலாகிய மாஞ்சீரும் விளஞ்சீரும் விளமுன் நேர்முதலாகிய மாஞ்சீரும் விளஞ்சீருமாகவரும் இயற்சீர்வெண்டளையாய தூங்கிசைச்செப்பலோசை பெற்றும், மேலிருதளை விரவியும் மாமுன் நிரைமுதலாகிய புளிமாங்காய் கருவிளங்கா யெனப்படு சீர்களும் விளமுன் நேர்முதலாகிய தேமாங்காய் கூவிளங்கா யெனப்படு சீர்களும் வரு மியற்சீர்வெண்டளை கலந்தும் நிகழு மொழுகிசைச் செப்பலோசைபெற்றும் வந்த பாக்களானே வெண்பா: வெண்டளையன்றி வேற்றுத் தளைவரப் பெறாதெனவும், வெள்ளடி: அளவடியாம் நாற்சீரின் மிக்குவருவதில்லை யெனவும், வெண்பாவுக்குச் சிறுமை யிரண்டடியே யெனவும், எல்லா வெண்பாவுக்கு மீற்றடி முச்சீரேயா மெனவும், அவற்றினீற்றுச்சீர்: இவ்வியல் ௩அ - முதல் அ௩ - வது பாவரையுங்காட்டிய வாய்பாடுகளானே முடியுமெனவும், முச்சீர்கொண்ட வெள்ளடியி னீற்றுச் சீர்க்கண் மோனையெழுத்தல்லது அதனினவெழுத்து வருதன் மிக்கழகெனவும், வெண்பாவுக்கும் அதன் கடையடிபோனடக்குஞ் சில செய்யுள்களுக்குமே யீற்றுச்சீர்: நாள் மலரெனும் ஓரசையானு நிகழு மெனவுமுணர்க. கலிவெண்பாவைக் கலியியலிற் காண்க.

வெண்பா முற்றிற்று.

---

# வெண்பாவினம்.

---

## க. தாழிசை.

தாழிசைக்குறளென்னுங்குறட்டாழிசை.

இரண்டடியாயீற்றடிகுறைந்து
நாற்சீரின் மிக்கபலசீரான்வருபவை.

திங்கை மைந்தனல் வேல னீகதி
காணு மாறவன் கால்கட் கன்றலர்
தூங்க மாமலர் சாத்தித் தோத்திரஞ் சொல்லுவலே. (அஎ)

பொய்சொ லேலினிப் பொய்சொ லேலெனப்
பொன்னி னுவசைத் தோதி யேகிய
துய்ய சேயடி சேர மாதுதி சொல்லுவலே. (அ

சீற்ற வென்னகஞ் செவ்வி தாஞ்சமஞ்
சேர்ந்து சண்முக வாளென் றேகவி
சாற்ற வேவவன் பாத மாமலர் தாழுவலே. (அ

பெண்ணி னார்வமு மண்ணி னார்வமும்
பிள்ளை யார்வமுங் கண்டு போதுமென்
றண்ணல் சண்முகன் பாத வார்வ மழுந்துவலே. (கூ

நாக ராக்கமுந் தேவ ராக்கமு
ஞால வாக்கமு நச்சி டாதுயர்
நாக நாயகன் சேந்தன் சேவடி நச்சுவலே. (கூ

அன்பர்க் கன்பின ளுமை ளுமய
வாறு மாமுக னன்பு கூர்ந்தபின்
கன்மத் தான்வரு மாதர் காமருங் கைத்ததரோ. (கூ

ஆரற் பூதர நாமத் தான்றெழு
மாதி சொன்னல வாய்மை கண்டபின்
பாரப் பூமியின் மோகப் பாடு படிந்ததரோ. (கூ

தொண்டர் செய்மனுக் கண்ட ருள்செயுஞ்
சோதி வேலிறை யெந்தை தண்ணளி
கொண்ட பின்றமி யேன ரந்தைகள் குன்றினவே. (கூ

குறள்வெண்செந்துறையோடு மாறுபட்டுவருஞ்
செந்துறைச்சிதைவுத்தாழிசைக்குறள்.

இன்பக் கடலா விலகொரு சேயவன்
அன்பிற் பெரிய வடியவர்க் கெளியோன். (கூ

செப்பலோசை சிதைந்துவருந்
தாழிசைக்குறளென்னுங் குறட்டாழிசை.

இன்று சரவணப வாயநம வெனநாவே
அன்றென்செய் தாயோ வறம். (கூ

பிறப்பிறப் பில்லிமகன் பிறவா னிறவான்
றிறத்தவவன் சீடருமன் னர். (கூ

பொய்யா மொழிப்புலவ னுணைப் புகலும்
நையா விலீலேவே ணு. (கூ

கo. ஆர்வம் = ஆசை.

வெண்டாழிசை யென்னும்
வெள்ளொத்தாழிசை.

மூன்றடியா யீற்றடி வெண்பாவேபோல முச்சீரா
யாசிரியத் தளையான் வருபவை.

பார்வி சும்பும் படர்ந்து நிற்பான்
நார்கொ ளன்பர் நண்பு வப்பான்
சீர்கொள் வேற்கைச் சிவன். (கூகூ)

நாளுந் தாளை நாடு வாரை
நீளுந் தூய்மை நிறுவிக் கொள்வான்
கோளுண் ணாத குகன். (க00)

சனக ராசன் சாமி தம்பி
அனக வாளென் பார்க ணிற்பான்
கனக வேல்கொள் கரன். (க0க)

கடிகொ ணீபங் கமழு மார்பா
அடிகொ டாயென் பவர்கண் ணூர்வான்
முடிவி லாச்சண் முகன். (க0உ)

உடலி ருப்பா னுயிரி ருப்பான்
இடையி ருப்பா னிடர றுப்பான்
வடமி ருப்பான் மகன். (க0ங)

நன்றி ருப்பா னவையி ருப்பான்
மன்றி ருப்பான் மகனு வர்க்கார்
என்று முய்மீ னென. (க0ச)

நன்று மில்லி நவையு மில்லி
கன்ற லில்லி கருத லில்லி
வென்றி வேற்செவ் வியன். (க0ரு)

ஒன்றி லொன்றில் லாமை யோதின்
வென்றி வேளை வினைதொ டாதஃ
தென்று மன்னோ னிரான். (க0சு)

---

க0ச. உவர்க்கார் = உப்புநீர். இதன்கண் வசிக்கும் மீன் உடலிலுப்பேறா திருத்த லென நன்றுந் தீதுமாம் உலகபந்த நீத்திருப்பவன் சேயவனாகலின் அவன் "உவர்க்கார்" "உய்மீன்" போல்வானெனக் கூறப்பட்டனன்; என்க.

சித்தெ னுஞ்சேய் திரள சித்து
வத்து வாகா னதுவு மாணவ்
வத்த ஞகா தரோ.

சித்த சித்தாத் தெரியு மென்னிற்
சித்தின் மாயை யாருஞ் செவ்வேள்
சித்தி னின்றே தெளி.

ஆற்ற லிவ்வி கார மந்தத்
தோற்ற மென்னிற் றாய்தின் றெம்மான்
ஊற்ற நின்றே யுணர்.

இன்னிசைச்சிந்தியல்வெண்பா
ஒருபொருண்மேன்மூன்றடுக்கிவரும்
வெள்ளொத்தாழிசை.

தேனார்பே ரின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
ஞானனந் தச்சேயை நாடிநலங் கொள்ளாமே
ஏனோநா நிற்க விவண்.

மூற்றற்ற வின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
வெற்றிக்கை வேற்சேயை நாடிநலங் கொள்ளாமே
எற்றுக்கு நிற்க விவண்.

தீதற்ற வின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
கோதற்ற வேற்சேயை நாடிநலங் கொள்ளாமே
ஏதுக்கு நிற்க விவண்.

---

## உ. துறை.

விழுமியபொருளுமொழுகியவோசையுமாய்வருஞ்
செந்துறை வெள்ளையெனுங்
குறள்வெண்செந்துறை.

கந்தன் பாத கமலத் துகளுளோன்
றந்த மிலாப்பே ரண்ட மாமே.

உலகா மாயைக் கிருக்கை யோங்குகன்
அலகி லடியா மருட்சன் னிதியே.

---

௧0௧. ஊற்றம் = பற்றுக்கோடு; "கருதுபற்றுக்கோடூற்றம்" என்பது சூ - நி

ஈற்றடி யிரண்டு மிரண்டுசீர் குறைந்து வரு
மூன்றடி யோரொலி வெண்டுறை.

தேவரிறை யாய்மிளிருஞ் சேயவனீ செய்துள்ள புவனந் தானே
மாவதிச யங்கட்கு மன்னுகரி யென்றறியார்
நாவிறைவ னற்புதமிஞ் ஞாலமிசை யென்னெனுமே. (௧௧௩)

மேற்படி, நான்கடியோரொலி வெண்டுறை.

இறையெனவே திருவினையே திருவினையி னுயிரேதென் றியம்பு கின்ற
கறையணையுங் கடவுளென வொருவனுள னெனுமார்க்கி காதற் சேயாய்
அறிவொடுநீ யமைக்கினவ னும்பரனுண் டென்பானென்
றறிவலியோர் சிறிதுமிலர்க் கயிலோயென் புகல்வேனே. (௧௧௪)

முதலிரண்டடியும் அறுசீரா யோரோசை புடையனவாய்ப்
பின்னடியைந்தும் நாற்சீராய் வேறோசை யுடையனவாய்வரும்
ஏழடி வேற்றொலி வெண்டுறை.

அகிலநிரை தருவதற்குங் காப்பதற்கு மாய்ப்பதற்கு மயனஞ் சாவும்
விகிர்தமுமி லொருபுத்தே ளுண்டென்றல் பொய்யெனவே விளம்பி யிந்தச்
சிலைமதவே ளம்பிற் சிந்தைநித நைவோர்
தொலைவறுமா னந்தந் துய்க்கவறி வாரோ
கலைஞரவாங் கந்தன் காமாடி நேடு
நிலையுமறா வன்பு நித்தலுமுள் ளோரே
மலைவறுபே ரின்ப வாரிபடி வாரே. (௧௧௫)

இங்ஙனம்வந்த ௧௧௩, ௧௧௫ ஆம் செய்யுள்களானே வெண்டுறை: மூன்றடிச்சிறுமையு மேழடிப்பெருமையு முடைத்தென வறிக.

---

## ௩. வெளிவிருத்தம்.

வெண்டளையான் மூன்றடியாத் தனிச்சொற்பெற்று வருபவை.

தேமா காய் காய் காய்—தேமாந்தண்பூ.

சேவற் கொடியெம்மான் செப்பாதொான்
றோர்வேனோ—வென்செய்கோயான்
ஏவிக் குகனருண்மே லேற்றுதா
ளாவேனோ—வென்செய்கோயான்
பாவுக் கருள்குமரன் பாரானே
லுய்வேனோ—வென்செய்கோயான். (௧௧௬)

தேமா கருவிளங்காய் தேமா கருவிளங்காய்—தேமாந்தண்பூ.

கந்தன் சுகங்கருதுங் காதன்
மலிந்ததிங—னென்செய்கோயான்
சொந்தங் கவர்ந்தணையுஞ் சோகம்
பிறந்ததிங—னென்செய்கோயான்
வந்தென் றலைவனவன் மாலாய்
மருவிலனே—யென்செய்கோயான். (கககள)

வேறுதளையா ஞன்கடியாத் தனிச்சொற்பெற்று வருபவை.

கூவிளம் மா மா மா—தேமாங்காய்.

*ஏமருள் சவ்வும் ரவ்வு மவ்வு—மெங்கோமான்
மாமலி ணவ்வும் பவ்வும் வவ்வு—மெங்கோமான்
ஓமொடு ரீயு மையுங் கிலியு—மெங்கோமான்
ஆமயம் வெல்லு மௌவுஞ் சௌவு—மெங்கோமான். (கககஅ)

புளிமா புளிமா புளிமா புளிமா—தேமாங்காய்.

தனியாய் வருவான் சவையாய் வருவா—னெங்கோமான்
முனியாய் வருவான் முருகாய் வருவா—னெங்கோமான்
தொனியாய் வருவான் சுரனாய் வருவா—னெங்கோமான்
மனுவாய் வருவான் மயிலே றியெனு—மெங்கோமான். (கககூ)

முதற்சீர்: தேமா.

வானா டிருப்பான் வளியூ டிருப்பா—னெங்கோமான்
கானா டிருப்பான் கடலூ டிருப்பா—னெங்கோமான்
ஊனா டிருப்பா னுயிரூ டிருப்பா—னெங்கோமான்
ஆனா டிருப்பா னயிலா ளியெனு—மெங்கோமான். (கஉ0)

கூவிளம் தேமா கூவிளம் தேமா—தேமாங்காய்.

மண்டல மாளு மந்திர மாளு—மெங்கோமான்
விண்டல மாளும் விண்முழு தாளு—மெங்கோமான்
முண்டக மாளும் விண்டுமொய் யாளு—மெங்கோமான்
வெண்டட மாளும் வேலிறை யான—வெங்கோமான். (கஉக)

முதற்சீரு மூன்றாஞ்சீரும், கருவிளம்.

மகமுத னதன் வழுவறு வேத—னெங்கோமான்
துகளறு போதன் றுதிநுகர் காத—னெங்கோமான்
குகவடி யீயென் பவருரை கொள்வோ—னெங்கோமான்
புகழ்பவர் நேசன் புகழ்முனி யீச—னெங்கோமான். (கஉஉ)

வெண்பாவின முற்றிற்று.

**க - வது வெள்ளியன் முற்றிற்று.**

---

* ஏமமென்பது ஏமெனநின்றது. ஏமம்=களிப்பு.

# ௨ - வது ஆசிரியவியல்.

---

## க. நேரிசையாசிரியப்பா.

ஈற்றயலடி முச்சீரா யேனையடி நாற்சீரா
யேந்திசை யகவலோசையான் வருபவை.

நேர்+நேர்=தேமா.

வேத நாதன் வேலேந் தெம்மான்
பாதஞ் சூழ்வோர் பார்ப்பார்
ஓதை வேதத் துண்மை யன்றே. (க)

இதனானே யாசிரியப்பா : மூன்றடிச் சிறுமை யுடைத்தென்பதறிக. பெருமை யெத்துணைத்தெனின்,—" உரைப்பா ருள்ளக்கருத்தி னளவே பெருமை." என்பது யா - காரிகை. ஆதலினளவின்றென்க. மாமுன் நேர்வருவது நேரொன்றாசிரியத்தளை. அதுவே யேந்திசையகவலோசை.

சொல்லா னுண்மை சொல்லும் வேத
மெல்லா மேத மில்லாக் கன்ம
காண்ட ஞான காண்ட மாமந்
நீண்ட பாகந் தம்மு ணெய்தை
௫. யாதி யில்லா வஃது நீயென்
றோது சாம வோத்து வாக்கைத்
தன்பா லுள்ள சால்பிற் றன்பி
னன்கார் ஞான நாட்டிக் கூறும்
ஆக மந்தா னுன்மா வீசன்
௧௦. ஏக மில்லை யோக மென்றே
சாற்று கின்ற சால்பிற் றிந்தக்
கூற்றி ரண்டுங் கோதில் சோஹஞ்
சிற்சி வோஹ மென்று தேற

---

க. சூழ்தல்=ஆராய்தல் ; நினைவுமாம் ; ஆ - நிகண்டு நோக்குக.

௨. நெய்தை = பெருமை. ஆதி = முதன்மை. அனுபக்ஷமாய்ப் பெருமை முதன்மைகளை விரும்பு முயிராயுள்ள நின்னோடு விராய் நிற்பது அவ்விருப்பில்லா "அது" எனும் பரம்பொருளாகலின் அஃதும் நீயென வோதுதல் வேதசம்மதமென்பார் " அஃதும் நீயென் றோது சாம வோத்து வாக்கு" என்றாரென்க. ந-வது மண்டலத்தைச் சார்ந்த பரிபூரணானந்த போத முதற் படலத்து ௧௧௦-ஆஞ் செய்யுளுரையிலுள்ள மகாவாக்கியப் பொருள்களை யுணர்கவென்க.

நிற்ற லாலோங் கார நீர்மை
கரு. யாக மத்து மார ணத்தும்
ஏக மென்றே யெண்ணி நின்பால்
நானு நின்றே னட்பின்
ஈன மில்லே லேங்கெதந் தாயே. (உ)

மேற்படி, தூங்கிசை யகவலோசையான் வருவது.

நிரை+நிரை=கருவிளம்.

துவம்பத பசுமலந் துமித்துயர் சமாதியில்
அவமிறத் பதப்பதி யடங்குத லசிபதம்
எனப்பகர் மகாமொழிப் படியுறு மிருங்கதி
மனச்சுழ விறப்பினில் வருமெனல் சாதமத்
ரு. திரமதி லெனவிடச் சிகியிவர்
பிரணவத் திருவுருப் பெரியைநீ யருடியே.

விளமுன் நிரைவருவது **நிரையொன்றாசிரியத்தளை.** அதுவே தூங்கிசை யக
லோசை.

மேற்படி, ஒழுகிசை யகவலோசையான் வருபவை.

முதலடி : நேர்+நிரை=கூவிளம், நிரை+நிரை=கருவிளம்,
நிரை+நேர்=புளிமா, நேர்+நிரை+நேர்=கூவிளங்காய்.

நீயெனுந் துவம்பத நிலையா *காமியமும்
மாயமே வாணவ மலமு மொழியும்
அதுவெனுந் தத்பத மதிற்சஞ் சிதமும்
மதமலி மாயா மலமு மொழியும்
ரு. ஆயினை யென்னு மசியிற் பிராரத்தம்
ஓய்வறு கன்ம மலமு மொழியும்
என்பா ருரியோ ரெனக்கும்
அன்போ டத்திற மளியருட் குகனே. (க

* இங்ஙனம் தேமா புளிமா கூவிளம் கருவிளமெனும் ஆசிரிய வுரிச்சீரல்லா
காய்ச்சீராகிய வெண்சீர் வாலாமோவெனின் ; "அகவலகத்தும் தாஞ்சீர் மயங்கும் தளை
மதே." என்பது யா – காரிகை. ஆகலினெரோவிடத்து வாலாமென்க. "பின்னு
பிணியவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்" என்றார் பிறருமென்றறிக. நேரொன்றாசிரிய
தளையும், நிரையொன்றாசிரியத்தளையும் விரவுவது ஒழுகிசை யகவலோசை.

## உ. இணைக்குறளாசிரியப்பா.

ஈறு முதலுமொழிந்த விடையடிகளுட் சிலவற்றைக்
குறளடியாகவுஞ் சிந்தடியாகவுங் கொண்டு வருவது.

அறைந்த—துவம்பத நிலையிற் றெல்லிருள் கெடுத்தே
நவம்பகர் நற்சுசி
தாமெய் தியேயத் தத்பத
ஞானதே வருளி னனிநின் றிறையறிந்

ரு. தவத்தையி லசிபத
* சிவத்தி லடங்கியச் சிவசமா னஞ்சொ னல்ல
அத்து விதந்தா ளுகு
முத்தி யபர முத்தி யிலையது
பரமுத் தியேயப் பரத்துவ
கo. உரமெற் குமருடி யோங்குக வேளே. (ரு)

இதில் "அறைந்த" என அடிமுதற்கட் கூன்வந்தமையின், ஆசிரியப்பா இடையுங் கடையுங் கூன்வரப்பெறுமெனக்கொள்க. என்னை? "அடிமுதற் பொருளைத் தானினிது கொண்டு—முடிய நிற்பது கூனென மொழிப" என்பது யா—காரிகையுரைவந சூத்திரமாகலின்.

* இவ்வாசிரிய வடியில் ஐஞ்சீர் வரலாமோ வெனின், "வெண்டளை விரவியு மாசிரி யம் விரவியு—மைஞ்சீரடியு முளவென மொழிப" என்பது தொல்காப்பியம். "அருகிக்கலியோ டகவன் மருங்கி னைஞ்சீரடியும்—வருதற்குரித்தென்பர் வான்றமிழ் காவலர்" என்பது யா—காரிகை. ஆகலி னைரோவிடத்து வரலாமென்க.

---

## ங. அடிமறிமண்டிலவாசிரியப்பா.

எல்லாவடிகளையு மாறிமாறி யுரைக்க வோசையும்
பொருளும் பிழையாது வருபவை.

தொம்பத நிலைதான் றெல்லத் துவிதமே
அம்பதி நிலைதா னருளத் துவிதமே
பம்பசி நிலைதான் பரமாத் துவிதமே
எம்பி ரான்சே யெனைச்சே ரசியிலே. (சு)

முத்திக் குற்பவ முதலினுக் கிரண்டே
முத்திக் குற்பவ முயலிடைக் கொன்றே
முத்திக் குற்பவ முடிவிற் குற்றதே
முத்தி யுயிர்மெய் முதல்வ னுயிரே
ரு. முத்தி முதற்குக முடிமுற் றெனையே. (எ)

இச்செய்யுள்களான், ஆசிரியப்பா நான்கிற்கும் ஏயெனு மசையா னிறுதல் சிறப்புடைமையும், ஒ-ஈ-ஆ-ஐ முதலியவற்றா னிறுதல் சிறப்பின்மையு முண்டெனவுணர்க. இவ் வடிமறிமண்டில நடையையே அடிமறிமாற்றுப்பொருள்கோள் என்ப.

---

## ச. நிலைமண்டிலவாசிரியப்பா.

முற்று மளவடி கொண்டு முடிபவை.

சிவாக மத்தைச் சேர்ந்த தாய
சிவதரு மோத்தாஞ் செப்பு மாறு
பிரகிரு தியின்மேற் பிறங்கப் பிராகிருத
பரசிவ லோகத் தின்மேற் படரும்
ரு. மகேசதத் துவத்தில் வடிவே ழுங்கு
குகேச னுலகாக் குறிக்குங் குமாரன்
உலக மதன்மே லோகைசால் சத்தி
உலக மதன்மே லுயர்சிவ லோகம்
உளவவ் வுயர்சிவ லோக முறுநர்
க0. விளைபுவி தோன்று றெனக்குக வேளே
பொதிய முனியெனும் புனிதற் கோதினன்
அதனாற் குமாரன் கதிகீழ் நிலையெனிற்
கூறுது நீயிர் தேறு மாறதை
ஈறறு குமார னூறறு சிவத்தைச்
கரு. சத்தியை நீங்காச் சச்சிதா னந்த
வத்து வென்னுஞ் சத்திய முணரா
துருவகை யானே பிரிவினை செய்யூப்
பரவு முயிர்கண் மருவு கதிப்பொருட்
டச்சே யுலகு மச்சிவை யுலகும்
உ0. மிச்சை யின்றி விளம்பப் படுமவை
போலச் சிவவுருப் போற்று நர்க்கும்
மேலுரைத் திட்ட கோலவப் பிராகிருத
சிவலோ கப்பயன் றெரிக்கப் படுமால்
இவையிழுக் கென்றறி நவையறு புந்தியர்
உரு. உருவான் மூன்றும் பேத முண்மையில்
ஒருமை நிலையென் றுய்த்தினி தோர்ந்தே
போதமி னிட்டையிற் பேதமி றரிசனம்
ஆதலைச் சேயெனு வறிபவ ரப்பொருள்
ஆக விளங்கி யழிவுதிப் பென்னுந்
ங0. தோக மிகந்துய் வாரே சுருதி
பெரிய சிவஞ்சுப் பிரமணி யப்பொருள்
ஒருசிறி தும்பே தம்மிலை யுணரின்
எனலா னெந்தை யிருங்குக தேவை
நனிதொழு துய்திர் ஞாலத் தீரே.

எதிலே நீளமோ வதிலே யகலமும்
எதிலே யகலமோ வதிலே நீளமும்
எதிலே கனமோ வதிலே நீளமும்
எதிலே நீளமோ வதிலே கனமும்
ரு. எதிலே யகலமோ வதிலே கனமும்
எதிலே கனமோ வதிலே யகலமும்
உண்டன் னணமே யுணரின் முறையே
எங்கே யறிவோ வங்கே யுண்மையும்
எங்கே யுண்மையோ வங்கே யறிவும்
க0. எங்கே யின்பமோ வங்கே யறிவும்
எங்கே யறிவோ வங்கே யின்பமும்
எங்கே யின்பமோ வங்கே யுண்மையும்
எங்கே யுண்மையோ வங்கே யின்பமும்
எங்கே சிவையோ வங்கே சிவமும்
கரு. எங்கே சிவமோ வங்கே சிவையும்
எங்கே சேயோ வங்கே சிவையும்
எங்கே சிவையோ வங்கே சேயும்
எங்கே சேயோ வங்கே சிவமும்
எங்கே சிவமோ வங்கே சேயும்
உ0. ஆமென் றறிபவர் தாமே யறிஞர்
போமுன் றெறிவீர் பூமியு ளீரே. (சஉ)

அறுதி சிவத்திற் கறுதி மகன்சேய்
அறுதி யச்சேய்க் கறுதி யுயிரென
உள்ளவை பொதுமையிற் பிள்ளைக ளாமால்
கள்ளமி லருளைக் கொள்ளுயி ரெல்லாம்
ரு. பொக்கமில் சிறப்பு மக்க ளாமால்
இக்குண முளர்தாந் துக்கமில் சிவத்திற்
கென்றும் பௌத்திர ரென்று வாரால்
என்றோர்ந் துலகீர் குன்றீர்ந் துளவேல்
அத்தற் கினிய புத்திர ராகி
க0. முத்தி யின்பந் துய்த்துய் வீரே. (க0)

வள்ளுயிர்க் குயிரா யுள்ள குகேசற்
கற்புடை மைந்தரா நிற்குநர் தாமே
சூர்தருங் கோர மார்கவின் கோரம்
அதிகோ ரங்கோ ரதரங்கோ ரரூபம்
ரு. தாள தரங்கோள் பெருகு பயாநகம்
காள ராத்திரி நீளிய பயோற்கடம்
சண்டமா சண்டஞ் சண்டகோ லாலம்

சண்டதாஞ் சரோருக மண்டுசெ லசவதி
வீமம் பெரிதென் வீம வீடணம்
க௦. கரளம் விகரள முராணுறு குலிசம்
இடர்முக் கோணம் படரைங் கோணம்
விரிதீர்க் கதரம் பரிவர்த் துளமே
ஏழு நிலமே சூழெண் டலமே
தீர்க்க வொளிமயல் சேர்க்கு மாயை
கரு. எனுமிரு பத்தெட் டனுளொன் றிற்கொன்
றதோமுக மாகப் பொதிர்பல் கோடி
நரகமு ளதையு மருவா துயர்நிலை
அண்மி வாழும் புண்ணிய ராவார்
இமைக்கு முன்னர்த் தமக்குத் தாமே
௨௦. தீங்கு தேடும் பாங்கிலர் போலச்
சிவமைந் தனையு மவனன் பரையும்
இகழும் வினையின் மகிழுஞ் சிதடர்
முன்பி னீட்டிய நன்கு மிழந்து
சொல்லிய நரகெலாஞ் செல்லுந ராவார்
௨௫. ஆதலி னுலகுளீர் நீதியி னின்மினே.

தருமமும் யாகமும் புரிகுந ரிடகலைத்
தாரைபோய்ப் புகையிரா வாரிருட் பக்கம்
திகழ்தென் னயனம் புகழ்பிதி ரூர்வெளி
தீங்கின் மதியெனும் பாங்க ரெய்துபு
ரு. துலங்கணி யிந்திரன் றலஞ்சேர்ந் துய்வர்
தூயவஃ தகல்வோர் காயம் வாயு
தெளிபுகை மேகந் துளிமழை யோடதி
தேந்தரு மன்னம் மாந்தர்விந் துவுறீஇத்
தையலா ருதர மெய்திப் பிறப்பர்
க௦. தோல்லர னரிதொழு நல்லவர் பிங்கலை
தோய்ந்துசென் றிரவியூ ரேய்ந்துய ருலகம்
தௌவலின் றுய்வார் செவ்வே ளருளர்
இத்துணை யெனுஞா னத்தினுய் வாரே.

இப் க௨ ஆம் செய்யுண்மோனைவிவரம்: கலியியல் ககஎ - வது விருத்த
கீழே விளக்கப்பட்டிருக்கிறது.

ஆசிரியப்பா முற்றிற்று.

---

கக. பல்கோடியை யிருபத்தெட்டுக் கோடியென்க.

க௨. தௌவல் - தவ்வல் எனக் கொள்ளத்தக்கது. "தவலு மீனமுங் கு டென் றியம்பல் வேண்டும்" என்பது பிங்கலந்தை யாகலின் குறைபா பொருளது.

தவ்வல் - விரித்தல் விகாரம்.

# ஆசிரியப்பாவினம்.

## க. ஆசிரியத்தாழிசை.

மூன்றடியாய்த் தனியே வருபவை.

விளம் விளம் விளம் விளம்.

வேலவ னடியவர் மிறைபுரி யாரொரு
காலது புரியினுங் கறைநர குறறவிர்ந்
தேலதி காரமங் கிழைப்பவ ராகுவர். (கங)

மூடிவ றுகுகன்வெளி முழுவது மிருப்பினும்
அடியவ ரகமிக வமர்ந்துள னதுகதிர்
படிகமு ளுதயம் பலிப்பது போனனி. (கச)

குகனடி யவரகங் குகனிருந் தலினவர்
அகமகிழ் வுறவுண வருத்துந ரவனுகர்
மகிழ்நல மடைவரிவ் வார்த்தைபொய் யிலையிலை. (கரு)

அடியவ ரகந்தொறு மருட்குக னிருந்தலின்
அடியவர்க் கிடுமல லவற்கிடு மலலது
கொடிதினுங் கொடிதெனக் குறிக்கவு ளதுநிதம். (கசு)

பார்நல முழுவதும் பாரநல முழுவதும்
சார்பவ ரேகுகன் சார்பினிற் றுறந்தவர்க்
கோர்மகிழ் வுறப்பணி யுஞற்றுவ ரனுதினம். (கஎ)

இரப்பவ ரிலையெனி னீபவர் களுமிலை
புரத்திலவ் வாகுகன் புரிவுயர் துறவிகள்
அரித்தெனின் வீட்டறத் தவர்களு மிலையிலை. (கஅ)

சுப்பிர மணியனைச் சூழுநிட் டாபரர்க்
கிப்புவி புகழ்ந்திட விருந்தவிர் சுரர்களும்
ஒப்புயர் மகிழ்வொடு முஞற்றுவர் சிறப்புகள். (ககூ)

சித்தியின் மனமொரு சிறிதுமி லறிவுளர்க்
கத்துவி தமுதல்வ னுங்குக னரும்பர
முத்தியி னிலவொரு முதமுவந் துதவிடும். (உ0)

---

கஅ. அரிதென்பது அரித்தென விரித்தல் விகாரமாயிற்று.

உ0. முதம் = ஆனந்தம். ஆனந்தத்தை யென இரண்டனுருபு விரிக்க. இது (முத்) முத் என்னும் வடமொழி விகாரமாம்.

அவமெனு மிருத்தியு வவுடதஞ் சீந்திகொண்
டுவகைசெய் யோமமொர் மந்திர முருகருட்
டவமுடை யவர்க்கிடு சருவிவை களிலறும். (உக)

காலமென் மிருத்தியு கடந்திட வழியிலே
மேனுறை விபுதரும் விதிவயப் படுவரென்
றோலிடு மடிக்குக னுரிமைய ரோதுவர். (உஉ)

கருவிளம் தேமா கூவிளம் கருவிளம்.

வரநதி யாடன் மந்திரஞ் செபித்திடல்
திரவிய வோமஞ் செய்தலுண் டெனினுநற்
பரிகரிப் பேசிற் கோங்குக பான்மதி. (உங)

கருவிளம் தேமா கருவிளம் கருவிளம்.

திருத்தலச் சேவை சிவவுரு நிறுவுதல்
கிரிச்சிர மாதி கிளர்பல விரதமும்
இருப்பினு மேலாம் பரிகரிப் பிறைமதி. (உச)

கூவிளம் கூவிளம் தேமா கூவிளம்.

செய்துள தீமைக டூரு மாறுபன்
மெய்யிடை யூறற வேதங் கூறினும்
துய்யது சேயருண் ஞான சூரியன். (உரு)

கருவிளம் கூவிளம் தேமா கருவிளம்.

குகனருண் ஞானமி லாதார் குயிற்றிய
அகவினை தீர்வண மேலே யதிர்த்தபல்
வகைவழி யாற்றுதன் மாண்பே மரிக்குமுன். (உசு)

இச்செய்யுள்கள் : ஏயெனு மசையாற் சிறப்பிலிறுவிடினும், ஒற்றினு முயிரினு மீறுய்வரவும் பெறுமெனும் பொருளைக்கொண்டு "ஒத்தவடித்தா யுலையாமாபொடு நிற்பதுதானே நிலைமண்டிலமே. என்னென் கிளவியை யீறுப்பெறுதலு—மன்ன பிறவு மந்த நிலைபெற—நிற்கவும்பெறூஉ நிலைமண்டிலமே" என யா - காரிகையுரைவரு சூத்திரத்தானும், அவைகட்கிலக்கியம் : யாப்பருங்கல விருத்தியிலிருத்தலினாலும் நிலைமண்டில வாசிரியப் பாக்களாகாவோவென ஈண்டோராசங்கை நிகழும். அதற்கு, "மூன்றடி யொத்த முடிவினவாய் விடி—ஞான்ற வகவற்றாழிசை யாகும்." எனும் யாப்பருங்கலச் சூத்திரவழியாய், யா - காரிகையுரைவரு முதாரணச் செய்யுளில் "வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை" எனுமடியளவாய் மூன்றடியாய்த் தம்மு ளளவொத்து வந்த விவ்வாசிரியத் தாழிசைகளைப்போல மூன்றடியி லந்நிலைமண்டிலவாசிரியப் பாக்கள் வரினு மித்தாழிசைகளைப்போலத் தம்மு ளளவொத்த முடிவுபெறாமல், விளஞ்சீர் மாஞ்சீ ரடிக்கடிமாறி விரவி வரவேண்டுமென்றறித லியைபு. வேறுகூறின் ; மேலைச் சூத்திர முதலியன விரோதமாம். அவ்வாசிரியப்பா : நான்கடியில் வரும்போதும், அடிக்கடி தொடைசீர் மாறி விரவி வந்தாற்றான் அஃது அளவடிக்கலிவிருத்தமு மாகா தியங்குமென்க. ஆசிரியத்தாழிசையடி : நாற்சீரின் மிக்க சீரானும் வரும்.

---

உக. சீந்தி=சீந்திற்றண்டு.
மந்திரம்=மிருத்தியுஞ்சயமந்திரம்.

செப்பலோசையான் ஒருபொருண்மேன் மூன்றடுக்கி வருவது.

அல்லில் கதிதா னருள்சிறந்த வேலிறை
புல்லநம் முள்ளே புகுமே லவன்றாளிற்
கல்லெனு நன்றுதங் கேளாமோ கேளோய்.

செம்மை யினர்கட் டிகழ்ந்துபுணர் வேலிறை
பொம்மிநம் முள்ளே புகுமே லவன்றாளிற்
கொம்மெனு நன்றுதங் கேளாமோ கேளோய்.

தோமில் குயமான் சுதைமணந்த வேலிறை
போமுனம் முள்ளே புகுமே லவன்றாளின்
மாமணி நன்றுதங் கேளாமோ கேளோய். (உஎ)

---

## உ. ஆசிரியத்துறை.

நான்கடியா யீற்றயலடி குறைந்து வருவது.

காத்தி லமர்வேலுங் கட்டழகார் மொய்ம்பிலணி கடம்பு மாறு
சிரத்தி லவிர்முடியுந் தேசுசெறி காதணியுந் திகழ மாசில்
உரத்தி லணிபுரள வொளிர்தேவி யிருவரொடு
வரத்தை யருள்குகனோர் வரினெற்குங் கருக்கட்டு வருவ துண்டோ. (உஅ)

மேற்படி யீற்றயலடி குறைந் திடைமடக்காய் வருவது.

[சிலேடை.]

மூர்க்கமெள் ளளவிலேயென் முத்தமுரு கையற்கு மூதிய பாரிற்
சூர்க்கொலை காரனெனு மோர்நாம மெந்நாளுந் தொடரு மாலோ
சூர்க்கொலை காரனெனு நாமமவற் றொடராதேல்
ஆர்க்குநன் மேல்வாழ்க்கை யனுத்துணையு மெய்தாதென் றதிர்க்க நேரும்.

முதலடியு மூன்றமடியும் பதினைஞ்சீரா
யேனையடிகள் பதின்மூன்சீரா
யிடையிடை குறைந்து வருவது.

தத்தாந் தனன தனனு தானன
தன்னன தையன தன்னன தனதன
தந்தானன தந்தானன தனனு தானன தனனு தான,

தத்தாந் தனதன தத்தன தனனு தந்தன தத்தன தந்தன தனனு
தனனந் தந்தன தனனந் தந்தன
தாந்தன தாந்தன தந்தன தனனு

பட்டாங் கறிவில் பொருளே மாயைமண்
விண்ணென வுள்ளது மன்னது வெனவுணர்
பண்பேறிய கண்காரர்கள் பழியே கூறிட வுளயா யாயை

ஓட்டாங் குணவய முற்றிழி புலகோ
 ரும்பெரு நிந்தைந வின்றிட நெடுநா
 ளூறழ்வுந் துந்தொழில் களினைந் தென்றினி
 யோங்கிய வான்றளி கண்டதி லகலா
மட்டார்ந் திருள்வெல் குழலார் வாயித
 ழின்மலி நல்லமு துண்ணுவ மெனவிழை
 வம்பேயுள விண்டேவரை
 வலிசான் மாதவ ருரையால் வானம்
விட்டாந் தரைமகள் கர்ப்பவ ழியிலே
 வந்தழி யண்டரை யும்புல நினையாள்
 விமலன் சந்ததி யெனுமங் கந்தனை
 வேண்டிடு வாஞ்சைய ணங்கெனு மகளே. (ரு

முதலடியு மூன்றாமடியு நாற்சீரா
யேனையடிக ளைஞ்சீரா யிடை யிடைகுறைந்
திடைமடக்காய்வருவது.

[சிலேடை.]

அயன்மால் புகழ்முருகோ னறுமுக நாங்காணின்
பயமே பெருகிப் பாவி யிடும்போ லும்மன்றே
பயமே பெருகிப் பாவி யிடலின்றேல்
தயவீ யெனவவனந் தாள்பணி வாரோ தவமுடையோர். (ரு

இத்துறைகட்குச் சீர் வரையறையின்மையின், எத்தனை சீரானும் அடிக ணீண்டு குறைந்தும் வருமெனக் கொள்க.

---

## ரு. ஆசிரியவிருத்தம்.

### அறுசீர்க்கழிநெடிலடியான்வருவன.

மா மா காய் மா மா காய்.

விடையம் விழைந்து செலுமனத்தை மீட்டுள் வாங்கு பூரகமும்
தடையெவ்வளவு மிலாதுவெளி சரிக்க விடுமி ரேசகமும்
அடைய வகத்தே புரிகின்ற வனக கும்ப கமுமோங்கு
நடைமிக் குளரோ டுறவெனையு நடத்தி டாயோ நன்குகனே. (ருஉ

காய் காய் காய் காய் மா தேமா.

மனமடங்கிச் சுகிக்கவென வளியடக்கு மடயோக முப்பற் றுகு
வினைதொடங்கு மனமடக்குஞ் சிவராச யோகமுநல் வினையா ளர்க்கே
தினமியங்கு மவற்றுளெனக் கியைபாய சிவராச யோகே மீக்கொண்
டுனையடைந்து வாழவருள் புரியாயோ தூவிமயி லுகைக்கு மெந்தாய். (ருா

கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் தேமா புளிமா.

நாலொடிரு பத்தெனவி யம்புகிற தத்துவக வஞ்செய் பகுதி
மூலமதன் மேலெனவி ளம்புபொருள் சிவனதன் முன்ன றிவிலா
வேலனெனு மீசனிரு பத்தொடுறு மேழினில்வி லாச வெளியாய்
மேலுளது சுப்ரமணி யம்மெனநி னைத்துறல்வி வேகி நிலையே. (௯௪)

விளம் மா மா விளம் மா தேமா.

வித்துளங் குரத்தைப் போலப் பிராணனில் விளைமனத்தைச்
சுத்தமா வடக்கின் மூச்சுந் தோன்றுமோ வம்மார்க் கத்தாஞ்
சித்திசேர் ஞான யோகர் சிந்தையு ணடனங் காட்டும்
சத்திவே லீசா வெற்கு மருளதைத் தயவி னன்றே. (௯௫)

கருவிளம் தேமா புளிமா கருவிளம் தேமா புளிமா.

தனதன தானா தனனா தனதன தானா தனனா

மறுவறு வேலா மயின்மேல் வருமொரு தேவா மலநோய்
தெறுமதி வீரா சிவனே சிவகுரு நாதா திருவே
துறுமிய சேயோய் தொழுவோர் துதிவிழை காதா சுகமே
உறுசிவ யோகே யுயர்வா னுனுமெனை வாவா வுணவே. (௯௬)

மா மா விளம் மா விளம் காய்.

எந்தக் கரும மிழைக்கினு மனமொன் றின்பது விளைநிலையிற்
பந்தித் துயரோர் சகசம தேசெய் பண்புடை யோர்கட்கே
இந்தச் சிவயோ குறுநனி யவரு ளின்பக டம்புரியுஞ்
சொந்தச் சிவனே துகளடு குகனே தொண்டெனை புங்கொள்ளே. (௯௭)

கருவிளம் தேமா புளிமா கருவிளம் கருவிளம் கூவிளங்காய்.

தனதன தானா தனனா தனதன தனதன தானதனா

உடலினு ளேயோ ருடலா யுளதிது வெனவறி யாவெளியார்
உடலினு ளேயோ ருயிரா யுளதறி யவும்வல ரோசொனவா
றுடலுயிர் காணு ருனையே யுறலறி யவும்வல ரோவருளால்
உடலுயி ரோடே யுனைநா னுணரவு முறவுமெ னைக்குகனே. (௯௮)

கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.

பந்தம விந்தவர் தம்மன மாலுரு வாமது பாறியகால்
நிந்தையி னெஞ்சரு வாயவிர் பேருண் ஞானிக ணிர்மலையையும்

---

௯௪. இதன்கட் கூறியுள்ள உ௪ தத்துவங்களும் மூலப்பிரகிருதி யென்பதை யுற்விக்கவே "பகுதி மூலம்" என்றதென்க. இதற்கு மேலே உ௫ ஆம் பொருளே சிவன் என்பதும், உ௬ - வது தடத்தலக்கண ஈசனே "வேலன்" என்பதும், உ௭ - வது சொரூபலக்கண பரமமே "சுப்பிரமணியம்" என்பதும் உணர்த்தப்படுவனவாயின.

சுப்பிரமணியம்— 'சுப்ரமணியம்' என மருவிற்று.

அந்தவி ரண்டும கன்றொளிர் மாகதி யாளரி னீர்மையையும்
தந்தெனை யாள்கரு ணைக்கட லேநிறை சந்த்ரஷ டாநநனே.

ஐம்புல வாரிப டிந்தலை வீண்மன மானதின் வாசனைநீத்
திம்பருய் வாரிட நேரிய சாந்தமெ ழும்புமொர் சத்துவமாய்த்
தும்பறு ஞானம தாமென மாதவர் சொல்வண நீயதனை
வம்பற வென்கணு மன்பொடு செய்குற மங்கைம ணந்தவனே.

கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளங்காய்.

[ சதாக்கரம். * (நூறெழுத்து)]

படரறு பாகதி தனையுற நினையினொர் பயனுமி னசைமுழுதுங்
கெடுமன னலைவுடை மனம்வசம் வருமிது கிளருள முடையவர்கட்
கடைதல ருமையிலை யெனவுனி யொருநிலை யனுதின மவர்வுறவென்
கடவுள யிலிறைவ னடிமலர் தொழுவது கடமையி ரவுபகலே.

* நூறெழுத்து=மெய்யெழுத்தாகிய வொற்றொழித்து. என்னை ? "குற்குற்றுகர மென்றிரண்டு மாய்தமு—மொற்று மெனவொரு நான்கொழித்துக் - கற்ருயிரு முயிர்மெய்யு மோதினர் கொள்ள." என்றமையால்.

கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் தேமாங்காய்.

தானன தானன தந்தன தானன தந்தன தந்தானா

நோவடி யேன்மன வெந்துய ரோடறு வன்றுய ரன்பாலே
காவடி யார்பதி யென்றுள பூரண கந்தம கிழ்ந்தாடே
மாவடி வேறிய பங்கயன் மாலுமு வந்துதொ ழும்பீடார்
பூவடி மேவுச தங்கைவி டாதுபு லம்புசி லம்போடே.

கருவிளம் தேமா புளிமாங்காய் கருவிளம் தேமா புளிமாங்காய்.

தனதன தத்த தனந்தானா தனதன தத்த தனந்தானா

மருவல ருட்க வருஞ்சேயோய் மலைகளி னித்த மிருந்தேமா
அரியத வத்தி னுயர்ந்தோரா லறிவரி யத்த னெனுஞ்சேவே
றொருவனும் வட்ட நெடுங்கார்கோ ளுணியுமு னக்கு மனம்போலே
பெரியவ ணக்க மயர்ந்தாரே பிழையன தைச்செய் தரந்தானே.

தேமா கருவிளங்காய் கூவிளம் புளிமா கருவிளங்காய் கூவிளம்.

அந்தத் தினையுமிடை தன்னையு மறிதற் குரியமதி யொன்றிலா
மந்தர்க் கணுகுபல னல்குமிம் மகியிற் பழமறைவி ளம்புமா
றைந்திற் கிரண்டுபழு தில்லையென் றறையப் படுமதனி லென்னைநீ
பந்திப் பொழியநனி பந்தியே பரமற் கினியகுக சம்புவே.

---

௩௧. சந்த்ரஷடாநநன் - வடசொற்பிரயோகம்.
௪௩. மருவலர்=பகைவர்.

புளிமா தேமா கூவிளம் புளிமா தேமா கருவிளம்.

உனைய லாதொர் தேவரை யுவகை யோடு பரசுதல்
கனியு ளுது காயுணுங் கயமை மானு மெனவிரு
இனிய ஞான யோகின ரினிது காண்ப ரவர்நிலை
தனையெ னாளு நானுறத் தயவு கூர்தி மழவையா. (௪௫)

தேமா கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.

ஈடி லாவெழி லீடறு வல்லமை யீடறு கல்வியெலாம்
கூடி வாழவெ ளுநினை நல்லவர் கூரயி லோயுனதோர்
ஈடி லாவுரு வானதை வேலுட னேரித யாசனமே
ஞடி யோகினி லேயடை வாரருண் ஞானமு மங்கனமே. (௪௬)

விளம் விளம் காய் விளம் விளம் காய்.

பஞ்சபு லன்வழி யேபோந்து பாழ்படு மனமதை நுதனடுவில்
துஞ்சிட வைத்தது துஞ்சாது சொக்கிடு நேர்மையை யெற்கந்நாள்
அஞ்சய வங்குலி யாவணமா வருளிய நீயெனை முழுதுமினிச்
சஞ்சல மின்றிநி லைக்கவருள் சண்முக மாயொளிர் தண்ணளியே. (௪எ)

புளிமாங்கனி கூவிளம் கூவிளங்காய்
புளிமாங்கனி கூவிளம் கூவிளங்காய்.

தனனாதன தானன தானதனா, தனனாதன தானன தானதனா

வலிநீடெழின் மாசுசி தேசுநிரா மயமேயவு ளேருரு மேவவவா
மலிநீருளர் யாவரு மேமனமா மலர்மீதயி லோடொளி சாலுருவே
நலியாமணி நீஇய தேதமதேர் நவைதீருரு வாமனு வேபுரிவார்
கலியாணகு ளுளகு கேசசதா கருதார்வலர் காணரு ளுயகனே. (௪அ)

இந்த ௪அ – வது செய்யுளடிகளின் சீர்களைப் புளிமா புளிமா வெனப் பிரிக்கின்; எண்சீரில் ௩௩௪ – ம் விருத்தத்தி னளவாம்.

காய் காய் காய் காய் காய் மா.

சாந்தமெனுஞ் சத்துவந்தான் ருமதத்தைப்
பெருக்குகிற தசைமிசைத லானுங்
காந்தியறு பழஞ்சோறு கைதொடுத
லானுமிரா சதம்பெருக்குங் காரஞ்

௪எ. அஞ்சய அங்குலி = அழகிய முன் கைவிரல். (ஶயஂ) சயம் = முன்கை; வடசொல். ஆவணம் = உரிமை; பி – நிகண்டு காண்க.

௪அ. "மனமாமலர் மீதயி லோடொளி சாலுருவே நலியாம ணிநீஇய தேதமதேர் நவைதீருரு வாமனு வேபுரிவார்" எனுஞ் சொற்களுக்குத் தமது இதயகமலத்தில் ஒளிவேலவனுருவை நலியாமல் நிறுத்தி அவ்வுருவே அழகிய நவைதீர்ந்த (உண்மை) உருவாமாறு மந்திரஞ் செபிப்பார் எனும் பொருள் கொள்க. ஆறு எனுஞ் சொல்லொன்று வருவிக்க.

சேர்ந்தனவெல் லாநுகர்த லானுநனி
கெடுமெனவே தெரிந்துநல மாக
மாந்திடுவார் மனமமர்ந்த மாமுருகா
வெனதகத்து மருவியருள் புரியாய். (சக

காய் காய் காய் காய் காய் *காய்.

ஊனுண்டி றத்தினர்ச தாவுன்னும் யோகெய்தி யோர்ஞான மேவினும்
ஈனந்த ணந்தவதி சுத்தமுள சத்துவம தெய்தார்க டாழ்வரென்றே
மானந்த விர்ந்தவுண வுண்டுகிளர் சாதுக்கண் மாசறும னத்தகத்தில்
ஆனந்த நிர்த்தனமி டுங்குமர குருவென்னு மாசென்னை யாளத்தனே.(ரு

* இக்காய்ச்சீர் : இச்செய்யுட்கடையிற் கனிச்சீராய் நிற்கிறது. அதனிடை நிற்கு தகரவொற்றைச் "சொல்லாரும் வல்லின மெல்லினமோ டிடைத்தோன்று மொற்று நில்லாது" எனும் விதியானே களைந்தலகிட அது கூவிளங்கா யாமாறு மறிக.

இந்த ருo – வது செய்யுளடிகளி னீற்றுச்சீர்களை யிரண்டு மாஞ்சீர்களாக வலகிட் எழுசீராகக் கொளினென்னை யெனின்; அவ்வாறு கோடற்குச் சில வியைந்தும் சி வியையாமலும் வருமெனற்கு இச்செய்யுளி னிறுதிச்சீராகிய "யாளத்தனே" என்ப நேர்நேர் நிரையாய்த் தேமாங்கனியென நிற்பதே யுதாரணமாம். ஆகலின், இவ்வொ யுடைய விருத்தம்: அறுசீரெனவே பெயர்பெறும், இஃதிரட்டித்தவழிப் பன்னி சீரெனவே பெயர் பெறுமென்றல் துணிபென்க. இத்துணிபு: அடியில் வருகின் ருசு, ருஎ ஆம் விருத்தங்கட்குங் கோடலியைபு.

மா மா மா மா மா காய்.

மோகஞ் செய்யீ ருளியெண் ணெய்மீன் மூலங் கடுகணையாப்
பாகஞ் செவ்வாற் கோதும் பையரி பச்சைப் பயறுகுளம்
சாகம் பைங்காய் தேனெய் வெண்ணெய் ததிசுக் காருமினும்
ஊகந் தருநன் பான்மே லென்றுண் ணுறுவர் பிரான்முருகோன். (ருக

மா காய் காய் மா காய் காய்.

சாத்து விகவுணவா மொழியுச்சி தனிலுப் புப்புளிகா ரமொழித்தேர்
பூத்த பச்சரிசி பசும்பயறும் புரையின் றொருசேரிற் குட்படவே
சேர்த்து நன்மிளகுத் துகளிட்டுச் செய்சா தத்துழியா னின்பானெய்
வார்த்த யின்றிரவிற் பால்பழமுண் மாண்பார் நினைசேயென் மனத்துளதே.

தேமா தேமா தேமா தேமா தேமா கூவிளம்.

எண்ணெய் வீவு நாளில் வாதை யீயு மாநெயும்
வெண்ணெய் பாலு மிக்க வுண்ணின் விந்து ஆறியே
பெண்ணை நேட நேரு மென்று பெட்பி லாதினி
துண்ணு சீரி யோர்பி ரானெ னுட்ப வேலனே. (ருரு)

ருக. ஈருளி = வெள்ளுள்ளியும, ஈரவுள்ளியும். அரி = அரிசி. குளம் = சருக்கரை. சாகம் = இலைக்கறி. ததி = தயிர்.

கருவிளங்காய் கருவிளங்காய் கருவிளங்காய்
கருவிளங்காய் புளிமா தேமா.

[சதாக்கரம். (நூறெழுத்து)]

சருமயத்தை யுடையதொக்கு ளுயிரிருக்கு
நிலைகுறித்த சனமே கொஞ்சம்
வருபசிக்கு நுகர்குணத்தர் மனமடக்கு
வகைபடுப்பர் மயலா னையார்
அரிவையிச்சை துயின்மிகுத்த லெனுமவத்தை
களையறுப்ப ரருளாம் வாழ்வு
பிரிவறச்சின் மயமடுப்ப ரடிமையெற்கு
மருளுருத்ரர் பெருமா னேயோ. (ருச)

இந்த ருச - வது செய்யுட்கணுள்ள காய்ச்சீர்களைப் புளிமா தேமா வெனப்பிரிக்கில், பதின்சீர்க்கழிநெடிலடியுமாம்.

மா விளம் காய் மா மா காய்.

உணவின் றேனுட லாமாக்கை
யுளசத் துண்ணும் வயிற்றனலென்
றெணும்வல் லாருரை யொவ்விடுத
லெவர்கட் கென்னி னுயிர்ப்பசைவு
நணுகும் பேர்க்கது வின்றேவின்
றென்றோர் மெய்யர் நயம்படவே
பணிமந் தாகினி சுதமஞ்ஞைப்
பரியா வருளெற் கருளன்றே. (ருரு)

கருவிளங்காய் கருவிளங்காய் கருவிளங்காய்
கருவிளங்காய் கருவிளங்காய் கருவிளங்கனி.

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதனனா

நிறைவிலனு வறிவினசை வெனுமனது தனதுநிலை
நிலைகொளின துயர்மவுனமே
உறுமகனம் வினைகளடி யுடனழியு மலமுமறு
முயிருமுய ரமுதடைமெனா
அறிபவர்கள் சனனமெனு நினைவினொடு மறதியெனு
மவதிலய விளிவுமிலராய்
இறைவனுனை யடைவரென திதயமலர் வதிதருமொ
ரிமயகிரி மகள்குமரனே. (ருசு)

தனனதன தந்தனன தனனதன தந்தனன
தனனதன தந்தனதனு

விளரியையு டம்பெனவு டையமனத லைந்தவழி
விசையொடுமி யங்குவளிதான்
அளவதுக டந்துவெளி வருமுறுகண் விஞ்சிடும்வ
யதுமழியு மென்றுலகிலே
தெளிவுநவி லிந்தவுரு நலமடைய வென்றரிய
செபதபமு யன்றுமதையே
குளிர்கொளவ யர்ந்தசுகர் குழுவிடைவி ளங்குமொரு
குமரகுரு தொண்டனிவனே. (ட

தேமாங்காய் தேமா புளிமாங்காய் தேமா புளிமாங்காய் தேமாங்கனி.

உண்டாகி வீயும் பலன்காண வேகோ ளுடம்பான தேதானெனக்
கொண்டாணை யின்று டகங்கார நெஞ்சங் குழம்பாத தைந்தால்வரை
வண்டாத வண்டங் களுந்தம்வ யந்தா மயிர்ப்பின்றெ னுவவ்வழிக்
கண்டா ரகத்தே யுறுங்கந்த வேளென் கணுங்கூட லேசெய்யுமால். (டு

இச்செய்யுளடிகளின் உ-ங-ம் சீர்களையும், ச-டு-ம் சீர்களையும் தேமாங்காய் தே
காயெனப் பிரிக்கினும் பிரிக்கலாம். அங்ஙனமாயின், மோனைக்குரிய ஐந்தாஞ்சீ ரக்க
நான்காஞ்சீரிற் சேர்ந் தெழில்குறையும். இதனாற் சீர்பிரித்தலு மழகுபெறப் பி
வேண்டுமென்ப தறிக.

தேமா கருவிளம் கூவிளம் தேமா கருவிளம் கூவிளம்.

யாவு மறிந்திடு போதமே நாளும் வளர்ந்தபல் காமரால்
ஈவு மிருந்திழி பேய்மன மென்ன மருண்டலை யுந்தமை
மேவ நிரந்தரம் வைத்தெலா மிச்சை யெனத்தெரி வாருயர்
ஆவி நிறைந்தொளிர் சோதியே யன்பி னெனக்கருள் சாமியே (டு

கருவிளம் கூவிளம் கூவிளம் கருவிளம் கூவிளம் கூவிளம்.

தனதன தாந்தன தாந்தனு தனதன தந்தன தன்னனு

அகமன மாழ்ந்திடி னீண்டபே ரகிலம றைந்திடு மங்ஙனே
குகனெளி தோன்றிடும் வீம்பினே குலைமன முண்டெனி னின்னவீ
சகமது தோன்றிடு மாண்புசா றலைமைம றைந்திடு மென்னுநூல்
பகர்வர ராண்டவ னும்பரா பரனெனி லங்கயி லண்ணலே. (சு

கூவிளம் கூவிளம் தேமா கூவிளம் கூவிளம் தேமா.

பற்பல சூழ்மன மோய்க்கப் பைரவி சாம்பவி பண்பார்
பொற்புயர் கேசரி யுண்டோர் பூர்த்தித ராவிவை மேலாஞ்
சிற்பர முத்திரை தானே சேணிலை யென்றறி லானோர்
தற்பர மாயடை தேவே சண்முக மேயெனை யாளே. (சு

---

டு. விளரி = வேட்கைப்பெருக்கம் ; ளகாரவேதுகை காண்க.

கருவிளம் புளிமாங்காய் கருவிளம் புளிமாங்காய் கருவிளம் புளிமாங்கனி.

தனதனந் தனதான தனதனந் தனதான, தனதனந் தனதானனா

[சதாக்கரம். (நூறெழுத்து)]

இருதிறம் பகர்நாசி நுனிவிளங் கிலலாட
மெழிலுறுந் தலைமேலுமே
முருகிருந் தொளிர்பார்வை நனிபொருந் திடனுடன்
முதல்வனும் படர்வோனுமே
மருவிநின் றிடலாகு முனமொழிந் துளநாலு
மெனவறிந் தவிர்வாழ்வினர்
அருமருந் தெனுஞான முருகுவந் தெனைமேவி
னமலவின் புறுவேனரோ. (௬௨)

கூவிளம் கூவிளம் கூவிளங்காய் கருவிளம் தேமா புளிமா.

தானன தானன தானதனா தனதன தானா தனனா

சேயவ னீடொளி நாடியொரே திடமுறு கான்மா தொனியே
மாயமெ னுநவின் மாவிருளே மலையென வாதா டுருவே
நேயமில் பேய்பல காணினுமார் நிறையயி லோனே யிவையாம்
ஓய்வடை யோமென வேயிழியா ருறுவது சேயோ னடியே. (௬௩)

தேமா புளிமா புளிமா புளிமா புளிமா புளிமா.

தானந் தனனா தனனா, தனனா தனனா தனனா.

தேவென் குகவே ணிணையோர் செயலா லழன்மீ றிடுமேல்
மாவின் பழுதார் கவிபோல் வளைபா வணையே புரிவார்
வீவின் றெழுசீ தளமே மிகுமே லழல்போ னிணைவார்
யாவுந் தெரிவே லவனால் யமனா றுவெல்யோ குளமே. (௬௪)

---

## எழுசீர்க்கழிநெடிலடியான்வருவன.

கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்
கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளம்.

தானதன தத்தனன தானதன தத்தனன
தானதன தத்தனன தானனா

[இதுமுதலிரண்டும், அட்டோத்தரசதாக்கரம்]

மூவிதம லத்துளொரு மூலமல மற்றுவிடின்
மூடவொர்ம றைப்பிலைபொ னுடுவாழ்
தேவரும்வ ழுத்திடுவர் மூவருமதித்திடுவர்
சீவனமு தத்திருவு மேவுமேல்

வீவொடுபி றப்புமிலை யேயெனும்வி திப்படிசெய்
மேதையரு ளத்தொளிர்கு கேசனே
தாவறவெ னக்குணனி கூடிடுநி னைத்தகதி
சார்தனிஜ மற்புடைய தாசரே.

க, ரு, ௫ ஆம் சீர்கள் : புளிமாங்காய்.

தனதான தத்தனன தனதான தத்தனன
தனதான தத்தனன தானனு

சிவயோக நிட்டைபுரி பொழுதீனர் பிச்சரெரி
திணிதோளு டைக்குறள்க ளாலுமே
கவளுறு கிட்டிடினு மசையாதி ருத்தலுமெய்
கலையார்ப டைப்புணலு மாழையால்
எவரோதி கழ்ச்சிமொழி களையேபொ றுத்திடலு
மெதிரும்ச கித்திடலு மேசதா
தவமாக வுற்றவர்கள் பெறுபேறெ னக்கருடி
தமியேனி னைப்புளகு கேசனே.

இவ்விரண்டு செய்யுளு மடியொன்றற்கு நெடிலுங் குறிலுமளவொத்த விரு தேழெழுத்தைப் பெற்றமையின் அளவியற்றண்டகமாம். இவ்வா றிருபத்தேழெ தின் மிகுத்து வருமடியுடைச் செய்யுள்களு மத்தாண்டகமாம். ஈண்டு வந்த கு புடைச் செய்யுள்களொப்பக் குழிப்புப்பெறு தெழுத்தளவிற் சீர்கள் பொருந்தி வனவு மத்தாண்டகமேயாம். அங்ஙன மொவ்வாது வருவது அளவழிதாண்டகம் உள — எழுத்திலிழிந்த விருபத்தாறெழுத்துடைய வடிமுதல் நான்கெழுத்துடைய வரை வரும் உரு — அடிகளில், எவ்வடியிலேனு மளவாக நான்கு கொண்டுமுடி செய்யுளை : அளவியற்சந்த மெனவும், அங்ஙன மளவொவ்வாது முடிவதை : அள சந்தமெனவும் வித்தகர் விளம்புப என்க.

புளிமாங்காய் தேமா புளிமாங்காய் தேமா
புளிமாங்காய் தேமா புளிமா.

வினையென்றி யம்பு பவசங்கம் யாவும் விரைவாயொ ழிந்து சுகவாழ்
வினையொன்ற வென்று துறவேறி ஞான வெளியாவி ளங்கு நினையே
நினைநெஞ்சர் நன்கு புரிராச யோக நிறையும்ப டர்ந்த படியே
எனையன்ற றைந்த முடிவின்று தாவெ னிறையேகு. மார குருவே.

---

௬௬. மாழை = அறிவின்மை ; நிகண்டுகள் காண்க.

௬௭. பவசங்கம் = பவக்கூட்டம்.

எனையென்னு மிரண்டனுருபு நான்கனுருபாய் மயங்கிற்று.

தேமாங்காய் தேமா தேமாங்காய் தேமா தேமாங்காய் தேமா தேமா.

தானன தான தானன தான தானன தான தான

தேவாதி தேவ யோகாதி யோக சேவேற னூர்தர் சேயே
மாவாதர் வாத மேலான மாசில் வாசாம கோச ரேசா
பாவாணர் கோவி சாகாம கேசை பாலாப கேச வேலா
காவாவெ னூமெ யாயோது தாசர் காசாசை மேவு வாரோ. (சுஅ)

புளிமா.

தனன தனன தனன தனன தனன தனன தனன

ஒருவ னுருவு முமையி னுருவு மொருதி ருவுரு வினிலே
மருவ நெடிய சரண மயிலின் மலர முமுக சிவமாய்
முருகு கமழ முருகு திகழ முருக னெனவும் வருவோய்
கருது னடியை யருளெ னடியர் கவலை வலையி னுழையார். (சுசு)

மா மா மா மா மா மா கூவிளம்.

ஆனை யேறு கோவி லார ருட்கு மூந்தை யாண்மையால்
ஆனை யேறு போலு லாவு மாண வத்தை வென்றுளார்
பூனை போலு லாவு வார்கள் பூவின் மிக்க சூதுடைப்
பூனை போலு லாவி டார்கள் பூவு டம்பு போம்வரை. (எ௦)

நினைவி லாத நிஜசொ ரூப னூர்க்கு முத்தி பந்தமென்
பனவெ நாளு மிலைபொ யாத பசுவின் கண்ண வேயெனு
நினையு நெஞ்சர் பந்தம் வீய நியதி செய்து னூணையால்
அனக வாழ்க்கை சேர்வ ரெனையு மாண்ம யூர தேவனே. (எக)

எ௦, எக-ம் விருத்தங்களைக் காய் காய் காய் கூவிளமெனப் பிரிக்கின், அளவடிக் கலிவிருத்தங்களுமாம்.

விளம் மா விளம் மா விளம் விளம் மா.

உலகினி லுளபல் ரெழுழில்வழி யேயு
முயரதி சயமனைத் தினுக்கும்
பலமலி குருவின் வழிவரு மமல
பரமவித் தைபெறிதே னூவோர்
நலமுளர் குருவின் வழியதைக் கொளவே
நவையறு வினைபல புரிவார்
தலமிசை யறியா ரெளிதெனை நினைவார்
தமியனுக் கருள்சிவ குருவே. (எஉ)

எக்குரு வினையுஞ் சிவமெனத் தாழ்த
லேசறு சிவகுரு வினுக்கே
தக்கவந் தனமாத் தழைக்குமென் றறியார்
சாத்திரத் திருந்ததைப் பிடித்தே
மிக்கவும் பழகி வெறுங்கைய ராவர்
மிகைதபு குருமொழி நிற்போர்
விக்கின மிலராப் பயனடை வாரெம்
மெய்யருட் கொடைமடக் குகனே. (எ

யாவரு மறிந்தே வாழ்ந்திடு நிமித்தம்
யாவையுந் தெரியரன் சீட
பாவம தடைந்தே நினதெதிர் நின்ற
பாங்கினை யினிதுண ராதார்
ஆவலி னீன்றோர் வளர்த்தவ ரினுமே
லருட்குரு வெனவறி வாரோ
நாவலர் புகழ்நன் னறைமலர்ப் பாதா
நான்பணி யொருகுரு மணியே. (ஏ

தங்குரு தமக்கிங் கெதுகுறை செயினுஞ்
சழக்கனென் றிகழுவோர் ஞாயம்
எங்கணு மிலைதங் குருவினை மதியா
திருப்பவர் புரிதவ மவமாய்ப்
பொங்கழ னரகு மனுபவித் தலைவார்
பொறியிலர்க் கோதிய குருவுஞ்
சங்கடப் படுமே யெனக்கருள் புரியுந்
தனியிளம் பூரண குருவே. (ஏ

மந்திரங் கருக்கள் பேய்சில யோக
வழிகளிற் சித்திக ளுண்டாம்
தந்திர பமன ரும்பல புரிந்தார்
தரணியி லவையரு ளாமோ
சிந்தனை குறைந்த திருவினர் வாக்கே
செய்திடு மருள்விளை யாடல்
அந்தமெய் வலியே யறிவென வுணர்வா
ரறுமுக நினைப்பணி வோரே. (ஏ

மாந்தரை மயக்கு மாசையின் மீக்கொண்
மனத்தினர் செயல்பல நாளுங்
காந்தனல் கொடுபுக் கிடங்கொளுத் திடுவோன்
கருத்தழிந் தொருபொழு ததிலே

போந்திற முறமு மேயென வுணர்வோர்
புறநெறி போந்துழல் வாரோ
சாந்தநின் னறிவே தலைப்படு பெரியோர்
தவப்பொரு ளேகுக தேவே. (எள)

தன்மதி கெடுத்துப் பிறப்பிறப் பழுத்துந்
தனக்குள வாணவ மாயை
கன்மமிம் மூன்று மறுமெனிற் சிறிதுங்
களங்கமில் பொருளெனத் தன்னைச்
சின்மய மாய்க்காண் ஞானியை யினிதா
டேவநின் னடிதொழு நானுந்
தன்மய மாகத் தயவுசெய் யாயோ
சரவண பவமுரு கோனே.

தனதன தான தனதன தான தனதன தானன தான

[ஒற்றிலாச்செய்யுள்]

சரவண சாதா சசிமக ளூதா சததள வாரிச பாதா
சிரவண ரீசா குறமக ளேசா சிவபத தாரக தேவா
அரவண வோரா கமுளவி ராசா வருளொரு ஞானவி னோதா
காரவண வாமே வருகென வேநீ கருணையி னுலமை யாயே. (எக)

தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமா கூவிளம் கூவிளம்.

பெத்த நீத்துயிர் முத்தி நாடியர் பெற்றி யோரென வேயிருந்
தித்த ராதல மூட ராசைகொ ளீன போகநு கர்ந்துசாம்
பித்த ரங்ஙன மூழி தென்பயி ணக்கி லாரிது சொல்வரோ
அத்த னேயயி லத்த னேயெனை யாள னின்கட னேயரோ. (அ0)

மூன்றுஞ்சீர்: புளிமா.

தன்னின் மேலறி பவன்ம காகதி சாரும் வேளையி லுள்ளவா
பின்ன மின்றமர் வுறினு டம்புயிர் போல வின்புபி றங்குவான்
அன்ன வேளையில் விலகின் வேறென வாவ னகவி னீயெனை
நன்னர் மீக்கொளு நிலையில் வையொரு கைவி லாவயி லையனே. (அக)

புளிமா கூவிளம் புளிமா கூவிளம் புளிமா கூவிளம் கூவிளம்.

தனன தத்தன தனன தத்தன, தனன தத்தன தானனா.

இருள றைப்பொரு ளறியு மட்டுமொ ரெழில்வி ளக்கது தேவைபோல்
அருண்மு தற்பொரு ளினைய டுத்திடு மளவு நிட்டைய வாவுவோர்
மருவு முப்பொருண் மறைய நிற்பது மலர்சி வத்துவ மாமென
ஒருமு கப்படு வனையெ யற்கரு ளொளிய யிற்கும ரேசனே. (அஉ)

சீர்வாய்பாடு பேதிக்கினும், ஓசைகெடாது நடப்பது.

உருவ மானவொர் குருவி னுலுணர் வுறுதல் போலரு ளுருவொடே
வருகு கேசனை வழிப டாதர மார்க்க மேயதி சீக்கிரம்
அருளு மேனல மதுவ னேனுய ரருவ மாநிலை யாமெனுந்
தெருளர் நாயக பிரிவுறுவருள் செய்தி நானினி துய்யவே. (அ௬

தேமா கருவிளம் கருவிளம் புளிமா புளிமா புளிமா புளிமாங்காய்.

தூமா பிரணவ நிலையுரு வருவாச் சுடரோர் சிவலிங் கமும்வீயாப்
பூமா ணயிலிறை யெனவழி படலாம் பொழிலார் மதுரா புரியாடல்
ஆமா றெருமன னசைஇய பொழுதே யயிலோ னவணஞ் செயலாலே
ஓமா யிடுதலி னெனவுண ருணர்வோ ருனையே விழைவார் குகதேவே.

மா விளம் மா விளம் மா விளம் காய்.

சகமுஞ் சரவுயிர் பரமுந் தன்னளி சால்சன் னிதியென வேசததம்
திகழுந் திருவுள மொன்றுண் டெனவுணர் தீரர் பவஞ்செய வேதுணியார்
அகமும் புறணியு முணரா விழுதைக ளயருந் துரிதம பாரமெனப்
புகழுன் கருணையை மறவே னல்லருள் புரிமெய்ஞ் ஞானஷ டாநநனே.

தனனத் தனதன தனனத் தனதன, தனனத் தனதன தனதான

[சதாக்கரம். (நூறெழுத்து)]

அறிவிற் பெரியவ னழகிற் பெரியவ னறனிற் பெரியவ னரசாண்மா
நெறியிற் பெரியவ னருளிற் பெரியவ னிலையிற் பெரியவ னிஜமாமோர்
செறிவிற் பெரியவ னினையற் றுளபல செயலிற் பெரியவன் முருகோனே
பொறிபற் றவவனை நினையற் புடையவர் புகழெறற் கினியவ ரெனலாமே.

தனன தனதன தனன தனதன, தனன தனதன தனதான

[சதாக்கரம். (ஒற்றிலாநூறெழுத்து)]

பிரமா வுணரிறை மறைமா துணரிறை பெரியா ருணரிறை துளவேறே
ருரமா லுணரிறை மகமா லுணரிறை யுரியோ ருணரிறை யளியாலே
கரமா வுணரிறை கடியா ருணரிறை கலையா ருணரிறை பெருமாயா
மரமா வகிரிறை யெனுநீ ளயிலனை மதியா தவரச டொழியாரே. (அஎ

தனன தானன தனன தானன தனன தானன தானதான

[இதுமுதலிரண்டுவிருத்தமும், ஒற்றிலாச்செய்யுள்]

குமர தாரக பரம போதக குழக ஞானஷ டாநநாகா
சமர தானவ பகைவ பாவக சருவ காரண காரணகா
அமர ராசறு பொருந காவயி லமல பூரண போதமீதே
அமர ணுவளி யெனுந லோரிட ரடைவ ரோவுயி ரேகுநாளே. (அஅ

அ௬. இழுதைகள் = அறிவிலார்கள். துரிதம் = பாவம்; நிகண்டுகள் காண்க.
அஎ. கரமா = யானை; ஸ்ரீசுப்பிரமணிய வியாசத்தில் வரலாறுகளோர்க.

எழாஞ்சீர் : தனனதான

தொடலை சூடிர வழகவாவறு சுமுகவாவயி லரசுவாகா
விடலை வாசிகி யிறைவ வாநிறை விமலவாசிவ குமரவாகா
துடலை வாகுற மகள வாவிடு கொழுந வாவென நவிலுநாவோர்
அடலை யேசெறி சுடலை கூடினு மணுவு மாகுல மடைகிலாரே. (அகூ)

அஅ, அகூ – ம் விருத்தங்களி னடியீற்றுச் சீர்களை இரண்டு மாஞ்சீர்களாகப் பிரிக்கின் ; எண்சீர்க் கழிநெடிலடிகளுமாம்.

கருவிளம் கூவிளம் கருவிளம் கூவிளம் கருவிளம் தேமா புளிமாங்காய்.

கொடியபவங்கெட வுயர்துற வண்டிநல் குரவுளர் போலே பெரியோர்தாம்
இடுவவணிந்தடர் சடைமுடி முண்டித மெனமறை யேகூ றெதிலேனும்
சடிதியில் விஞ்சபு வெறியுண லும்புணர் தனமுளர் மண்பொன் மறமாகுஞ்
சடுவசனங்களு மிலரிறை யென்சிறு துதிமுத லாமோர் முருகோனே.(கூ0)

கருவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம்
கருவிளம் கூவிளம் புளிமாங்காய்.

தனதன தந்தன தானன தந்தன, தனதன தந்தன தனதான

சிவதவ வங்கமெ னுநவி லஞ்சடை சிரமுறு முண்டித மிலையேல்வீண்
அவமுள சிந்தைய னேழையி வன்கலை யறிவில னென்றுல கினரேசா
அவதிபு ரிந்தறி வானதி றந்தழி வணவிவ ருந்துவ ரதனாலே
சிவதவ வங்கமெ *நாளும்வி ரும்புவர் திருநிறை யுங்குக னடியாரே. (கூக)

* "நாளும்வி" இதிலுள்ள மகரவொற்றை இவ்வியல் கூ0 – ம் விருத்தத்தி லெடுத்துக்காட்டிய விதியாற் களைந்து கூவிளமெனக்கொள்க. இதனுனே வல்லின முன்வரப்பெறாத மெல்லின வொற்றுக்களும், மூவினமு முன்வரப்பெறா மிடையின வொற்றுக்களுஞ் சந்தத்தைச் சிதைக்காவென வறிக. முறையே தந்தச் சத்தமும், தன்ன தையச் சத்தங்களுந் தோன்று மிடங்களில் அச்சிதைவின் றெனவாம். வல்லினவொற் றேறிவருவது தத்த, மெல்லின வொற்றேறிவருவது தன்ன, இடையினவொற்றேறிவருவது தைய, வல்லின முன்வரப்பெறு மெல்லினவொற் றேறிவருவது தந்த வெனவு மறிக.

கூவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் தேமா.

[சதாக்கரம். (நூறெழுத்து)]

போனதும் வருவதுங் கருதுத றவிர்ந்துகொள்
புசிப்பினுட் கிடைத்ததை மாந்தி
மேனியி லுடுத்துடை யருந்துத விரண்டையும்
விருப்புள ரளித்திடி னேற்று

அகூ. தொடலை=மாலை ; "தொடலைதாமந் தொங்க றெரியல்" என்னுஞ் சே - திவாகரம்.

நாடுனன தறுநெறி நனிநடந் துளக்கடி
நணுகிய துறவிக ளுடும்
வானவ ரரசென வருமொரு மழவனை
வணங்கடி யவர்க்கிலை மாலே. (கூ௨)

கருவிளம்.

தனதன தனதன தனதன தனதன, தனதன தனதன தனந்தன

அரிறபு தவநனி வளர்துற வுடைமையி லணிபணி நறுமண மணிந்திடா
துருவிழி மணியொடு தவளநி றவிசத முவகையு டனிதமு மணிந்துமா
பரிவுகெ ழுகுழவி குணமென வுலகினர் பணிவிடை முதலிய புரிந்தபோ
துரியப ரமடைக வெனுநலர் கதியிவ னுமடைய வருள்புரி கடம்பனே. ()

புளிமா கூவிளங்காய் புளிமா கூவிளங்காய் தேமா கூவிளங்காய் கூவிளம்.

தனன தந்தனன தனன தந்தனன, தான தந்தனன தந்தன

பிறவி யென்றுபுகல் பிணியை வென்றுநிலை பேறெ னுஞ்சுகம்வ ழங்குமேல்
நறவி னும்பெரிய னருண்ம ருந்துதனை நாளு முண்டுலகி னிந்தையாம்
மறமெ னும்பெயரை யுடைய பண்டமனு மான முந்தொடுத லின்றுளே
துறமு தொண்டரடை பலனு மும்படிசெய் சூழெ னெஞ்சிலுள கந்தனே.

விளம் மா மா காய் மா காய் கனி.

ஒன்றேடி ரண்டு மூன்று காலங்கள் பூசைக்
குரியவெனு லென்கொலெனிறே
நன்றேடு தீது கூடு ஞாலநடை யாளர்
நலமாக நாளு திகள்
ஒன்றாத லருமை செய்யும் பாரணைமுன் னேனு
முடையானை யேத்தலியையும்
என்றதஃ தென்பர் சித்த சுத்திகொடு சேயை
யெக்காலு நாடுபவரே. (கூ௫)

பீடுடை யாதி யேழா மாதங்க டோன்று
பினுமுன்னு மெண்கடிகையும்
ஆடியின் றக்கி ணய ரைம்ப முன்னு
மருமைத்தை யாரம்பமாந்
தோடமி லுத்த ராய ணத்தின்பி னுஞ்சீர்
துதைகின்ற கார்த்திகைநலங்
கூடுமா வணிதி றத்த வைகாசி யென்று
கூறுமதி தோன்றுமுனமும். (கூசு)

---

கூ௨. கடி = இன்பம்; நிகண்டுகள் காண்க.

கூ௩. விசதம் = வெள்ளை; வடசொல். இஃதிங்கே திருநீற்றை யுணர்த்துவதாயிற்று.

கூ௪. துறமல் = நெருங்கல்; "துறுமலே சடிலத்தோடு துன்னல்" என்பது சூ - நிகண்டு.

மார்கழி புரட்டை யானி பங்குனியென் மாதம்
வந்தபினு மேழொன்பது
சேர்கடி கையுமா தித்த னரவுதொடு வேளை
திகழ்கின்ற மதியையரவஞ்
சார்வழி நீங்கு வேளை யுங்கோளி லர்த்தோ
தயஞ்செம்ம கோதயமுமே
ஏர்வளர் புண்ய கால மிக்கால மூழ்கி
யிட்டெந்தை யேத்தனலமாம். (கஎ)

இங்குள்ள கசு, கஎ ஆம் பாட்டுக்கள்: ஒருவினைகொண்டு முடிதலிற் குளகமாம். "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்றார் **தண்டியாசிரியரும்**. எனவே, தனிநின்று முடியுஞ்செய்யுண் முத்தக மாமென்க.

அடியீற்றிற் கனிச்சீர்பெறு மிச்செய்யுள்கள்: அங்ஙனம் "நாவலூரர்" என்பது போன்ற காய்ச்சீரும் பெறும்.

கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய் கருவிளம் தேமா புளிமா.

கார்த்திகை சட்டிவை காசிவி சாகமுநன் கடிதரு தைப்பூ சமுமா
கீர்த்திசெய் பங்குனி யுத்திர மாசறுசுக் கிரனது வாரங் குகுவை
நீத்தெழு நற்சிவ ராத்திரி யுங்குகனை நெடுவழி பாடு புரிவோர்
பூர்த்திசெய் மெய்யறி வுள்ளவர் சன்னிதியிற் புகுதுவர் வீடெய் துவரே.

சேயைமு னிட்டொரு காலொரு நூவளவே செயுமெத னுக்கு மனம்போ
லேயுத வுங்கட னுள்ளவ னென்றறிவே னிதவுடை யச்சே யினையே
நோயறு மாநுட ரேயத னுலஞரோ நுகர்முன மின்பே நுகர்வீ
ராயநல் வத்துக ளாலுமு ளாலுமவற் ககமகிழ் வாமா பணியே. (கஅ)

கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்
கூவிளங்காய் கூவிளங்காய் தேமா.

தந்தனன தந்தனன தந்தனன தந்தனன, தந்தனன தந்தனன தானு

மண்டுதிரை யென்பதரு ளென்பதில டங்கவது
வண்பதிய டங்கவிரு ளேயீ
பண்டுமல மிஞ்சறிவ டங்கவது தண்கருணை
பம்பிறைய டங்கவரு ளாலே

கஎ. ஏழொன்பதுசேர்கடிகை=பதினாறுநாழிகை.

கஅ. குகுவைநீத்தெழுநற் சிவராத்திரி=அமாவாசை சம்பந்தமில்லாத மஹாசிவ ராத்திரி. குகு=அமாவாசை.

கக. நூ=எள்; **சூடாமணிநிகண்டு** காண்க. நூவு என்றனர் **பிங்கலநிகண்டு ரைகாரர்**.

ருOO. மிஞ்சுதல்=மிகுதல். இது "மிஞ்சுதல் விஞ்சுதன் மீமசை மிக்கது" எனப் **பிங்கலநிகண்டிலும்** வருவது காண்க.

கண்டவர றிந்தடைசி தம்பரந டஞ்செயொரு
கந்தகுக நின்கழல்கள் பாடோர்
தொண்டினிது தந்தமுறை யென்றனையு மிந்தவுட
றுஞ்சிடுமு னுண்டுகொள வாவே.

தேமாங்கனி கூவிளம் கூவிளம் கூவிளங்காய்
தேமாங்கனி கூவிளம் கூவிளங்காய்.

தாந்தாந்தன தந்தன தந்தன தந்தனனு
தாந்தாந்தன தந்தன தந்தனனு

[சதாக்கரம். (நூறெழுத்து)]

தீங்காஞ்செய னன்கற னன்செய னன்குறவே
தேம்பாண்குழ கன்குக னங்குறவே
ளாங்காந்திமி குந்தவு டம்பிடி யன்றவமா
யாண்டேன்றிறை யென்றுபு கன்றவமா
யோங்கேண்டிய ரென்றறை கின்றபெ ருங்கடலே
யோம்போம்புணை கொண்டுக டந்திடலே
நாங்காண்பல னென்றுது ணிந்தவர் தம்பதியே
நான்சேர்ந்திடு மொண்பதி யென்பதியே.

---

எண்சீர்க்கழிநெடிலடியான்வருவன.

காய் காய் மா தேமா காய் காய் மா தேமா.

நெடியபசுந் தோகையுடை மயில்காள் கேளீர்
நின்மலனைச் சின்மயனைந் நிகரில் லானைய்
அடியவர்கட் கெளியவனை யானந் தத்தே
னையெங்கு மிருப்பவனை யடியே னுள்ளே
குடிகொளறி வாயென்று முளவோர் செவ்வேள்
குழகுமயி லூர்தியெனு நாமந் தாங்க
வடிவுடைநுங் குலஞ்செய்த தவந்தா னென்னே
மாறுநும் மாண்புடைமை யென்னே யென்னே.

காலமறி ஞானிகள்போ லுதயந் தேர்ந்து
களிபெருகக் கூவுநறுங் கோழி காளோ
நூலமறி புன்மதியே துறுமி யாடு
துகளுள்ளா ரெத்துணையுந் தெரியொண் ணுத

கஎக. அங்குறவேள் = (வள்ளிமாதேவிமுன்) அழகிய குறவர்மேனி கொண் வேள்.

மூலமறி யோகிகள்கண் ணுருஞ் செவ்வேண்
முருகுறுகோ ழிக்கொடியோ னெனும்பேர் தாங்க
ஞாலமறி நங்குலஞ்செய் துளனோன் பென்னே
நலியாநும் மாண்புடைமை யென்னே யென்னே. (௧௦௩)

அறிவுயிர்கட் குண்டாகுஞ் சனனத் தீட்டு
மாயுமுடிந் தெய்துகிற மரணத் தீட்டும்
பொறியறவுள் ளழுத்துகிற மலத்தின் றீட்டும்
புனிதமிலா திடைகூடும் பாவத் தீட்டுஞ்
சிறிதுமிலா தோட்டிறைவன் கடம்ப னென்னுந்
திருநாமங் கோடற்குக் கடம்பு காணும்
வறிதற்ற குலஞ்செய்த தவந்தா னென்னே
மங்காநும் மாண்புடைமை யென்னே யென்னே. (௧௦௪)

அழுக்கதனை நீக்கிநலஞ் செய்சீர் சான்ற
வருட்கங்கை யேமறைக டேடிக் காண
விழுக்கடவு ளானபிரான் வேதன் சூழு
மெய்த்தேவன் வேடாது வேடங் கொள்வோன்
இழுக்கறுசே யோனென்னு மெம்மா னுரு
மெழிற்கங்கை மைந்தனெனும் பெயரோன் றேற்க
வழுக்கறுநீ செய்த்தவ மென்னே யென்னே
மாறுநின் மாண்புடைமை யென்னே யென்னே. (௧௦௫)

நறுமீனே போன்றசிறு சதங்கைக் கால
னவையறுதெய் வானைமணந் தவனே ராது
குறுமீனே சோட்டிறைவ னெனுமீ டில்லான்
கோதிலறு மீன்மைந்த னெனும்பேர் தாங்கச்
சிறுமீனே பெருமீனே யனந்த மாகத்
திகழ்பெரிய விண்ணிலொளி திளைக்க வீசும்
அறுமீனே நுங்களருந் தவந்தா னென்னே
யழியாநும் மாண்புடைமை யென்னே யென்னே. (௧௦௬)

ஆண்டன்மை பெண்டன்மை யலியின் றன்மை
யனைத்துமிருந் தவ்வியல்பொன் றில்லா மேலோன்
காண்டன்மை யாளரருட் கண்ணுய் நாணு
கலையியுஞ் சீராளன் கரிய காலன்

---

௧௦௬. குள + ஆம்பல் = குளாம்பல் எனவும் மண + ஆளன் = மணாளன் எனவுமாதல் போல, தெய்வ + ஆனை = தெய்வானை யென மரீஇயிற்று. இம்மருவல் "அகர ஆகாரம் வரூஉங்காலை யீற்றுமிசை யகரநீடலுமுரித்தே" எனுந் தொல்காப்பியச் சூத்திரத்தை யனுசரித்து வருவதென்க.

ஏண்டன்மை பெருக்கியசெங் காலன் சேயோ
னெனும்பெரிய சாமிவிசா கப்பே ரேற்கச்
சேண்டன்மை சிறந்துசுடர் விசாக மேநீ
செய்ததவ மென்னேசால் பென்னே யென்னே. (௧0எ)

கொலைபுரியுங் கூறியவன் படையே தாங்கு
குன்றவர்கா ளெம்பெருமா னடியார் ஞான
நிலைபுரியும் பேரருளோ னெடுங்கூர் வேல
னிறைபரமற் கோம்பொருள்சொல் லாசா னென்பான்
அலைபுரியுங் கார்கோள்சூ ழுவனி மீதே
யார்குறவர் மகள்கொண்க னெனும்பேர் தாங்கச்
சிலைபுரிநுங் குலஞ்செய்த தவந்தா னென்னே
சிறுமையினும் மாண்புடைமை யென்னே யென்னே. (௧0அ)

சீலங்கொள் வோரெல்லாம் வணங்கி யாணர்த்
தேவர்கா ளிளம்பெருமா னிணையில் லாதான்
காலங்கள் கடந்தபிரா னுருவில் லாதான்
கருணையே யுருவாக வுடைய தூயோன்
ஆலங்கொள் கண்டமுளான் மகனாய் நுங்கட்
கருள்சேனா பதியென்னும் பெயரொன் றேற்கக்
கோலங்கொ ணீயிரிழைத் துளநோன் பென்னே
குன்றாநும் மாண்புடைமை யென்னே யென்னே. (௧0௯)

ஓருருவு மோர்பெயரு மிலியென் றேதெம்
முடையானை யொளிர்சுப்ர மணிய னெல்லாப்
பாருயிரு மாள்பொருட்டே யவையெண் ணெண்ணப்
பலதாங்கி நிற்கின்றான் பார்வா ழுன்பீர்
சீருருவுஞ் சீர்ப்பெயரு மிலாத வீன
தெய்வப்பேர் வேறுபெயர் தாங்கா தன்னோன்
ஏருயரும் பேர்தாங்கி யேத்த நீவி
ரென்னதவஞ் செய்தீரோ முன்னை நாளில். (௧௧0)

அசைவற்ற தெய்வமெனச் செறிகு கேசற்
கசைவான திருநடன முளதென் றோதல்
இசைவற்ற தீர்வையெனி னிறைவற் கந்த
விருவகையு மிலையென்று லாட்ட வாடும்
நசையுற்ற வுலகில்லை யதுதா னில்லா
நறும்பாமு மிலையெனவா மதனா லீசன்
வசையற்ற ஞானியைப்போ லிரண்டு நீரு
மரீஇயிருப் பானென்பார் மதியுள் ளாரே. (௧௧௧)

நனவிற்கா மூழுமுலகத் திழிபோ கத்தை
நாணுறு நச்சுமவா நீங்கா தார்க்குக்
கனவித்தை யினர்ஞானு னந்த நூல்கள்
கழறுநிலை கைவருமோ துவித நோக்காம்
மனவித்தி யாசத்திற் கியைந்த மூர்த்த
வழிபாடே கைவருமென் றறையு மாவிற்
பனவிருத்தி யுடையாரத் துவித யோகாற்
பார்க்கவரு குகனேயென் பரிவா யுள்ளான். (கககஉ)

தானதனு தானதனு தனனந் தானு
தானதனு தானதனு தனனந் தானு

நீரொலிபோ லூரவர்கூ டொலியுஞ் சார்போர்
நீடுயரா லாடொலிகூ வொலியுங் காரார்
காரொலிபோ லாநமனூ வொலியுஞ் சாவே
காண்முழவே ணுர்முருடொ யொலியும் போமா
பேரொலியீ நூபுரமார் சரணன் சூர்மா
பிறயிலோ னேயெனுளே பெருகன் பாலே
கீரொலியா லேயவனீ ரடியும் பாடோர்
கேடிலியா னேனருளே கிளரன் பீரே. (கககங)

காய் காய் காய் மா காய் காய் காய் மா.

சீவசத்தி யெனுமதற்கு மும்மலமுந் தூலஞ்
செறியவற்றிற் கதுசூக்க முயிர்க்கதுவுந் தூலம்
சீவசத்திக் குயிர்சூக்க மவ்வுயிருங் குகனுக்
தேவனது சத்தியினுக் கேதூல மதுவுஞ்
சீவனுக்குச் சூக்கமது வுங்குகற்குத் தூலந்
திகழ்குகனவ் வரியசத்திக் கேசூக்க மெனவோர்
சீவரவ னுகவெனிற் சீவசுதந் திரத்தைச்
சேரின்றவற் களித்திடுவார் தெள்ளுணர்வி னுலே. (கககச)

தலமுறைநீ ருயிருமலை சலமுறையா சலம்வாழ்
சரவுயிருந் தலமுறையா வெனுமதுபோ லுலகாம்
புலமுடையார் தவநடைசேர் மனமடையார் சிவமா
புண்ணியமுள் ளாருலகோர் வினைவழியி னுழையார்

நலமுடையீ ரிவையுணர்ந்து நசைமனதைத் திருத்தி
ஞாலநுழை யாமலருண் ஞானநுழைந் திருக்க
மலயடுகோ பாலபிரான் வாரயிற்கை மழவன்
மலரடியை நணிநினைமின் வருபகலு மிரவும். (ககரு)

தேமா கூவிளம் தேமா கூவிளங்காய்
புளிமா கூவிளம் தேமா கூவிளங்காய்.

தன்ன தானன தந்த தானதன, தனன தானன தந்த தானதன

தொன்மை நூலள வின்றி யோதினுமே
சுகுர்த மாவிர தஞ்செய் தானுமரோ
புன்மை மாறிட வென்று பாசனையே
புரியு மீசுர னண்பி லாவிடினோர்
நன்மை யேதென வெந்தை யாயசதா
நடன மேதரு கந்த மாதனவேள்
`மென்மை யீரடி நம்பு மாதவரே
விமல மாமரு ளின்ப ருதவரே. (ககசு)

விளம். ஈறு: புளிமா.

பூரண வுருவவு பாசனை யினுமொரு
புரையுமி லுருவவு பாசனை யெளிதென
ஆரண மொழிவண மாசறு பரிவுட
னயருரு வகருமம் யாவும கோசர
காரண னாகிய கடவுள டைகவென்னோர்
கடமையை யுடையவர் கருமிக ளோவலர்
சூரண வாநெறி யீதென விழைபவர்
தொழுமுரு காவெனை வளைகவு னருளே. (ககஎ)

மா விளம் விளம் மா மா விளம் விளம் மா.

அவனை யேமறந் தாற்றறன் செயலென்
றுமதே தருமுதிப்புட னுலப்பும்
எவனு நானிலை யென்றிழைப் பானே
லேத மின்னெறி யேயுள னவனே
மவுனி யாவனெல் லாஞ்சிவன் செயலா
வழங்க யோக்கிய னெனுமுறை யோர்வோர்
சிவப ரம்பொரு ளீதென வணக்கஞ்
செய்வி சாகவெ னைக்கொள நினையே. (ககஅ)

---

ககரு. மனமென்ப திரண்டனுருபேற்புழி மனத்தையென வாதல்போலாகாது, மனதென்ப தவ்வுருபேற்புழி "மனதை" எனவானதறிக. இது அமுதை, விழுதை, பொழுதை யென வருதலொக்கும். இவ்வாறு, "மனதின்வண்ணம்" "பேய்மனதை யண்டிநான்" என்றூர் பிறருமென வறிக.

தனத்த தன்னன தனதன தனனு, தனத்த தன்னன தனதன தனனு

திறத்த மண்ணென மழையென விரிவே
திளைத்த விண்ணென வளியென வெரியாம்
நிறத்து பின்னென வுளபொருள் களின்மே
னிகழ்த்து மின்னுயிர் களினிறை பெரியோன்
மறத்தை யெண்ணுநர் புரிசெய றமதா
வலிக்க முன்னுவ திலையிதை யுடையோர்
குறத்தி மன்னவ குருபர வருளே
கொடுத்தி யென்றெரு பரிவெனை நுழைமே. (கககக)

மா.

நெஞ்சி னேர்பு விருத்தி மீறி நிகழுஞ் சீவச் செயலு ளோர்கள்
அஞ்சி டாம விழைப்ப வெல்லா மாதி சிவனின் செயலென் றேநின்
விஞ்சு நரகத் தீயில் வேவர் மீண்ட னந்த யோனி சேர்வர்
கிஞ்ச முந்தப் பாரென் போர்கள் கேண்மை வேல னடிமை நானே. (கஉ0)

கூவிளம் கூவிளம் புளிமா கருவிளம்
கூவிளம் கூவிளம் புளிமா கருவிளம்.

தானன தானன தனனத் தனத்தன
தானன தானன தனனத் தனத்தன

கோமள வார்முகை மலையைச் சுமப்பவர்
கோசிக மேகலை யரையிற் றரிப்பவர்
மாமணி நாண்மலர் குழலிற் றரிப்பவர்
மாலையி லாடவர் மடியைப் பிடிப்பவர்
ஆமட மாதரை யறவிட் டருட்கட
லாடிட வேநினை யடியர்க் ககப்படும்
ஓமய வேலவ னடியைத் துதித்தலு
மோர்நினை வாதலு முறுவர்க் குழுக்கியம். (கஉக)

கூவிளம் கருவிளம் கூவிளம் கூவிளம்
கூவிளம் கருவிளம் கூவிளம் கூவிளம்.

தையன தனதனத் தானனத் தானனு
தையன தனதனத் தானனத் தானனு

வள்ளியை மணமுடித் தோன்மலர்ப் பாதமே
வல்லையி லுறனயப் பாமெனச் சூழுமா
ஒள்ளிய வெயிறுடைக் கோவணத் தாருமே
யுவ்வியி னிமிர்சடைத் தாபதத் தாருமே

கககக. வலித்தல்=பேசுதல்; "வலித்தலே * * * பேசல்" என்பது திகர வேதுகை. இச்சொற்றுனே வலத்தலெனவும், வழுத்தலெனவுந் திரிந்து நிகழ்ந்தவழி அகாராதிக்காரு மவ்வகாரதியு ளவற்றைவரைந் தப்பொருட் படுத்தினர்.

தெள்ளிய மதிமறைக் காடிருப் பாருமே
செவ்விய தலைமழித் தேகறத் தாருமே
எள்ளிய மனமதைத் தானடக் கார்கணே
யெவ்வித மதிமதர்ப் பேறுநட் பாளரே. (கஉஉ)

தேமா கருவிளம் தேமா கூவிளம் தேமா கருவிளம் தேமா கூவிளம்.
தானு தனுதன தத்த தத்தன, தானு தனுதன தத்த தத்தன

நாமா ரெனுவறி யத்தி லைப்பவர் நாஞு விகாரம றுத்த ணைத்திடு
கோமா னுமைய னற்பு தப்பொறி கோஞு தபோதகன் விட்டு புத்திரி
சீமா னிராகுல சித்த னெப்பறு சேயோ னருமலி பொற்ப தத்தினை
யேமா சிலாதெணின் முற்பி றப்புட னேயா வுமேயறி விட்டை பற்றுவர்.

புளிமா கூவிளம் தேமா கூவிளம் புளிமா கூவிளம் தேமா கூவிளம்.
தனன தந்தன தாஞு தானன, தனன தந்தன தாஞு தானன

குமர சம்புகு கேசா வாருணி குரவ கிம்புரி பூணீ டோளிறை
அமரர் கும்பிடு மாதீ தேனினு மமுதி னுஞ்சுவை யாமோர் பூரண
சமர சம்பெற நாயே னுடிது தருணம் வந்ததை யீயா யோகன
திமிர மங்குற மாதே சேதரு திறனெ டும்படை யோடே யார்வொடு.

கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம்
தேமா தேமா புளிமாங்காய் கூவிளம்.

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தத்த தான தனத்தத்த தானன

[அட்டோத்தரசதாக்கரம். (நூற்றெட்டெழுத்து)]

சிறப்புறு கடைச்சவை தனிற்றமிழ் வளர்த்துரை
செப்பு கீர னினைத்திட்ட வாறணி
விறப்புறு திருப்பர மலைத்தலை யினிற்சுரர்
மெச்சு நீரை யழைத்திட்ட கோவவன்
மறப்புறு நினைப்பற விருப்பொடு குளித்ததின்
மட்டி லாம னினைத்திட்ட வேலவ
பிறப்பறு பரத்துவ வருட்குரு நிலத்துழல்
பிச்ச னேனை வளைத்துக்கொள் யோகிடை. (கஉரு)

கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா
கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா.

தனதன தனதன தனதன தனன, தனதன தனதன தனதன தனன

[ஐகாரமொழிந்த நெடிலு மொற்றுமிலாச்செய்யுள்]

அருணிலை புகவென வனுதின நினையு மளியுடை யெனையுண வயிலிறை வருக
கருணிலை தெறுபர சிவகுரு வருக கடகரி முகனிளை யவனனி வருக
தெருணிலை யினரக நடுமணி வருக தினையிடி நுகரொரு குறமகிழ் வருக
பொருணிலை யுணரலை யுணிதுறை வருக புதுமல ரணியணி மழமுனி வருக.

புளிமாங்கனி புளிமாங்கனி புளிமாங்கனி தேமா
தேமாங்கனி தேமாங்கனி தேமாங்கனி தேமா.

சடமாசுக ளழிவாகுமோர் சுடுகானிடை நின்றே
　　தத்தத்தன தத்தத்தன தத்தத்தன தந்தா
தடதாகிட தடதாகிட தடதாகிட தந்தா
　　தாத்தத்தன தாத்தத்தன தாத்தத்தன வென்றே
நடமாடிறை யருண்மாசறு மழவேயுமை மைந்தா
　　நச்சுக்குண ரச்சப்பட மொட்டுத்தடி கொண்டே
வடவானல மெனவேவரும் யமதூதுவர் வந்தால்
　　வாட்டப்பட வாட்டைப்புரி யேத்தெற்குளி ருந்தே. (கஉஎ)

வாய்பாடு பேதிக்கினு மோசைகெடாது நடப்பது.

[நாற்கூற்றிருக்கை]

ஒருபூரண சிவனார்செவி யொருநுண்பொருள் சொன்னு
　　யுரமாரு ளிருதேவிய ரொருசேர விழைந்தாய்
ஒருகுருட லிருகூறுற வொளிவேலெறி தந்தா
　　யுணர்வேறிடு முத்தேவரு மிருதாமொடமழ கின்றாய்
ஒருமாமுனி யறிவேயுற வொருபோதனை செய்தா
　　யுரைமாமறை யிருசம்பவர் முத்திமுத லானாய்
திருநான்முகன் முக்கண்ணுள னிருமாலுரு வொன்றாத்
　　திகழுந்திரு வுருவாயினை யெனையும்படர் குகனே. (கஉஅ)

நாற்கூற்றிருக்கைச் சித்திரம்.

| | | | க | | | |
|---|---|---|---|---|---|---|
| | | க | உ | க | | |
| | க | உ | ௩ | உ | க | |
| க | உ | ௩ | ச | ௩ | உ | க |

கருவிளமும், புளிமாவும்.

தனதனத் தனனே தனதனத் தனனே
தனதனத் தனனே தனதனத் தனனே

துதிரசத் திருவே சுடர்தனிக் குருவே
　　சுவைமிகுத் துளதூ வுடையபுத் தமுதே
அதிரசப் பயமே யமலமுப் பழமே
　　யகிலசக் கரையே யறுமுகத் திறையே

மதிரசப் புயலே மதவருட் கடலே
வரதநற் கரனே மலர்முகக் குகனே
முதிரசத் தியனு யுளவெனைப் புரிவான்
முனமடக் கிடுமோர் நிலையினிற் றிணியே. (கஉ

தனதனந் தனன தனதனந் தனன
தனதனந் தனன தனதனந் தனன

வினைபுரிந் திடுசா திருலமென் றுளவோ
வினையிறந் திடுமா மதிவனந் தனிலே
உனைவிழைந் தறியா ரெவர்களுங் கடையா
யுளர்நறுங் குணநீ தியின்மிகுந் தறிவால்
உனைவிழைந் தறிவோ ரெவர்களுந் தலையா
யுளரெனுந் துணிபே யுடையவென் பதியே
முனிவரன் புடனே பணியுநன் குகநான்
முழுதுநின் களியே கொளவெழுந் தருளே. (கங

புளிமா கூவிளங்காய் தேமா கூவிளம்
புளிமா கூவிளங்காய் தேமா கூவிளம்.

தனன தானதன தான தானன, தனன தானதன தான தானன

புகழ்பி ராமணர்க ளான மாசிலார் புகரி லாதகதி மேவு வாரலார்
நிகம மோதவுத வார்பி னுருவர் நிஜமெ னுமிருதி கூறு நேருளே
அகமி லாதசிவ யோக ரேபிரா மணரெ னுநவிலொர் தீர்வை யாமனோர்
இகழு ருதணவு ளேய வேலனே யெனைவி டாதுகொளும் வேத நாதனே

கருவிளமும், கூவிளங்காயும்.

தனதன *தத்ததன தனதன தத்ததன
தனதன தத்ததன தனதன தத்ததன

வடமொழி யிற்சதுமா மறைபயி றற்கிழிவா
மரபுளர் கட்கதிகா ரமிலையெ னச்சொலினும்
இடரறு பத்திமைனா னமிவைகள் சொற்றிடுநூ
லினியத மிழ்க்கவியா திகளில வர்க்கிலையோ
சுடர்பர வைக்கினியா ரடியவர் மெய்ப்பெயரே
சொனபதி கத்திடையே யுளர்குல மெக்குலமா
மடமதொ ழித்துணர்வா லுணர்திறெ னச்சொலுமேன்
மதியர்ப ழிச்சுமகா குமரனெ னைக்கொளுமே. (கஙஉ

* தத்தனன வெனுங்குறிப்பு: "தத்ததன" என வரினும் வாலாமென உ வித்த தீதென்க. தனவியைந்து "தத்தன" தனனவியைந்து "தத்தனன" என மாறு, தனனவியைந்து "தத்தனன" எனவாம். தனனன என வியைவதில் பிறவுமன்ன.

கஉக. மதம் (ஜஉஓ)=மகிழ்ச்சி.

கூவிளமும், கூவிளங்காயும்.

ஸ்ரீசைந மைத்ததுபோ லாசைந மைத்தவரே
மேதைய ராமுதியோர் மேனித ளர்ந்ததுபோல்
பாசம னத்தெழுபே மேதளர் வானவரே
பாசறை தீர்பெரியோ ராசது சேர்சிறியோர்
நீசரெ னப்படுவார் பூமிசை மற்றவரென்
னீதியை யுய்த்துணர்வோர் யாவரு மற்புதனூர்
தாசரெ னப்படுவா ரன்னவ ராவலொடே
தாமொரு கந்தபிரா னேயெனை யுண்டிடுமே. (௧௩௩)

புளிமா.

உடலே பெரிதா யுதரஞ் சழிவா யுளருஞ் சரைதா னுளரும் பொருளே
அடர்பா வுளரும் பெரியோ ரலரே யறிவா யவரும் பொருளே புடையோர்
உடலே சிறிதாய் வயதே குறைவா யுளரென் றிடினும் பெரியோ ரவரே
அடல்வே லனையுந் தெரிவோ ரவரே யறிவா லறிவீர் மனுவா னவரே. ()

கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்
கருவிளங்காய் கூவிளங்காய் கருவிளங்காய் கூவிளங்காய்.

தானதந்த தானதந்த தானதந்த தானதந்த
தனனதன தானதன தனனதன தானதன

தாதுவிஞ்சு சேடிருந்து தாதடங்கு போதுசம்பு
சரணமுற ஞானகுரு நெறியடைமி னேடியெனு
ஓதுகின்ற நூல்விரும்பு ஞாலமைந்த ரேசுமந்த
வுடலுறுதி யோவிடையு மழிவடையு மேயதனல்
மாதுகொஞ்சு பிடைமங்க வோடியன்பர் தேடுகந்தன்
மதிமருவு ஞானிகள்சொல் வழியைவிரை வாயடைவிர்
கோதுகொன்று ளார்விரும்பு வேதமிந்த வாறியம்பல்
குறைவறுவி வேகமென வறிநருமனேகரரோ. (௧௩௫)

புளிமாங்காய் கருவிளங்காய் கருவிளங்காய் கருவிளங்காய்
கருவிளங்காய் கருவிளங்காய் புளிமா தேமா.

அறியாமை கடுத்தறிரி பெனுங்கசடு தவிர்ந்துநிஜ
மறைசுருதி பிடித்துநவில் குருமுன் னுகிக்
குறியாத குறிப்பொருளை யுரிமையொடு முணர்ந்துறுதி
கொடுகருவி முதலியன தழையா நீர்மை
பெறுமாறு மனமடக்கி யிருப்பவர்கள் விரும்புபரப்
பிரமமெனுந் திருமுருகப் பெருமாள் கூறும்
அறைநாடி யிரவுபகல் வழிபடுமென் கவலையற
வளிப்பதவன் செயலெனலென் றுணிபே மன்னே. (௧௩௬)

---

௧௩௪. சழிவு=சப்பளிந்தது.
௧௩௬. கடுத்தல்=ஐயம்; "கடுத்தலொப் பையம்" என்னும் சூடாமணி.

தேமா கூவிளம் புளிமா கூவிளம் தேமா கூவிளம் புளிமா கூவிளம்.

தான தந்தன தனன தந்தன, தான தந்தன தனன தந்தன

ஆதி முன்பதி சிகர மந்தர மாசி லின்பருள் வகர மொன்றுற
ஓதி ஞெண்சிவ மெனவெ ழூந்திடு மூறு கொன்றிடு மதன றும்பொருள்
ஏதின் மங்களம் வசிய மென்றெழு மேயி தென்குரு பெயரு ளொன்றென
ஆத லுந்தெரி பவர்கள் கந்தன தாடல் கண்டிட வடிவ ணங்குக. (கஙஎ)

இவ்வளவில் வந்துள்ள சந்த பேதங்களன்றிப் பிறபேதங்களும் எண்சீரில் வரும். அவை யெங்ஙனமெனின்; அடுத்த கலியியலில் கஉ, முதல் கஉ - வரையுள்ள விருத்தங்க ளொழிந்த பிற அளவடி விருத்தங்களுட் சிலவற்றி னடிச்சந்தங்க ளிரட்டும் வழியிலென்க.

---

## ஒன்பதின்சீர்க்கழிநெடிலடியான்வருவன.

புளிமா கூவிளம் புளிமா கூவிளம்
புளிமா கூவிளம் புளிமா கூவிளம் கருவிளம்.

கலந்த வைந்தின கரந்தி ரோதைம
கரம்ப ழுங்கறை யிரண்டி ரும்பதி யவங்கியாம்
மலந்த ளும்படி விரும்பு வோர்தலை
மலந்தி ரோதைக ளிரண்டு மேகடை யமர்ந்திடக்
கலந்து கோடலு மிரண்டெ னும்பதி
கனிந்து கோடலு மருஞ்சி காரமெ னுமொன்றையே
மலர்ந்து கோடலு மியைந்த வாறெனும்
வரம்பர் நாடொரு கடம்ப னேயெனை யுணும்பிரான். (கஙஅ)

கருவிளங்காய் தேமா தேமா கருவிளங்காய் தேமா தேமா
கருவிளங்காய் தேமா கூவிளம்.

தனனதன தான தான தனனதன தான தான
தனனதன தான தானனு

†சகரமுத லாறு மாசில் பதியகர மாவ தாவி
சரதநம பாச மாமெலாம்
நிகழுமொழி மேனி லாவு பொருள்சரவ ணேச னை
நிருமலன மாவெ னுருமே

---

கஙஅ. அங்கி = அங்கத்தை யுடையது, ஆன்மா.

†இவ்வாறு திருப்பரங்கிரிப்புராணம் அ - வது சருக்கம் உங - வது செய்யுளில், "நவ்வாதிய சவ்வாதி நலஞ்சே ரெழுத்தோதி - யெவ்வாறருள் பெற்றூர்" என வருவதுங்காண்க. "இந்த, கஙக - வது செய்யுளில் ஸ்ரீ சுப்பிரமணிய சடக்கரமும், பொருளும், சடக்கரத்தில் நவாக்கரமும், சடக்கரத்தில் தசாக்கரமுங் கூறி அவற்று ளெதனையேனுஞ் செபிக்கு மளவும், பயனும் விளக்கப்பட்டன.

பகரிவையொ டோமு மேறி னெடியதச மாம்வி சேட
பலனுறவ வாவு மூழுளோர்
புகழுமெதை யேனும் வீர வுறுதியொடு கோடி யேசெய்
புனிதமுறின் வீடு மாள்வரே. (கஙௗ)

கூவிளம் தேமா கூவிளம் தேமா
கருவிளம் தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்.

தானன தந்த தானன தன்ன, தனதன தந்தத் தந்தன தானன தானனா

[சதாக்கரம். (நூறெழுத்து)]

வாசக மந்த மானத மென்னும்
வகையினி லொன்றிற் கொன்றுயர் வாய்நல மீயுமால்
நாசமி லந்த வாசக மென்ன
நவில்வது துன்பச் சந்தெறு மாமனு வோதிடா
தாசறு மந்த மானத மென்னு
மடைவின்மு யன்றோட் பம்பெறு வீரிலே வேலொடே
ஏசறு கந்த னுமென மின்னி
யெளிவரு மெந்தைக் கின்புள ராமடி யார்களே. (கசo)

கூவிளம் கருவிளம் புளிமாங்காய் கூவிளம்
கூவிளம் கருவிளம் புளிமாங்காய் கூவிளம் கூவிளம்.

நானன னனநன னனநந்த நந்தநந்
நானன னனநன னனநந்த நந்தன நந்தனா

வார்கர விரல்களில் வளர்சுட்டி லொண்கணென்
வாசக செபமணி தனைவைத் துருட்டுக நன்குநீள்
ஓர்விரன் மிசையொலி யளவிட்டு மந்தமண்
ணோர்புகழ் செபமணி தனைவைத் துருட்டுக மஞ்சசேர்
வார்பணி விரன்மிசை யெழின்மிக்கி லங்குநன்
மானத செபமணி தனைவைத் துருட்டுக பந்தபூ
ஆர்விலர் வலமுற வுமுருட்டு கென்பரம்
மாரண வறுமுக விறைவற்கு ரித்துள வன்பரே. (கசக)

இதன் குழிப்பில் நா - ந வருமிடங்களில் தா - த வருமாயின்; ஊன்காஞ்சி ரந்தமும், ஐந்தாஞ்சீ ராதியும் ‘ தந்தா ’ என நிகழும். அஃதிங்கேலாது. ஆகலின், இப்பாப் போன்று நிகழ் பாக்கட் கிடுகுழிப்பில் நகரமே வரல்வேண்டுமென வறிக.

## பதின்சீர்க்கழிநெடிலடியான்வருவன.

தேமா.

பூத லோக போக வாசை யேயு ளார்பு கன்ற மந்தி ரங்க ளோதல்
போத சந்த்ர நாடி யோடு போழ்தும் லோக போக மேதும் வேண்டி டாதார்
தீதில் பானு நாடியோடு போதும் வேத சித்தி முத்தி வேண்டு வோர்கள்
கோதி லங்கி நாடி யோடு போது மென்று கூறு வார்கு கேசர் தாசர்.(கசஉ)

கருவிளம் கூவிளம் கூவிளம் கருவிளம் தேமாங்காய்
கருவிளம் கூவிளம் கூவிளம் கருவிளம் தேமாங்காய்.

வரதகு கேசவ ணக்கமு னவனது சட்கோண
வரைபொறி செய்துகு ளித்திடு சலமதை வற்றுத
தரமுறு கங்கைகொ தாவரி நருமதை காவேரி
தகையுறு சிந்துச ரச்வதி யமுனைச தாசார
நிரறகு கிட்டிணி தாமிர பருணிகெ டுஞ்சீரே
நிகழொரு பத்திரி யாகவு மவைகணி ஐஞ்சேருஞ்
சரவண தீர்த்தமெ னுவெணி முழுகுக தப்பாது
தவளவி பூதிநி ரம்பிட வணிகுக தக்காரே. (கசங)

முதலாம் நான்கா மாறு மொன்பதாஞ் சீர்கள் : கூவிளம்.

காலையின் மாலையி லங்கதி யாசமு மஞ்சேறு
கையினி யாசமு நன்குபு ரிந்துயர் காங்கேயன்
மூலம னுச்செபி யாதவர் தஞ்செப முற்றுமன்
முட்டடை யும்பல னுங்குறை வாமயின் மொய்ம்பீசன்
சீலவெ ழுத்துவ ரைந்துதி கழ்ந்திடு சட்கோணஞ்
சேர்வழி பாடும தேவித மென்பா ருஞ்சேயோன்
போலொரு மெய்ப்பொருண் மெய்க்குரு வுண்டுகொ லென்றோரும்
புண்ணிய நண்ணிய கண்ணிய வின்புபொ லிந்தோரே. ()

தேமா விளம் விளம் விளம் மா மா விளம் விளம் விளம் மா.

நல்லை யாசன மளித்திடல் கைகழு நீர்தா
னல்கல் கால்கழு நீர்தரன் முக்குடி நீர்தான்
ஒல்லை யீந்திட லொண்சல மாட்டுத லாடை
யுடுத்தன் முப்புரி நூலிடல் சந்தனம் பூசல்

---

கசங. நிகழ்தல்=ஒளி விடுதல். இது "துளங்குதனிகழ்தல் சுடர்தல் *** என்றிவை யொளிவிடலாகும்" எனப் பிங்கல நிகண்டிலும் வருவது காண்க.

பத்திரி=தங்கபத்திரி. இது தலைக்குறை.

வல்லை மாமலர் சார்த்துத லட்சதை தூவன்
மாசி லாப்புகை தீபிகை வெண்கருப் பூரம்
தொல்லை யில்லமு தந்துவர்க் காய்மனு மலரோன்
சோட சங்குக ளுக்கிடு நருங்களி துய்ப்பார். (கசரு)

கூவிளம் கருவிளம் கூவிளம் கூவிளம் கருவிளம் கூவிளம்
கூவிளம் கருவிளம் கூவிளம் புளிமாங்காய்.

தத்தன தனதன தந்தன தத்தன தனதன தந்தன
தத்தன தனதன தந்தன தனதான

மத்தள மணிதுடி துந்துபி கத்திரி திமிலைக டிண்டிமம்
வட்டணை சிறுபறை மண்கணை பலதாமே
தித்திமி திமிதிமி தெந்தன டட்டட டடடட டுண்டுடு
தெய்த்தன வெனவெளி வந்தருள் குகதேவா
நித்தப ரமகுரு சங்கர சித்திர மயில்வரு சுந்தர
நிட்கள சரவண சம்ப்ரம வயிலீசா
இத்தரை யினிலுனை நம்பிய பத்தனெ னதுதுய ரந்துமி
யிட்டம ருவவரு ளென்றறை யெனையாளே. (கசகூ)

இப்பதின்சீரில், இங்குவந்த சந்தபேதங்களன்றிப் பிறபேதங்களும் வரும். அவை யெங்ஙனமெனின்; அடுத்த கலியியலில்வரு நெடிலடிக் கலிநிலைத்துறைகளுட் சிலவற்றி னடிச்சந்தங்க ளிரட்டும் வழியிலென்க.

---

## பதினொருசீர்க்கழிநெடிலடியான்வருவது.

புளிமா கூவிளங்காய் புளிமா கூவிளங்காய்
புளிமா கூவிளங்காய் கூவிளம்
புளிமா தேமா புளிமாங்காய் கூவிளம்.

தனன தந்ததன தனன தந்ததன தனன தந்ததன தந்தன
தனன தந்த தனத்தந்த தானன

உலக வம்புமன முலவு கின்றவரை யொழிவ தின்றமல பந்தமே
யுயரு மென்று நினைக்கின்ற வேழையேன்
அலகி றந்தவுன தடிய டைந்துசுக மணுக வந்தருள்வ தெந்தநா
ளறைதி யண்டர் துதிக்கின்ற பாதனே
இலகு தங்கமுடி சுடிகை கிம்புரியி ரதன மஞ்சிகைகள் கண்டமா
விழைகி லம்பு தரிக்கின்ற மேனியோய்
மலர்ந ரந்தமுயர் புழுகு கந்தபொடி மலய சங்கமழ்சு கந்தமே
மலிக டம்பு மணக்கின்ற மார்பனே. (கசஎ)

---

கசஎ. கண்டமாஇழை = அழகிய கண்டாபரணம்.

## பன்னிருசீர்க்கழிநெடிலடியான்வருவன.

காய்.

பிருதிவில காரமறல் வகரமனல் ரகரமுயிர் பீடுடைய யகரமேலே
  பிரபலம தானவெளி ஹகரமென நிற்கின்ற பீசவிவ ரங்தெரிந்தோர்
திருவுதவு மாமனுவி லனலுடைய பீசமது சேரினல னீங்குமென்று
  செப்பிடுவ ரவ்வாறு செப்புமவ ரேபரம சேய்விமல மேனிதானே
பொருவறுபெ ருஞ்சோதி யாயுள்ள தானுமெரி புதல்வனெனு நாமமொன்று
  புனிதமுடை யச்சேய வன்பெறுத லானுமெழில் பூக்கின்ற பாவகிப்பேர்ப்
பெருமையுடை யவனும மனுவிலுள ரகரமொரு பீடையும வித்திடாது
  பேசரிய கறைசிக்கு மருளுதவு மென்பருயர் பெற்றிகள வாவுவோரே.

இதுபோன்ற வோசையுடைச்செய்யுள்: இதில்வருங் காய்ச்சீர்களோடு சில விடங்களில் மா, விளம், கனி, பூ வெனுஞ் சீர்களைக்கொண்டும் முடியும். விவரம்— அடியில்வரு கசகூ – வது செய்யுட்கண் வெளியாம். இவ்வா றோசை சிதையாது வரு விருத்தங்களிற் சீர்கள் பேதப்படுதல் வழுவல வென்க.

உச்சவிசை மந்தவிசை யொத்தவிசை யென்பன
    வுணர்ந்துகலி காலமதிலும்
  உண்மையரு ளீயுமெங் குமாரகுரு மனுவைநனி
    யுச்சரிக் கின்றவர்களை
நச்சரவு தீண்டாது ககனவா சிகளாக
    நவினிசா சரர்கள்பற்றார்
  நமன்றமர் நெருங்கார் பெருந்தீ யெனப்பேய்க
    ணண்ணுவெ னுவாகமம்
நிச்சய நிகழ்த்துமென வுங்குகன துருவாக
    நிகழுமோ ரக்கரத்தில்
  நிலவிடு மகாரமு முகாரமு மகாரமு
    நிரப்பற்ற விந்துநாதம்
விச்சைதரு பரமென்னு மாறுமுள வெனவுமவை
    வேவிறைவ னுறெழுத்தை
  மேவுமொரு சூக்கமென வும்பகர்வ ரிவ்வுலகை
    வெல்லுரை விளம்புபவரே. (கசகூ)

இது பதினன்கு சீரடிச்செய்யு ளாகாதென்பதை இவ்வியல் ருo - வது செய்யுளின் கீழ்விளக்கிய நியாயத்தினுணர்வதோடு, இதனிரண்டாமடியிலும் "னுவாகமம்" என்பது இரண்டு மாஞ்சீராகாமல் நேர் நேர் நிரையாக நிற்பதுணர்க. ஆதலின், இவ்வோசைப் படிமிதன் முற்செய்யுளும், பிற்செய்யுளும் பன்னிருசீரடிச் செய்யுளேயாத லியை பென்க.

கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளங்கனி
கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளங்கனி.

தனதன தனதன தனதன தனதன, தனதன தனனதனன

சமானமில் பதாதியு டையாய்நிம லதாரக
சதாநட னஞானமுருகா
சராசர மெலாமரு ளியேகிறு வியீறுசெய்
சதாசிவ நகாரியயிலோய்
விமானசு ரநாயக விரோதந டையாளர்கள்
விநோதவி றனூறுவிறலோய்
விவேகப ரிபூரண விலாசம றைநாயக
வியாகர ணநாதகுழகா
அமானக ருணாகர வநாத திவாகர
வதீதகு ருநாதபரிபூ
அபேதநெ றியாளர கபீடம ரீசுர
வபூருவ சிகாவளபரா
குமாரகு ருதாசனி றைவாகுற மடாடவள்
குரோதமி றெய்வானைதலைவா
குருபமில் குகேசவெ மையாளென வளாவுநர்
கொளார்பிற வியேய்வாமுதே. (௧௫௦)

காய் காய் காய் காய் மா மா காய் காய் காய் காய் மா மா.

மந்தசபம் பெரிதிதினு மானதம துயர்விதினும் வனப்பு மீக்கொள்
வன்னவுரு வாகவழி படுமூர்த்தி நினைதலுயர் விதினு மாசார்
பந்தமெனுங் கருவிகடந் தொளிர்குகனை யறிந்துணர்வு படர்ந்த வாறே
படாறுச மாதியினைப் பாராது பார்ப்பதுயர் விதுபோ லீசன்
தந்தமுத னாலுநிகழ்த் திடுமினனம் விளக்கியச மாதி தன்னைச்
சாரவிய லாதுதயங் கிடுமினனு ரிரவிமதி சரியா வேளை
வந்திடுமோர் சுழுனைநிகழ் போதுலக நினைவொழிந்து மதியாய் நின்றால்
மரீஇயிடு வாரந்த வறிதறுச மாதியிலீது பாய மன்னே. (௧௫௧)

கூவிளம் மா மா விளம் மா மா விளம் மா மா விளம் மா மா.

சானுமண் டலமீ ரெட்டே மாத்திரை தழைக்கு மீது
சதுத்தச முடனெட் டாகச் சாரொரு பிராண யாமம்
ஈனமி லுயர்வு பாதி யெனினிழி வாகுங் காலே
யெனினதி யிழிவா மிம்மூன் றினிலெது மேலா சார்க்கு

௧௫௨. சானுமண்டலம் = வலதுமுழந்தாளை வலதுகையான் வலமாகத் தடவுமளவி லுண்டாகுங் காலம்.

ஞானமின் மூன்றுங் கையி னெடிப்பொழு தளவி னுகு
நுவலரும் பெரிய வாழ்க்கை நுழைவிருப் புதித்த பேர்காள்
வானவ ரெல்லா மேத்து வானவ னுன செவ்வேண்
மலரடிப் பரிவி னின்றே மருவுமி னுயர்வா மொன்றை. (கருஉ)

விளம் விளம் மா மா விளம் காய், விளம் விளம் மா மா விளம் காய்.

ஆண்டொரு நூறுபி ராணு யாம மயர்ந்தப லத்தினையே
யாசறு குசைநுனி வீழ்நீர் மாத மருந்துந ரெய்துவரே
நீண்டவி வேகபி ராணு யாம நெறிப்படி யொன்றயர்வோர்
நிறைநதி யெக்கியம் விரதந் தானு தியில்வரு நீள்பயனே
டேண்டரு சொர்க்கமு மெய்வர் பிரத்யா காரநி தம்புரிவோ
ரெழின்மறை யெக்கியம் யாவுநிதந்தா மிழைத்தவ ராகியவை
காண்டொறுங் காண்டொறு மின்பம தேசெய் கடியுயர் சிவலோகிற்
கைக்கொளு வாரெனு மேயா கமமா கந்தனி னைப்போரே. (கருங)

புளிமா மா காய் மா மா காய் மா மா காய் மா மா காய்.

தெரிதற் கரிய குகதேவைச் சிந்தை நடுவே நாட்டியதிற்
சித்த நனிவைத் திருப்பதுதான் றெளிதா ரணையென் றோர்ந்துதினம்
புரிபொற் புடையார் மூவேழாப் புகலு கின்ற தலைமுறையுட்
புலவார் நரகங் கிடந்தாரைப் பொள்ளென் றெடுத்தே யவர்களுடன்
பெரியற் புதமார் சிவலோகிற் பெரிய போக நுகர்ந்துய்வார்
பிழையில் பொருளைத் தயிலநடை போலத் தியான மேபுரிவோர்
இரிபுற் றளறு கிடக்கின்ற வினமு மூவதுங் கரையேற்றி
யெய்ந்த வுடம்பு விட்டவர்போ விருப்பா ரெனுநல் லாகமமே. (கருச)

இப்பன்னிருசீரில், இவ்வளவில் வந்த சந்தபேதங்களன்றிப் பிறபேதங்களும் வரும். அவை யெங்ஙனமெனின்; இவ்வியலுள் முற்போந்த வறுசீர் விருத்தங்களுட் சிலவற்றி னடிச்சந்தங்க ளிரட்டிம் வழியிலெனக.

---

## பதின்மூன்றுசீர்க்கழிநெடிலடியான்வருவது.

தேமா தேமா தேமா தேமா தேமா தேமா தேமா தேமா
தேமா தேமா தேமா தேமா புளிமாங்காய்.

தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த தனதானு

எத்த லத்து ருப்பொ ருட்கு மிக்க சித்தி னிற்ப தற்கு
ளிட்ட மூற்ற வர்க்க கத்தி லகலாதே
சத்த சத்தி யைப்பெ ருக்கு நிர்த்த னத்த ருக்க ளித்த
சத்தை வர்ச்சி தப்ப டுத்து னருள்சூழா

---

கருங. பிரத்தியாகாரம் = சீவவுபாதியை நீக்கிப் பிரபஞ்ச வுபாதியைச் சிவசொரூப மாகப் பார்த்தல்.

கருகு. அளித்தசத்தை - அளித்து + அசத்தை எனப் பிரித்துக்கொள்க.

முத்தர் சித்தர் பத்தர் மெச்சி யுட்ப நித்து னற்ப தத்தை
முற்று மெற்க ளப்பில் பக்க முடனேயி
சித்தி ரக்க லைக்கொ டிச்சி யற்பு வைத்த ணைத்த ணைத்து
திக்கு நட்பி னிற்க ளிக்கு முருகோனே. (௧௱௫)

## பதினான்குசீர்க்கழிநெடிலடியான்வருவன.

புளிமா மா மா மா மா மா விளம் புளிமா மா மா மா மா மா விளம்.

அரிய மூல மொன்று மேய வாவி கட்கு ளறிவினின்
றருள்செ யன்பு ளானு மந்த மூல மோடு கருமமும்
பிரிவு றாத பிரள யாக லர்க்கு நல்ல மான்மழு
பிறழு கின்ற பெரிய நான்கு புயமொ டால காலமார்
கரிய கண்ட மூன்று கண்க ணிலவு வந்து பொருவிலாக்
கதியை நல்கு கருணை யானு மூல மாயை கருமமும்
விரிய வுள்ள சகலர் கட்கு வினைநி லத்தர் மேனிதான்
மிளிர வந்த னுக்ர கஞ்செய் விமல னுக்கு நேசனே. (௧௱௬)

இச்செய்யுளின் ௭-வது ௧௪-வது சீர்களில், மூவினவொற்றுக்களும் வாரா மெனவும்; ஏனைய சீர்களில் வல்லொற்றும், வருஞ்சீர்முதற்கண் வல்லினமற்ற மெல்லொற்றும் வருமாயின் அவை யோசையைக் கெடுக்குமாகலின் வாவொண்ணாவெனவு மறிக. இவ்வாறு வேறு சிலவிருத்தங்கட்குங் கோடன் மரபு. சில விருத்தங்களின் சீர் உதாரணவாய்பாட்டுக்குச் சரியாயிருக்க வச்சீர்கட்கிடையின் மேற்காட்டியவாறு வரும் வல்லொற்று மெல்லொற்றுக்களும், அடியிடைவருஞ் சீர்களின் மாத்திரை யளவு குறுக நீளவருங் குறிநெடில்களும் ஓசையைக்கெடுக்கும். இவ்வித வழு வொன்றுமில்லா விருத்தங்களே யிக்கண்டத்தி லுள.

தேமா காய் மா காய் மா காய் விளம் மா காய் மா காய் மா காய் விளம்.

அண்ட நேமிவியர் வைவை மானசமொ டைக்தெ னப்புகலும் யோனிசேர்
ஆவி யாவையுமி ரட்ச கம்புரிய ணுதி யீசனும்வி ரத்தியே
கொண்ட கண்டகதி நம்பு சீவாது கொள்ளு மாமிறளிதின் முன்னைநாள்
குமர னனவுனை யேகு ரங்கிமறை கூறு மோம்பருள்வி ழைந்ததான்
மண்ட லத்துமுயர் விண்ட லத்துமருண் மலிய நிற்குநிலை யெக்கணும்
மருட புத்தருளி யாளு ஞானகுரு மாசி லாநினைய லாதிலே
தொண்ட னேற்குமருள் கென்ற லட்டுமுறை தூய நின்செவிபு காதெனோ
தோகை மஞ்ஞைவரு துய்ய னேயமரர் தொழுசு பாவமுற கையனே.

புளிமா கூவிளம் மா கூவிளம் மா கூவிளம் கூவிளம்
புளிமா கூவிளம் மா கூவிளம் மா கூவிளம் கூவிளம்.

படவ ராவணி யிடைய னாகிய பாச பாணித னக்குமா
பரிவ றாமக னாக வுந்துணை படர்ச கோதர னாகவும்
சுடரு ஞானவி லாச மேயசு வாமி யாகவு முள்ளவே
டுகளி னித்திய பிரம சாரிசு சீல மார்கிர கத்தனே

---

௧௦௯. அணைத்தல் = மனத்தின்கட் சேர்த்தல்.

அடவி வாழ்முனி சன்னி யாசியு மாவ னுன்குமி லானென
வறிவி வேகிக ணெஞ்சி னுளும லங்கு சோதிவி யோமமே
மடமு லாமெனே யாளு மாறெதிர் வருத வின்றுகொ ணுளேகொல்
வளர்பு லாலுட னீங்கும் வேளேகொன் மதியி லேனறி யேனரோ.

கூவிளம் விளம் விளம் விளம் விளம் விளம் காய்
விளம் விளம் விளம் விளம் விளம் விளம் காய்.

ஈசனே யுள்ளிட மர்ச்சனே புரிபவ ரெய்துப லத்தினு மேசால
இழிவுறு மேவெளி யர்ச்சனே புரிபவ ரெய்திடு பலனென வேகூறும்
ஆசறு சிவதரு மோத்தர மொழியறி யடியவ ருள்ளிட மேநாளும்
அற்றமி லுன்றனே யர்ச்சனே புரிவத சத்திய மாவது முண்டோசொல்
பாசவு யிர்க்குழு வத்தனே யுஞ்சிவ பதமடை காறுமி ரட்சகனுய்ப்
படர்கிரு பைக்கட லேசுர குஞ்சரி பதியென வருமொரு பரமேசா
நாசமின் ஞானவி னேதமு தால்குடை நாடக வேன்மழ வாகுழகா
நாடெனே யாளிறை யேநறு மாமண நாறடி மான்மக ளுயகனே. (கருச

இப்பதினுன்குசீரில், ஈண்டுவந்த சந்தபேதங்களன்றிப் பிற பேதங்களும் வரு
அவை யெங்ஙனமெனின்; இவ்வியலுள் முற்போந்த வெழுசீர் விருத்தங்களி னடிச்
தங்க ளிரட்டும் வழியிலென்க.

---

### பதினைந்துசீர்க்கழிநெடிலடியான்வருவது.

கூவிளம் கருவிளம் கூவிளம் கருவிளம்
கருவிளம் கருவிளம் கூவிளம் கருவிளம்
கருவிளம் தேமா கருவிளம் தேமா கருவிளம் கூவிளம் தேமா.

தானன தனதன தானன தனதன, தனதன தனதன தானன தனதன
தனதன தானு தனதன தானு தனதன தானன தானு

[ஒற்றிலாப் பஞ்சபங்கி. இருநூறேழுத்து]

பூமக டொழுதிரு நாயகி திரிபுரை
பொறையுடை மலேயிறை காதலி நிருமலி
புடவிய ராணு வமுதுண வீடீ புகழுடை யீசுரி பூமா
நாமக டுதிபுரி பூரணி சிவையுமை
நறையளி யுழுகுழ லாரணி யரவணி
நடவிறை பீடா ரிடமுறை தேவீ நகைமலி நாரணி வீயா

---

கருகூ. அற்றம் = சோர்வு.

கசுo. நகை = இன்பம், ஒளி; பி - நிகண்டு காண்க.

மாமக ளருடரு நீறணி பரைநல
மறைதரு கவுரிவ ராகிய மரிதிரி
வடிவென வேவீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா
கோமக ளுழைமக ளுயக னெனவரு
குறைவிலி யறிவது நாடொரு பருமணி
குடிலைவி சாகா துடிநட நாதா குகவெனை யேகொள வாவே. (கசுO)

பொறையுடை மலையிறை காதலி நிருமலி
புடவிய ராளு வமுதுண வீட புகழுடை யீசுரி பூமா
நறையளி யுழுகுழ லாரணி யரவணி
நடவிறை பீடா ரிடமுறை தேவீ நகைமலி நாரணி வீயா
மறைதரு கவுரிவ ராகிய மரிதிரி
வடிவென வேவீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா
குறைவிலி யறிவது நாடொரு பருமணி
குடிலைவி சாகா துடிநட நாதா குகவெனை யேகொள வாவே.

இது, பதினொருசீராசிரியவிருத்தம்.

புடவிய ராளு வமுதுண வீட புகழுடை யீசுரி பூமா
நடவிறை பீடா ரிடமுறை தேவீ நகைமலி நாரணி வீயா
வடிவென வேவீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா
குடிலைவி சாகா துடிநட நாதா குகவெனை யேகொள வாவே.

இது, எழுசீராசிரியவிருத்தம்.

புகழுடை யீசுரி பூமா
நகைமலி நாரணி வீயா
மகனென வானவ ரேசா
குகவெனை யேகொள வாவே.

இது, வஞ்சிவிருத்தம்.

பூகம பொழுதிரு நாயகி திரிபுரை புகழுடை யீசுரி பூமா
நாமக டுதிபுரி பூரணி சிவையுமை நகைமலி நாரணி வீயா
மாமக ளருடரு நீறணி பரைநல மகனென வானவ ரேசா
கோமக ளுழைமக ளுயக னெனவரு குகவெனை யேகொள வாவே.

இது, வேறு எழுசீராசிரியவிருத்தம். ஆக - ௫.

இப்பங்கிக்கு வேறாகவும் நூற்றுக்குமேற்பட்டும் வரு மரிய பெரிய பங்கிகளை முதன் மண்டலமாகிய குமரகுருதாச சுவாமிகள் பாடலிற் காண்க.

---

கசுO. வர + ஈசா = வரேசா. வரங்களைக் கொடுத்தருள் ஈசுரா எனும் பொருண்மைத்து.

கோமகள் = தேவயானைப்பிராட்டி ; கோ = தேவலோகமெனுஞ் சுவர்க்கம் "கோ...ஏவுரை சுவர்க்கம் வேந்தன்" என்பது வகாரவேதுகை.

உழைமகள் = மான்மகள் = வள்ளிப்பிராட்டி.

### பதினாறுசீர்க்கழிநெடிலடியான்வருவன.

*புளிமா விளம் விளம் மா மா விளம் விளம் மா*
*மா விளம் விளம் மா மா விளம் விளம் மா.*

சிவமு மாசிவ சத்தியு மெழிலே
திகழ்மும் மூர்த்தியு மவரடி களுமே
சீர்கொ ணீயென மிளிர்முறை மைக்கென்
சென்னி மீதுபன் னிருவிரன் மேலும்
அவமி லேனைய தேவரு நீயென்
றுருகு முறைக்குயர் தலையிலு மாசா
னுயி லங்கிடு முறைக்கில லாட
மதிலுந் தந்தையு மரசுமென் முறைக்கு
நவிலும் வாயெதி ராகவு மெய்ம்மை
நண்ணு வேதிய னுமுறை மைக்கு
நாப்பண் மார்பிலு மொய்த்தாய் முறைக்கு
நல்ல மோட்டிலு மாக்கரங் கூப்பி
உவகை யோடுனைத் தாழ்வே னின்னு
முற்ற வன்னைபி தாகுரு தேவென்
றுன்னு முறைக்கிரு நான்குவந் தனமு
முனூற்று வேனருள் வேலுடை யானே. (கசுக)

### கருவிளங்காயும், கூவிளங்காயும்.

*தனனதன தானதன தனனதன தானதன*
*தனனதன தானதன தனனதன தானதனா*

தலைகுனித லாகநவி றலும்விரல்க ளார்வலது
சயமுடியி லேறுதலு மிருகரமு மாசிரமே
தறுகுதலு மேனவிர முறுமிருகை யோடுபய
சரணவிரு சானுநில முறுதலும லார்சிரமேல்
இலகிருகை சேரவிரு சானுரமு நேமிதொட
விழைதலும்வி சேடசிக ரமதுமிரு தோள்செவியோ
டிருகழலும் வாணுதலும் விரிதிணையி லேபடலும்
இணையவுன தேசிலடி தொழுதுபுகழ் வேனினும்வீண்
அலைமனதை யேகமென வறுதலமு ளேநிறுவி
யனுதினம்வி டாதுநினை யுழுவலுறு வேன்வெளியாய்
அவிர்திசையெ லாநினது சுயநிஜசொ ரூபமென
வகமகிழ்வொ டேகருதி வழிபடுவ லேயினிமே

---

கசுக. அடிகள் = தலைவி. என்னை? "கோமக டலைவி யடிக ளாயை" என்பதி பி - நிகண்டாகலின்.

னிலையறியு மாறருளி யடிமைகொள வேவருநி
நிமலனெனு மாதிசிவ னுடையகும ராவழகார்
நெடியதமிழ் பாடருணை கிரிபுகழ்கொள் காதுசெறி
நிருமலகு கேசநெடு வயிரவடி வேலவனே. (கருஉ)

இப்பதினறுசீரில், ஈண்டுவந்த சந்தபேதங்களன்றிப் பிறபேதங்களும் வரும். எங்ஙனமெனின்; இவ்வியலுள் எண்சீர் விருத்தங்களி னடிச்சந்தங்க ளிரட்டும் வழியி லென்க.

"இரண்டுமுதலா வெட்டீறாகத் - திரண்டசீரா னடிமுடிவுடைய - விரந்து வரினு மடிமுடிவுடைய - சிறந்த வல்ல செய்யுளுள்ளே" எனக் **காக்கைபாடினியார்** சொன்னார்; அதனுலிங்ஙனம் எண்சீரின் மிக்க சீரான்வரு மடிகள் சிறப்பிலவெனச் சிலர் செப்பாரோவெனின்; ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்தெனுஞ் சீர்களை யடியாகக்கொண்டு சந்தநயமின்றி முடியுஞ் செய்யுள்களை யன்னணஞ் சிறப்பில வென்றல் அச்சூத்திரக் கருத்தன்றி யிவ்வியலிற் போந்தவைபோன்ற சந்தநயப்புடைச் செய்யுள்களைச் சிறப்பிலவென்றல் கருத்தன்றாம். ஏனைய பத்து, பன்னிரண்டு, பதினன்கு, பதினறுசீரடிச் செய்யுள்களும் எண்சீரடிக்குட்பட்ட செய்யுட்சந்தங்களை யிரட்டும் வழியின் மிக்கசீரடியாக நிகழ்தலின்; அச்சூத்திரவழியே சிறப்புளவே. "கழிநெடிலடியே கசடறக்கிளப்பி—னறுசீர்முதலா வையிரண்டீறா—வருவன பிறவும் வகுத்தனர் கொளலே" எனவரும் **யாப்பருங்கலச் சூத்திரத்தை** யனுசரித்த வாறாக "மற்றுமென்பதனுற் பதின்சீரின் மிக்குவருவனவுமுள" என்பதும் **யா - காரிகை**யுரை. இவ்வாறளவாயிரட்டும்வழி முதலடியின் முதலெழுத்திற் கியைந்த வினவெழுத்துக் கொண் டெத்தனைமுறையேனு மிரட்டித் தோரடியாய்நடந் தவ்வடி **நான்காகியிறும்** விருத்தமெல்லா முதலடிச்சீரெண்ணையே பெயராகப்பெறும். **ஐந்தின்மேற்பட்ட** வித்தனைசீ ரிரட்டையாசிரிய விருத்தமென்றேனும், **நான்கின்** மேற்பட்ட **வித்தனை**யடி யாசிரியவிருத்தமென்றேனும் பெயர்பெறா. என்னை? "கழிநெடிலடி **நான்கொத்** திறின் விருத்தமஃ—தழியா மரபின தகவலாகும்" என்பது **யாப்பருங்கல**மாகலின்.

ஆசிரியப்பாவின முற்றிற்று.

உ - வது ஆசிரியவியன் முற்றிற்று.

ஆ இயல் இரண்டினும் போந்த திருச்செய்யுள் - உஅச.

# ௩-வது கலியியல்.

---

## ௧. ஒத்தாழிசைக்கலி.

### நேரிசையொத்தாழிசைக்கலிப்பா.

௧. [மூவடித்தரவு ஒன்று]

பண்டைக்குக் குடமஞ்ஞை பண்ணியதீ தாலிழிந்து
பண்டப்பொற் புயர்காஞ்சிப் பதியெய்தித் தவம்புரிநாள்
வண்டற்ற கதியவைகட் களித்தமுது மழவோய்கேள்.

௨. [ஈரடித்தாழிசை மூன்று]

ஈரிரண்டு கணத்தலைவ ரிழைத்ததெவ் வாலிறந்த
பேருவண மோடனமும் பிழைக்கவருள் கூர்ந்ததுநீ.

அக்காலத் தரியயன்மா லாள்பதிக ணலிவோர்ந்து
மிக்காரும் வளமுன்போல் விளங்கவருள் செய்ததுநீ.

பராசரன் மகாராறுவர் படுசாபந் தீர்த்தவர்க்குச்
சுராசுரர்க ளூறற்கரிய தூய்மதியன் றீந்ததுநீ.

௩. [தனிச்சொல்]

எனவாங்கு.

௪. [மூவடி வெள்ளைச்சுரிதகம்]

எண்ணிடு மெற்கு மருள்வாயென் றேத்துமென்
கண்ணுமுற் றுள்ளங் கவர்ந்தரு ளாலெனைத்
திண்ணவிண் வீட்டிற் செலுத்து. (௧)

இதனானே தாவுமூன்றடிச்சிறுமை யுடைத்தெனவும், தாழிசை யிரண்டடிச் சிறுமை யுடைத்தெனவுமுணர்க. பெருமை பேசப்புகின், தாவுக்குப் பாடுவோனது பொருண்முடிவு குறிப்பாம். ஆகலி னடிவரையறை யிலையென்றும். தாழிசைக்கு அப் பெருமை நான்கடியும் இடைமூன்றடியுமாம். என்னை? "சுருங்கிற்று மூன்றடி யேனைத்தாவு *** தாழிசைப்பாச்சுருங்கிற் றிரண்டடியோக்க மிரட்டி" என்பது யா—காரிகை யாகலின். தாவடிகுறித்து "உரைப்போருள்ளக் கருத்தினளவே பெருமை" என்பதுமது. ஒரு செய்யுளிற் றாவடிக்குத் தாழிசையடி சுருங்கி நடக்கு மெனற்கு இச்செய்யுளே யுதாரணமாம். என்னை? "சுருங்குந்தாவினிற்றாழிசையே" என்பது யா—காரிகையாகலின். இவ்வொத்தாழிசைக்கலிப்பா ஆசிரியச்சுரிதகமும் பெறும்.

---

௧. வண்டு = குற்றம்; நிகண்டுகள் காண்க.

## அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பா.

க. [ஆறடித்தாவு ஒன்று]

மடன்மலர்கூ டசுரர்குலம் வருமிறையாஞ் சூரனும்வெம்
படர்தடியும் பெருமொய்ம்புப் பதுமனுமே புரிதவசுக்
கெழில்சேருந் தனதுயர்வாழ் வினையளிப்பா னிருவரையும்
பொழில்சேரு முடலொன்றிற் புகவிட்டவ் வுடலையயில்
கொண்டுபிளந் தொருபாதி கொடியாமற் றொருபாதி
தொண்டுபுரி வாகனமாத் துளங்கவருள் செய்தோய்கேள்.

உ. [ஈரடித்தாழிசை மூன்று]

முதுமறைச்செந் நெறிமறந்து முதிரகந்தை கொடுநின்ற
பதுமத்தா னடுச்சிகரம் பறித்தபர மேட்டியுநீ.

பொன்னனன வுரம்பிளந்து புரைக்குடரைக் களமணிந்து
மன்னகமே மலிந்தவய மாவுரித்த சிம்புளுநீ.

ஆர்கலியை நனிகலக்கி யகங்கரித்த மயிலையையும்
வார்கமடத் தையுமடக்கு மாண்புடைய தெய்வமுநீ.

௩. [பேரெண்ணாகிய நாற்சீரடி யம்போதரங்கம் இர்ண்டு]

உலகினை யளந்தவ னுரமுது கென்பினை
இலகுகங் காளமா வேந்திநின் றவனுநீ.

அம்பக மாந்திரு வலரிடத் தாளிலை
நம்பொடு சார்த்திய நாரண னிறையுநீ.

[அளவெண்ணாகிய நாற்சீரோரடி யம்போதரங்கம் நான்கு]

திண்சலந் தரன்வகிர் திகிரிக் கரனுநீ.
ஒண்பரி திவலவற் குதவு பரனுநீ.
அரியய னுடலெரித் தணிநீற் றரனுநீ.
திரிகுண மிலாவெண் டிறமார் சிவனுநீ.

[இடையெண்ணாகிய முச்சீரோரடி யம்போதரங்கம் எட்டு]

விடமுண்ட கண்டனு நீஇ.
வெங்குரண்ட நாசனு நீஇ.
கந்தர்ப்ப தகனனு நீஇ.
காலுதைத்த காலனு நீஇ.

---

௩. வலவன்=விட்டுணு; அருச்சுனனுக்குத் தேர்ப்பாகனான காரணத்தா லெய்திய பெயரென்ப.

குரண்டம்=கொக்கு.

சசிமிதித்த தாளனு நீஇ.
சசிபரித்த சடையனு நீஇ.
கரியுரித்த கத்தனு நீஇ.
கங்கையணி கடவுளு நீஇ.

[சிற்றெண்ணாகிய விருசீரோரடி யம்போதரங்கம் பதினாறு]

மூத்த னீஇ.
முனிவ னீஇ.
அத்த னீஇ.
அனக னீஇ.
சத்து நீஇ.
சித்து நீஇ.
இன்பு நீஇ.
அன்பு நீஇ.
ஆதி நீஇ.
சோதி நீஇ.
கால நீஇ.
ஞால நீஇ.
அரிது நீஇ.
பெரிது நீஇ.
ஆவி நீஇ.
யாவு நீஇ.

ச. [தனிச்சொல்]

அதனால்.

ரு. [ஆறடி நேரிசையாசிரியச் சுரிதகம்]

நின்னடி நினைந்து நின்னடி புகழ்ந்துன்
இன்னரு ளடைந்தே யென்னையு மறிந்தாள்
உன்னையு மறிந்தே யொல்லையத் துவிதந்
தன்னினீ நானெனாச் சமரச மாக
நிற்கவென் றுள்ளுமென் னினைப்பை
அற்புத னேர்ந்தினி தாள்வதுன் கடனே. (உ)

"இருமூன்றடியே தாங்கக்கும் வண்ணகக்குந் தாவாவது" என யா - காரிகை கூறுமாறு, இவ்வம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பாவிற்கும், இதனடுத்து வரு வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவிற்கும் தரவடி பெருக்க சுருக்கமின்றி யாறடியேயாம். "ஈரடியிரண்டு மோரடி நான்கு - முச்சீரெட்டு மிருசீரிரட்டியு - மச்சீர் குறையினு மம்போதரங்கம்." என்பது யா - காரிகையுரைவந் சூத்திரமாகலின் ; இவ்விரண்டாஞ்

செய்யுள்போன்ற செய்யுளி லிடையெண் சிற்றெண் அம்போதரங்க வடிகள்; நான்கு மெட்டுமாகச்சுருங்கி வரினும் வரலாமென்க. அம்போதரங்கம்—அசையடியெனவும், சொற்சீரடியெனவும் பெயர் பெறும்.

"கால நீஇ, ஞால நீஇ, ஆவி நீஇ, யாவு நீஇ என்பன, பொருளின தன்மையை மறுத்துப் பிறிதொன்றாக வுரைக்கும் பொருளவநுதி யென்னு மோரலங்காரமாம். என்னை? "சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை—மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்" என்பது தண்டியலங்கார மாகலின்.

## வண்ணகவொத்தாழிசைச்கலிப்பா.

க. [ஆறடித்தரவு ஒன்று]

புனல்கொண்டும் பூக்கொண்டும் பூரணனைப் பூசித்துத்
தினமிளிரு முடனானே திருவுடையா ருடலென்றும்
இழிவற்ற புகழ்கூறி யிணையற்ற மனுவோது
தொழினித்த முளநாவே சுசியுடையார் நாவென்றும்
நனவதிலுங் கனவதிலு நாயகனை நனிநினையும்
மனமதுநன் மனமென்று மகிழ்நெடிய வேலோய்கேள்.

உ. [நாலடித்தாழிசை மூன்று]

தக்கவரி குமாரிகள்செய் தவநிலைமுன் னெழுந்தருளித்
திக்கனைத்து மேபுகழச் சிலநாளின் மேனுங்கள்
மிக்கவிருப் பம்போல விரைமாலை சூட்டிடுவாம்
பக்கமுளீ ரென்றுரைத்த படிபிழையா திழைத்தனையால்.

பண்டிளமை யறுமுனிவர் பரங்கிரியிற் புரிதவசு
கண்டவர்க ளருகிருந்து கருணைநிஜ நெறியாக
எண்டிசையு மப்பாலு மிணையறநின் றிடலுணர்த்தி
அண்டருமே பெறற்கரிய வரும்பெருவாழ் வளித்தனையால்.

யாக்கையிரு ளென்னவரும் யமனையொரு மசகமென
நோக்குமிக லுளவிடும்ப னுன்னோடெ னெதிர்க்கக்கண்
டேக்கமிகு முனிவரரு முவணையருந் தாமதிக்க
ஆக்கையுயிர் பிரித்தருளி யங்கவனைக் கொண்டனையால்.

௩. [முடுகியலாகிய அராக நான்கு]

நிறமலி தமனிய ணையரிய கிறைபணி நிருமித வினையறுநனை.
அறமலி நெடியவ னயர்தவ நலனுற வடல்வலி பிணிதருளினை.
மறமலி யரியெனு மெறுழ்கெழு விடாற மதுகையு றகொலைசெய்தனை.
திறமலி சுரர்புகழ் குறுமுனி யுயர்கவி செயநல தமிழருளினை.

௬. [நாற்சீரடி யம்போதரங்கம் இரண்டு]

விந்துவு நாதமும் விளங்க நின்றுமவ்
விந்துவு நாதமும் விலங்க நின்றனை.
ஆரணச் சொல்லிடை யடங்கி நின்றுமவ்
வாரணச் சொல்லையு மகன்று நின்றனை.

[நாற்சீரோரடி யம்போதரங்க நான்கு]

சின்மய வெளியெனச் செறிந்து நின்றனை.
நின்மல வொளியென நிலவி நின்றனை.
சதசத் தசத்தெனாச் சத்தென நின்றனை.
பொய்த்தவ றறியொணாப் பொருளென நின்றனை.

[முச்சீரோரடி யம்போதரங்கம் எட்டு]

சுகுர்த வருளென விளங்கினை.
துகளி லியல்பென வியங்கினை.
பிரம விபுவென விருந்தனை.
பெரிய பதியென விலங்கினை.
நெடிய திருவென நிரம்பினை.
நிகில குருவென நிகழ்ந்தனை.
நிகரில் கடியென நிமிர்ந்தனை.
நிரவ யவனென நிறைந்தனை.

[இருசீரோரடி யம்போதரங்கம் பதினாறு]

தழைவு மாயினை.
விளைவு மாயினை.
சமமு மாயினை.
தவமு மாயினை.
அயில னாயினை.
மயில னாயினை.
மழவ னாயினை.
கிழவ னாயினை.
வீர னாயினை.
தீர னாயினை.
முருட னாயினை.
திருட னாயினை.
மலைய னாயினை.
புலவ னாயினை.
பூம னாயினை.
ஓம னாயினை.

ரு. [தனிச்சொல்]

எனவாங்கு.

சு. [ஆறடி நேரிசை யாசிரியச் சுரிதகம்]

எல்லினு மல்லினு மென்மனத் தெண்ணியுன்
நல்லடி பரவி நாடுநா யேனைக்
காப்பது கடனாக் கருதியென் ஞான்றுநீ
நீப்பறு திருவரு ணீட்டிடல் வேண்டும்
வீவில்புள் ளிருக்கும் வேளூர்க்
கோவில்வாழ் முத்துக் குமார தேவே. (ரு)

பின்வரு வெண்கலியுள்ளும், வெண்டளையான் வருங் கொச்சகக்கலியுள்ளும், கட்டளைக்கலியுள்ளும் வாரத்தக்க தேமா புளிமாவெனு நேரீற் றியற்சீர்களும், கலிப்பாவிற் சிறுபான்மை வாரத்தக்க கூவிளம் கருவிளமெனு நிரையீற் றியற்சீர்களும் இவ்வொத்தாழிசைக்கலிப்பாக்களின் தரவு தாழிசைகளில் வாராமற் காய்ச்சீரே வந்தவாறறிக. "என,வாங்கு" என்ற தனிச்சொல் : "அசைநிலைக்கிளவி தாழிசைப்பின்னர் – நடைநவின்றொழுகு மாங்கென்கிளவி" எனுந் தொல்காப்பியச் சூத்திரவழிவந்தது. நடைநவின்று வருமெனவே, அல்லாதனவெனப்படும் "அதனால்" முதலியனவுமுள ; அவையித்துணைநடைநவின்று வாராவெனக் கொள்க. அவ்வாங்கு : இடப்பொருட்கிளவியாயேனும், அசைநிலைக்கிளவியாயேனு நிற்கும்.

---

## உ. வெண்கலி.

கலித்தளையும் வெண்சீர் வெண்டளையும் விரவி
அகவற்றுள்ளலோசையான் வருகின்ற
பதினொறடிவெண்கலிப்பா.

மேலென்று சொலப்பட்ட பொருட்கெல்லா மேலாயேக்
காலுமிருந் தெங்கணுமாக் கழுமுபொரு ளொன்றதனைப்
பரசுப்ர மணியமெனப் பகருமுயர் சுருதியதன்
சரணச்செங் கமலமலர் தங்கியநுண் பூழிகளை
ரு. ஆதிபரா பரனென்னு மரனார்தம் மொய்ம்புகளும்
ஓதிசெறி பருப்பதியி னுயர்தனபா ரங்களுமே
சில்காலம் பொருந்தியினி துய்ந்தவெனச் செல்வமிகு
தொல்பிரபா கரன்மைந்தர்க் ககத்தியனார் சொற்றதிடம்
காந்தத்தி னுபதேச காண்டத்தி னுளததனால்
கo. வேந்தர்க்கும் வேந்தாகு விட்டுணுவு மேனோரும்
நுண்சரணத் துகண்மாண்பு நுவலரிதெதத் துணையுமதைப்
புன்கவிஞ ருநானோ புகலுவலித் தகையுடைநீ

என்று திகொண் டெளிவந்துன் னின்னருணன் கிவாயேல்
றொன்றுலகி லெனைப்பொறிய னென்றெவர்தாஞ் சொலவிசையார்
கரு. ஆதலினங் குகவெனையுன் னருணிலைவைத் தினிவருதல்
போதலுமில் லாமுடிவிற் போக்கு. (ச)

காய்முன் னிரைவருவது கலித்தளை.

பலதளையும் விரவிப் பிரிந்திசைத்துள்ளலோசையான் வருகின்ற
பத்தடி வெண்கலிப்பா.

அருணைநல் லவிமுத்த மணிதில்லை மணியாரூர்
திருமலி பொழின்மதுரை திருக்காளத் தியுமுறையே
நினைக்கமெய் விடுக்கவொரு நிலையுறீஇத் தரிசிக்கச்
செனிக்கவுட் செவிகேட்கச் சிரத்தையுட னருச்சிக்க
ரு. முத்தியா மெனநூல்சொன் முறைபோலப் பலனல்கும்
அத்தனூர் நின்காற்றண் ணலர்பெரிய தந்தோள்பட்
டுள்ளமா மகிமையினுட் குளிர்ந்தனரக் குளிர்கொண்டே
வள்ளலா யின்பீவர் மலர்ச்சரணம் பினர்க்கென்னின்
அற்றமி லறுமுகவுன் னடிப்பூகம் முடிப்பார்வாழ்
கo. வெற்றென மட்டிடலா மிங்கு. (ரு)

ஆசிரியத்தளையானுந் தன்றளையானும் வருகின்ற
நான்கடி வெண்கலிப்பா.

ஆசறு மயின்மழவ னருந்தமுத முகைகடமூல்
தேசவி ரவன்றந்தை திருவுருவுந் தழலேயால்
நாசமி லவற்சுமந்த நறுந்தேவுந் தழலினிய
தாசருள் கவனுமொண் டழல். (சு)

இப்பாவானே தனியேவருங் கலிப்பா நான்கடிச் சிறுமையுடைத்தென்பதறிக. பெருமை யெத்துணைத்தென்னின்; அளவின்றென்க. என்னை? "எள்ளப்படாக்கலிக் கீரிரண்டாகு மிழிபுரைப்போ — ருள்ளக் கருத்தினளவே பெருமை." என்பது யா — காரிகை யாகலின். வெண்பாவேபோல, ஈற்றடிமுச்சீரா யேனையடி நாற்சீராய் முடிதலின்; இங்கு வந்த பாக்கள் வெண்கலியாம்.

## கலிவெண்பா.

ஒருபொருண்மேல், ஒழுகிசைச்செப்பலோசைத்தாய்த்
தனிச்சொலின்றிப்பதினுன்கடியான் வருவது.

தெவ்வற்ற கண்ணுவனூர் செப்பியவோர் சாபத்தை
இவ்வழியே தீர்ப்பாமென் றெண்ணியநீண் மாலென்பார்
மாசில் சிவமுனியாய் மானுன பார்க்கவியை
ஆசிலேக் காற்புணர்ந் தோர்பெண் ணளித்தகம்
ரு. துபேந்திரனும் வேட னுறையுள் வளர்ந்து

நபேந்துபோன் மின்னியிடு ஞான்றுநின் பானல்கி
வாழ்ந்தா ரிரப்பார்க்கும் வாழ்வளிக்கு மாண்புற்றோர்
தாழ்ந்தா ருளுந்தாழ் சழக்கனே னென்றருவேன்
னெஞ்சா னினைப்பே னிறைபாக்க ளாற்றுதிப்பேன்
௩௦. தஞ்சநின் பாதமெனத் தாழ்வேனின் னுமத்தைப்
பன்னுநர்க் குந்தண்டம் பண்ணிடுவே னன்பானே
என்னகத்தி னிற்கு மிரும்பொருளே வேன்மன்னே
பொன்றாக் கருணைப் புணரியினான் புக்குய்தற்
கொன்றா யணைத்தா னுவந்து. (எ)

இடையிடையே தனிச்சொற்பெற்றுப்
பதினெட்டடியான் வருவது.

வனப்புமீ தூர வளர்மணிக்க லாபந்
தனைக்ககன நீட்டித் தலநின்—றனைக்கொள்
இறைசெவ்வேள் கால்விழைவா ரெல்லாரு நாளும்
குறைவில்லாச் செல்வரெனக் கூத்தா—டிறைமஞ்ஞாய்
௫. நீசூர னுயிருந்து நீடாக்க விண்ணோர்க்கு
மாசூர் புரிந்து மகிழ்போழ்து—தேசாரவ்
விண்ணோருன் மாண்பு விளியவெற்றி கொள்ளவென
எண்ணிச்சேய் மூல மிகறருகா—னண்ணவ்
வுடம்புபோ யிந்த வுடம்புறுநீ வேரிக்
௧௦. கடம்புமா வெட்சியுங் காமர்த்—தடந்தோளிற்
பூணும் பெருமான் புரிவுடையா ரானந்தங்
காணும் படிக்கருளுங் கத்தனொரு—கீணமுமில்
கூரிலை வேற்கையன் குன்றெறிந் தோனடியாஞ்
சீரியதா டாங்கு திருப்பேறு—சார்வுற்றாய்
௧௫. அவ்விண்ணோர் நாமெல்லா மர்ச்சிக்கும் வாழ்வுற்றான்
றெவ்வனென் றோதத் தெளிந்தென்று—மிவ்வுலகில்
நின்னிறையே யென்னிறையா நேடி யலையெளியேன்
இன்னலுற லாங்கொ லிசை. (அ)

இடையிடையே தனிச்சொற் பெறுதும் பெற்றும் வெண்டளையான்வந்த இவை: பதினன்கடி பதினெட்டடிப் பஃறொடைவெண்பாக்க ளாகாவோ? "அடிபலவாய்ச் சென்று நிகழ்வ பஃறொடை" என்பது யா—காரிகையன்றோ வெனின்; கூறுதும். **தொல்காப்பியத்தில்** "நெடுவெண்பாட்டே முந்நான்கடித்தே" எனவும், **யாப்பருங்கல அடியோத்து விருத்தியுரையில்** "மெய்ப்படக்கிளந்த வெண்பா விரிப்பின் **** ஓரிரண்டு முதலா முறைசிறந் தீரா—றேறுமென்ப வியல்புணர்ந்தோரே" எனவும் வருதற்கேற்ப **இலக்கண விளக்கம்** ௭௩௮—ம் **சூத்திரவுரையில்** "வெள்ளோசை தழுவிவருங் கலிவெண்பா: பன்னீரடியின் மிக்கே வருமெனக்கொள்க" என விளக்கி

யிருத்தலின், பதினொன்கு பதினெட்டடியுடைய விச்செய்யுள்கள் கலிவெண்பாவெனவே பெயர்பெறும். அதனாலிங்கே வைக்கப்பட்டனவெனவும், ஐந்தடிமுதற் பன்னீரடி யளவும் வருவெண்பாவையே பஃறொடைவெண்பாவென **மேலைக்காரிகை** விளக்கிற் றெனவும் இங்ஙனம் பொருள்கோட லியைபாம். இவ்வாறு கொள்ளாவிடின் மேலிரு திறச்செய்யுட்கும் பேதமில்லையெனு மூறணுண்டாம். **சிதம்பரச் செய்யுட்கோவையில்** வெண்டளைபெற்றுத் தனிச்சொலின்றி உஉ - அடியான் வந்த "தொடலைக்குறு தொடி" எனுந் தொடக்கத்துச் செய்யுளை வெண்கலியில் வைக்கப்பட்டதூஉம் இட மூறணுண்டாகாமையைக் காட்டும். **கந்தர்கலிவெண்பாவு** மிங்ஙன முதாரணமாம் அற்றேல், ஸ்ரீ உமாபதிசிவாசாரியார் கசுo - அடியிலருளிச்செய்ததூஉம்; இடை யிடையே தனிச்சீர்பெற்றதூஉமான ஒரு செய்யுளுடைய நூற்பெயர் **போற்றிப் பஃறொடை** என விளங்குவானே னென்னின்; அதுவும் பஃறொடையாலாய கலி வெண்பாவே; தொடையாலப்பெயர் பெற்றதெனவாம். அது, "நெடுங்கழிநெடில்" "குறுங்கழிநெடில்" எனப் பிரபந்தப்பெயர்கள் காணப்படல் போலும்.

வெண்பாவுக்குரிய காய்ச்சீர் நான்கனுள்; இடையிற் குறினெடிலிணைந்த நிரையசையுடையனவும், இரண்டு மாஞ்சீராகப் பிரிக்கத்தகுவனவுமான "தம்பிரானே" என்பதுபோன்ற கூவிளங்காயும், "சருவசாரம்" என்பதுபோன்ற கருவிளங்காயும் வெண்பாவில் வரவொண்ணாவெனவும், வரின் ஓசைநயங் கெடுமெனவு மறிக. கலிப் பாவில் வரு காய்ச்சீர்கட்கு மிந்நியாயங் கொள்க.

---

## ௩. கொச்சகக்கலி.

### தரவு கொச்சகக்கலிப்பா.

தனிச்சொல்லுஞ் சுரிதகமுமில்லாது தனியே கலித்தளைபெற்று
ஏந்திசைத்துள்ளலோசையான் வருவன.

காய்

**வளர்**தில்லைக் கனகசபை மதுரைவெள்ளிச் சபைசோதி
கிளராலவனரத்ன சபைதளிமங் கெழுநெல்லைத்
தளர்வறுதாம் பிரஞ்சித்ர சபைகுற்றா லதிருத்தம்
அளவின்றிச் செயுமானு மருணிதியா மறுமுகனே. (க

நிரை+நிரை+நேர் = கருவிளங்காய்.

தனதனனா தனதனனா தனதன்னா தன்தனனா

**கடல்**கடைமால் விதிமுதனீள் கடவுளரார் மகிமையெலாம்
மடமருவா நினதுமகா மகிமையிலே சிறிதெனவே
அடமறுநா லறையுமெனு வறிமதியோ ருனதிருதாள்
நடனமதே விழைவரரோ நவைதபுவே விறையவனே. (கo

---

க. வனரத்னசபை, சித்ரசபை —வடநூன்முடிபு.

கo. அடம் = பலவந்தம்; (ஹ௨oo) ஹடம் என்னும் வடமொழி விகாரம்.

நிரை+நேர்+நேர்=புளிமாங்காய்.

தன்தான தனதான தனதான தனதான

[அட்டாட்டாக்கரம். (அறுபத்துநான்கெழுத்து)]

நனிநாடு நனிநாடு நனிநாடு நனிநாடு
முனிவேறு நமனுள்கண் முரணாகி யணுகாமுன்
அனியாய நணுகாம லருள்பேணு மெமரீர்போய்
நுனியாத சுரர்சூழு நுதிவேல னிருபாதம். (கக)

காய்முன் நிரைவரு கலித்தளையே யேந்திசைத் துள்ளலோசை.

மேற்படி, கலித்தளையும் வெண்சீர் வெண்டளையும் பெற்று அகவற் றுள்ளலோசையான் வருவன.

காய்.

நமனணுகாச் சிவநிலயங் களிலுமந்த நமனென்பான்
மமதையொடைங் குரோசத்துள் வாராத மாண்புடைய
அமலவவி முத்தங்கா ளத்தியிலு மமர்சிவனார்
குமரனடி நினைவாரைக் குறுகானந் நமன்மார்தோ. (கஉ)

மறலியொரு குரோசமள வுஞ்சரியா மதுரையிலும்
திறமையவ னிருகாவ தஞ்சரியார்த் தில்லையிலும்
விறல்வினையர் துயர்தீர்த்து விளங்குசிவ னார்தந்த
அறுமுகனை நினைவாரை யணுகானந் நமன்மாரோ. (கரு)

முதற்சீர் : நேர்+நேர்+நேர்=தேமாங்காய்.

சீர்பூக்கு முயிர்க்குயிராத் திகழ்குகனுஞ் செவ்வேளின்
நார்பூக்கு நிறையருளான் முத்திபெற ஞானமில்லார்
கார்பூக்கு மயிர்வெளுப்புக் கண்டவர்க்கும் பல்விலர்க்கும்
ஏர்பூக்கு மியோகமிலை முத்தியில்லை யெனவறைவார். (கச)

வேதாக மப்பொருளை மெய்க்குருவி னினிதோர்ந்த
மேதாவி யோருடம்பு மெய்யிலையென் றுருமெய்தேர்
போதாவி யாவுமெந்தப் புரையுடனின் றுனுமவை
ஆதார வேலிறைவ னருளடைந்து வாழுமென்பார். (கரு)

வாதாந்த வெளிச்சோதி மயிலேறுந் திருச்சோதி
நாதாந்த நிலைத்தேவுன் னவையிலரு ளிகழ்வினையின்

கக. பின்வரு மிரட்டைத்தொடைச் செய்யுட் கிச்செய்யுளு மிலக்கியமாம்.

கஉ. குரோசம்=ஐந்நூறுகோல் நீளம். என்னை ? "நாலிருசாண் கொண்டது நற் கோலா மைந்நூறு—கோலியைந்த நீளங் குரோசமாம்—நாலு—குரோசமோர் காவதமாக் குன்றாத சாண்டான்—விரோதந்தீர் முந்நால் விரல்" என்றமையின்.

வேதாந்தம் படித்தோரு மெய்ந்நூலை மறுத்தோரும்
போதாந்தம் பிடித்தாலும் புகுதுவரோ பவம்போக்கி. (கசு)

பலதளையும் விரவிப்
பிரிந்திசைத்துள்ளலோசையான் வருவது.

திருமருவு புயமாயன் றிகழ்கமலத் தயனறியாப்
பெருமைமலி பரசிவனும் பீடுசால் செவ்வேளும்
ஒருபொருளென் றுணர்வார்தம் முணர்விலுணர் வாய்விரவும்
அருணிமல குகனேநல் லறிவாவ தருள்குதியே. (கஎ)

இந்த கஎ - வது செய்யுளில், நிரையீற்றாசிரிய வுரிச்சீரும், காய்ச்சீராகிய வெண்பா வுரிச்சீரும், நேர்நடுவாகிய வஞ்சி யுரிச்சீரும் வந்தன. "அறிவாவத" என்பது நேர் நடுவான புளிமாங்கனியெனும் வஞ்சி யுரிச்சீராம். இச்சீ ரருகிவரும். இதனானே நேரீற்று மாஞ்சீர்களும், நிரை நடுவான விளங்கனிச்சீர்களும், இத் தாவுகொச்சகத்துள் வாராவென வுணர்க. என்னை ? "மாஞ்சீர் கலியுட்புகா கலிப்பாவின் விளங்கனிவந் - தாஞ்சீ ரடையா" என்பது யா - காரிகையாகலின்.

கருவிளமும், கருவிளங்காயும்.

தனதன தனதனனா தனதன தனதனனா

[ஒற்றிலாச்செய்யுள்]

திருவறு சுடருருவே தெரிவரு மதியுருவே
அருவரு ளொளியுருவே யறைமறை புகழுருவே
குருவரு டருவுருவே குறுமுனி பரவுருவே
இருடபு முருகுருவே யெனுநல ரிடரிறுமே. (கஅ)

உலகுளீர்—தளர்வருநா வதுதழும்பு சாரநிதந் தலைவனார்
உளர்கழல்க டுதிப்பவருக் குதவறமே யுளர்பண்டைக்
களமொழிந்து கதிகாண்ப ரென்றிடுமோ கமமதனால்
இளவுருவக் குகனைநித மேத்துநெறி பற்றுதிரே. (கக)

இதில், "உலகுளீர்" என அடிமுதற்கட் கூன்வந்தமையின் ; கலிப்பா இடையுங் கடையுங் கூன்வாப் பெறுதெனக் கொள்க. என்னை ? "அடிமுதற் பொருளைத் தானினிதுகொண்டு - முடிய நிற்பது கூனென மொழிப" என்பது சூத்திரமாகலின்.

செப்பலோசையான் வெண்டளை பெற்று வருவன.

சேவிருக்குங் கைத்தீக்கை செஞ்சரண தீக்கையென்று
தூவிருக்கு நல்லார் சொலுமாறு தண்ணளியிற்
பூவிருக்கு நான்முகனம் பொற்சிரசு குட்டியுடல்
மாவருத்த மேவவுதை தந்தவனெம் மானேயோ. (உ௦)

வேதற்கு மேலா விளம்புமரிக் கும்மரற்கும்
கோதற்ற வாகனமுங் கொள்கொடியு மோருருவே

பேதற்ற ஞானப் பெருக்கிலமிழ் வாரினிய
காதற்கு ளாமா கருணையிறை யாம்வள்ளி
நாதற்கு வாகனமு நன்கொடியு மீருருவே. (௨.௧)

இஃதைந்தடியான் வந்த தரவு கொச்சகக்கலிப்பா.

**சுரிதகத்தரவு கொச்சகக்கலிப்பா.**

௧. [தரவு]

தொடைமிலைச்சு குழன்முடித்த சூர்மகள்போ னேக்குடையாய்
பெடையனத்தை நிகர்த்துலவு பெண்ணரசி பேரழகி
இடைசிறுத்து முலைபெருத்த விளவிழும மலிமங்காய்
சடைதரித்த முனிவரருந் தாழ்ந்துவிழை சிறுநகையாய்.

௨. [தனிச்சொல்]

எனவாங்கு.

௩. [சுரிதகம்]

உணர்வழிந் தரிவைமோ குழிதரா
திணர்முடிக் குகனடி யேத்துமா னவரே. (௨௨)

**சுரிதகத்தரவிணைக் கொச்சகக்கலிப்பா.**

௧. [தரவு இரண்டு]

நறுநாலை கடைந்ததே நம்பனெழில் வடிவுகண்டு
பொறிநகிலம் விம்முறுமோ கினியாய பொழுதார்வம்
உறுமுரிமை யான்மாலென் ஞெருகாமங் கொண்டிடவும்
பொறிவிரும்பி நோற்றதனுன் மாதவப்பேர் பொருந்திடவும்.

மூட்டின பொருணீயா முடிசாதம் யாரறிவார்
தாட்டமை கிளர்தாசர் தாமறிவார் சருவவுயிர்
நாட்டிய முனக்குள்ளே நல்வினையுந் தீவினையும்
ஈட்டுயிர்க ளின்கணக்கு மிடுதீர்வு முனக்குள்ளே.

௨. [தனிச்சொல்]

அதனுல்

௩. [ஆசிரியச்சுரிதகம்]

சேவடி யருளிற் செலுத்தெனைப்
பாவகி யெனும்பேர் படைத்தசிவம் பரனே. (௨௩)

இப்பாட்டில் வந்த வொருதனிச்சொல்லோடு பிறிதொரு தனிச்சொல் இரண்டு தரவுக்குமிடையில் வரினும் வரலாம்.

வெண்டளையான்வரு நான்கடித்தா விரண்டுகொண்டு முடிகின்ற

## இயற்றரவிணைக் கோச்சகக்கலிப்பா.

பாலுந்தி நஞ்சாற் கறுத்தவரி பாம்பணியான்
காலுன்னி நோற்ற கனதவத்தின் மானசமாஞ்
சூலுழிநற் கட்டழகே சோபிக்க வந்தவனைத்
தூலுறப் புச்செயற்குத் தொன்மைசான் மூலமும்
கோலமுமாய்க் கண்டோ மவனே குலதெய்வம்
ஞாலத்தீர் காண்மினென நாவசைப் போர்கல்லாம்
ஆலடியி லுள்ளொன்றி யத்தனைசை வற்றபொழு
தேதுமத னென்செய்தா னென்பார்க ளென்குகனே. (௨

## சிஃறாழிசைக் கோச்சகக்கலிப்பா.

க. [நான்கடித்தரவு ஒன்று]

ஓருருவும் பெயருரு மிலியாகி யுயர்மேல்கீழ்
நேர்நடுவுங் குறுமையுமின் றகண்டமென நிலவொருநீ
சீர்மருவும் பசுவெல்லாஞ் சிவகதியை யெளிதுறுமா
றேர்மருவும் பசுபதிக்கோ ரெச்சமெனத் தோன்றினையே.

௨. [தனிச்சொல்]

எனவாங்கு.

ங. [மூன்றடித்தாழிசை மூன்று]

உண்மையுணா ருன்னடியே ரெண்ம்பயரு முருவிருபபும
எண்மையிலே வியனெனவே யெழின்மலர்நீர் கொடுபூசை
பண்ணுநிலே தண்டமிழிற் பரசினது முண்டன்றே—அதான்று.

சகுணமதே நிர்க்குணமா நிலவுமெனத் தலைநூல்கள்
புகலுரைக ணிசமெனவென் புந்திமதித் தவ்வாறு
திகழுனது திருநாமஞ் செபித்ததுநா னுண்டன்றே—அதான்று.

நானழைப்பேன் வாவெனவந் நாள்வரலா நீயென்று
போனநின தருள்வாக்குப் பொய்யாதென் றனுதினமுன்
கானளினங் களையேநான் கருதியது முண்டன்றே.

[பெயர்த்தும், தனிச்சொல்]

அதனால்.

ச. [ஆசிரியச்சுரிதகம்]

தெய்வச் சோழன் சிந்தைசெய் தூற்ற
திருவே தணிகைத் தேவே சுவர்க்கர்
கோவே பரம குருவே குருந்தே

குன்றக் கொடிச்சி கொள்ளருட் டலைவா
சத்தியச் சைவ சமயக் கரும்பே
நெடில்வேன் மன்னே நிகழுன்
னடியே யடைமா றடியேற் கருளே. (உரு)

பஃறாழிசைக் கோச்சகக்கலிப்பா.

௧. [நான்கடித்தரவு ஒன்று]

சொல்லானும் பொருளானுஞ் சுட்டரிய விபுவாய்மற்
றெல்லாமா யல்லவுமா யிருக்குமொரு நிலைநின்று
பல்லுயிரும் பரமசுகப் பரிவனுகிப் பிழைத்திடுமா
றல்லறெறு மைம்முகத்தோ டதோமுகமு மானாய்நீகள்.

௨. [ஈரடித்தாழிசை யாறு]

நுன்னருளிற் றிளைத்துய்பு நுணங்கியோர் வழிச்செல்லா
தின்னலுறு மிழுதைகளோ டிவன்கூட லினிமுறையோ.

விரைகமழுன் னடிமலரே விழைந்துதுதிக் கின்றவொரு
தரமுடையே னருள்விழுமஞ் சாராது முய்வேனோ.

சந்ததமுங் கம்பலையென் சலராசிக் கண்ணாழ்ந்து
சிந்தைமயங் கிடினினிய திருவருளி னலமாமோ.

திருவருளைத் தினமெண்ணித் தெருளின்றிக் கலுழ்வேனேற்
குருவருணன் குடையார்தங் குணநலமு நலமாமோ.

தினமுமன நான்வாடத் திருவருட்குப் பிரிவாயேல்
எனையடைநர்க் கேதுறுக னென்றதுவும் பொய்யாதோ.

இன்றெனது முகம்வாடி யிளைக்கமறைந் திருப்பாயேல்
அன்றெனது முன்சொன்ன வறைக்காணி யணுகாதோ.

௩. [தனிச்சொல்]

அதனால்.

௪. [நான்கடியாசிரியச் சுரிதகம்]

என்முகம் பார்த்தீண் டிரங்கனின் கடன்காண்
நன்முகத் தறுமீ னகிலப்பா லுண்ட
இளம்பூ ரணனே யிறும்பு
களம்பூ ணெழில்சால் கதிர்வே லிறையே. (உ௬)

உ௬. இறும்பு = தாமரைமலர்.

## மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

க. [நான்கடித்தரவு இரண்டு]

மணிமலி புவனைவரர் மாமுனிவர் களைநோக்கா
அணிமலி யெமைப்பூசித் தடையரும் பேறனைத்தும்
திணிமலி சரவணவேள் செயற்குரியா னறிமினெனுத்
துணிமலி பிறைமுடியன் சொற்றவுய ருரைக்குரியோய்.

அறுமீனுக் கறுசேயா யன்றிருந்த போழ்தாற்றல்
உறுமரிய திருவிளை யுளுற்றுவா னொருகணத்தே
மறுமேவா வெண்ணிறந்த வடிவங்க டன்கண்ணே
தொறுவுறவே காட்டியவை தோன்றியவா மறைத்தோய்கே

உ. [ஈரடித்தாழிசை யாறு.]

சலசப்போ தமர்செல்வி தான்புகழு முமைகொங்கைக்
கலசப்பா லினிதுண்டு கயிலைபுக் கிருந்தனையால்.

வெண்காந்தள் பற்றைமுத லாயநல் விரைமலர்கொண்
டொண்காந்தித் தாளர்ச்சித் துய்வார்பங் குற்றனையால்.

சிறைபுக்க சயந்தற்குந் தேவர்க்குங் கனவிற்போய்ச்
சிறைமீட்டிக் காப்பமெனச் சொனவண்ணஞ் செய்தனையால்.

விண்ணிருடி களின்முதன்மை மேவவென யாழ்முனிவன்
பண்ணுதவ மோர்ந்தந்தப் படியருடே வாயினையால்.

பிரமன்சொற் படியுன்றன் பேராயி ரந்துதிக்குஞ்
சுரர்மிக்க பொறிபெறீஇச் சுகிக்கவருள் கூர்ந்தனையால்.

அறுவாய்நோன் பாற்றியவோ ரந்தணனை யரியதிருப்
பெறுமனுவாம் வேந்தாகப் பிறங்கவருள் புரிந்தனையால்.

ங. [தனிச்சொல்]

எனவாங்கு.

ச. [முடுகியலாகிய அராக நான்கு]

ஆசறு நின்சர ணைசையில் விஞ்செனுண்
மோசமி லந்தர மோகமெ மூந்தது.

விரிதரு மூலகது பருவர லெனநவி
லுரியவ ருரைகளெ னுளநனி மருவின.

---

உஎ. தொறு = கூட்டம்.
பற்றை = செங்காந்தள்.
அறுவாய் = கார்த்திகை.

தத்துவ ஞானம தித்தழி யாநில
யத்தினை யேநினை புத்தியு மேயது.

அருளைய டைந்திடி னமுதுறு மென்றெனு
மொருமதி விஞ்சிய துணர்வுவி ளைந்தது.

[பெயர்த்தும், ஈரடித்தாழிசை யாறு]

சண்பைநகர்த் திருஞான சம்பந்தற் பார்த்ததுபோற்
கண்குளிர்வி னென்னையுநீ கருதிநிதம் பாராயோ.

வாகீசர் பனுவலெலாம் வள்ளுறையக் கேட்டதுபோல்
ஓகையினென் பனுவலையு முற்றுநீ கேளாயோ.

சுந்தரத்தின் முடியிலடி சூட்டியாட் கொண்டதுபோல்
என்றனக்குஞ் சேவடிப்பூ விரண்டினையுஞ் சூட்டாயோ.

வாதவூ ரடிகளுக்கு மனமுவந்து சொற்றதுபோற்
சீதமலர்ச் செவ்வாயைத் திறந்தெனக்குஞ் சொல்லாயோ.

ஏழாட்டைத் தண்டிதனை யெடுத்தாசீர் வதித்ததுபோற்
கேழாட்டி னென்னையுநின் கிருபைகொளச் செய்யாயோ.

கண்ணப்பு மொருவனைமுன் கரம்பற்றிக் கொண்டதுபோல்
அண்ணலெனை யுங்கரத்தி னற்பற்றிக் கொள்ளாயோ—அனுவைநீ.

௫. [இருசீரோரடி யம்போதரங்கம் எட்டு]

ஆட்டினு லாடாதோ.
ஆட்டாக்கா லாடிடுமோ.
ஊட்டினு லுண்ணுதோ.
ஊட்டாக்கா லுண்டிடுமோ.
ஓட்டினு லோடாதோ.
ஓட்டாக்கா லோடிடுமோ.
காட்டினுற் காணுதோ.
காட்டாக்காற் கண்டிடுமோ.

[பெயர்த்தும், தனிச்சொல்]

அதனுல்.

௬. [நான்கடி யாசிரியச் சுரிதகம்]

எனது போத மென்ப தினையினுன்
தனது போத மாகத் தழைத்துநான்
மேம்படு பொருளாய் விளங்க
ஓம்பரு ணிட்டையின் றுதவி யருளே. (௨௭)

இச்செய்யுள் : தாவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரி மெனக் கலிக்கோதப்பட்ட ஆறுறுப்பும் மிக்குங் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும் ம கியும் வந்தமையான், மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவெனப் பெயர் பெற்றது.

அராகவுறுப்பு : நான்கடிமுத லெட்டடியந்த மெத்துணையடியானு நாற்சீர் கொவ ளவடிமுத லெல்லா வடியானும் வரப்பெறுமெனக் கொள்க. என்னை? "அள முதலா வனைத்தினு நான்கடி – முதலா யிரட்டியு முடுகிய நடக்கும்" என்பது ய காரிகை யுரைவரு சூத்திரமாகலின் வண்ணக வொத்தாழிசைக்கலிப்பாவில் வருப குறிலிணை பயின்றவடி; அராகமெனப்படும். அஃதப்பாவிற் கவ்வாறே வால்வே மென்க.

"அடக்கியல் வாரந் தரவோ டொக்கும்" எனவரு தொல்காப்பியச் சூத் படி அடக்கியலாகிய சுரிதகமானது தரவடிக் கொத்தவடியாகவரு விவரம்: ஒத் சைக்கலிகளிற் காண்க. அக்காப்பியம் "தரவியலொத்து மதனகப்படும்" எனக் மாற்றான், ஏனைய கலியிலு மச்சுரிதக மவ்வா றொத்துவருதலைப் பஃறாழிசைக் கொச் கலியிலும், தரவடிக் கதிகவடியாக வருதலைச் சிஃறாழிசைக் கொச்சகக்கலியிலுங் கா "வெண்பா வாசிரியங் கலியே வஞ்சியென—நுண்பா வுணர்ந்தோர் நுவலுங் கா யிரண்டு மூன்று நான்கு மிரண்டுந்—திரண்ட வடியின் சிறுமைக் கெல்லை" யா—காரிகை யுரைவரு சூத்திரமிருத்தலின் ; ஆசிரியப்பா : இரண்டடிச்சுரிதகம வருதலைச் சுரிதகத்தரவு சுரிதகத்தரவிணைக்கொச்சகக்கலிகளிற் காண்க. நே யொத்தாழிசைக்கலி யல்லாத மற்றக் கலிகளில் ஆசிரியச்சுரிதக வீற்றயலடி : ( ரின்றி நாற்சீராய் வருதலுஞ் சிறுபான்மையெனக் கொள்க.

---

தாழிசை ஆறிலும்—பார்த்ததுபோல், கேட்டதுபோல், முடியிலடி சூட்டி கொண்டதுபோல், மனமுவந்து சொற்றதுபோல், ஆசீர்வதித்ததுபோல், காம்ப கொண்டதுபோல் என அறுதிறமெடுத்துக் காட்டினமை சரித்திரங்களிலுள்ளவா றோர்க. இவ்வித காரியங்கள் எவர்மாட்டு நிகழாதிருப்பினும் என்மாட்டு நிகழவே மென்னு நோக்கத்தானே அவற்றை யெடுத்துக்கூறத் துணிந்தார் அடிகளெ ஈண்டேற்புடைமையாம்.

---

### ச. கட்டளைக்கலிப்பா.

எள்ளுக் குள்ளெண்ணெ யென்ன வனைத்திலு
மிருக்கு மோர்சச்சி தானந்த மாமுன
துள்ளத் திற்கிறை யேனுமொவ் வாநடை
யுற்று ளோருநின் பேருரு வாதிகள்
எள்ளி னேருமு னன்பர் கலங்கிட
வேசி னேரும்பொன் னடார்க ளென்னினும்
அள்ள லாதி துவாந்தம்புக் கேங்குவா
ரன்பி னைலினை யாண்முரு கையனே.

---

உஅ. துவாந்தம்=இருள்நரகம் ; வடசொல்.

ஏக நோக்குறு வோர்பித்தர் பாலர்போ
லேக தேச மிருப்ப ரெனுநவில்
யோகர் சொற்பொரு ளிற்றென வேயுணர்
யூக மற்றவர் புத்தியில் பித்தரை
மோகந் தீர்பர மென்றுகொண் டாடுவர்
முத்தி வேட்கை யுளார்க்கிரங் கின்னருள்
மேக மாமுரு கையவுன் றுண்மலர்
வேண்டு மென்னெஞ்சு மம்மடங் கொள்ளுமோ. (உகூ)

கருவி யாவுங் கடந்தவ ரேனுமக்
கருவி யோடுறு காற்சிவ சன்னிதி
மருவி யானந்தக் கண்ணம் வடித்திடன்
மலர்க்க ரங்களைக் கூப்புதல் வாழ்த்துதல்
திருவெண் ணீறிடல் தேசிகற் போற்றுதல்
சிவசி வாவெனச் செப்பல் விடாரிவை
அருகி னேரெவ ருங்குண மில்லரென்
றறிவ தேயென் விவேகமெண் கண்ணனே. (௩0)

அறிவில் பாச பதார்த்தமு ளொன்றனை
யந்த ரங்கத்தில் வைத்திருப் போரையும்
சிறிய போதப் பசுப்பிடிப் போரையுந்
தெளிவி லாவிழி தெய்வங்கொள் வோரையும்
நறிய நின்னடி பற்றிநிற் கின்றவென்
னன்னெஞ் சானது ஞானிக ளாமதித்
தறிஞர் பூசனை செய்யவெண் ணுதுகா
ணழகு மாமயி லூருமெண் கண்ணனே. (௩க)

எட்டெ னுங்குடி வான்மிகு சோலையி
விராம தேவரு மோர்ப்பரங் குன்றினில்
மட்டி லாமச்ச மாமுனி வேங்கட
மலையிற் கொங்கணர் மாவரங் கத்திலே
சட்டை டாமுனி யுந்தங்கி னூரவட்
டழைக்கு நன்மையெல் லாமவர் சித்தெனுக்
கட்டு ரைக்குமெல் லாருந் தலைத்தெய்வக்
கருணை நீத்தவ ரேகந்த சாமியே. (௩உ)

---

௩0. கண்ணம் என்னுந்தொடரில் அம் = நீர். நிகண்டுகள் காண்க.
எண்கண் = குமரவேள் திருவிளையாடற் கேத்திரங்களுள் ஒன்று.

தில்லை யிற்றிரு மூலர் வயித்தியன்
சேதி மப்புலந் தன்வந்த்ரி யுங்கெடாத்
தொல்லை யாரூர் தனிற்கம லன்சுடர்
சுடரண் ணாமலைக் கண்ணிடைக் காடரும்
வல்லை மேவொரு சேதுவி னந்தியும்
வதிந்தா ரம்பரெல் லாமவர் சித்தெனுச்
சொல்லும் யாவரு மைந்தொழி லுயகன்
றுப்பெண் ணுதவ ரேகந்த சாமியே. (௩௩)

சதுரர் சூழ்பழ நிப்புலம் போகர்மா
தணிகை யிற்கரு வூரார் கோளப்
பதிய னந்தன் படுக்கையில் வண்டமிழ்
பாடு கும்ப மகாமுனி வைகைபாய்
மதுரை யிற்சுந்த ரானந்த ராதியோர்
வதிந்தா ரம்பரெல் லாமவர் சித்தெனுக்
கதறெல் லாரு மனுதிப் பிரான்செயல்
கருதா வேழைக ளேகந்த சாமியே. (௩௪)

சருவ சீவரு மீச வுபாசனை
தன்னின் மேம்படு வாரயன் மேம்பட
அருளு நாயக னுளர சாகவு
மருள்பெ றும்பசு வாட்பட் டிருக்கவும்
மருவு தீர்வையுண் டாமென வோரவோர்
மதியி லாரடி யார்களை யேபெரும்
பொருளெ னச்சொலி நாத்திக ராவரென்
புந்தி மேய புராண விசாகனே. (௩௫)

மகத்தெ னச்சொல்விட் சேப மடங்கநின்
மகிமை நாமம் விடாமற் செபிப்பதும்
சுகத்தை மூடிக லாவர ணங்கெடச்
சுத்த மூர்த்தித் தியானம் விடாமலே
அகத்திற் செய்வது மஞ்ஞுமெ னல்லற
வகந்தை விட்டரு ளின்வய நிற்பதும்
இகத்தை நீக்குநர் செய்கையென் றுள்கிடா
ரெம்மெய் கண்டுயர் வாரயி லீசனே. (௩௬)

---

௩௩. வயித்தியன் சேதிமம் = வைத்தியேசுரன் கோவில்.

[இதுமுதலிரண்டேபாட்டும், இடையிறுதிமுற்றுமடக்கு (யமகம்)]

கமழ்க டம்பணி பூணறுங் கண்டனே
கரையில் விண்மண்ணு நிற்குமகண்டனே
இமிழ்சி லம்பணி தாங்கிரு காலனே
யெவையுந் தந்துபின் வாங்கொரு காலனே
தமிழ்நெ டுங்கவி பாடுநர் நாதனே
தந்தைக் குங்குரு வானவ நாதனே
அமிழ்த ராசைகொள் பேரின்பக் கட்டியே
யடிய னேனையு மாணலங் கட்டியே. (௩௭)

தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்
தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்.

தான தானன தானன தானனு, தான தானன தானன தானனு

ராவணி வோனரு ளாளியே யாறெ ழுகவின் மாதளி யாளியே
நவறி வாமருள் வாரியே பீலி மாமயி லேறுப வாரியே
வாவினர் காணுக ழடியே நாச மேதுமி லாதவி ழடியே
ராமவ ரேபல கோடியே சேரு மாறெனை யேகனி கோடியே. (௩அ)

பண்ணத்திடை, மடக்கு நடக்கு நேர்மையை முதன்மண்டலத்தில் ஸ்ரீ கதிர்காம ர் வண்ணத்தின்கட்காண்க.

இங்கு உஅ – முதல் ௩அ – வரை வந்த யாப்புகள் : எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய ந்த மாகாவோ வெனின் ; “மாச்சீர் முன்வரு காற்சீ ரடியே—நேர்முத னிரைமுத ரிறை யானே—பதினேரெழுத்தும் பன்னீ ரெழுத்து—மியைக்தவை யடியாய் நகம் திரட்டித்—தொத்துநான் கிறுவது கட்டளைக் கலிப்பா” என்பது சூத்திரம். ரி ஞகாவென்க. இச்செய்யுள்களி னடிகளி னுன்கா மெட்டாஞ்சீர்கள் : காயின்றி மாகவே வரல்வேண்டும். அன்றெனி னேசைகெடுமெனவும், உக - வது செய்யுள் லடியிற் ‘பாலர்போ’ எனுஞ் சீரில்வந்த ரகாவொற்றைப்போல இடையின வொற் ளும், வல்லினமுன்வரப்பெறுத மெல்லினவொற்றுக்களும் வரின் ஓசைகெடா வு முணர்க.

கலிப்பா முற்றிற்று.

---

# கலிப்பாவினம்.

---

## க. கலித்தாழிசை.

இரண்டடியா யீற்றடிமிக்கு ஒருபொருண்மேன்
மூன்றடுக்கி வருவது.

செய்வினை தீர்த்துன் சேவடி வைத்திடவெம்
தெய்வத் திணிவேலோய் நட்ட மென்பா னடியாயோ.

மொய்வினை தீர்த்துன் முத்தடி வைத்திடவெம்
செய்ய திருவேலோய் நட்ட மென்பா னடியாயோ.
பொய்வினை தீர்த்துன் பொன்னடி வைத்திடவெம்
துய்ய சுடர்வேலோய் நட்ட மென்பா னடியாயோ. (ருகூ)

மேற்படி, வேறு.

தெளிபத்தி யாம்வலையிற் சிக்கிவயப் படுகுகவேள்
அளிபற்று சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள்.
வேண்டுவன வீகருணை மேன்கற்ப கக்கரவே
லாண்டவனார் சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள்.
எம்மையடை வார்க்கென்று மின்னனலி வேதென்ற
அம்முருகன் சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள். (சo)

மூன்றடியா யீற்றடிமிக்குத் தனியேவருவன.

வாழ்விவை யெனவே மதித்திங் கிட்டெவையும்
பாழ்பட வுயிரும் பதைக்க வுடனீக்கும்
ஊழ்வினை தெரியீ ரோசே யருளுக் குரியாரே. (சக)

இன்றிருந் தெதிர்நா ளிலதாம் பொருளேமெய்
என்றிருந் துளநா டொலையா தெறுழ்வேலன்
பொன்றுலங் கடியா மலரே நாடீர் புவியாரே. (சஉ)

வல்லுறழ் முலையார் மயல்பட் டுழன்றுமுகை
வல்லெனப் பெயர்த்து மதியற் றதினுழைதல்
நல்லுணர் வாமோ நவில்வீர் சேய்வாழ் நகரீரே. (சங)

தோதகஞ் சிருட்டி தொடங்கி யனுபவித்தும்
போதுமென் றுணராப் புரைசேர் மனமுடையீர்
காதலி னினுநில் லாமே குகனைக் கருதுமினே. (சச)

நான்கடியா யீற்றடிமிக்குத் தனியேவருவது.

கைவரு பொற்பயனே கருதிக் கறையேசால்
பொய்ம்மனு டர்ப்புகழும் பொறியில் புலவீர்காள்
சைவரு ணச்சொருசேய் சரணைப் புகழ்வீரேல்
ஐயுற லற்றவர்கா ணருளும் பொருளு மடைவீரே. (சரு)

நான்கடியா யீற்றடிமிக்கு, இடைமடக்காய்த் தனியேவருவது.

வலம்பனு ளுஞ்சான் மலைச்சார் புறைவார்முன்
சிலம்பனாய் நின்றான் றிருக்கா னினைநெஞ்சே
சிலம்பனாய் நின்றான் றிருக்கா னினையாயேல்
புலம்பனு வாயால் பொச்சாப் புண்ணே னினைநெஞ்சே. (சசு)

நான்கடியா யீற்றடிமிக்கு இரண்டாமடி குறைந்து
முதலடியு மூன்றாமடியு மொத்து, இடைமடக்காய்த் தனியேவருவது.

குருகு நிலவு கோடை சூடி
முருக னடன மாடுமே
முருக னடன மாடு மோதங்
கருது மடியர் காணு மாறு கடுகியே. (௪௭)

இக் கலித்தாழிசைகள் : சீர்வரையற்ற விரண்டடியும் பலவடியுங் கொண்டுமுடியும். என்னை ? " அடியெனைத்தாகியு மொத்துவந் தளவினிற்—கடையடி மிகுவது கலித்தாழிசையே " என்ப தியாப்பருங்கலமாகலின்.

---

## ௨. கலித்துறை.

நெடிலடிக் காப்பியக்கலித்துறை யென்னும்
**கலிநிலைத்துறை.**

தேமா கூவிளம் கூவிளம் தேமா புளிமாங்காய்.

ஊரும் பேரறை நாவிழி மூக்கு முறுகாதும்
சீருங் காயமு நின்னன வென்று தெரியாமே
ஊரும் பேருரு வாதியெ லாநம் முடையென்று
ஆரும் பேதைய ரோவுணர் வார்நூ லயிலோனே. (௪௮)

தேமா புளிமா தேமா புளிமா புளிமாங்காய்.
தான தனத்தா தான தனத்தா தனதான

வீவு ணுதிப்பே மேவு சகத்தாள் வினையீரே
மூவர் முதற்றே வாக விருப்போன் முதுவேதா
யாவு நினைப்பா லீயு முரத்தான் யதிராசா
தூவி மயிற்கோ னேய மிருத்தோர் சுகமேலே. (௪௯)

தேமா கூவிளம் கூவிளம் தேமா கூவிளங்காய்.

ஈரைந் தாகிய வங்குலி கூப்பி யீரெழிற்கை
சேர நெஞ்சிலு நெற்றியின் மேலுஞ் செய்வதுபோல்
ஓரைந் தைந்தையுஞ் சேயவன் பாதத் தொட்டிவிடா
வீரம் விஞ்சிட நாடுதிர் மோக்க வேட்கையரே. (௫௦)

மட்டி வீர்கரும் பேனழுக் கேறு வார்கதுப்பை
வெட்டி யந்தலை முண்டிதம் பார்த்த மேன்மையைப்போல்

---

௪௭. கோடை = வெண்காந்தள் ; என்ப. " வெண்காந்தள் செங்காந்த ளென்றிரு விகற்பமுங் – கொண்டே வழங்கும் கோடைப் பெயரே " என்னுஞ் **சேந்தன் திவாகரச்** சூத்திரத்தால் வெண்மையுஞ் செம்மையுமான இருநிறக்காந்தளுங் கோடலெனற் புடைத்து.

எட்டு நெஞ்செழு மிவ்வுல காசை யேமழித்துப்
பிட்டு ணீசுரன் மைந்தனை நாடிற் பீடுறுமே. (ருக)

கூவிளம் தேமா கூவிளம் தேமா தேமாங்காய்.

கூடுந றுங்கே சங்களி லொன்றுங் கொய்யாமல்
நீடுதல் கண்ட வாறணி மன்றுண் ணின்றாடு
பீடுடை நம்பர் நந்தன னின்பம் பெய்மேகம்
நாடுத வந்தா ளீனி னைந்த நன்காமே. (ருஉ)

தானன தான தானன தான தானன

நாரண னன ராமனும் ராம னுடார்வே
பூரண மான வேடனு நீறு பூசிசா
காரண னெயெ னுநினை வேலர் காருனே
ஆரரு ளீதெ ணாரு ளாழி யாடாரே. (ருங)

இரண்டாஞ்சீர் : புளிமா. ஐந்தாஞ்சீர் : புளிமாங்காய்.

வான்மதி வளர்செவ் வேணியன் மொய்ம்பா மலையேறி
கூன்மதி யெனுட னீவினை யாடுங் குணியோவென்
மேன்மதி முகவெம் மானயி லானை விழைவோரே
தேன்மதி யுறுவார் கீழ்நடை மேவார் திகையாரே. (ருச)

தேமா கூவிளம் தேமா கூவிளம் கூவிளம்.
தத்த தத்தன தத்த தத்தன தத்தன

சொக்க ரிக்குடி மக்க ளுக்குள துக்கமால்
பொக்கெ னக்கெட வக்கி புக்கெழு மக்கியாய்
நக்க டுக்கைகொ ணக்கர் பக்கந டக்குமா
வுக்கி ரக்குக னுக்கு மிக்கதி ருக்குமோ. (ருரு)

கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் தேமாங்காய்.

ஏசறு சென்னியின் மாமணி மின்முடி யேதாங்கும்
ஆசைபொ டிவ்வுல காளினு முண்ணல மாமோசேய்
தேசவிர் பொன்னடி யேமுடி மேலணி தெய்வீக
தாசரு ளங்களி யேகொளும் வாதனை சாராதே. (ருசு)

---

ருங. "வேடன்" இவ்வேடன் பெயர் குகனெனப்படும். வரலாறு ஸ்ரீ சுப்பிரமணிய வியாசத்திற் காணலாம்.

ருரு. பொருக்கென வென்பது பொக்கெனவென மரீஇயிற்று.' அங்கி ; அக்கியென வலித்தல் விகாரமாயிற்று.

இச்செய்யுணடைத் தொடைவிவாம் : இவ்வியல் கஙக - வது விருத்தத்தின் கீழே விளக்கப்பட்டிருக்கிறது.

தேமா புளிமா புளிமா புளிமா புளிமா.
தந்தா தனனா தனனா தனனா தனனா

ஒன்றாய் மிகையா யுயிரா யுடலா யுறவாய்
அன்றா யறிவா மொளியாய் வெளியா யருளாய்
நின்றே நிறைதே வொருதே வதுவே நிகழ்சேய்
என்றே யுணர்வா ரணவார் நசைநோ யிலையே. (ருஎ)

தேமா தேமா தேமா தேமா தேமாங்காய்.
தானா தானா தானா தானா தானானா
[நெட்டெழுத்துச் செய்யுள்]

காரீ மாலோ டானா வேதா காணாமா
சீரீ மாதே வாமே லோனீ சேயானே
னரீ காலே பாடே னோசா னவோரா
லேரீ தூமா னவா ரேசா லேகாரே. (ருஅ)

கருவிளம் தேமா புளிமா புளிமா புளிமா.
தனதன தானா தனனா தனனா தனனா

திருமுரு காமா சிலைபோழ் திறலோய் தெருளோய்
குருமுரு காகோ குகவே டமைநீள் குருகே
ஒருமுரு காமான் மகளார் வலவா வுரனார்
செருமுரு காகா வெனவோ துநர்பார் செனியார். (ருகூ)

புளிமா புளிமா கருவிளம் கருவிளம் கூவிளங்காய்.
தனனா தனனா தனதன தனதன தானதனா

அறுகா லளிமூ சலர்பல தருதரு வார்வளமே
சிறுகா லனம்வாழ் பலகுள முளவெழில் சேர்பொழிலே
உறுகா லனிலா மதுரையி லுறைமுரு கோனருளே
தெறுகா றருவா னடிநினை மதியினர் சீர்பெறவே. (கூ0)

ஐஞ்சீரா னடக்கு மிக்கவிகளி னடிகளில், எச்சீர்க்கண் மோனையெழுத் தல்லது னவெழுத்து வரினு மிதுகாறும் வந்த வாறாக ஐந்தாஞ் சீர்க்கண் வருவதே சிறப்பு. ர்வரு கட்டளைக்கலித்துறைக்கு மிவ்விதி கோட லியைபு.

---

ருஅ. காரீ = அழகு பயக்கின்ற. கார் = அழகு; "மழைபடு காலமுங் காரெனுங் டுரை—ஆகுமயிரு மழகுமற் றதற்கே" என்றியம்புதல் பிங்கலந்தை.

மானவார் = மலையென வுயர்தன்மை யுடையாராவர்; மான் = மலை; பிங்க ந்தை காண்க. மன்னவா ரென்பது மானவாரென நீண்டதெனினும், மகான் னென வாயதெனினுமாம்.

ஏசால் = குற்றத்தால்.

ருகூ. வலவன்—வல்லவன் = காதலன்.

கூ0. தெறுதல் = அழித்தல்; "அளியுந் தெறலு மெளிய வாகலின்" என்றார் பரும்பாணாற்றுப்படையினரும். "கெரித்த றெறுதல்" என்பது சே - திவாகரம்.

தேமா கூவிளம் கூவிளம் கருவிளம் புளிமா.

அம்பொ னேதியை யார்திருந் தவரெனக் குனித்தோன்
வெம்பு வஞ்சகர் முப்புர வியன்கெடச் சிரித்தோன்
நம்பு மாமக னாகிய நறுங்கய முகத்தான்
தம்பி யன்புடை யார்நமன் விடுதுயர் தடுப்பார். (சுக)

சீர்வாய்பாடு சிதையினு மோசை கெடாது நடப்பன.

தரும மூர்த்தியென் சண்முகன் றுணிவேந் தாற்று
கரும யாகமு ளார்க்கிடு புண்ணியங் கரிசில்
பெருமை யாயொரு பிறப்பள வுந்தவ யாகக்
குருமை யார்க்கிட னூறள வும்பலன் கொடுக்கும். (சுஉ)

சேய வன்றன தாணிணைந் தேசறு செபஞ்செய்
நேய யாகமு ளார்க்கிடு புண்ணிய நிரம்பா
ஆயி ரம்பிறப் பளவுந் தியான வியாகர்க்
கீயு நன்மையொர் பிரமகற் பாந்தமின் பிசைக்கும். (சுங)

தீனர் நாயக னுயவர் பூசைகொள் செவ்வேள்
கான மேதரு தாளச ரோருகக் கடிசால்
ஞான யாகமு ளார்க்கிடு நல்லவை பெரிய
மான மாம்பிர ளயமள வும்பலன் வழங்கும். (சுச)

முதற்சீர் : கருவிளம்.

கரவயிற் பெருமான் றிருவருட் பொலிவினைக் கண்டால்
இரவொடு பகலும் மிரவினிற் பகலிர வுகளும்
பரவிய பகலிற் பகலிர வென்பவு மிலைவான்
இரவியி னுயர்வா மறிவுள தைையுயி ரேயும். (சுரு)

தேமா கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம்.

மூன்பி னீட்டிய குற்றமெ லாமற முன்னியே
அன்பர் மாட்டரு ளேவளர்க் கின்றகண் ணுளநான்
இன்பம் வேட்டினை யேபுகழ் வேலையி லிங்குளேன்
துன்ப மோட்டுபு கோடிக டம்பணி சூடியே. (சுசு)

வானை நோக்கும ரங்களு லாத்தரு வானரம்
போனை வேனுனை யேபிடி யேனிருள் போழுநீ
பூனை போலெனை யேகொடு போகுதி பூம்புன
மானை நேடிவ னம்புகு நெட்டயின் மள்ளனே. (சுஎ)

---

சுஉ. கரிசு = குற்றம் ; முதன் மண்டலத்து சுஎ—உக-ன் குறிப்புரை யெடுத்துக் காட்டோர்க.

நூற்றளவு மென்றதற்கு, நூறுபிறப்பளவுமெனப் பொருள் கொள்க.

தேமாங்காய் புளிமாங்காய் புளிமாங்காய் புளிமாங்காய் தேமாங்கனி.

கோவென்ற படைமீளி யனைவோரு நனிநாடு கோவாளிதான்
நோவென்ற சிகியாகி வருகால மதிலேறி ஞொள்காதகு
ரேவென்ற திதிபால ருயர்வாழ்வு தரல்போல வேகுழுநான்
காவென்ற பொழுதேகை தருவாயொர் விபுவாய காங்கேயனே. (கூஅ)

தேமா கூவிளங்காய் கூவிளம் புளிமா புளிமா.
தான தந்தனன தந்தன தனந்த தனஞ

நீடை கொண்டவிரு மிஞ்சிகொ ளிலஞ்சி நிலைவாழ்
கோடை மஞ்சரிவி ரும்புள மலிந்த குமரா
பாடை வந்திடுமு னங்கரு துகின்ற படியே
பீடை வென்றமல வின்பது பிறங்க நினையே. (கூகூ)

கூவிளங்காய் காய் காய் காய் தேமா.

மாதமொரு பூப்பூத்து வருடமொரு காய்காய்க்கும் வல்லி
ஏதுமிடை யூறின்றிப் படருமர மாயிருந்த வென்னை
வாதனையிஃ தாமெனவென் மனமிருந்து வேறுசெய்த வாறு
கோதிருளும் வேறுபட வருள்புரிதி வேல்பிடித்த கோவே. (எ0)

ஐந்தாஞ்சீர் : புளிமா.

எண்ணிறந்த விவகாரத் துள்ளுழன்று நாளுநின்ற வெனை
நண்ணிவந்து நறுமதிதான் சொல்லியதண் ணளிவழியி னடப்பான்
பெண்ணலமும் பொன்னலமு மண்ணலமு நான்விடுத்த பிறகும்
உண்ணலநன் கெய்தாத தென்கொனுதி வேற்பெரும வுரையே. (எக)

புளிமா கூவிளங்காய் தேமா தேமா புளிமாங்காய்.

மணிகொள் பொற்பணிக ளேபூண் மாதா மகனும்பி
யணிகொள் மற்புயவி சாகா நாகா வருளாளா
திணிகொள் வஜ்ரவயி லீசா தேசா சிறியேனோர்
துணிகொள் சிற்சகன மாநீ யாமா துயிலீயே. (எஉ)

தேமாங்காய் தேமாங்காய் கருவிளம் கருவிளம் தேமாங்காய்.

தந்தத்தா தந்தத்தா தனதன தனதன தந்தத்தா

பந்தப்பா டஞ்சிச்சூர் பரிவுறு பெரியவர் பண்டத்தா
நந்தப்பா நெஞ்சுக்கோர் நலமரு ளிறையென நண்புற்றோர்

---

கூகூ. இலஞ்சி = திருவிலஞ்சி யென்னுங் குமார க்ஷேத்திரம்.
எஉ. வஜ்ரம் = நவமணிகளுளொன்றாய வைரம் ; வடநூன்முடிபு.
துணி = ஒளி ; பி - நீகண்டு காண்க.

எந்தப்பா டுஞ்செற்று ளிதவரு ளறுமுக வென்கட்டார்
சந்தப்பா கொண்டப்பா சமநிலை யெனைநனி தம்பித்தாள். (எங)

## கட்டளைக்கலித்துறை.

பாதமொன்றற்குப் பதினுறெழுத்து.

பூவாய விந்த வுலகத்து வாழ்வைய பொய்யெனத்தம்
நாவார வோதிமெய்ஞ் ஞானோப தேச நவில்கவென்பார்
தாவாய வில்லத் தவாவினை விட்டே தழுவுமென்னிற்
போவார் மறுமொழி சொல்லாது வீணர்தண் போரியனே. (எச)

ஓயாத நாட்டத்தி னின்றே யடையரு ளுண்மைநிலைக்
கேயாசை வைப்பவர்க் கிங்கொரு பாடு மிவையதின்றென்
ருயாத பேர்க்கந்த வுண்மைதா னெவ்வா றறிவிலுறுஞ்
சேயாகி யெங்கு நிறைவா யிருக்கின்ற சின்மயனே. (எரு)

கண்ணன் சனகன் முதலாய பேர்கண்மெய்க் கண்ணுளராய்
எண்ணில் வினைசெய்ய வில்லைகொ ளுஞ்செயி னென்னையென்பர்
அண்ணிய சன்மத்திற் ருனே மருளற்ற வாற்றலவர்
நண்ணின ரென்றறி யாதார் திருவள்ளி நாயகனே. (எசு)

செத்தறச் சுத்தி புரிந்தநற் செம்பிணைச் சேற்றினடு
வைத்தெடுத் தானுங் களிம்பூ றிடாதந்த வாறிச்சையின்
வித்தவித் தானு வருட்கட லாமுன் விபுத்துவவான்
சித்தணைந் தாற்பின்பு செய்வினை பற்றுது சேயவனே. (எஎ)

இப்பா ரெமக்குள்ள வேலையுங் காலமு மெண்ணங்களும்
தப்பாம லின்னுஞ் சிலநாளிற் றீருமச் சந்தர்ப்பமா
துப்பாய முத்தியை நாடுவே மென்பார் துணிபுநரி
உப்பாழி வற்றுமென் றுருள்வேலை காத்தலொக் குங்குகனே. (எஅ)

நெஞ்சு முடம்பு மசைவறச் செய்துன்னு நிட்டையது
நெஞ்சு முடம்புந் தளராத வர்க்கே நிலைத்தலின்றேல்
நெஞ்சு முடம்புந் தளர்ந்தவர்க் கோவுண் ணிரம்புமென்றன்
நெஞ்சு முடம்பும் பணிந்துய்ய வாக்கயி னின்மலனே. (எகூ)

நீக்க மிலாநெடுந் தூக்கமுண் மூர்ச்சையி னிற்றலென
நாக்கை வலத்தொளை யேற்றிநிற் கின்றதை நன்றென்பர்கொல்
போக்கும் வரவுமி லாச்சிவ யோகப் பொருத்தமுளோர்
ஊக்க முடையர்துஞ் சாதுன்னு நெட்டயி லுத்தமனே. (அo)

---

எச. போரி = திருப்போரூர்.

இச்செய்யுள் போன்றவற்றைக் கோவைக்கலித்துறை யென்ப. என்புழி, மற்றது "நேர்முந் துறிற்பதி னாறெழுத் தாகி நிரைமுதலாஞ்—சீர்முந் துறிற்பதி னேழாய் முடிந்துசெப் பாரடிக—ளோர்முந்து நான்கொத் திருபது சீரா லியன்றிடுமேற் - றேர் முந்து போல்குன் மாதே யஃது திலதமன்றே" எனும் **வீரசோழியச்** செய்யுட்படி, திலதக்கலித்துறையெனவாம். கட்டளைக்கலித்துறைதானே யிவ்வா றிருதிறப்படுமென்க. ஈண்டு அ௦ – வது செய்யுள் கோவைக்கலித்துறையாவ தெங்ஙனமெனின்; கடையடி யில் "துஞ்சாது" எனு மூன்றாஞ் சீர்ச்சொல் பிளப்புண்டு முற்சீரோடொன்றி யொழு கிய வோசைத்தாய் வந்ததனாலென்க. இவ்வா றிரண்டாஞ்சீர் நான்காஞ்சீர்களும் பிரிந் தொழுகின்; மிக்க சிறப்பெனவுங் கூறுப.

[சதுரங்கபந்தம்]

வாளா ரகாதி மயிலேறுஞ் சுந்தர மேயமகா
வேளா மயிலோய் விமலர்கண் வந்த சயாதியர்கோ
வாளா யெனுநாவுள் ளார்நா ருந்தெங்க ளாரியற்கே
யாளாகி வாழ்வது மாணப் பெரிதெனு மாகமமே. (அக)

| வா | ழ் | வ | து | மா | ணை | ப் | பெ |
|---|---|---|---|---|---|---|---|
| கி | ளா | யா | கே | ற் | ய | ரி | ளா |
| ர் | நா | ர | ரு | ந் | தெ | ங் | க |
| ளா | ள் | வு | நா | னு | யெ | ளா | வா |
| ந் | த | ச | மா | தி | ய | ர் | கோ |
| வ | ண் | க | ர் | ல | ம | வி | ய் |
| ய | ம | கா | வே | ளா | ம | யி | லோ |
| மே | ர | த | ந் | சு | ஞ் | று | லே |

பாதமொன்றற்குப் பதினேழெழுத்து.

அறிவான சாயுச்சி யந்தா வலதரு ளாற்பசுமை
செறிவான புன்புழு வைச்செங் குளவி செயுமுறைபோற்
பொறிவான நாடர் பிரானீ யெனையும் புரிதிவண்மை
முறிவான நெஞ்ச ரறியாத வாறு முகருநவே. (அஉ)

[அடி முதற்சீர் மடக்கு. (யமகம்)]

பிணிமுகங் கோடிகண் டாசைகொள் பேரெழிற் பிஞ்சிபுடைப்
பிணிமுகங் காதலித் தேறி யுலாத்தரு பேழையிலோய்

பிணிமுகங் காணென் கலக்கற வென்னைப் பிறங்கருளிற்
பிணிமுகங் காட்டியுன் சேவடிச் சீர்வைத்துப் பேணுதியே. (அங)

[அடி முதலிரண்டுசீர் மடக்கு. (யமகம்)]

வளைக்கை யெனக்கு மிலையுமை மைந்தவிம் மாநிலத்தோம்
வளைக்கை யெனக்கு மரபத னுன்மல மாய்த்தருள்கு
வளைக்கை யெனக்கு யிலவுள்ள கட்குற மாதணங்கெ
வளைக்கை யெனக்கு நலமென்று நாடொரு வாலியனே. (அச)

இதன்பொருள் : வளைக்கையென் = வளையலணிந்த கையினளெனப்படும், அக்கு மிலையுமை = சங்குமணியையணிந்த வுமாதேவியுடைய, மைந்த = மகனே, இம்மாநிலத்தோம் = இப்பெரிய பூமியிலுண்டாங் குற்றங்களை, வளைக்கை = வாரிக்கொள்ளுந்தன்மை, எனக்குமரபு = (ஆணவமலத்தோடு கூடிய) எனக்கியல்பு, அதனுன்மலமாய்த்தருள் = ஆகலின் (அந்த) ஆணவமலத்தைக்கெடுத் தனுக்கிரகஞ் செய்வாயாக, குவளைக்கு ஐயென = குவளை மலர்போன்ற கண்களுக்கெல்லாங்கடவுளென்று, குயிலவுள்ள = சொல் லும்படியாகவுள்ள, கண்குறமாது = கண்ணையுடையவளுங் குறவர்குடியில் வளர்ந்தவளு மான வள்ளிநாயகியினது, அணங்கு = அழகானது, எவள் ஐக்குஐ – எந்த ஸ்திரீயின தழகுக்குமழகாம், எனக்கு நலம் = எனக்கு நலமாம், என்று = என, நாடு = விரும்புகின்ற, ஒரு வாலியனே = சமானமற்ற கட்டிளமைக் கடவுளே. என்றவாறு. எனக்கு மென் பதிலுள்ள உம்மையை, ஐக்கு என்பதோடுங் கூட்டுக.

[மேற்படி, நிரோட்டகம். (இதழ் குவியாப் பாட்டு)]

தகையயி லானை நிரஞ்சன ஞானத் தனிக்கடியைத்
தகையயி லானை நனிகாத்த கண்ணன் சதாநினைதீ
தகையயி லானை யெயிற்றத்த ஞரிளை ஞன்றனையார்
தகையயி லானை யிறைஞ்சடி யார்கட் சழக்கிலையே. (அரு)

இ – ள். தகை = சோர்வெனு மயக்கத்தை, அயிலானை = (அம்மயக்கத்தின்கண் ணிருந்தும் உயிர்களைப்போல) அனுபவியாதவனை, நிரஞ்சன = களங்கமில்லாத, ஞானத் தனிக்கடியை = ஞானமாகிய வொப்பற்ற சோதியை, தகைய = அழகுடைய, இல் லானை = வீட்டுப்பசுக்களை, நனிகாத்த = மிகவும் பரிபாலித்த, கண்ணன் = திருமாலான வர், சதாநினை = நாளுந்தியானிக்கின்ற (தெய்வமும்,) தீது = தீமையை, அகை = அறுக் கத்தக்க, அயில் = கூரிய, ஆனையெயிற்றத்தனர் = யானையினது கொம்பைக்காத்தில் வைத்திராநின்ற விநாயகக்கடவுட்கு, இளைஞன்றனை = தம்பியுமானவனை, ஆர்தகை = ஆர்ந்தபெருமையுடைய, அயிலானை = வேலாயுதக்கடவுளை, இறைஞ்சடியார் = வணங்கு கின்ற தாசர்கள், கண் = இடத்தில், சழக்கிலை = (துன்பங்கட்கேதுவாய) குற்றமில்லை. என்றவாறு. ஏ = ஈற்றசை. [அயிலல் = உண்டல். அகைத்தல் = அறுத்தலென்பதைக் ககரவேதுகையிற் காண்க.]

மேலே நிரஞ்சனமென்றசொல் : வடமொழி. தென்மொழியில் வடமொழி வா லாங்கொ லென்னின்; வாலாமென்க. என்னை ? “செந்தமிழ்ச் செய்யு ளறிந் துணர்ந்து செந்தமிழ்க்கண்—வந்த வடமொழியை மாற்றாதே—சந்தம்—வழுவாமற்

கொண்டியற்று மாண்பினோர்க் குண்டோ—தழுவாமை நிற்குந் தமிழ்." என்பது யாப்பருங் கலவிருத்திவரு முதாரணச் செய்யு ளாகலின்.

கொம்பில்லா நிரோட்டகச் செய்யுள்களை, இந்நூன் முதலாங்கண்டம் "சத்திய போதகம்" என்னும் ௱எ-ஆந் திருப்பதிகத்திற் காண்க.

கருவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.
தனதன தானன தானன தானன தானனதன

அலைவளர் சாகர மேவளை காசினி யாசையரோ
கலைவளர் மாமதி போலெழின் மாமயல் காதருடான்
இலைவளர் வேலிறை யேயுற மோகவி லேலமைையேன்
முலைவளர் கோதையர் மோகமு ருதுயு டாறருளே. (அ௬)

இக் கட்டளைக்கலித்துறைகள் : "அடியடி தோறு மைஞ்சீ ராகி—முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்—கடையொரு சீரும் விளங்கா யாகி—நேர்பதி னாறே நிரைபதி னேழென்—றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே" எனுஞ் சூத்திரப்படி வந்தன. அடிகளின் கடைச்சீர்கள் : விளங்காயாக வரல்வேண்டு மென்றதற்கு மாறாக எஎ-ஆம் தூக்கில் "வாறிச்சையின்" எனக் கனிச்சீரும், அ௦-ஆம் தூக்கில் "நன்றென் பர்கொல்" எனப் பூச்சீரும் வராலங்கொ லென்னின் ; "சொல்லாரும் வல்லின மெல்லின மோடிடைத் தோன்றுமொற்று—இல்லாது நேர்நிரை நோரய் முடியும்" எனும் விதியானே இடைநிற்கு மொற்றொழிக்க அவை விளங்கா யாதலின் வராலமென்க. இது பற்றி முதன்மண்டலத்திலே பகலெல்லாம் எனும் சக–ஆம் பிரபந்தத் திரண்டாஞ் செய் யுட் குறிப்பி லினிது விளக்கியிருக்கிறது ; அவ்வுழிக்காண்க. நான்கடியே கொண்டு முடியு மித்துறைகள் ; மேற்போந்த கட்டளை யுடைமையோடு தூக்கு ஈற்றில் ஏகாரம் வரப்பெறுமெனுங் கட்டளையு முடையன. ஏகாரம் பெறாது முடியுமாயின், அது கட்டளைக்கலித்துறையெனப் பெயர் பெறுமற் கலிநிலைத்துறையெனப் பெயர்பெறு மென்க.

---

நேரடியாகிய அளவடி விருத்தமென்னும்

## ௧. கலிவிருத்தம்.

கூவிளம் கூவிளம் புளிமா கூவிளம்.

சொல்லுய ராரியன் சுருதி போற்சொலும்
நல்லுரை யேற்றவர் நடுவிற் சோர்வுறு
மல்லுயர் சிந்தையின் மதித்த வான்பொருள்
வில்லுயர் கின்னடி விளங்கொள் வேலனே. (அஎ)

அசைக்குறுப்பு முதலியன வுணர்த்துஞ் செய்யுள்.

முதற்சீர் : கருவிளம்.

பணமணி பாம்புகொள் பாற்கி யாணரென்
மணமணி சேயென வருமெமஞ் சிகரா

அ௬. எழின்=எழுமாயின்.

நிணமலி யாக்கையி னிரம்பிக் கோஒதுண்
குணமலி யாவியென் குறையை றூறியாள். (அஅ)

இதனுள்ளே, அசைக்குறுப்பெனப்படுங் குறில், நெடில், உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம், வல்லினம், மெல்லினம், இடையினம், "கோஒது" என அளபெடை, "பாற்கி யாணர்" எனக் குற்றியலிகரம், "பாம்பு" எனக் குற்றியலுகரம், "குறையை" என ஐகாரக் குறுக்கமாகிய எழுத்துப் பதின்மூன்றும் வந்தவாறு காண்க. அன்றியும்—

யா — என நெட்டெழுத்துத் தனிநின்றும், கி — எனக் குற்றெழுத்துத் தனிநின்றும், பாம் — என நெட்டெழுத்து ஒற்றடுத்து நின்றும், பிக் — எனக் குற்றெழுத்து ஒற்றடுத்து நின்றும் நேரசை நான்கும் வந்தவாறும்; பண — எனக் குறிலிணைந்து நின்றும், சுரா — எனக் குறினெடி லிணைந்து நின்றும், பாற் — எனக் குறிலிணைந் தொற்றடுத்து நின்றும், றியாள் — எனக் குறினெடி லிணைந் தொற்றடுத்து நின்றும் நிரையசை நான்கும் வந்தவாறுங் காண்க. இவ்வசைகள் சேர்ந்து சீராகு முறையை, இதுகாறுஞ் செய்யுள்களின் மேலே தீட்டப்பட்ட "தேமா" வாதி சீருதாரண வாய்பாடுகளும், இனித் தீட்டப்படும் அவ்வாய்பாடுகளு நனியுணர்த்தும். நேரசை யோரலகு பெறும். நிரையசை யீரலகு பெறும்.

கூவிளம். ஈறு புளிமா.

நூல்வழி தேறிய நுண்ணுணர் வோங்குபு
மால்வழி யேபிற வென்றறி மாண்பினர்
தோல்வழி நின்னடி சூழுவர் சூழ்கலர்
நீல்வழி கூடுவர் நீளயி லரசே. (அகூ)

கருவிளம். ஈறு புளிமா.

ஒருசிவ னெழுதிய வுயர்திரு முறைபுநல்
இருவரொ டொருவர்செய் யிசைமலி முறைகளும்
நிருமல வருணைய னிறைபுகழ் களுமுணர்
அருளுடை யவரயி லரையவு னடியர். (கூ0)

[மேற்படி, குற்றெழுத்துச்செய்யுள்]

குகருக குகருக குருபர வெனநனி
புகனல முளருமு னணியடி புகழுளி
மிகவுறு நருமர ஹரமனு விரதரு
மகமுனு நருமரு ளமுதுற லுறுதி. (கூக)

கூவிளம் கருவிளம் கூவிளம் கருவிளம். ஈறு புளிமா.

பொய்த்திடு மலகைகள் பொய்ப்பத நினைபவர்
பொய்க்கதி யுறுவது பொய்ப்பிலை யவர்வழி
பொய்த்திட வெனைவளை பொய்ச்சட முளவரை
பொய்ப்படர் பொடிவளர் பொற்பயி லரசே. (கூஉ)

அக. தோல்=அழகு.

கூவிளம் தேமா கருவிளம் கூவிளம். ஈறு புளிமா.

மாயவ ளக்கர் மயலற் வேசொலு
பாயமு றைச்செந் நெறியுறு பாவகர்
காயம தைப்போ டளவுன கான்மலர்
நேயமி ருப்பர் நெடிலயி லரசே. (கூரு)

அடிதோறு முதலெழுத் தொன்றத்தொடுக்கும்
**அடிமோனைத்தொடைச்செய்யுள்.**
தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்.

மேவு வாருனை வேண்டுநர் மேன்கதி
மேவு வாருனை வேண்டலர் வீழ்கதி
மேவு வாரக மேயொளிர் மேனுதி
மேவு வாரயில் வேந்தெனு மீசனே. (கூச)

அடிதோறு மிறுதிச்சீ ரொன்றத்தொடுக்கும்
**அடியியைபுத்தொடைச்செய்யுள்.**
சீர்வாய்பாடுசிதையினு மோசைகெடாது நடப்பன.

கோமி னையன்வி லென்பதுங் குன்றமே
மாமன் வன்குடை யென்பதுங் குன்றமே
நீமன் னுந்தென் னிகேதனங் குன்றமே
பூமி னின்னயில் போழ்ந்ததுங் குன்றமே. (கரு)

இதி விறுதி யெழுத்தையு மொன்றத்தொடுக்கலாம். அதற்கித்துக்கே காட்டாம்.
அடிதோறுமுறு முதலெழுத்தெல்லாந் தம்மினொத்த
வளவினவாய் வர இரண்டாமெழுத்தொன்றத் தொடுக்கும்
**அடியெதுகைத்தொடைச்செய்யுள்.**

அழகு டம்பு ளமேத்திய மாருநேர்
பழவு யிர்க்கனு மாசு படர்ந்ததான்
மழவ னுய்வரு வானவ னேயது
கழலு மாறு கடைக்கணித் தாளனே. (கசு)

செய்யு நற்கடன் றீர்ந்தவெச் செவ்வியும்
மெய்யும் பொய்யு மிழற்றுரை யாய்ந்துமெய்
உய்யு மாறுனை யுன்னு மெனைக்கொளாய்
கையுங் காலுமில் கந்த சுவாமியே. (கஎ)

---

கரு. ஐயன் = பிதா.

சொல்லானும் பொருளானு மடிதோறு முதற்கண்ணே
மறுதலைப்படத்தொடுக்கும்

**அடிமுரண்டோடைச்செய்யுள்.**

வெண்பொன் போற்பல் விளங்கந்த ணைர்சூழ்
பொன்கொண் மன்றுட் புராணன் குமாரனே
பைங்கண் மாகணம் பாடிப் பழிச்சுநின்
செங்க ழற்செல்வ மென்றெனைச் சேருமோ. (கூஅ)

அடிதோறு முதற்கண்ணே யளபெடையொன்றத் தொடுக்கும்

**அடியளபெடைத்தொடைச்செய்யுள்.**

சீஇர் விஞ்சிய தேவர்கள் வாழ்விசும்
பூஉர் பம்பெழி லோகையின் மேனவில்
ஓஒர் சின்மய வோகைநல் காய்குகப்
பேஎர் கொண்ட பிரானெனு மெந்தையே. (கூகூ)

**அந்தாதித்தொடைச்செய்யுள்.**

புளிமா கருவிளம் தேமா புளிமா.

திருவே லவனரு டேடார் வினைரி
எரியஞ் சனையினி யேயெம் மருளே
அருளே யெனுமடி யார்தே நினைதி
அருளே யெனுமடி யார்தே நினைதி. (கOO)

இச்செய்யுளில், அடிதோறு மிறுதிக்கண்ணின்ற "எரி" எனு மசையையும், "அருளே" எனுஞ் சீரையும், "அருளேயெனுமடியார்தேநினைதி" எனு மடியையும், "தி" எனு மெழுத்தையு மற்றையடிக்காதியாகத் தொடுத்தமையின், அந்தாதித்தொடை நான்கும் வந்தவா றறிக.

ஓரடிமுழுது மொருசொல்லேவரத்தொடுக்கும்

**இரட்டைத்தொடைச்செய்யுள்.**

புளிமா.

தனனு தனனு தனனு தனனு

நனிசூழ் நனிசூழ் நனிசூழ் நனிசூழ்
தனிவே லவனார் சரண்மா மலரே
தொனிபோ யிருளாய் வினையோர் துகள்போய்
இனிதா நலமே யெழுமா றுளமே. (கOக)

மோனை முதலிய தொடையுந் தொடைவிகற்பமும்
போலாது வேறுபடத் தொடுக்கும்

**செந்தொடைச்செய்யுள்.**

மா கூவிளம் கூவிளம் தேமா.

நீண்ட வைச்சுரி யந்திரு வீரம்
மனவை ராக்கிய நற்புகழ் ஞானம்

ஆறு முள்ளப கேசனி ளங்கோ
விசாக னென்றறி வார்தெளி வுள்ளார். (௧௦௨)

இதனைச் செந்தொடைச்செய்யு ளென்றல், காராட்டை வெள்ளாடென்றாற் பாலும். இதனை மங்கலவழக் கென்ப. அழகிலாவிச்செய்யு ளிங்ஙன மிலக்கியங் காட்டு நித்தமாகவே சொலப்பட்டதென வறிக. "மேவுவாருனே" என்னுஞ் செய்யுண்முதல் ச்செய்யுள்வரை, அடி மோனைத் தொடையாதி தொடை யெட்டுங் காட்டப்பட்டன.

இச்செய்யுள்: நிலைமண்டில வாசிரியப்பா வாகாதென்பதை, ஆசிரியவியல் ௧-ஆம் செய்யுளடியில் விளக்கிய நியாயத்தி னுணர்க.

அடிமுதலிருசீர்க்கண்ணு முதலெழுத்தொன்றத் தொடுக்கும்
**இணை மோனைத்தொடைச்செய்யுள்.**
முதற்சீர்: தேமா.

வாகை வாரணத் தோகையற் பாடும்
ஓகை யோங்கிய பின்பவ னன்பின்
ஈகை யீடெனக் குற்றன நீருந்
தோகை தோன்றவற் பாடுதி ரன்பிர். (௧௦௩)

இறைவனைப் பாடிமகிழ்ச்சி மிக்குற்ற பின்னர்த்தான் அவனன்பினால் எனக்குப் பொன்னும் பெருமையும் உற்றனவென்று ஆசிரியர் இத்திருச்செய்யுட்கட் குறிப்பிடு வாராயினர். இவ்வாய்மையைக் கிருபை கெழுமிய நெஞ்சினர் பெரிதுங் கவனிக்கத் தடவரே.

அடிமுதற்சீரு மூன்றாஞ்சீரு முதலெழுத்தொன்றத் தொடுக்கும்
**பொழிப்புமோனைத்தொடைச்செய்யுள்.**
முதற்சீர்: புளிமா. மூன்றாஞ்சீர்: கருவிளம்.

அருண்மு தற்பொரு ளறுமுகற் பாடு
திருவி ழுந்துமை திமிர்நுதன் மாந்தர்
உருவி யந்தணி யுயர்கவி பாடின்
வருவ தென்சொலும் வளர்புவி யீரே. (௧௦௪)

அடிமுதற்சீரு மிறுதிச்சீரு முதலெழுத்தொன்றத் தொடுக்கும்
**ஒரூஉமோனைத்தொடைச்செய்யுள்.**
புளிமா கருவிளம் கருவிளம் புளிமா.
தனனு தனதன தனதன தனனு

பகவா னறுமுக னடிபுகழ் பரிவேம்
உகமே லெவரையும் வியனென வுனியே
பகரே மொருகவி யெனுநிலை படர்வோர்
துகடீ ரருணிலை யடைவது துணிபே. (௧௦௫)

---

௧௦௩. தோகை = மயில்.

அடிமுதற்சீரு மிரண்டாமூன்ருஞ்சீரு
முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
**கூழைமோனைத்தொடைச்செய்யுள்.**

கூவிளம் கூவிளம் கூவிளம் தேமா.

தங்கைப கஞ்சசி கண்டம ணிந்தோன்
பங்குறு பண்புமை பங்கயக் கைம்மே
வங்கிள ரள்ளயி லத்தனைப் பாடல்
சங்கையில் சத்தனை சற்சனர் மாட்டே. (கoசு)

அடிமுதற்சீரு மூன்ருநான்காஞ்சீரு
முதலெழுத்தொன்றத் தொடுக்கும்
**மேற்கதுவாய்மோனைத்தொடைச்செய்யுள்.**

தேடரு மங்குக தேவனைத் தேடிப்
பாடணி யிற்றன பாடுறு பாங்கும்
ஆடருள் வல்லமை யாரழ காதி
கூடிட வாற்றுவர் கூர்மதி கூர்ந்தோர். (கoஎ)

அடிமுதற்சீரு மிரண்டாநான்காஞ்சீரு
முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
**கீழ்க்கதுவாய்மோனைத்தொடைச்செய்யுள்.**

தெள்ளிய தென்கவி வாணரைத் தெவ்வாற்
கள்ளமில் கல்வியி லார்நனி கண்ணோர்
எள்ளவ ரெவ்வுரை யுங்கெட வெந்தாய்
வள்ளிமன் வண்பதம் பாடுவர் வல்லார். (கoஅ)

அடிநாற்சீரு முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
**முற்றுமோனைத்தொடைச்செய்யுள்.**

கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா.

மலர்ந்தநன் மருமலி மலரணை மறுவில்
அலங்கலென் னணிமண மறுமிழி வடையும்
உலம்பழ குரையணி யுலர்விழி வுறலின்
றிலங்கிடு மிதையயி லிறைக்கிட லியைபே. (கoகூ)

---

கoசு. பகம்=கொக்கு ; நிகண்டுகாணேக்குக.

கொக்கினிறகைக் கொக்கெனக் குறிப்பிட்டவாறு.

கoஎ. அருமை அருமென மரீஇயிற்று. இவ்வாறு, சிவப்பிரகாசம் முதற்சூத்திரம் சு—ல் "போற்றலருமருள்" எனவும், திருவாசகம் திருப்பொற்சுண்ணம் ரு—ல் "நறுமுறு" எனவும், தாயுமானூர் பாடலில் "பேசருமனந்தபத" எனவும் வருதல் காண்க.

அடியினிறுதியைமுதலாகக்கொண்டுவரு மிறுதித்தொடையாகிய
**இயைபுத்தொடைச்செய்யுள்.**

தேமா தேமா தேமா தேமாங்காய்.

**[இதுமுத லிரண்டுவிருத்தமும், நெட்டெழுத்துக்கவி]**

மாதா வேணே மாகா மாவேகா
வேதா தூயா வீமா மாமாயா
நாதா வேலா ஞானே சாகீதா
போதா நாகா போகா நீயேகா. (ககய)

தானா தானா தானா தானானா

தாவா னேநா னேநீ தானுமா
தூவே பூவே தோலா வேலோனே
கோவே வீடீ கோனே வானோனே
தேவே வாவே சேயே மாதாயே. (ககக)

இவ்விரண்டு செய்யுளுள்; முதற்செய்யுண் முதலடி யிறுதிச்சீ ரிரண்டும் இறுதி தொன்றத் தொடுத்தமையால், இணையியைபு. இரண்டாமடி யிரண்டாஞ்சீரு ச்சீறும் அவ்வாறு தொடுத்தமையால், பொழிப்பியைபு. மூன்றுமடி முதற்சீரு ச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், ஒரூஉவியைபு. நான்காமடி முதற்சி ந்த ஏனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், கூழையியைபு. இரண்டாஞ் ளிரண்டாமடி யீற்றயற்சீ ரொழிந்த ஏனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமை மேற்கதுவா யியைபு. மூன்றுமடி முதலயற்சீ ரொழிந்த ஏனை முச்சீரும் அவ்வாறு த்தமையால், கீழ்க்கதுவா யியைபு. நான்காமடி நாற்சீரும் அவ்வாறு தொடுத்தமை முற்றியைபு.

**எதுகைத்தொடைச்செய்யுள்.**

நான்காஞ்சீர்: கூவிளங்காய்.

நம்பா வெம்பா நல்லா ருள்கயிலா
வம்பா வென்பார் கொம்பா மன்முகையார்
அம்பார் கண்ணு ளையா ரம்பிகைசேய்
அம்பா தம்பே ணும்பே றண்ணுவமே. (ககஉ)

தேமா.

**[மேல்வினமிலாச்செய்யுள்]**

தீயார் தேடா வாயா வாயா
வீயா வாயா வில்லா காயா

---

ககஉ. நையார் = வருந்தார்.

ககங. வாய் = இடம், உண்மை, ஊதுகுழல். வாயா = இடமுடையவனே. வாயா = [illegible]மையுடையோனே. வீயாவாயா = கெடாத ஊதுகுழலுடையாய். "வாய்குழலிடம் [illegible]மைப்பேர்" என்பது யகரவெதுகை.

தூயா சேயா தூயா டாயா
தாயா வாவா தாளீ தற்கே. (கக௩)

இவ்விரண்டு செய்யுளுள்; முதற்செய்யுண் முதலடி முதற்சீரு மிரண்டாஞ்சீரு மிரண்டாமெழுத் தொன்றத் தொடுத்தமையால், இணையெதுகை. இரண்டாமடி முதற்சீரு மூன்றாஞ்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், பொழிப்பெதுகை. மூன்றாமடி முதற்சீரு மிறுதிச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், ஒரூஉ வெதுகை. நான்காமடி யிறுதிச்சீ ரொழிந்த வேனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், கூழையெதுகை. இரண்டாஞ்செய்யுண் முதலடி முதலயற்சீ ரொழிந்த வேனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், மேற்கதுவாயெதுகை. இரண்டாமடியிறுதி யயற்சீ ரொழிந்த வேனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், கீழ்க்கதுவாயெதுகை. மூன்றாமடி நாற்சீரு மவ்வாறு தொடுத்தமையால், முற்றெதுகை.

## முரண்டொடைச்செய்யுள்.

புளிமா புளிமா தேமா கருவிளம். ஈறு புளிமா.

பெரிதுஞ் சிறிதும் பேசும் படியிழி
தெருளுந் தனுளார் பேதுஞ் சிகுநனி
விரிவிண் குகனை மெய்யுட் குவிவுடன்
ஒருகா லிருகான் முக்கா லுனினே. (ககச)

முதற்சீர்: தேமா. மூன்றாஞ்சீர்: புளிமா.

மாறா வருள்வேன் மனன்மெய் யடியவர்
காறே கதையா ரமிதஞ் சமமற
ஈறே முதலே பறையா ரிடையிடை
ஏறு ரிழியார் கருதார் மறவார். (கக௫)

இவ்விரண்டு செய்யுளுள்; முதற்செய்யுண் முதலடி முதற்சீரு மிரண்டாஞ்சீருஞ் சொல்லானும் பொருளானு முரணத்தொடுத்தமையால், இணைமுரண். இரண்டாமடி முதற்சீரு மூன்றாஞ்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், பொழிப்புமுரண். மூன்றாமடி முதற்சீரு மிறுதிச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், ஒரூஉமுரண். நான்காமடியிறுதிச் சீரொழிந்த வேனைமுச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், கூழைமுரண். இரண்டாஞ் செய்யு ளிரண்டாமடி முதலயற்சீரொழிந்த வேனை முச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், மேற்கதுவாய்முரண். மூன்றாமடி யிறுதி யயற்சீரொழிந்த வேனை முச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், கீழ்க்கதுவாய்முரண். நான்காமடி நாற்சீரு மவ்வாறு தொடுத்தமை யால், முற்றுமுரண்.

---

கக௩. தூய ஆடாயா எனற்பாலது " தூயா டாயா எனப் பொருந்திற்று. செல்வ முடையான் செல்வனெனப் பட்டவாறு ஆயமுடையான் ஆயனெனப்பட்டனன். ஆயம் = ஆதாயம்; யகாரவேதுகை காண்க.

தாயா = தாய்போலு முரிமையுடையாய்.

**அளபெடைத்தொடைச்செய்யுள்.**

தேமா கூவிளம் தேமாங்காய் மா.

ஆஅன் பாஅலுஃ மஃகல்கொள் ளாத
தேஎன் பாகுநெய் தின்ன்கண் டாசில்
வாஅன் கன்னலும் பின்போக மரூஉ
நாஅன் பேஎணு நன்ன்செவ் வேள்கேள். (௧௧௬)

தூஉ மாமணி துன்ன்றோர் தாஅர்
பூஉ ணீஇணல் வேலண்ணல் பூஉங்
காஅ ளுஅடல் காஅண்ட லோஓங்
கேஎ ரேறுந ரெந்தைக ளாவார். (௧௧௭)

இவ்விரண்டு செய்யுளுள்; முதற்செய்யுண் முதலடி முதற்சீரு மிரண்டாஞ்சீரு மளபெழத் தொடுத்தமையால், இணையளபெடை. இரண்டாமடி முதற்சீரு மூன்றாஞ் சீரு மவ்வாறு தொடுத்தமையால், பொழிப்பளபெடை. மூன்றாமடி முதற்சீரு மிறுதிச் சீரு மவ்வாறு தொடுத்தமையால், ஒரூஉவளபெடை. நான்காமடி யிறுதிச்சீரொழிந்த வேனைமூச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், கூழையளபெடை. இரண்டாஞ் செய்யுண் முதலடி முதலயற்சீ ரொழிந்த வேனை மூச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், மேற்கதுவா யளபெடை. இரண்டாமடி யிறுதியயற்சீ ரொழிந்த வேனை மூச்சீரு மவ்வாறு தொடுத்த மையால், கீழ்க்கதுவாயளபெடை. மூன்றாமடி நாற்சீரு மவ்வாறு தொடுத்தமையால், முற்றளபெடை.

"வாகை" எனத்தொடங்கும் ௧0௩ - வது செய்யுண்முத லிச்செய்யுள்வரை, தொடைவிகற்பம் முப்பத்தைந்துங் காட்டப்பட்டன. இவற்றொடு முன்னர்க்காட்டிய தொடை யெட்டையுங் கூட்டின்; தொடை நாற்பத்து மூன்றாகும். ஆகவே "இழுக்கி லடிதொடைநாற்பத்துமூன்று" என யா - காரிகையில் வருமாறு இந்நூற்கண்ணுந் தொடையும், தொடைவிகற்பமும் வந்தவா றறிக. இத்தொடை தொடைவிகற்பங்க ளன்றி யடிதோறு மிறுதிச்சீர்க்கண் மறுதலைப்படத் தொடுப்பது **கடைமுரண்**, கடை யிருசீர்க்கண்ணு மறுதலைப்படத்தொடுப்பது **கடையிணைமுரண்**, இரண்டாஞ்சீர்க்கண்ணு நான்காஞ்சீர்க்கண்ணு மவ்வாறு தொடுப்பது **பின்முரண்**, முதற்சீர்க்கண்ணின்றி யொழிந்த மூச்சீர்க்கண்ணு மவ்வாறு தொடுப்பது **கடைக்கூழைமுரண்**, இடையிருசீர்க் கண்ணு மவ்வாறுதொடுப்பது **இடைப்புணர்முரணெ**னவுங் கூறுப. இவ்வாறு வேனைய மோனைத்தொடை, இயைபுத்தொடை, எதுகைத்தொடை, அளபெடைத்தொடை யென் பவற்றுக்கு மொட்டிக்கொள்க. இவ்வியல் ௧0௨ - வது தொடர்பாகிய செந்தொடைச் செய்யுள்போன்ற செய்யுளடியி லெங்கேனு மடியின் முதனிற்கு மோனையெழுத்துக் குரிய இனவெழுத்துவரி னதனை, **மருட்சேந்தொடை** யென்க.

பின்வரு வழியெதுகை வழியாக **வழிமுரண்டொடை** யொன்று சொலப்படும். அஃதனவடியின் மேற்பட்ட நெடிலடி, கழிநெடிலடிகளிலேயே வரத்தக்கது. பின்வரு வருக்கவெதுகைவழியாக **வருக்கமோனை** யொன்று சொலப்படும். இதற்கிலக்கியம் ஆசிரியவியலில் "தருமமும்" எனத்தொடங்கும் ௧௨ - வது செய்யுள். அதிலடிதோறு முதலில், தகரவருக்கம் வந்தமை காண்க. இம்மோனை: ஆசிரியப்பாவிற்கேயிவ்வையடிமா

கலி னங்குத்தா நேரிட்டது. **இடையிட்டெதுகை, விட்டிசை வல்லோற்றெதுகை, விட்டிசைமோனை** யென மூன்று கூறப்படும். அவை, கட்டழகில்லா நடையு மோசையு முடையனவென்க.

**வருக்க வெதுகைச்செய்யுள்.**

தேமாங்காய் தேமா தேமாங்காய் தேமா.

தானனா தான தானனா தான

தாமேவு போத மேதேவர் தாழ்வில்
பூமாலை சூடு போர்வேலன் மீது
பாமாலை பாடி யேபேணு தாசர்
நாமூட ராகி டோநாளு நாடு. (கக௮)

இதில், இரண்டாமெழுத்து அளவொத்த மகாவருக்கம். ஆதலின், இது மகா வருக்கவெதுகை. இவ்வா றேனையவெழுத்து வருக்கம் வரினும், அவ்வவ்வருக்க வெதுகையாம்.

**நெடிலெதுகைச்செய்யுள்.**

தேமா தேமா கூவிளம் தேமா.

ஏரார் பெண்கா ளெம்பெரு மானைக்
கூடா வாழ்வென் வாழ்வருள் கூராய்
ஆறு வன்பா லாள்குக வென்றோர்
வாதே செய்துய் வேபெற வாரீர். (ககக)

இதில், இரண்டாமெழுத் தொன்றாவிடினும், அவ்வெழுத்தின்மே லேறிய நெடிலொப்புமையாம். அவ்வழி யிது நெடிலெதுகை. இது, பெரியதோர் சிறப்புடையதன்று.

**வல்லினவெதுகைச்செய்யுள்.**

கூவிளம் புளிமா கூவிளம் தேமா.

தத்தன தனனா தந்தன தான

மச்சறு தகைசான் மங்கைய ரேகை
கொட்டியுண் மகிழ்வே கொண்டொரு ஞான
முத்தியை யருள்சேய் மொய்ம்பணி பாட
இக்கணம் வருவீ ரின்பரி வோடு. (க௨0)

இதில், இரண்டா மூன்று மெழுத்துக்கள் வல்லினமாதலின்; இது வல்லின வெதுகை.

---

ககக. ஆறுஅன்பால் அருள்கூராய் என மாறுக. அருள்கூராய் = கிருபை கூர்வாயாக.

க௨0. மஸ்து எனற்பாலது "மச்சு" என வேய்ந்தது; மருளெனும் பொருண்மைத்து.

மெல்லினவேதுகைச்செய்யுள்.

கூவிளங்காய் காய் மா தேமா.

எம்பெருமா ளுஞ்செவ்வே ளியற்பே ரோதிக்
கண்டவொலி கலகலக்கக் களிந்து பாடிச்
சுந்தரமா நடிப்பதற்குத் தொடர்ந்து வாரீர்
மஞ்சொழியா விளங்கன்னி மாரே யன்றே. (கஉக)

இதில், இரண்டாமெழுத்து மெல்லினமாதலின் ; இது மெல்லினவெதுகை.

இடையினவேதுகைச்செய்யுள்.

கூவிளம் தேமாங்காய் கூவிளம் தேமா.

மெய்யுரை யோர்சூழு மேதைவி சாகன்
நல்லரு ளேவாழி நாளுமெ னுவாட்
கொள்ளடி யேபாடி நாடுதிர் கோல
மவ்வலே நேர்மூரன் மாமுகை யீரே. (கஉஉ)

இதில், இரண்டாமெழுத்து இடையின மாதலின் ; இஃதிடையின வெதுகை.

தலையாகேதுகைச்செய்யுள்.

மூன்றுஞ்சீர் : கருவிளம்.

தொண்டக மேநாளுந் தொனிதரு சீறார்
அண்டக னீணுக வணிபுற வுள்ளீர்
முண்டக ளுர்பேணு முருகனை பாதங்
கண்டக மேமாவின் கனிகொள வாரீர். (கஉங)

இதில், "சீர்முழுதொன்றிற் றலையாகெதுகை" எனும் விதிப்படி முதற்சீ ரிரண்டாமெழுத்துமுத லெல்லாவெழுத்தும் ஒன்றத் தொடுத்தமையால், இது தலையா கெதுகை. "ஓரெழுத்தொன்றினிடை" என்றபடி யிரண்டாமெழுத் தொன்றுமட்டு மொன்றத்தொடுப்பது இடையாகேதுகை. இது முன்னர்க்காட்டிய அடியெதுகை யைச்சேரும். அது கசு – வது யாப்பு. "கடைபிறவே" என்றபடி மேலிருவகைக் கும் வேறுபடுவது கடையாகேதுகை. இதற்கிலக்கியம்: மற்றவெதுகைகளே. அதனால், இங்கிரண் டியாப்புத்தரவில்லை.

மூன்றுமெழுத்தோன்றேதுகைச்செய்யுள்.

தேமா கூவிளம் தேமா கூவிளங்காய்,

தன்ன / னதன தானன தான தானதன

செம்மை நாய்கழு கோமை சேர்சுரமார்
நன்மை மானுடர் காளெ னுறவே
மெய்மை யோதிய வேல னுர்பெயரே
உண்மை யாகித மோதி வாழ்மினரோ. (கஉச)

இதில், 'மை' என மூன்றுமெழுத் தொன்றத்தொடுத்தமை காண்க.

---

கஉங. தொண்டகம் = குறிஞ்சிப்பறை.

### ஆசெதுகைச்செய்யுள்கள்.

*தான தந்தன *தல்ல தத்தனு*

மாமல் குங்குளிர் குல்லை வச்சிகளீ
பூமல் கும்பொழின் முல்லை யச்சுதனூர்
தூமல் குந்துதி சொல்லு மற்புடையீர்
சேய்மல் கன்பதர் செல்லு மிக்குயர்வீர். (கஉ௫)

* தைய வெனுஞ் சந்தத்தையே, தல்ல வென விகற்பிக்கும் வழி விகற்பித்த துணர்க.

இதில், ஆசாக யகரவொற் றிடைவந்தது காண்க.

*தாத்த தானன தான தானதன*

ஏர்க்கு ழாமுழு மேசி லாமருத
மாக்க ளேபெரு வான மாமுருக
ஆக்கை போமுன மாள வாவெனவொர்
நோக்க மாகுதிர் நூறு வீர்துயரை. (கஉ௬)

இதில், ஆசாக ரகரவொற் றிடைவந்தது காண்க.

*தான தல்லன தான தானதனு*

ஓவ வில்லலை வீசு மோர்கடனீர்
மேவு முள்ளிக டாழை வீறிடையீர்
கோல்வி டல்லக வூழர் கோள்கடிசேய்
தாவி னல்லடி தாழ்வி ரேலுயர்வீர். (கஉ௭)

இதில், ஆசாக லகரவொற் றிடைவந்தது காண்க.

*தான தன்னன தான தந்தனு*

போதல் பின்னுறல் கூறு புந்தியர்நூல்
ஓதல் பன்னுத லோடு ளன்புடையார்
ஈத லெண்ணுவ ரேதில் கந்தனையே
தாழ்த றண்ணல மாகு மென்றறிவார். (கஉ௮)

இதில், ஆசாக ழகரவொற் றிடைவந்தது காண்க. "யாலழ வென்னு மீரிரண் டொற்றும் - வரன்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பினஃ - தாசிடை யெதுகையென் றறைதல் வேண்டும்" எனும் யா - காரிகையுரைவரு சூத்திரப்படி, இங்ஙன மாசெதுகை நான்கு மினி காட்டப்பட்டன.

---

கஉ௫. குல்லை=துளசி. வச்சி=காயா; பிங்கலந்தை "பூவை யஞ்சனி...... வச்சிகாயா" எனக் கூறுதலினறிக. துளசி முல்லை நிலத்ததெனும் மாத்திரையே குறிப் பார்க்குக் காயாவும் அந்நிலத்ததெனக் குறிக்க வேண்டும் என்றலுணர்த்துமாறே அவ் விரண்டினையும் "குல்லை வச்சிகள்" என விணைத்துரைத்தனரென்க.

**ஆசிடையிட்டுவரும் வல்லினவெதுகைச்செய்யுள்.**

*தான தையன தந்த தானதனு*

காதன் மல்குயி ரென்ற காரிகைதான்
ஏர்கோ ளுள்ளிட மென்ற பூவணைமேல்
ஆத வுள்ளமெ னங்கை யாலணையா
ஏத மில்லயி லெந்தை மேவுவனே. (கஉக)

இது, 'த - கொ' எனும் வல்லினமொன்றிய வெதுகை. அவ்வல்லினத்திடையில், ஆசாக ரகரவொற்று வந்தது காண்க.

**இரண்டடியெதுகைச்செய்யுள்.**

*தான தந்தன தான தந்தனனு*

சூரி யன்றெழு தூய வந்தணரே
ஏரி லங்கயி லீச னங்குமுளான்
நாளு மென்றவ னடி நண்புறினே
பீளு டம்படை பீடை வெந்திடுமே. (கருo)

இதில், முன்னிரண்டடியு மோரெதுகையாய்ப் பின்னிரண்டடியு மோரெதுகையாய் வந்தவாறு காண்க.

**உயிரெதுகைச்செய்யுள்.**

*தான தந்தன தன்ன தானதனு*

கானி லங்கடி துன்ன வேகமழ்தார்
கோடி தந்தெழில் வண்மை கூர்செடிகாள்
ஆசி னுஞ்சும மண்ணல் சேயுருவே
சாரி னுஞ்சிறு சன்ம மோசனமாம். (கருக)

இதில், இரண்டாமெழுத் தொன்றாவிடினும், இரண்டாமெழுத்தின்மே லேறிய இகரவுயிர் ஒன்றிவந்தமையினல் இஃதுயிரெதுகையாயிற்று. இது பெரியதோர் சிறப்புடைய தன்று.

**வழியெதுகைச்செய்யுள்.**

இச்செய்யுள் : முற்போந்த கலிநிலைத்துறைகளுள் ருசு - வது யாப்பு. அந்த யாப்பி னெதுகை யிங்கே காட்டப்படுவதாயின், முன்னர்க்காட்டிய முற்றெதுகையாய் முடியும். ஆகலின், அளவடியின்மிக்க வடிகளானே வரத்தக்க வதனை யங்குக்காட்ட கேசிட்டது. அதிற் சீர்தோறு மிரண்டாமெழுத்தாகிய ககரவொற்று வந்தமை காண்க. ஒற்றன்றி யுயிர்மெய்யெழுத்தும் வரும். இவ்வாறு முற்றும் வருதலின்றிச் சிலசீர் விட்டிடையிட்டு வரினும் வரலாம். அனுப்பிராசமெனும் வடமொழியை வழியெதுகையென்பது தமிழ் வழக்கு. எதுகைகளிற் றலையாகெதுகை சிறப்புடைத்தல் போல, இதுவும் பெரியதோர் சிறப்புடைத்து.

---

கஉக. ஆதர உள்ளம்—"ஆதவுள்ளம்" எனப்போருந்திற்று. விரும்பியவுள்ளமென்பது பொருள்.

கருக. தார் = மலர்.

### நெடின்மோனைச்செய்யுள்.

தேமா தேமா கருவிளம் கூவிளங்காய்.

கானூர் பக்கி களையறி வார்பெரியோர்
கோனு யிட்டர் குழாமுட னேவருசேய்க்
கான வன்பி னருஞ்சிறை வீசுமினோ
ஊனு ரங்க முறுநல மேவிடுவீர். (௬௰௨)

இதில், அடிதோறும்வந்த முதலெழுத்து : நெட்டெழுத்தாகலின் நெடின்மோனை. அடிதோறு முதலெழுத் தொன்றத்தொடுக்கும் அடிமோனைக் கிதுவேறு. அம்மோனை முன்னர்க் காட்டப்பட்டது. இந்நெடின்மோனையுஞ் செந்தொடைச்செய்யுட் கின்றென் பதை யுணர்த்துவான் இதனையுமொரு மோனையெனக் கூற்றுவல்லார் கொள்வ ரென்க.

### வல்லினமோனைச்செய்யுள்.

காவாழ் கிள்ளை களைமயில் காளடியார்
கோவா மெந்தை குகேசன சீரெழிலே
பாவா மாறு பகர்ந்தினி தாடுமினோ
தூவா ரோகை சுரந்திடு நும்மகமே. (௬௰௩)

இதில், அடிதோறும் வந்த முதலெழுத்து வல்லெழுத்தாகலின் வல்லினமோனை. இவ்வாறு மெல்லெழுத்துவரின் மெல்லின்மோனை. இடையெழுத்துவரின் இடையினமோனை யெனவுங் கொள்க.

### இரண்டடிமோனைச்செய்யுள்.

தேமாங்கனி கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.

தாத்தந்தன தானன தானன தானதனை

நீற்கண்டன ருமக னய்வரு நீனுயிரார்
நீற்கண்டற வேபுரி நோயி லாள்கரவேள்
வாற்கெண்டைகண் மால்கொளு மேர்கெழு மான்மகள்கோ
வாற்கெண்டைகள் பாய்புய மாதிரம் வான்வரையே. (௬௰௪)

இதில், முன்னிரண்டடி முதலெழுத்து மொருமோனையாய்ப் பின்னிரண்டடி முத லெழுத்து மொருமோனையாய் வந்தவாறு காண்க. கட்டு : கண்டென மெலிந்தது.

### அனுமோனைச்செய்யுள்.

புளிமா கூவிளங்காய் தேமா கூவிளம்.

தனன தானதன தான தானன

சேருநர் காதுக்க தேவை வேலொடு
திருவு லாமிதய நாடு சீரியர்
தேருள ராயிதய தேசு கூடுவர்
சிரம மேதுமடை யாது தீவிரம். (௬௰௫)

இதனில், அடிதோறும் வந்த முதலெழுத்து அனுவெழுத்து. அதனால் இது அனு மோனை. அனுவெழுத்து இனவெழுத்தெனவுங் கூறப்படும். விவரம்: அ - ஆ - ஐ - ஔ தம்முளினமாம். இ - ஈ - எ - ஏ தம்முளினமாம். உ - ஊ - ஒ - ஓ - தம்மு ளினமாம். இவையேறிய வுயிர்மெய்யு மிவ்வாறும். ஒற்றினுள் ச - த தம்முளினமாம். ஞ - ந தம்முளினமாம். ம - வ தம்முளினமாம். அன்றி, ய - இ - எ - தம்முளின மெனக் கோடற்கும், ஆன்றோர் செய்யுள்வழக் குண்டு. முதலெழுத்தாய மோனையெழுத் தேனும், உரிய வினவெழுத்தேனுஞ் செந்தொடைச்செய்யு ளொழிந்த எல்லாச் செய் யுட்கு மடிதோறும் வரத்தொடுப்பது சிறப்பாம். இக்கண்டத்திலுள்ள செய்யுளனைத்து மிச்சிறப்புடையனவே. அடிமுதற்சீரொழிந்த வேனைச் சீர்களி லெச்சீரிலேனு முதலில் வரத்தக்க அவ்வெழுத்தானது, சீர்க்கு இடைகடையில் வருமாயின் அது மேற்சிறப்பி னின்றும் போலியென வங்கீகரிக்கப்படும். இதற்குதாரணம்: இவ்வியல் ௧௨௯ - வது துக்கிரண்டாமடி யிரண்டாஞ்சீரும், ௧௩௧ - வது துக்குமுதலடி யிரண்டா நான்காஞ் சீர்களும், ௫௫ - வது துக்கு மூன்றுமடி நான்காஞ் சீருமாம். இவ்வா றவ்வெழுத்தமைப் பெற்றவையன்றிப் பெறாத வாசிரியவடி: பொழிப்பெதுகையாலு நடக்கும். இதனை, ஆசிரியவியல் ௯ - ௧௦ - ௧௧ - ௧௨ - ௮ - ம் செய்யுள்களி லறிக. நிற்க;

இச் செய்யுள்காறுங் காட்டிய தொடை தொடைவிகற்ப முதலியவற்றுட் சில: தொடைகாட்டத் தொடங்கிய கலிவிருத்தத்திற்கு முற்போந்த செய்யுள்களில் வந்திருப் பினும், அவற்றை யொருங்கே யறிகுந ரறியுமா றிங்ஙனங் காட்டிய வொழுங்கு கலி னென்க.

ஈண்டு வந்தவாறு நாற்சீர்கொண்ட அளவடியிலேயே நடைபெறத்தக்க தொடைவி கற்பம் முப்பத்தைந்தும், இரட்டைத்தொடையும், வழியெதுகையும், ௧௧௭ - வது விருத் தத்தினடியில் வெளியிட்ட வழிமுரண்டொடையு மொழிந்த மற்றைய தொடை யனைத் தும்: **குறள், சிந்து, அளவு, நெடில், கழிநெடில்** எனு மடி யைந்தினு நடைபெறூஉம் என்க.

முதற்சீர்: தேமா.

ஆசி றம்முடலை லிங்க மாநிலை
நேச மோடுயிரி னின்றவ் வாறதில்
நாச மில்குகனை நாட்டு வோருயர்
தேசி லங்குசிவ லிங்க மாகுவர். (௧௩௬)

மா புளிமா புளிமா புளிமாங்காய்.

தோலார் திருநீ லகளைச் சொலுமுந்தை
நூலே யறியா நொசிவுள் ளவர்முன்னோர்
காலே தறிவார் கதியென் னடைவாரேர்
வேலா விமலா விபுவா யனிர்சோதீ. (௧௩௭)

குளவம் பகமா றுளவெங் குருநாதா
அளவில் கலையே தமிலா தறிவோராய்க்

---

௧௩௭. நொசிவு = நுண்மை = அணு; சூடாமணி நிகண்டு காண்க.

௧௩௮. குளஅம்பகம் = நெற்றிக்கண். களன் = நாதமெனப்படும் நுதையென்பதை, சூடாமணி நிகண்டு "அரவமே னனமே யோதை" என்பதனாலறிக.

களமில் களனே பெறினுங் கவிநாதர்
மிளிருன் கழலைப் புகழ்நூல் விழையாரோ. (கரு௮)

செல்வப் பொருளோர் செயுநல் வினைபோலே
கல்விப் பொருளோர் கமழுங் கழன்மேதை
சொல்வித் தையிலே யுயர்வார் துகடீர்வார்
நல்வித் தகவே விறைமா நடையானே. (கருக)

நான்காஞ்சீர் : கூவிளங்காய்.

வீடு வெறுக்கா தொருசெவ் வேள்பெயரிற்
பாடு திருப்பா வுயர்வே பாடதினும்
வீடு வெறுத்தே வெளிநின் றோரருளாற்
பாடு திருப்பா வுயர்வே பாடகரே. (கச0)

இச்செய்யுட்கண் அறிவுறுத்த வுண்மை; ஆகூழுள்ளார் அந்தரங்க நீத்தகலுமாறு முளதாமோ?

தேமா கூவிளம் தேமா கூவிளம்.

மூந்தை நோன்மையி னுனன் முத்தமிழ்
வந்து ளார்குகன் வாழ்த்தி யின்னருட்
சிந்து மூழ்கிவி டாத சேர்க்கையிற்
சொந்த மாயுறு வார்சு வாமியை. (கசக)

முதற்சீர் : புளிமா.

எனக்கு நற்றமி ழீந்த சேயருள்
நினைக்கு நெஞ்சுடை யோய்தன் ளாடிடின்
தனக்கி லாபமெய் தாது தாழ்வெளி
மனக்கு மீனம தாமம் மானசம். (கசஉ)

கூவிளம் கூவிளம் புளிமா கருவிளங்காய்.

தேனுறழ் முத்தமிழ் விரகு சிறந்துளவுன்
மீனுறழ் சித்திர ஞெகிழி மிடைந்தசரண்
பானினை வுற்றவர் பயில்கலை விஞ்சையராய்
மேனிலை பற்றுவர் விரைசெய் கடம்பணியோய். (கசங)

தேமா கூவிளங்காய் கூவிளம் தேமா.

சேடை கொண்டதமிழ் செவ்விய தேவ
பாடை யென்றறவர் பன்னுவர் தேமார்
கோடை யங்குகனை யேயிது கொண்டு
பாடை யிங்கிதம ருமதர் பண்ணும். (கசச)

---

கருக. இறை = பெருமை.

கசங. ஞெகிழி = சிலம்பு. மிடைதல் = நெருங்கி நிற்றல்; துதைதலென்றுங்கூறுப.

கூவிளங்கனி தேமா கூவிளங்கனி தேமா. †

மங்கலமுத லீரைந் தங்கமுமுள மாணூர்
இங்கிதகவி மாலை யேசினின்முடி வேய்வோர்
தங்கமினுட லோடு சங்கமொருவி யந்தந்
துங்கவமுது சேர்வர் சுந்தரமுரு கோனே. (௧௪௫)

† இச்செய்யுள் ; முதற்சீரையு மூன்றுஞ்சீரையும், தேமா புளிமா வெனப்பிரிக்கின் ; அறுசீர்க் கழிநெடிலடி விருத்தமுமாம்.

[ஒற்றிலா வல்லினச்செய்யுள்]

தானனதன தானா தானனதன தானா

தீதறுசுக போதா சேடகடக கோகா
சாதறெறுகு கேசா சாடுதவறு சாடு
சூதறுபகை தீதீ சோதிபதிப கேசா
கோதறுகடி தாதா கோடிபடிக பாதா. (௧௪௬)

இதில், வன்கணவெழுத்தாறும் வந்தன

[மெல்லினச்செய்யுள்]

முன்மைமனுமுன் ஞான முன்னுமனனை நண்ணா
நன்மைநினைநன் மோன நண்ணினமன நண்ணு
மென்மைமுனிமன் னேம னெண்ணமெனைமு னாமே
மென்மைமணிமின் மஞ்ஞை மின்னுமினிமை மன்னே. (௧௪௭)

இதில், மென்கணவெழுத்தாறும் வந்தன.

[இடையினச்செய்யுள்]

வையவயவு லாவு வாவிவிழிவர் வாயால்
வையவளவி லாரி லேவிழைவரை வாரி

௧௪௫. மங்கலமுதலீரைந்தங்கம்=மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உணவு, வருணம், நாள், கதி, கணம். இவற்றை முதன்மொழிப் பொருத்தமாகிய தசாங்கமென்ப. முதன்மொழியாகு மங்கலமொழியில், இரட்டை மங்கலமும் பகலொண்ணா தென்ப.

௧௪௭. முன்மை மனு=முதற்கணுள்ள வாசக ஜெபமந்திரம். முன்ஞான முன்னு மனனை=பதிஞானத்தை நினைக்கும் மனத்தை. நண்ணாது=கிட்டாது ; அவ்விகுதி தொக்கது. எல் மை முனி மன் எமன்=இரவும் பகலும் குற்றத்தைக் கோபிக்கும் இராசனான இயமன். எல்=இரவும் பகலும். மை=குற்றம்.

௧௪௮. வையவயவுலாவு வாவிவிழிவர் வாயால் வைய=பூலோக ஆசையினுலாவு தூய்மையில்லாக் கயவரும் தம் வாயால் ஏச.

அரில்=குற்றம் ; "ஆரில்" என நீட்டல் விகாரமுற்றது.

வெய்யவழலி வீயோர் வேலையுரிய ராவோர்
வெய்யவலலை யேவில் வேலவவளி யாயே. (கசஅ)

இதில், இடைக்கணவெழுத்தாறும் வந்தன.

காய் காய் காய் புளிமா.

வம்புமலர் முடிமுருகன் மதியுடையா ரெவரும்
பம்புமளி யால்விரும்பப் படுபொருளா யிடலால்
நம்பனெனும் பெயருமணை வானெனுநன் னடையர்
கும்புபடர் குகவெனையுங் கொளவருளி னினையே. (கசகூ)

கரியபிரான் மருகனெனக் கனகமயில் வருவோன்
பிரியமுளார் மனம்போலப் பேருதவி செயலாற்
பெரியபிரா னெனும்பெயரும் பெறுவனென வறிவோர்க்
குரியபரா பரவெனையு முவகையொடு நினையே. (கருO)

வச்சிரத்தோ டயில்பிடிக்கு மருமரைக்கை மழவன்
எச்சகப்பே ரழியினுந்தா னழிவடையா வெழிலால்
அச்சுதப்பே ருறுவனென வறியறிஞர் மனமே
வுச்சிதப்பா வகியெனையு முவகையொடு நினையே. (கருக)

[விருத்தமும், துறையும்]

எண்ணரிய குகபரம்வின் னெனனுமறி வுடனும்
மண்ணுலக கிரியையொடு மன்னிமிளிர் வதனல்
விண்ணுமனு மதுவயவென் றேயறியும் விறலோர்
நண்ணுநடை வருகுமர நம்பெனையு நினையே. (கருஉ)

எண்ண ரியகு கபரம்வின் னெனனு மறிவுடனும்
மண்ணு லககி ரியையொடு மன்னி மிளிர்வதனல்
விண்ணு மனும துவயவென் றேயறி யும்விறலோர்
நண்ணு நடைவ ருகுமர நம்பெ னையுநினையே.

இது, கட்டளைக்கலித்துறை.

[சொல்லும் பொருளும் வேறுபடாமல், அடியுந்
தொடையும் வேறுபட்டுவரும் பிறிதுபடுபாட்டு.]

[விருத்தமும், அகவலும்]

பூமணமே புனன்மணமே பொங்களிமா மணமே
காமணமே கனிமணமே கம்மெனவே கமழு

கருஉ. வயவுஅது என மாறுக. வலியுள்ள அது (=அக்குகபரம்) என்பது பொருள். வயவு=வலி. வலியோனை வயவன் என்பதும் இம்மொழிபற்றி யன்றே.

கருந. அளி=கள்.

மீமருவீ கமலைவள மேயவொரு தளியுய்
சேமருகா வுவகைநெய்தை செய்யவெற்கு நினையே.                    (கருக)

மீமரு ஈ கமலை=மேலாம் மணத்தை நல்கும் திருவாரூர்.

பூமண மேபுனன் மணமே பொங்களி
மாமண மேகா மணமே கனிமண
மேகம் மெனவே கமழு மீமரு
வீக மலைவள மேய வொருதளி
யுய்சே மருகா வுவகை
நெய்தை செய்ய வெற்கு நினையே.

இஃது நாறடி நேரிசையாசிரியப்பா.

ஒரேவாய்பாட்டில் கருஉ, கருக - ஆஞ் செய்யுள்களாகவந்த இரண்டு விருத்தங்களுள் ்று கட்டளைக்கலித்துறையாக நடைகொள்ளவும், ஒன்று நேரிசை யாசிரியப்பாவாக டகொள்ளவும் அமைத்த ஆற்றல், மதியுடையார் மதிக்கும் புலப்படாது போங்கொல்?

[திரிபாகி]

மூன்றெழுத்து மெம்பெருமான் முருகிருக்கை முதலிற்
றூன்றெழுத்து மீற்றெழுத்துந் துரைமுருகன் கரணம்
ஊன்றெழுத்து ளிடைகடைதா மோங்குமர னிலையங்
கான்றிளைக்கும் கோதைசொல்லிற் கமலைகலை மலையே.                    (கருச)

இதில், மூன்றெழுத்து - கமலை. இது திருவாரூர். கமலையில் முதலெழுத்துங் டையெழுத்துங் கலை. இது காரணமென்னுங் கூத்துவிகற்பம். இடையெழுத்துங் டையெழுத்தும் மலை. இவை பொருந்தப் பொருள் கொள்க.

கான்காஞ்சீர் : தேமா.

நன்மநெறி காய்ந்தவர்கள் போனனிக தைத்தே
தன்மநெறி காய்ந்துகறை யண்முவினை தன்னைக்
கொன்மனசி லெள்ளளவு நீக்குமதி கொள்ளார்
சன்மமென வாகுவர்சொல் சண்முகபி ரானே.                    (கருரு)

தேமா தேமாங்காய் தேமா தேமாங்காய்.

தானா தானனா தானா தானனா

[நெட்டெழுத்துச்செய்யுளும், மாலைமாற்றும்,
திரிபங்கியும், துவிதநாகபந்தமும்.]

க. சேயா சேயாதே தேயா சேயாசே
மாயா மாயாவா வாயா மாயாமா
வாயா மாவாயா மாயா சேமாசே
யோயா நேயாவோ யாயே தேயாளே.                    (கருகூ)

---

கருரு. கொன்=பயனின்மை.

வஞ்சித்துறை.

உ. சேயா சேயாதே
தேயா சேயாசே
மாயா மாயாவா
வாயா மாயாமா.

ங. வாயா மாவாயா
மாயா சேமாசே
யோயா நேயாவோ
யாயே தேயாளே.

இதனில், க, உ-ம் அடிகள் தம்மின் மாலைமாற்றும். நான்கடிகளையும் முறையே யிரண்டிரண்டு சீராகப்பிரித்துப் படிக்கும்போது பாம்புக்கொரு பாட்டாகப் பொருளோடு முடிகின்ற மேற்காட்டிய மோனைபிழையா விரண்டு வஞ்சித்துறைகளாகும். ஆகவே யிவ்விருத்தம்: குழிப்புடைய நெட்டெழுத்துச் செய்யுளும், மாலைமாற்றும், திரிபங்கியும், துவிதநாகபந்தமு மாயிற்றென்க.

இதன்பொருள். சேயாசேயா=சேயவனே சேயவனே, தே=கடவுளே, தேய் ஆசு=(எனது) சிறுமையைக்கெடு, ஆசு ஏமா=சிறுமைக்கு நமனுயுள்ளானே, யாமாயா=(சத்திரூபமாகச் சுருங்கியிருந்து) வியக்திரூபமாக விரியும் மாய மாயைக் கதிபதியே, வா=(என்முன்) வந்தருள்வாயாக, வாயாமாயாமா=(உயிர்களோ டத்துவிதமாயிருந்து மவைகட்குக்) கிட்டாத மகாசிவாத்திரியத்தனே, வாயா=உண்மைப்பா டுடையானே,

மாவாயா=சிறந்த வாக்குடையானே, மாயா=மாயவித்தைகளுடையானே, சேமா=சேம முடையானே, சேய்=இளநலமுடையானே, ஓயாநேயா=(அன்பர்மாட்டு) ஒழியா நேய முடையானே, ஓயாய் ஏது=(என்கண்ணதாய) ஏதெனுங் குற்றத்தையொழித்தருள், ஆள்=ஆண்டருள். என்றபடி. ஏ யிரண்டும் அசை.

தேமாங்கனி புளிமாங்கனி புளிமாங்கனி புளிமா.

தைன்னதன தனத்தத்தன தனத்தந்தன தனத்த

பொய்ந்நூல்வழி யொழித்துக்குரு புரக்குந்திற முரைக்கும்
மெய்ந்நூல்வழி பிடித்துத்தவ மிருக்கும்பொறி யடக்கர்
செய்ந்நூல்வழி சிறக்கக்களி திளைத்தின்பமு தளிக்கும்
மொய்ந்நூல்புக ழுயிற்கைக்குக முருக்கென்றுயர் முருக்கு. (௧௫௭)

முதற்சீர் : நிரை+நேர்+நிரை=புளிமாங்கனி.

தனனதன தனனதன தனனதன தனன

எயிலேறிய புவியாமிதி லெளியேன்மட முடைமா
பயிலேறிய முகையார்தரு பயனுடுத லறிவாம்
வெயிலேறிய பெரியார்நடை விடலேவிழை யினுமே
மயிலேறிய முருகாவெனை மறவேலெனை மறவேல். (௧௫௮)

புலைமாதருள் கிடமாறவர் புணர்மாமறை யவரும்
மூலைமாதருண் மறையோர்மகண் முலைபுல்லிய கலரும்
அலைமாதருள் கெவருந்திரு வமுதம்பெற விலையோ
மலைமாதருள் குமராவெனை மறவேலெனை மறவேல். (௧௫௯)

விதிமீறிய பெயரும்புலை மிசையுந்தவ றுளரும்
பதிமீறிய பெயரும்பல பலகோதுசெய் தவரும்
திதிமீறிய கதிமேவினர் சிறியேனவை யுறினும்
மதிமீறிய குகனேயெனை மறவேலெனை மறவேல். (௧௬௦)

சீர்வாய்பாடு பேதிக்கினு மோசை கெடாது நடப்பது.

ஓரைந்தையும் வென்றோர்நவி லுரையின்படி யேயிய்
ஈரைந்துகொ டேயுன்னடி யிணையேதொழு மெவரும்
ஊரைந்தினு முயர்திய்யொரு மூன்றெய்துவ ரோநார்
வாரைந்தொழின் முருகாவெனை மறவேலெனை மறவேல். (௧௬௧)

கருவிளங்கனி கருவிளங்கனி கருவிளங்கனி புளிமா.

இறைமறைமுடி வெனுமுறைகளி லிடைவருகவி படனம்
முறையொடுபணி யொருபுனிதமு முயலுநியம மிலாய்

---

௧௫௮. பயில்=நெருக்கம்; "மந்தியுமறியா மான்பயிலடுக்கத்து" என்றார் திருமுருகாற்றுப்படையினரும். மகளிர்செய்யுஞ் சைகை யென்றுங் கிளத்தலுமுண்டு.
௧௬௦. திதி=சிராத்தம்.

நிறைபொருணமை யலதிலையென நினதடிமலர் பரவாக்
கறையருறுவ தவலமெனது கறைதெறுகர வயிலோய். (௧௯௨)

கருவிளங்கனி.

தனனதனன தனனதனன, தனனதனன தனனதனன

மருணவுறமெய் கருதுமறிஞர் மனமுணடன மிடுகுருபர
கருணையிறைவர் புதல்வபெரிய கலைஞரினிது புகழறுமுக
அருணவளரு மருணகிரியி னமலபரம சரவணபவ
இருணவுறவு னடியைநினையெ னிடர்தொலைவுற வருடியருடி.

"நேரீற்றியற்சீர், வெண்கலியுள்ளுங் கொச்சகத்துள்ளும் வருதலும் * * * * செய்யுளோத்துள்ளே சொல்லப்பட்டன," என யா - காரிகையொழிபியன் மூன்றாஞ் செய்யுளுரையிருத்தலினாலும், கொச்சகக்கலி வெண்டளை பெற்றும் வருகின்ற வழக்கிருத்தலினாலும் இக்கலியியலில் வெண்டளை பெற்றுள்ள ௧௦௦, ௧௦௧ ஆம் செய்யுள்கள்: தரவுகொச்சகக்கலிப்பா வாகாவோவெனின்;கூறுதும்—வெண்டளை யான்வரு தரவுகொச்சகத்திலும் கலிக்குரிய நிரைமுதல் நேர்முதலாகிய காய்ச்சீர்கள் பொருந்துகின்ற வெண்சீர் வெண்டளையும் வரவேண்டு மென்றல் மரபாகும். ஆகவே, மேலெடுத்துக்கொண்ட விரண்டு செய்யுளுங் காய்ச்சீர் பொருந்தா இயற்சீர் வெண்டளையானே வந்தமையின்; அவை தரவு கொச்சகக்கலியெனப் பெயர் பெறுமற் கலிவிருத்தமெனப் பெயர் பெறுதலியைபேயென்க. மேலுரையில்"வருதலும்" எனற்கு நேரீற்றியற்சீராகிய மாஞ்சீர் முற்றும் வரு வழக்குண்டெனப் பொருள் கொள்ளற்க. அற்றாகலினன்றே "துள்ளலோசையிற் சிறிதும் வழுவாது நாற்சீர் நாலடியான் வருவது தரவு கொச்சகக்கலிப்பா வென்றும், துள்ளலோசையிற் சிறிது வழுவி நாற்சீர் நாலடியான் வருவது கலிவிருத்த மென்றுந் தெரிந்துணரப்படு மெனக்கொள்க" என மேலைக்காரிகை யுறுப்பியல் ௧௭ ஆம் பாட்டுரையிலும் விளக்கப்பட்டிருக்கிறது. "மாஞ்சீர் கலியுட் புகாகலிப் பாவின் விளங்கனி வந்-தாஞ்சீ ரடையா வகவ லகத்துமல் லாத வெல்லாந்-தாஞ்சீர் மயங்கும்" எனும் மேற்படி காரிகையின்படி, மாஞ்சீரும் விளங்கனிச்சீருமல்லாத காய்ச்சீரும் விளஞ்சீரும் வெண்டளைபெறுத தரவுகொச்சகக்கலியுட்புகுங்காலத்துங் காய்ச்சீர்கட்கு விளஞ்சீர்கள் குறைவாகவேண்டுமென்ற லினிதுபொருந்தும். இக்கலியியல் ௧௮ - வது செய்யுள்போலச் சமமாயினு மாகலாம். இன்றி விளஞ்சீர்மிகுந்து ஓசையளவாய் நிகழின் அதனைக் கலிவிருத்தமெனலே மேல்விதி யுரைகட்கு மியைபென்க. நிற்க.

"அளவடி நான்கின கலிவிருத் தம்மே." எனும் யாப்பருங்கலச் சூத்திரவழி யிவ்வியற் பாவினத்துள் வந்த கலிவிருத்தமெல்லாம்: இருபதெழுத்தின் மிக்க நாற்சீ ரடிப்பாவும், இருபத்துநான்கெழுத்தின் மிக்க நாற்சீ ரடிப்பாவினமு மில்லையென் றுணருமாறு, யாப்பருங்கலச்செய்யுளோத்து விருத்தியுரையில் விளக்கியபடியே, எட்டெழுத்துமுத லிருபத்துநான்கெழுத்தின் காறு மளவா யுயர்கின்றவடிகளையே யுடையன. ௧௯௨, ௧௯௩ ஆம் விருத்தங்களிலுள்ள கனிச்சீர்களைப் புளிமா புளிமா வெனப் பிரிக்கில் முன்னையது எழுசீர்க்கழிநெடிலடிவிருத்தங்களுள் ௯௧ - வது செய்யுளளவும், பின்னையது எண்சீர்க்கழிநெடிலடிவிருத்தங்களு ளொன்றுமாம்.

கலிப்பாவின முற்றிற்று.

௩ - வது கலியியன் முற்றிற்று.

ஆ. இயல் மூன்றினும்போந்த திருச்செய்யுள் - சஎள.

---

# ச - வது வஞ்சியியல்.

---

க. இருசீரான்வரும்

## குறளடிவஞ்சிப்பா.

ஒன்றிய வஞ்சித்தளை பெற்று, ஏந்திசைத்
தூங்கலோசைத்தாய் வருவது.

இலகம்பர மிலையென்றெவர்
சொலினும்பல துறைபேருல
குளதாலது வுளதென்றறி
உளமாதவ ருளமேவொரு
ரு. சிவனேநிறை திருவேலிறை
யவனேயெனை யணைவேனென
நினையென்னையு நினதொள்ளருள்
துனைவன்பொடு தொடராதினி—வாளா
இருக்கவோர் நீதி யேது
திருக்கிளர் குழகா செப்பி யருளே. (க)

இது, "வாளா" என்னுந் தனிச்சொற்பெற்று இரண்டடி யாசிரியச்சுரிதகத்தா லிற்றது. கனிமுன் நிரை வருவது ஒன்றிய வஞ்சித்தளை.

ஒன்றாத வஞ்சித்தளை பெற்று,
அகவற்றூங்க லோசைத்தாய் வருவது.

ஈராயிர மேர்நாவனும்
ஓராயிர மோங்குன்பெயர்
மாண்போதிடு வாறேவவை
நான்பேசவு நண்ணுங்கொலோ
ரு. ஏனற்பர னேழைக்கினி
தாநட்புடை யாதியலி—யருளால்
கயிலைக் கபாடந் திறக்கச்
செயுமற் புதவருட் சிவசே யவனே. (உ)

இது, "அருளால்" எனுந் தனிச்சொற்பெற்று, இரண்டடி யாசிரியச்சுரிதகத்தா லிற்றது. கனிமுன் நேர்வருவது ஒன்றாத வஞ்சித்தளை.

பலதளையும் விரவிப் பிரிந்திசைத் தூங்கலோசையான் வருவன.

அறிவே—ஓங்கே தமி லோர்மகிழ்ச்சி
வீங்காரியர் விரவெணையினி '

---

க. துனைவு=விரைவு; சே - திவாகரமும், பி - நிகண்டும் பார்க்க.

நீங்காதுற நிறைவிசாக—நாளும்
காலா யுதவங் கதலியும்
வேலா யுதமும் விளங்கெழுந் தருளே. (௩)

இஃதடிமுதற்கண் " அறிவே " எனுஞ் சீர்க்கூனும், ஈற்றில் " நாளும் " எனுந் தனிச்சொல்லும் பெற்று, இரண்டடியாசிரியச் சுரிதகத்தா லிற்றது. இப்பாவில், " ஓங்கேதமில் " எனு நிரையீற்றுக் கனிச்சீர்முன் "ஓர்" என நேர்வருதலின் ஒன்றாத வஞ்சித்தளையும், " ஓர்ம கிழ்ச்சி " என்பது நேர் நேர், நேர் நேர் என வலகிடவு நிற்றலின் நேரொன்றாசிரியத்தளையும், அச்சீர்: நேர் நிரை நேர் என வலகிடவு நிற்றலிற் காய்ச்சீராகி யிரண்டாமடி முதற்சீராகிய நேரோடொன்றுங்கால் வெண்சீர் வெண்டளையும், அச்சீராகிய நேர் நேர் நிரைக் கனிச்சீர்முன் " விர " எனு நிரை வருதலின் ஒன்றிய வஞ்சித்தளையு மாமாறுகாண்க. பிறவு மன்ன.

அடியிறுதியில், உகாவீற் றியற்சீர்க்கூன் பெற்று வருவது.

மாறுநாறெனன் மதமணப்ப
வீறார்நீல மேனிகாட்டி
வருமாணவ வாரணம்போழ்
அருண்மாசிங்க மாமுருகா—வறிவு—நிமிர்வான்
என்மலம் போழ்நா ளெந்நாள்
நின்மல மலர்வாய் நீதிறந் துரையே. (௪)

இது, " அறிவு " என்னுங் கூனும், " நிமிர்வான் " என்னுந் தனிச்சொல்லும் பெற்று, இரண்டடி யாசிரியச்சுரிதகத்தா லிற்றது.

அடிநடுவி லசைக்கூன் பெற்று வருவது.

மலமேவிய—வுயிர் மசகமுண்டாம்
புலமேவிடு—மெனிற் புன்கொசுகாம்
வலமேவிப—முறின் வயமாவாம்—அதனால்
அளவினின் னடிநா னடையக்
களவினின் னுளத்தே கருதுவே லோயே. (௫)

அடியிறுதி லசைக்கூன் பெற்று வருவது.

ஆகமொன்றுயி ரருள்விழித்திடி—னரு
ளேகநின்றிடு மிருள்விழித்திடி—னிரு
ளாகநின்றிடு மவிர்கலைப்படி—னது
வாகநின்றிடு மன்றேறுவெனு—மறை—அதனால்
கனிமுக மண்டலங் காட்டியிவ்
வெளியனைக் கோடி யென்னுளக் குகனே. (௬)

இந்த ௫, ௬-ஆம் பாட்டுகள் : " அதனால் " என்னுந் தனிச்சொற்பெற்று, இரண்டடி யாசிரியச்சுரிதகத்தா லிற்றன.

---

௩. கதலி=கொடி யென்பதை, " தேறுகொடிவாழைகதலி " எனு முரிச்சொல் நிகண்டா லறிக.

"அடிமுதற்பொருளைத் தானினிது கொண்டு - முடிய நிற்பது கூனென மொழிப" வஞ்சியி னிறுதியு மாகு மதுவே - யசைகூனுகு மென்மனுர் புலவர்" எனும் யா—ரிகையுரைவரு சூத்திரப்படி ந, ஙு, சு ஆம் செய்யுள்களில், ஆதி நடு இறுதியாக வந்த று வருவதில் நடுவு மிறுதியு மசை கூனய் வருதல் சிறப்பு. சீர்கூனய் வரினும் அ-வது சய்யுளில் வந்தவாறு, உகாவிறுதியாகிய நேரீற்றியற்சீராயல்லது வேறு வகையாக வாரா தன வறிக.

மான்பயந்தவோர் மகளும்
வானறுங்கய மகளும்
மேன்படுஞ்சும மிலேந்தென்
மேன்மிருந்தயை மேவா
நீன்மயின்மிசை நின்பாங்—கிலகவே
வருமெழில் கண்டுநான் மகிழுமா
றருளலென் றேநீ யயில்வே லாசே. (எ)

பொன்விசும்பிறை புதல்விதன்னுளம்
இன்புறும்படி யிணையினன்மணம்
புரிவாளெழில் பொலிவொருபரங்
கிரிமீதுயர் கிரிமகளொடு
வாலசந்திர மௌலிமாலயன்
கோலவந்தணர் கோவிபுதருங்—குழுமு
திருமணச் சவையிற் சிறந்த தெய்வப்
பொருளெனத் திகழ்ந்த புலவ
கருணையி னென்மலங் கழீஇ யருளே. (அ)

இவ்விரண்டு செய்யுளும் முறையே "இலகவே" "குழுமு" எனுந் தனிச்சொற் கள் பெற்று, இரண்டடி மூன்றடி யாசிரியச் சுரிதகங்களா னிற்றன.

---

உ. முச்சீரான்வரும்

## சி ந் த டி வ ஞ் சி ப் பா.

ஒருபூரண வறிவெனச்செறி யுணேமுதலாக்
திருவாவண மெனுங்கலேவரை திகழுமண்ட
மணிபோலொளி ராயிரத்தொடு மருவிருகான்
கணியார்சிவ லிங்கமாகவு மருண்மகேச
நிலேமாகண பதியயிற்குக னிர்க்குணஞ்சால்
நலவீசுர னுகவுநறுஞ் சாதாக்கிய

---

க. ஆவணம் - ஆவாணம் என்பதன் மரூஉ ; அரண், மறைவு எனும்பொருள் கொள்ளலாம். இமையோர் = விளக்கமுடையார் ; இமை = விளக்கம்.

மதிலேயுறு சிவனாகவு மரியசத்தியில்
வதியோர்பொரு ளாகவுமதன் வலமிலங்கைக்
தெனுமாவண மிருக்குமேரு ரூபமாகவும்
நனவாறெனு மாவரணத்தி னல்லநிர்க்குணம்
உடையாமிய முகமூர்த்தியு மோங்குமேழில்
நடராசநிர்க் குணமூர்த்தியு நவையிலெட்டில்
உமைநாதனு மாகவுமுடி போதுமொன்பதில்
இமையோர்புக ழின்பவறிவி லிங்கமாகவும்
எணிமானச பூசைபுரியு மேமாப்பெனை
நணுமோநசை தீர்பெருந்தவர் நாயகநவி—னினையே
நம்பெனைக் கைவிடே னாளும்
அம்பிகை மகனா யவிர்சே யவனே. (கூ)

ஓங்காரகப் பொருளுரைத்தெதாவ் வாதெனப்படர்
பூந்தாமரைப் போதனைச்சிறை புகவிடுத்தருள்
ஆஞ்சீருரு வோடிருந்தய னார்கிருத்தியஞ்—செய்த
ஐயநின் னருளா டடியேன்
பையுளி லருட்கடல் படியநன் கருளே. (கO)

[மொழிதிருப்பு]

**வசைகுழமு** மெனையருட்பெரு வாரியெனிலொ
டிசையிதன்மு னெழுசீர்மொழி திருப்பிமொழித—லெங்நாள்
உனைநினை வோர்க்கு வீடு
நனியெளி திலேயோ ஞாங்க ரரசே. (கக)

இங்குவந்த கூ, கO, கக ஆம் பாட்டுகள்: முறையே "னினையே" "செய்த" "எங்நாள்" எனுந் தனிச்சொற்கள் பெற்று, இரண்டடி யாசிரியச் சுரிதகங்களா விற்றன. இறவே, வஞ்சிப்பா : வெள்ளைச் சுரிதகத்தா விறுதென்ப தறிக.

**யா - காரிகையில்,** "வஞ்சிக்கு மூன்றடி * * * யிழிபு" எனக் கூறியிருக்க, இங்குவந்த கக - வது செய்யு ளிரண்டடிச் சிறுமை பெற்றதென்னை யெனின்; "வெண்பா வாசிரியங் கலியே வஞ்சியென நண்பா வுணர்ந்தோர் நுவலுங் காலை—யிரண்டு மூன்று நான்கு மிரண்டுந்—திரண்ட வடியின் சிறுமைக் கெல்லை." என மேலைக் காரிகை யுரைவந்த சூத்திர மிருத்தலின்; இரண்டடிச்சிறுமையும் பெறுமென்க. அடிப்பெருமை யெத்துணைத்தென்னின்; "உரைப்போருள்ளக் கருத்தினளவே பெருமை" என்க. குறளடியானுஞ் சிந்தடியானும் வராநின்ற இருதிறவஞ்சிப்பாவிலும், வஞ்சியுரிச்சீராகிய கனிச்சீரோடு பூச்சீர் நிழற்சீரேனும் பொதுச்சீர் பதினாறும் வருமென்பர் வண்டமிழர்.

வஞ்சிப்பா முற்றிற்று.

---

கO. பையுள் = துன்பம், நோய்.

# வஞ்சிப்பாவினம்.

---

### க. ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவரும் வஞ்சித்தாழிசை.

மாங்காய் புளிமாங்காய்.

ஆறொன்று மணிவேணி
வீறொன்று விழிவங்தோய்
சேறொன்று னடியன்றி
வேறொன்று விழையேனே ;

கவினொன்று கனலாடி
சவியொன்று விழிவங்தோய்
துவரொன்று னடியன்றி
இவணொன்று விழையேனே ;

நீலொன்று நிகழ்கண்டன்
பாலொன்று விழிவங்தோய்
ஓலொன்று னடியன்றி
மேலொன்று விழையேனே. (கஉ)

புளிமாங்காய் புளிமாங்காய்.

பலதுன்பு பயினோய்கள்
வலிகொண்டு வருமேனும்
கலிவென்ற முருகன்கால்
மலரென்று மறவேனே ;

சலமூர்ந்து சமணர்மொய்
மலையஞ்ச வருமேனும்
கலைதந்த குமரன் கால்
மலரென்று மறவேனே ;

உலகுந்தி யொழிமாறெல்
மலிசண்டன் வருமேனும்

---

கஉ. அணி = அழகு, பெருமை.
சேறு = இனிமை.

கங. சலம் = தணியாக் கோபம்.
எல் மலி சண்டன் = இரவுபோலும் உடல் மிகுந்த இயமன்.

மலருந்து மயிலன்கால்
மலரென்று மறவேனே. (கங)

இச்செய்யுளிரண்டும், "குறளடி நான்மையிற் கோவை மூன்றாய்—வருவன வஞ்சித் தாழிசை தனிவரிற்—றுறையென மொழிப துணிந்திசி னோரே" எனும் யாப்பருங்கலச் சூத்திரவழியே வந்தன.

---

## உ. குறளடித்துறையெனும்

## வஞ்சித்துறை.

தேமா கருவிளம்.

வானோர் வழிபடு
கோனே குமரவுன்
தேனார் திருவடி
தானே தனிநிலை. (கச)

தானா தனதன

தீயார் தெறுருக
மாயா மகியலை
நாயே னலமுற
வீயா விறலருள். (கரு)

புளிமா கூவிளம்.

தனத்த தானன

செனித்த சீவருள்
மனத்தின் மாவொளி
மினுக்கும் வேலவ
எனக்கு மீயொளி. (கசு)

தேமா கூவிளம்.

ஓர்ப்பா ருண்ணசை
தீர்த்தாள் சேயிணைப்
பார்ப்பார் பந்தனம்
ஆர்க்கா தென்றறி. (கஎ)

கூவிளம் புளிமா.

எங்கனு மிலகேண்
அங்கர வயில்வேள்
சங்கமர் தடையை
யுங்கொள வுளதோ. (கஅ)

---

கஎ. ஓர்ப்பார்=மனத்திட னுடையார், பொறுமையாள ரென்றும் புகலலாம்.

இந்த ௧௮ - வது செய்யுள்: "தந்தன தனனு" எனுங் குழிப்புப் பெருதோ வெனின்; பெறுமெதன்க. நியாயம்.—"தடையை" எனுஞ் சீரிலுள்ள வீற்றைகாரம், நெடிலேயாயினும் அது: ஆ-ஈ-ஊ-ஏ-ஓ எனு நெடில்களைப்போலப் பாட்டகத்து நீண்டொலியா நீர்த்தாகலின். ஆகவே அத்தடையை யென்பதி னிடையிலுள்ள ஐகாரங் குறுகியவாறே யதனீற்றைகாரமுங் குறுகி, "தனன" எனுங் குழிப்பே பெறும்; அஃதிங்கேலாதென்க. இது போலவே நெடிலாகிய ஔகாரமு மாண்டு நீண்டொலியா நீர்த்தென்க. "மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே - குறிலோ டையௌக் குறுக்கம்" என நன்னூ லுரைக்குமாற்றானும், "ஐகார கைவே லோருங் குறிலியல்" என யா - காரிகை கூறுமாற்றானுஞ் செய்யுளிடையில் வரு மைகாரங் குற்றெழுத்தேபோலக் குறுகி நின்று குறின்மாத்திரையே பெறுமென்றறிக. சில விடங்களில் அவ்வைகாரந் தன்னெடிற்றன்மை குன்றாமல் நேரசையாயு நிற்கும். உதாரணம்: கலியியல் ௧௩௨ ஆஞ் செய்யுண் மூன்றாமடியினது மூன்றாஞ்சீர் போல விந்நூற்கண்ணே பலவாம். இவ்வாறே ஔகாரமுமாம். உதாரணம்: வெள்ளியல் ௧௧௮ ஆம் செய்யுளீற்றடியினது மூன்றாம் நான்காஞ் சீர்கள்போலப் பலவாம். இவ்வௌகார நடை; அவ்வென விழைவதாய், "தை" எனுங் குழிப்பிற் சேர்வதாயுளது. இதுபோல ஆய்தம் புகுந்த மொழியும், "தைய" எனுங் குழிப்பிற் சேருமெனினும், அது குன்றிய வோசைத்தாம்.

கூவிளம் விளம்.

புங்கவர் புகழொரு  
மங்கள மழவிறை  
எங்கவ ரெண்ணினும்  
அங்கெழு தருமறி. (௧௯)

தேமா புளிமா.

அள்ளா ரயிலன்  
புள்ளார் புரிவன்  
கள்ளார் கழலே  
உள்ளா ருவகை. (௨௦)

எஃக னொஃர்பூ  
வெஃகல் விடாருன்  
அஃக லருர்வீ  
டெஃகி யிராரே. (௨௧)

பத்தர் குழாமும்  
சித்தர் குழாமும்

---

௨௧. வெஃகல்=விருப்பு.

எஃகல்=ஏறுதல்; "எஃகலு மெக்கலு மிவர்தலு மேறுதல்" என்பது சே - திவாகரம்.

சத்தி விசாகன்
வித்தை யுளாமே. (உஉ)

இந்த உஉ-வது தூக்கடிகளில், மோனையெழுத்தேனும், மோனையினவெழுத்தேனும் வரவில்லை. இதுபோலவே, பல்லோர் பாடிய வஞ்சித்துறை பலவு நடைபெற்றன வென்பதை யுணர்த்துவானிவ்வொருசெய்யு ளவ்வாறு சொலப்பட்ட தென்க.

புளிமா புளிமா.

கருள்கீழ் கதிர்வேல்
முருகே முனுவோர்
ஒருபே ரொளியை
அருளா லறிவார். (உங)

தேமா தேமா.
தையா தையா

பொல்லார் பொல்லான்
நல்லார் நல்லான்
எல்லே யில்லான்
வல்வேல் வல்லான். (உச)

மண்ணாண் மன்னன்
விண்ணாள் விண்ணன்
கண்ணாள் கண்ணெண்
கண்ணாள் கண்ணன். (உரு)

விளம் காய்.
தனதன தனதானா

ஒருநினை வுடனேயோ
முருகனை முனிஞனீ
கருதிய களிதானே
மருவுமை மனனேகாண். (உசு)

[இதுமுதன் மூன்றுதுறையுங் கோம்பில்லாச்செய்யுள்]

நாரணன் ஞானியரன்
காரணர் கான்முளைதான்
ஆரண னலடியான்
பூரண புங்கவனால். (உஎ)

---

உச. எல்லேம் = பகலும் இரவும்; ஏமம் ஏம் என நின்றது.

உரு. கண்ணாள் = நாமகள். கண் = ஞானக்கண்; எண்கண் = ஒரு கேத்திரம். கண்ணன் = ஞானக்கண்ணன்.

உரைமன முள்ளடங்கா
மறைமுக மாமுருகன்
உரைமன மூக்கமுறப்
பரவுநர் பால்வருவான். (௨௮)

தனதன தனதல்லா

நிதநனி நினைநல்லார்
இதயமு ளிலகுள்ளான்
நதிசுத னலிவில்லான்
மதமுளர் மனநில்லான். (௨௯)

கருவிளங்காய்.

மணியனையான் மலரொளியோன்
துணியனையான் சுடரயிலோன்
பணியுடையார் பழமலமாப்
பிணியடையார் பெரிதடைவார். (௩௦)

கூவிளங்காய்.

தானதன தானதன

[பாடக மடக்கு. (யமகம்)]

நானிலையே ஞானிலையே
வேன்முருகா வேன்முருகா
மேன்மதியாய் மேன்மதியாய்
மான்மருகா மான்மருகா. (௩௧)

இதன்பொருள். நானிலையேல்=நானென்னுமகங்காரம் (என்கண்) இல்லையாயின், ஞானிலையே=ஞானிற்கு நிலையிலேயே, மேன்மதியாய்=மேலானவறிவு வடிவமாகி, வேன்முருகாவேன்=வேலிறையெனப்படு மிளம்பூரண னாவேன், மேல்=இனி, மதியாய்=(என்னெளிமையை) மதித்தருள்வாயாக, முருகா=முருகக்கடவுளே, மான்மரு=மான்மருவும், காமால்=சோலையிலெழுந்தருளிய திருமாலின், மருகா=மருமகனே. என்றவாறு.

தேமாங்காய் கூவிளம். ஈறு : தேமா.

மின்செய்யும் வீட்டினை
நின்செய்கை நீட்டுமவ்
வின்செய்கை யின்றெனில்
என்செய்வ னீங்கே. (௩௨)

கூவிளங்காய் புளிமா.

அங்கிளிநே ரதர
மங்கையர்மா மயலால்
இங்கலையே னினியாள்
சங்கரர்தாழ் தகையே. (௩௩)

தானதன தனன

காசுபதி கருதேன்
நாசரொடு நடவேன்
நேசமொடு நினையாய்
ஆசிலயி லரசே. (௩௪)

தந்ததன தனன

பந்தமறு படநீ
வந்ததனை மறவேன்
அந்தநிலை யளியாய்
நந்திபுகழ் நலமே. (௩௫)

கடைச்சீர் : தேமா.

மெய்த்துயர மேவி
எய்க்கவினி யேவேல்
மைக்கணெழில் வள்ளி
கைப்பிடித்த கண்ணே. (௩௬)

தேமாங்கனி புளிமா.

நாடாண்டிடு நயமும்
காடாண்டிடு கயமும்
ஆடாண்டவ னருள்வேள்
வீடாண்டவர் விழையார். (௩௭)

தேமாங்கனி கூவிளம்.

வேலேந்துசெவ் வேளருள்
நூலோர்ந்தொரு நூனமில்
சீலார்ந்தவிர் தேசினர்க்
காலாந்தகர் காய்வரோ. (௩௮)

---

௩௭. கயம் = குறைபாடு. நிகண்டு காண்க.

தேமாங்கனி கூவிளங்காய்.

தானத்தன தாந்தனனா

பூமாப்பிறை போம்படியோர்
தூமாப்பிணை தோன்றிடுமேல்
ஏமாப்பில கேண்மைகவே
ளாமாப்பிளை யாண்டிடுமே.　　　　　　　　　　(௩௯)

---

### ௩. சிந்தடிவிருத்தமெனும்

### வஞ்சிவிருத்தம்.

மா மா விளம்.

துன்பு கண்டு தொழுபவர்
அன்ப ரல்ல ரயின்முதால்
அன்பு கண்டு னடிதொழும்
அன்ப ரென்று மன்பரே.　　　　　　　　　　(௪0)

எரியிற் புழுவி லாமைபோல்
பரிவுப் பெரியர் பாவிரா
துரிதத் துயர்கள் சூழ்வுறூர்
தெரிதற் கரிய சேயவா.　　　　　　　　　　(௪௧)

சிறப்பு ளார்கள் செருக்கெலாம்
இறப்பி லாவு னிணைப்பதம்
குறித்து நோற்ற குறிப்பலோ
பொறிச்ச மீக புரத்தனே.　　　　　　　　　　(௪௨)

மா கூவிளம் கூவிளம்.

பிணிசெய் வாக்கியும் பேதியும்
அணிசெய் தின்பத வார்வமார்
குணியை யென்செயுங் கோதிலாத்
தணிகை தங்கிய சாமியே.　　　　　　　　　　(௪௩)

தான தந்தன தானனா

வாரு டம்பிடி வாழ்கைவேள்
தாள்ப ணிந்தவ ரேசதா

---

௩௯. இணை = ஆசை. நிகண்டு காண்க.

கோள்க டிந்தவர் கோணைவாழ்
நாள்வ ளர்ந்தவர் ஞாலமேல். (சச)

இந்த சச-வது செய்யுளடி : முதலிரண்டு சீர்களை யொன்றுபடுத்துக் கூவிளங்கனி யெனக்கொள்ளின் ; வஞ்சித்துறையுமாம்.

தான தானன தானனா

[அந்தாதித்தொடை நான்காரைச்சக்கரம்]

வால மேயவ மாலவா
வால மாமுனி பாலவா
வால பாவல வேலவா
வால வேமளி மேலவா. (சரு)

இதுபோலவரு சக்கரச்செய்யுள், பின்வரு சுழிகுளம், சருப்பதோபத்திரமெனும் மிறைக்கவிகளை : எதுகையின்றியும் ; காதைகரப்பு, கோமூத்திரியென்பவற்றை : (அடிதோறு முறவேண்டிய) மோனையெழுத்தேனு மவ்வினவெழுத்தேனுமின்றியும், எதுகையின்றியுஞ் சிலர் பாமோ றிந்நூலாசிரியர் பாடாது, அவ்வெதுகை மோனைக்குரிய வெழுத்துக்கள் பொருந்தப்பாடுதலை யிவ்வியற்கண்ணேகாண்க. அன்றி, சுழிகுளத்தை யிடைவிட்டு வாசிப்பதுங் குறிப்புகளு மதிக மெனவு முணர்க.

இதன்பொருள். வால் அம் மேயவ=மிகுந்த அழகுமேவியவனே, மால் அவாவு= திருமா லாசைப்படும், ஆலமாமுனி பால=ஆலடியிலிருந்த மகாமுனியாகிய பரமசிவ னுடைய புதல்வனே, வா=வருவாயாக, வால=இளநலமுடையானே, பாவல=புல வனே, வேலவா=வேலுடையானே, வால=தூயவனே, ஏமம் அளி=(எனக்கு) இன்ப மீந்தருள்வாயாக, மேலவா=பெரியோனே. என்றவாறு. ஏமம் ஏமென நின்றது.

சச. கோணை=அழிவின்மை.

கருவிளம் தேமா தேமா.

தனதன தானா தானா

[ஒற்றிலாக்கூழ்துளம்]

மதிமதி மாமா வாவா
திதிதிதி சேயே யோவா
மதியமு மாசே யேமா
திதிமுரு காமா சேமா. (௪௬)

இதில், மேலிருந்து கீழிழிந்து கீழிருந்து மேலேறி புச்சரித்தாலும், புறநின்றவக் துண்முடிய வுச்சரித்தாலும் மேற்செய்யுளேயாமா றறிக. ஐந்துவகையாகச் சுழித்துச் சேறலை யிதன்கண்ணறியலாமன்றோ.

இ-ள். மதிமதி = அறிவுக்கறிவே, மாமா = அழகுக்கழகே, வாவா = வருவாயாக வருவாயாக, திதி திதி = (என்னை) நிலைநிறுத்துவாயாக நிலைநிறுத்துவாயாக, சேயே = இளமைப்பருவமுடையானே, ஓயா = கெடாத, மதி அம் உமா = அறிவு மழகுமுடைய வுமாதேவியின், சேயே = மகனே, மா திதி முருகா = பெரிய காப்புத்தொழிலுடைய முருகனென்னும் திருநாமத்தோனே, மா சேமா = மகாசேமமுடையானே. எ-று.

புளிமாங்கனி கூவிளங்காய் தேமா.

[மாத்திரைவருத்தனம். (மாத்திரைப் பெருக்கம்)]

ஒருமாத்திரை யேறுகுகை யொப்பார்
ஒருமாத்திரை யேறிடுசெய் யுள்ளின்
ஒருமாத்திரை யேறிடொதி யொப்பார்
ஒருமாத்திரை யேறுதப முண்ணார். (௪௭)

இதில், ஒருமாத்திரை யேறுகுகை = கூகை. இது பகற்குருடு. ஒருமாத்திரை யேறிடு செய் = சேய். இது குமாரக்கடவுள். ஒருமாத்திரை யேறிடொதி = ஓதி. இஃதிரவும் பகலுங் கண்டெரி பூனை. ஒருமாத்திரையேறுதபம் = தாபம். இது துன்பம். இவற்றை யேனைச்சொற்களோ டிணைத்துப் பார்க்கின்; பெத்தர்நிலை, ஜீவன் முத்தர்நிலை யித் தன்மையவெனப் பொருளாம்.

காய் காய் மா.

[அக்கரவருத்தனம். (எழுத்துப் பெருக்கம்)]

துட்டர்க்கு முருகிருக்கை துணைவி
தட்டர்க்கும் படையிவற்றின் றலைமுன்
விட்டொவ்வோ ரெழுத்துமரு விடச்சேர்த்
திட்டாற்கை வகையுவகை யெனவாம். (சஅ)

இ-ள். தீமையைப் பிளக்கத்தக்க முருகக்கடவுட் கிருப்பிடமாகிய கைலை, துணைவியாகிய வள்ளி, குற்றங்கடி படையாகிய உடம்பிடி யெனப்படுமிவற்றின் தலையெழுத்தொழிந்த மற்றைய வெழுத்துக்களை விலக்கி யத்தலை யெழுத்துக்களை யொரோவொன்றாக முன்சேர்த்தால், கை, வகை, உவகை யெனத் தனித்தனி பொருடரு சொல்லாம். எ-று. கை=படையுறுப்பு, வகை=வாகையெனும் வெற்றி, உவகை=களிப்பு எனவாம். [உடம்பிடி=வேல்]

[மாத்திரைச் சுருக்கம்.]

சுருதியொரு மாத்திரைதான் சுருங்கின்
பெருமுருக னுயுதமாம் பெயர்த்தும்
சுருதியொரு மாத்திரைதான் சுருங்கின்
பெருமுருக னுயுதமாம் பெயர்த்தும். (சகூ)

இதில், முதலாமடியில் வருஞ்சுருதி=சாத்திரம். இஃதொரு மாத்திரை சுருங்கினுற் சத்திரமாம். * சத்திரம்=வேல். இரண்டாமடியில் வருஞ்சுருதி=ஆரணம். இஃதொருமாத்திரை சுருங்கினுல் அரணமாம். † அரணம்=வேல்.

உயர்வள்ள னகரநொடி யொருவின்
அயிலைய னடியிலணி யணியாம்
வியனுள்ள விறைவைநொடி விலகின்
நயமுள்ள வொளிமுருக னடமாம். (ருo)

உயர்வள்ளல்நகரம்=மேன்மையுடைய (இருபத்தொருவள்ளல்களி லொருவனுகிய) பாரியெனும் வள்ளலின் ஊர். இதுபாரிபுரம். ஈதொருமாத்திரை நீங்குழிப் பரிபுரமாம். பரிபுரம்=சிலம்பு. இறைவை=கூடை. ஈதொருமாத்திரை நீங்குழிக் குடையாம். ஈதொருகூத்து. நொடி=மாத்திரை. வியல்=அகலம். இவை பொருந்தப் பொருள் கொள்க. இறைவை, கூடை, புட்டில் என்பன ஒருபொருட் கிளவிகள்.

திருவருள் விழைவார் யார்க்கு மாங்காங் கனுக்கிரகம் புரிபொருட்டுச் சிலம்பு தோறுந் திருக்கோவில்கொண் டேகபரிபூரணஞான வியாபகப்பொருளா யிராநின்ற பகவானுகிய ஸ்ரீ சுப்பிரமணிய பரமாத்துமாவினது திருவடிமலரின்கண்ணே சிலம்

சஅ. துட்டம் (दुष्ट)=தீமை; யோகம் யோகு எனவாயவாறு துட்டம் "துட்டு" எனவாயது.

* "சத்திரம்" ஆயுதம் என்பது (शस्त्रमायुध) சஸ்த்ரமாயுத என அமரஸிம்ஹம் கூறுதலாலறியப்படுகின்றது. இவ்வாயுதம் ஈண்டு வழுத்தப்படு குமார பகவானுக் குரிமைப்படுதலின் "வேல்" எனக் கொள்ளப்பட்டதென்க. "சத்திர மென்ப செங்கைத் தலம் விடாப் படை" என்றார் சூடாமணி நிகண்டினர்.

† அரணம்=வேல் என்பது "சத்தி யெஃக முடம்பிடி குந்தம் விட்டே றாணம்" எனுஞ் சேந்தன் திவாகரச் சூத்திரத்தானு மறியப்படுமே

பெனும் பரிபுரமுண்டென்பதை, "அரைவட மலம்பு கிங்கிணி பரிபுர நெருங்கு தண்டைக ளணிமணி சதங்கை கொஞ்சிட மயின்மீதே" எனும் அருணகிரிநாதசுவாமிகளி னமுதவாக்கானு மறிக.

[அக்கரச்சுதகம். (எழுத்துச்சுருக்கம்)]

அருவேல னணியொருபு வனமும்
பொருவேலன் வலவனுமம் புதமும்
ஒருசாரி யையுமினை முரைக்கின்
மருநீப வநம்பவநம் வநநம். (ருக)

அருவேலனணியொருபுவனம் = கடம்புவனம். இது நீபவநம். பொருவேலன்வலவன் = போர்வேலாயுதக்கடவுளுடைய இரதசாரதி (எனுங்காற்று). இது பவநம். அம்புதம் = நீர். இது வநம். ஒருசாரியை = நம். இவற்றுள் நீபவநம் எனுஞ்சொல்லில் நீமுதலொவ்வோரெழுத்து நீங்குழி மற்றைய பவநம், வநம், நம்மெனு மூன்று சொல்லும் வருமா றறிக. நம்மெனு மந்தத்தை, அருவேலனெனு மாதியோடு கூட்டி நம்முடைய அருமை வேலனெனப் பொருள் கோடலுமொன்று. சாரியைக்கு உதாரணம்: "எல்லா நம்மையும்" [ஒருபு = கடம்பு. மரு = வாசனை.]

தானனை தானனை தானை
[சருப்பதோபத்திரம். மாலைமாற்று]

தாதாமா வேவேமா தாதா
தாதாதா தாதாதா தாதா
மாதாசே யாயாசே தாமா
வேதாயா மீமீயா தாவே. (ருஉ)

தா தா
தா தா
மா மா
தா வே வே தா
தா தா
தா தா
மா தா தா மா
தா தா
சே சே
வே யா யா வே
தா தா
யா யா
மீ மீ
மீ மீ
யா யா
தா தா
வே யா யா வே
சே சே
தா தா
மா தா தா மா
தா தா
தா தா
தா வே வே தா
மா மா
தா தா
தா தா

இந்த ருஉ-வது செய்யுளிலுள்ள காய்ச்சீர்களைக்கலந்து மாஞ்சீர்களாகப் பிரிக்கின் அளவடிக் கலிவிருத்தமுமாம்.

இதனில், மேலிருந்து கீழுங் கீழிருந்து மேலும் ஆதிமுத லந்தமும் அந்தமுத லாதியுமாக மாறிமாறி நான்குமுகத்து வாசித்தானு மேற்செய்யுளேயாமா றறிக. மாலை மாற்றில் வருகின்ற பங்கியை முதன் மண்டலத்திற் காண்க.

இ-ள். தாதா=ஈகையாளனே, மா=(சூரபதுமனாகிய) மாமரத்தை, ஏவு=(முடிவுக்கு) ஏவும், ஏமா=இயமனானவனே, தாதா=பிரமாவானவனே, தாதா தாதா=(நிறைவினால்) பிரமனுடைய தந்தையானவனே, தாதா தாதா=ஈகையாளர்க்கீகையாளனே, மாதா=பார்வதியம்மைக்கு, சேய்=மகனாகிய சேயென்னுந் திருநாமத்தோனே, ஆயா=ஆயமுடையானே, சேதா=நற்பசுவினுமுள்ளானே, மாவே தா=(எனக்குச்) செல்வமே கொடுத்தருள், யமீ=முனிவனே, மீயாதா=மேலான ஆன்மாவே. எ-று. ஏகாரம் - ஈற்றசை. யமி யாமியென்றாயது நீட்டும்வழி நீட்டல். [பசு=ஆன்]

[வினாவுத்தரம்]

சமரமுதர் நாமமெது சாகா
விமலரணி பூணெதுமின் வில்லென்
குமரகுரு தாசனிறை கோயார்
அமரர்பணி சோதிமுரு கையன். (ருக)

இதில், ஈற்றடி யுத்தரம். ஏனையடி வினா.

கருவிளம் கருவிளம் காய்.

எழுத்தரி லொழித்திட வேவுரையென்
கழுத்தினில் வளைத்திடு கலனெவனார்
கொழுத்தவர் திருத்தலை குவிப்பதெவன்
செழிப்புயர் குகற்குள திருத்தணிகை. (ருச)

இதில், ஈற்றுச்சீர் உத்தரம். எழுத்தரில்=எழுத்துக்குற்றம்.

மா கருவிளம் காய்.

தந்தத் தனதன தந்தானா

பந்தக் கடமுறை பண்பீரே
சந்தக் கடமதி தந்தேயாள்
எந்தக் கடவுளு மென்கோள்போழ்
கந்தக் கடவுளை மிஞ்சாதே. (ருரு)

தனனா தனந்தன தானதனா

[கூடசதுக்கம்]

நீதியா ருடம்பிடி நூபுரவேள்
வதியோ மணாந்திரு மாய்முனரே

நிதியார் கொளுந்தகை நீளமெலாம்
மதியா ரணைந்தவர் மாறுடரே. (ருசு)

இதில், ஈற்றடிச்சொல்லனைத்தும் ஏனைய மூன்றடியுள்ளுஞ் சொல்லாகாம லெழுத்தாகக் கலந்துநிற்குமாறு காண்க.

கூவிளங்காய் புளிமாங்காய் கூவிளம்.

[காதைகரப்பு]

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வா | ள | ர | சு | கு | ம | ரா | வோ | ம | ங் | கு | கா |
| வா | ள | ரு | சு | க | ந் | லா | வு | ம | ங் | க | ளா |
| வா | ள | சு | ர | வி | ப | லா | க | ம | ன் | வி | பூ |
| வா | ள | ர | வி | த | ழி | மே | னி | ம | ஞ் | ச | கா. |

(ருஎ)

சமமே தரவா
விமலா விசுவா
கமலா கருவா
குமரா குரவா.

இது வஞ்சித்துறை.

இந்த ருஎ-வது செய்யுளில், ஈற்றுமொழியாகிய காவுக்கு முதலெழுத்துத் தொடங்கி யொவ்வோரெழுத் திடையிட்டு வாசிக்கப் பின்னுள்ள மோனை பிழையா ஒற்றிலாவஞ்சித் துறை யாவதறிக.

முற்செய்யுட்பொருள். வாளரசு = வீரவாளேந்து மரசே, குமரா = குமரனென்னுந் திருநாமத்தோனே, ஓம் = பிரணவப்பொருளே, அம்குகா = அழகிய குகனென்னுந் திருநாமத்தோனே, வாள் = ஒளியே, அரு = அருவே, சுகநிலாவுமங்களா = இன்பமயமாகத் திகழு மங்களமூர்த்தியே, வாளசுரவிபலா = வாளேந்து மசுரர் கருதுபலனுக்கு விரோதமானவனே, கம்மன் = பிரமனுக்கிறைவனே, விபூ = நிறைவானவனே, வாளரவிதழி மேனி = வாள்போன்ற அரவமுங் கொன்றையுமணி மேனியனாகிய பரமசிவனுக்கு, மஞ்ச = மகனே, கா = (என்னைக்) காத்தருள்வாயாக. எ - று. ஓம் ஒம்மென்றுனது குறுக்கும்வழியே குறுக்கலுற்றது.

புளிமா கூவிளங்காய் புளிமா.

தனன தானதன தனன

[அந்தாதிமடக்கு. ஒற்றிலாச்செய்யுள்]

முருகு லாநறிய முருகு
முருகு கோடியென முருகு

---

ருஎ. மஞ்சு = இளமை ஆகலின் அதனை யென்றுமுடைய சிவகுமாரன் "மஞ்ச" என் விளிக்கப்பட்டனன். மைந்தனென்னும் பெயரிலே சிறுவன், எச்சம், சேய், மூளையெனும் பெயர்களைப் பிங்கலந்தை கூறுதலானும் மஞ்சனென்பது தானே பெறப் படுகின்றது.

முருகு மூசுலக முருகு
முருகு ரூதுமன முருகு. (ருஅ)

இ - ள். முருகுலாம்=திருவிழாவிலுலாவும், நறிய=நல்ல, முருகு=இளமைப் பருவமுடைய, முருகு=முருகென்னும் திருப்பெயருடையாய், கோடியென=(என்னைக்) கொள்வாயாக வென்று, முருகு=வாசனையும், முருகு=அழகும், மூசுலகும்=மொய்க்கின்ற வுலகத்தில், உருகும் உருகு=துன்பி னுருகுகின்ற பிறப்பானது, உரூது=(இன்னும்) பொருந்தாமல், மனம் உருகு=மனமே யுருகுவாயாக. எ - று. வாதம் வாதென் றுவதுபோல, உருகம் உருகென்றுயது. [உருகம்=பிறப்பு.]

தேமா தேமா தேமாங்காய்.

[அந்தாதித்தொடைத் தமருகபந்தம்]

**வேலா வீயா வீராகோ**
**கோலா கோதே ருராமா**
**மாலா வேணை மாமாகா**
**காலா ளாதே காகாவே.** (ருகூ)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| கோ | | | | | | கா |
| ரா | லா | | | | லா | மா |
| வீ | | கோ | | ளா | | மா |
| யா | | | தே | | | ணை |
| வீ | | கா | | ரு | | வே |
| லா | கா | | | | ரா | லா |
| வே | | | | | | மா |

[பகரவிகற்ப மடக்கு]

பப்புப் புப்பாப் பப்புப்பூப்
பப்பப் புப்ப பாப்பாப்பை
பப்பப் புப்பூப் பாப்பாப்பிப்
பப்புப் பாப்பொப் பொப்பொப்பே. (கூ0)

இ - ள். பம்பு உப்பு = ஆரவாரிக்கின்ற கடலானது, உப்பா = அதிகப்படாத, பப்பு பூ=பரப்பாகிய பூமிக்கும், பம்பு அப்பு=பரவு நீரையுடைய, ப - மேகத்திற்கும், பாழி பாப்பு=பெரும்பாம்பாகிய சேடனுக்கும், ஐ=அரசனுயுள்ளானே, பப்பு அப்பு பூ=பொலிவுடைய கங்கையில் வந்தவனே, பா பா=(செசவு)பாப்போற் செய்யப்படு பாட்டுக்கு, அப்பு=அப்பனே, இப் பப்புப்பு=இந்தப் பப்புப்பு எனத் தொடங்கும், ஆப்பு=பாட்டை, ஒப்புஒப்புஒப்பு=ஒப்புக்கொள் ஒப்புக்கொள் ஒப்புக்கொள். எ - று. ஏ - ஈற்றசை. பம்பு பப்பு எனவாதல் வலிக்கும்வழி வலித்தல். பாழி—பா எனக் கடைகுறைந்தது. பாப்பா அப்பு என்பது பாப்பாப்பு என மருவிற்று. அப்பென்பது அப்பனென்பதன் குறுக்கம். யாப்பு ஆப்பென மருவிற்று. இது யானையை ஆனையென் பதுபோலும். மேகமெனும் பொருளிற் போந்த ப, "ஹ ஃ" என்னும் வடசொல்லே.

விளம் விளம் மா.

தந்தன தானன தன்ன

[ஏகபாதம்]

மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே. (கூக)

இ - ள். மங்கு = (அறிவு) ஒளிமங்கும், அலம் ஈ = சஞ்சலந் தராநின்ற, மாயில் = மாயும்படியான வீட்டில், மன்னேம் = சேர்ந்திரோம், அம்கலம் = அழகிய வாயுதங்களை, ஈரும் அயில் = பிளக்கத்தக்க வேலிற்கும், மன் = பெருமைக்கும், மங்கலம் = சுபகாரியத்திற்கும், மீமயில் = ஆகாயத்திற்செல்லுமயிலுக்கும், மன்னே = அரசனே, மங்கலம் = சுபத்தை, ஈ = (எங்களுக்கு) ஈந்தருள்வாயாக, மயில்மன்னே = திருமயிலத்தி லெழுந்தருளி யிருக்கு மிறைவனே. எ - று. மாயில் மயிலென விகாரமாயிற்று. ஈருமென்பது ஈமென மரீஇயிற்று. ஏ - அசை.

தானன தானன தான

[கோமூத்திரி]

ஞூரணை யீரதி ஞூரா
சாரளி யீவதி தாரா
பாரரி யேறிடு பாலா
சேரளி யேகொடு சீலா. (கூஉ)

இது: கோமூத்திரம்போல மேலுங் கீழு மொவ்வோரெழுத் திடையிட்டு வாசிக்குமிடத்து மேற்செய்யுளாயே வருவது காண்க.

---

கூஉ. சார்அளி ஈ = சார்ந்துள்ள தேன்வண்டு.
வதிதாரா = தங்கிய மாலையையுடையாய்.
பார்அரி = பாரப்புடையதேர்.

புரச்சகத் ததிகழும் பொருவில்
பாத்திலற் பழுமனம் பதிக்குந்
தாத்தரைத் தணிந்தவ தமரென்
றுரைப்பரென் னுயிர்க்குக னுவப்போர். (௬௩)

பூதமறு சகத்திடை முழுதும்
பதிமன முடையரைப் பரமன்
சுதனெனு முருகனைத் தொடர்வோர்
அதமரு ளதமரென் றறைவார். (௬௪)

சகத்திலும் பாத்திலுஞ் சமமாய்
அகத்தினை நிறுத்துந ரணிசால்
இகத்துமத் திமரென வெழிலோம்
முகத்திறை யடியவர் மொழிவார். (௬௫)

கத்தனன் பினிலதி கமுமா
பத்தனை யுலகிலற் பமுமாஞ்
சித்தரைக் குகனருடிளைப்போர்
உத்தம ரெனவிதந் துரைப்பார். (௬௬)

சூரிருஞ் சகமனந் தொலைத்தோர்
கூரிறை முழுதுமுள் குநரைச்
சாருமுத் தமருளுத் தமரென்
பாருர வயிலனற் பரிவோர். (௬௭)

தனதுரை தருக்கநில் லாஞான்
றனுபவ மேகமென் றவலம்
பனுமுயிர் பாழுயி ரதன்சொல்
எனையென செயுமயி லிறையே. (௬௮)

கண்ணிணை மூடிடு கான்மா
மண்ணெதிர் மறைவது போலே
உண்ணிலை யுளமறை விலுமென்
றெண்ணுவ தியைபயி லிறையே. (௬௯)

இருவிழி யிலர்க்கிரு ளொன்றே
தெரிவது போன்மனஞ் சேரா
அருளுளர்க் கெங்கணு மறிவாத்
தெரியும தேசிவ சேய்நீ. (௭0)

இருபொரு ளொருபொரு ளெனவே
பிரிவினை பேசுந ரெவரும்
அருணிலை யத்துவி தமெனத்
தெரியனு பவமிலர் சேயே. (௭௧)

நித்தனு நித்தனை நீங்காச்
சித்தனு மொத்தது தேற்ற
அத்துவி தப்பய னுமென்
றத்தவு னற்பின ரார்வார். (௭௨)

செவ்விய சேயுனை யேசேர்
இவ்வனு பவமில ரிறைநூல்
எவ்வள வுணரினு மீங்கே
அவ்வனு பவமுள ராகார். (௭௩)

எங்நெறி வருநரு மிறையாம்
உன்னிறை வனுபவ முளரேல்
அன்னவ ருரியரஃ தில்லார்
அன்னிய ரெற்கயி லரசே. (௭௪)

வினையள வாயுயிர் மேவும்
அனுபவ மும்பல வாமே
உனையுற லவைகளி லுயர்வென்
றனகரெண் ணுவரரு ளயிலோய். (௭௫)

மா விளம் மா.

மதலை போல்வரு மாவேல்
முதலை நேரொரு மோகர்
முதலை வாய்ச்சியர் மூவாத்
திதலை மார்ப்புடை தேடார். (௭௬)

அளியு மூங்கொடை யான்வேல்
ஒளிர்கை யெக்தையுள் ளூரன்
களிய ணைந்தகண் ணார்தாம்
விளியி னும்வில காதே. (௭௭)

கிரிக்கா னவர்மகள் கிளைத்தோள்
உரித்தோ டணைகுக னுவப்பால்

---

௭௮. இறைவன் தனது திருவுருவைக்காட்டுகின்ற ஞான்று பெரிதும் அஞ்சி வணங்கி நிற்கும் வள்ளிநாயகியை நோக்கி, "அஞ்சேல்" என்னுந் திருவார்த்தையை வெளியிட்டு நாயகியின் மூங்கிலனைய தோள்தழுவி ஆதரவுகாட்டுகின்ற பெருமானென்பார், "கிரிக்கானவர் மகள் கிளைத்தோள் உரித்தோடணை குகன்" என்றார். உரித்தெனும் பிரயோகம் என்னுடைய சத்தியெனும் உரிமைகாட்டி நின்றதைக் காட்டுவதாயிற்றால்.

வரித்தார் மதனையை மரத்தான்
எரித்தாங் கெனதிட ரெரிப்பான். (எஅ)

தனத்தாந் தனதன தனத்தா

அருட்பாங் குளியென வரிப்பா
டிருப்போங் கறுமுக னெழிற்சூல்
தரித்தோங் கிறைதிரி தலத்தார்
எரித்தாங் கெனதிட ரெரிப்பான். (எகூ)

தனன தானன தையா

இதய நாவுள ரெள்ளா
உதய னூபுர முள்ளான்
மதன மேவெனுண் மல்கா
விதனம் யாவையும் வெல்வான். (அ0)

தந்த தந்தனத் தான

துங்க வின்பருட் சோதி
கங்கை யங்கரைக் காசி
தங்கு கந்தனற் சார்பின்
இங்கு மூன்றிடெற் கீயும். (அக)

தேமா புளிமா தேமா.

[இதுமுதலிரண்டுவிருத்தமும், ஒற்றிலாஇதழ்குவிபாட்டு]

நோவ றுபவ நூறு
தூவ ருளொரு தூவி
மேவு குருகு மீது
கோவொ டுவரு கோவே. (அஉ

தேமாங்காய் தேமா தேமா.

தானான தானா தானா

பூமேவெ னோவே போமா
றோமாகு வேலோ யோவா
மாமேவு கோபூ மாவா
வாமா சொரூபா வாவா. (அ௩

கருவிளங்காய் புளிமா தேமா.

தனந்தனன தனன தந்தா

மனங்குழுகின் மகிமை யுண்டே
மனம்பெருகின் மகிமை யின்றே

மனந்துவளின் வதித லின்றே
எனுங்குமா னிசைக ணம்பே. (அச)

இம் முச்சீரடி விருத்தங்கள்: "சிந்தடி நான்காய் வருவன வஞ்சி—யெஞ்ச விருத்த மென்மனார் புலவர்" எனும் யாப்பருங்கலச் சூத்திரவழியே வந்தன. இச் செய்யுளடிகளி னிறுதிச்சீர்க்கண் மோனையெழுத்து, அல்ல ததனினவெழுத்து வருவது சிறப்பு.

வஞ்சிப்பாவின முற்றிற்று.

ச - வது வஞ்சியியன் முற்றிற்று.

ஆக இயல் நான்கினும் போந்த திருச்செய்யுள் - ருகூக.

---

## வாயுறைவாழ்த்துமருட்பா.

---

வெண்பாமுதலு மாசிரிய மீறுமாய் வருவது.

கடல்கவி மண்டிணிந்த காசினியீர் கேண்மின்
உடல்பொருள் கல்வியுத்தி யோக மரும்பூண்
திடமுடை யில்லமகார் சேர்சுற்ற நட்டார்
படைபாய்மா மொய்யென் பனவெல்லா நில்லா
ரு. ஏதனு லெனிற்பண் டிழைத்தவினைக் குள்ள
விதியா விளைந்த விதிகொடுதென் னுடர்
அதிதி விரம்வருகா லன்னவரை நீயிர்
மதியா திருந்துய்ய மாட்டீர்—அதனல்
கடிகெழு புகழ்முனி கடவுளாஞ் சேயவற்
கடிமையாய் நின்மினென் னுறையைப்
பிடிமினஃ தழியாப் பெரும்பயன் றருமே. (க)

இது மெய்ப்பொருள் கூறினமையால் வாயுறைவாழ்த்து மருட்பா. பிறக.

"செயிர்தீர் செய்யு டெரியுங் காலை—யடியி னீட்டத் தழகுபெற் றியலு—மோரடி யானு மொரோவிடத் தியலு—மவைதாம்—பாட்டுரை நூலே மந்திரம் பிசியே—முதுசொல் லங்கதம் வாழ்த்தொடு பிறவு—மாகுக வென்ப வறிந்திசி னோரே" என யாப்பருங்கல விருத்தியுரைவரு சூத்திரப்படி, பாட்டுரையும், நூலும், மந்திரமும், சந்தேக பிசிதமும், முதுசொல்லும், அங்கதமும், வாழ்த்துமெனு மிவை யோரடியானும் பலவடியானு நடக்குமென வறிக.

அறிஞரும் புராண கவிஞரும் பாடிய பாக்களிலும் பாடபொக்களிலும் சீர், தளை, அடி, தொடை, வரையறுக்கப்பட்ட பா பாவின மென்பன (யாப்பின் திறமறிதற்குப்

---

க. பாய்மா=குதிரை. மொய்=யானை.

பேரிலக்கியமா யமைக்கப்பட்ட) விக்கண்டத்துப் பாக்கண்மூல மெடுத்துக்காட்டிய பெற்றியிற்றிரிந்து மிக்குங் குறைந்தும் வரக்காணின்; அவற்றை யொருபுடை யொப்புமை நோக்கி யொன்றன்பாற்படுத்து வழங்கப்படுமெனக் கொள்க. என்னை? "ஒப்பும்" என யா - காரிகையொழிபியல் அ - வது பாட்டி லுளதாகலின்.

வெள்ளியலாதி நான்கியல்கொண்ட இவ்விரண்டாங் கண்டத்துத் திருச்செய்யுள் ஐந்நூற்று முப்பத்தொன்றுள் ஆசிரிய வியற்கண் "தத்தாந்தனன" ஆதி சந்தக்குழிப்புப்பெற்ற செய்யுள் - ௫௦, கலியியற்கண் "தனதனனு" ஆதி சந்தக்குழிப்புப்பெற்ற செய்யுள் - ௩௩, வஞ்சியியற்கண் "தானு" ஆதி சந்தக்குழிப்புப்பெற்ற செய்யுள் - ௨௩ ஆகச் சந்தக்குழிப்புச்செய்யுள்: ௧௦௬ - எனவும், செய்யுள்களின்மேல் வரையப்பட்ட வாய்பாடுகளும், குழிப்புகளு மொன்றுக்கொன்று பேதமெனவு மறிக.

ஆ திருச்செய்யுள் - ௫௩௨.

பல்சந்தப்பரிமளமாகிய

## இரண்டாங்கண்டம் முற்றிற்று.

ஆ கண்டம் உ - க்குத் திருப்பாடல் - ௧௧௩௩.

## திருவலங்கற்றிரட்டு முற்றிற்று.

---

குமரகுருபரன் றிருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

குமாரகுருப்யோநம:

# ஸ்ரீமத் - குமரகுருதாசசுவாமிகள்

## திருத்தலதரிசனகாலங்களிற்பாடியருளிய

## கட்டளைக்கலித்துறைகள்.

---

### திருவனந்தசயனம்.

சீராரு நல்வி சயவாண்டு கன்னியர் திங்கண்மதி
யோராரு முற்பக்க வேகா தசியி லெழில்வளஞ்சே
ரூரா மனந்த சயனத்தி லென்னிறை யோன்கடப்பந்
தாரானம் மானது பள்ளிகண் டேனற் றருக்குறவே. (௧)

### திருக்கன்னியாகுமரி.

அலைமேவு பவ்வ வளநீடு மங்கன்னி யாகுமரி
நிலைமேவு சத்தி தனையென்னை யாளொரு நேயமுள்ள
விலைவேல னென்று விசயதெய் வக்கன்னி யென்னுமதிக்
கலைமேவு பூரணை நான்கண் டிறைஞ்சிய காலமன்றே. (௨)

### திருச்சுசீந்திரம்.

பத்தர் குழாஞ்சூழ் சுசீந்திரம் வாழுமை பங்கனைமா
சித்தர் குழாஞ்சூழ் குமர னெனக்கரு டேவெனவென்
புத்தி விடாது நினைந்து கனிந்து புகழவுற்ற
வித்தின நற்றின மன்றே யெனக்கு ளிருப்பவனே. (௩)

### திருச்செந்தி.

தண்டடச் சிந்துமுத் தங்கொழிக் கின்ற தகைமையுட
னண்டருக் கின்புள்ள தாயவிர் செந்தினல் லாலயத்துட்
டொண்டரைக் கொள்ள விளங்குமெம் மான்குகன் றாவடியைக்
கண்டவர்க் காநந்தம் பொங்குமென் கண்களுங் கண்டனவே. (௪)

தேவர் சிகாமணி சித்தர் சிகாமணி தெள்ளறிவுத்
தூவர் சிகாமணி யோகர் சிகாமணி தோமில்கவி
நாவர் சிகாமணி நாதர் சிகாமணி நண்ணுமென்னுண்
மேவு சிகாமணி செந்தியில் வாழ்வடி வேலவனே. (௫)

### திருநெல்லைத்தளி.

எல்லையி லாவொரு சோதி சரவணத் தெம்பெருமா
னல்லையி லாரும் வணங்கி னருள்புரி நம்பனமர்
நெல்லையி லார்தளி வீற்ற வருங்கொலு நேர்த்தியினைத்
தொல்லையி லாதடி யேன்கண்ட நன்னலந் தொன்னலமே. (சு)

### திருவிச்சாபுரம்.

பாண்டியன் மாணிக்க வேத்திரப் பேரடி பட்டவனு
நீண்ட வயிற்சிவ னுமெம் பிரானு நிலவுதல்கண்
டாண்டையர் நாகரு மையரு மேத்துவிச் சாபுரத்தைக்
காண்டகை பெற்றவென் கண்களை நெஞ்சங் கருதுமன்றே. (எ)

### திருநான்மாடக்கூடல்.

வான்மாடக் கூடல் களினுஞ் சிறந்து வயங்குமெழி
ளுன்மாடக் கூட னகர்தன்னி லெங்கோ னறுங்கடம்பு
தான்காணு மார்பனை யங்கயற் கண்ணியைச் சங்கரனை
நான்காணு மாறிங்கண் வாய்த்தது முற்செய்த நற்றவமே. (அ)

### திருச்சேதுமத்தி.

கார்சேர் கடனனி சூழ்சேது மத்தியிற் காகுத்தனு
ரேர்சேர் விபூதி யணிந்துபூ சித்திட்ட வீச்சுரனைச்
சீர்சேர் சதங்கைத் திருத்தாள னென்றனைத் தேடிவரு
நார்சேர் குகேச னெனவெண்ணி யன்பொடு நாடுவலே. (கூ)

எல்லாங் குமாரப் பெருமாளென் றோர்ந்திடு மென்னகத்தே
நல்லான் பருதிக் குலராமன் பூசித்த நாதனையு
மல்லாஞ் சுரியற் பருவத வர்த்தனி யம்மையையும்
வல்லான் சிவசண் முகன்றானென் றெண்ணி வணங்குவலே. (க௦)

### திருவிராமேச்சுரம்.

தாராமேற் றிகழ்துறக் கத்தவர் பேற்றினைச் சாற்றிடினு
மாராமேற் புனையிறை யோனும் பனிமலை யான்மகளு
மாராமேற் புணையயி லீசனு நன்கு வதிபதியா
மிராமேச் சுரமுதித் தோர்தவப் பேறிங் கியம்பரிதே. (கக)

### திருத்தேவை மேலைக்கோபுரவாயில்.

அண்டரு மோனரு மெண்டிசை நாதரு மம்புவிவாழ்
தொண்டரு நாளு நினைந்து பணிந்து துதிக்கவுள்ள
வண்டறு தேவை யணிமேலைக் கோபுர வாயினிலை
கொண்டகு கேசன் பதாம்புய மென்றனைக் கொள்பொருளே. (கஉ)

### பிரப்பன் வலசை.

எத்தனை யோதலஞ் சுற்றிவந் தேன்மன மெட்டுணையு
மத்தன் குமாரன் முருகனை நாட வடங்கவில்லை
பத்தர்கள் வாழ்பிரப் பன்வல சைச்செம் பதிதனிலே
சத்திய மாகக்கை கூடின தாலினித் தாழ்விலையே. (௧௩)

### திருக்குன்றக்குடி.

சொல்லாரு நான்மறை தந்திர மாதி துதிக்குநெடு
வில்லாரும் வேற்கர வேந்தனெம் மீசனை மேதினியோ
ரெல்லாரு மேத்துகுன் றக்குடி தன்னினு மேயிறைஞ்சி
நல்லாரு முந்திற னுற்றேன் சிவாநந்த நாட்டத்திலே. (௧௪)

### திருச்சிகண்டிமலை.

திருவே சிறந்தநன் மன்மத வாண்டுற்ற திங்கணண்டு
தருவே தனையில்பிற் பாக நவமி தனிற்கடப்ப
மருவேறு தோட்பெரு மானைச் சிகண்டி மலைதனிலே
கருவே புகாதுய் வணநா னிறைஞ்சிக் கனிந்ததுண்டே. (௧௫)

### திருப்புத்தூர்.

பொன்னு மருஞ்செல்வி நீங்கா திலங்கு பொழில்வளஞ்சா
னன்னு டெனுந்திருப் புத்தூரின் மேவிய நந்திதன்னை
யென்னு தரம்படு செவ்வே ளெனத்தரி சித்திறைஞ்சி
யின்னு வுரங்கடிந் தேன்மனந் தான்குளிர்ந் தேனன்பரே. (௧௬)

### திருக்கானப்பேரூர்.

நீரகஞ் சார்நெடு நேமியிற் சீர்மை நிரம்புகின்ற
பேரகஞ் சார்திருக் கானநற் பேரூர்ப் பெரியவனை
யேரகஞ் சார்திருச் சேயவன் யாண்டு மிருப்பவனென்
றோரகங் கொண்டுவந் திப்பவர்க் கேம னுலகிலையே. (௧௭)

### திருவுருமாமலை.

தூமலி யன்புடை யார்நன் னடையைத் தொடரடியேன்
மாமலி நெல்லை நதியிற் றிருவுரு மாமலைமேற்
பாமலி நாவயின் மன்னெனு மெந்தையைப் பார்த்ததினம்
பேமலி மன்மத வாடியிற் பக்கப் பிரதமையே. (௧௮)

### திருவெற்பு.

திருவானி லாவிடு குற்றால நாதர்தஞ் செல்வனையென்
வெருவானி தீர்த்தருள் வேலவ னைத்திரு வெற்புமிசைப்
பெருவானி லாது மளமள வென்றுறை பெய்விளம்பி
மருவானி யாரப்ப நான்கண்டு பூரித்த வைகலன்றே. (௧௯)

## திருப்பாலைவனம்.

வேலை யுடுத்த விபுலைவாழ் நர்க்கு விவேகநெறி
நூலை வகுத்தத னுட்பமுங் காட்டியந் நோன்மைவழிக்
காலை யளித்தருண் முக்கண்ண னுளங் கனிவொடுவாழ்
பாலை வனத்திற் குமரனை நன்கு பணிகுதுமே. (உ0)

## வெவ்வேறு சந்தர்ப்பம்.

எழுத்துறை மேனூ னனிபுக ழெம்மா னெனுங்குகநின்
வழுத்ததர் நிற்குமென் முன்சென்னை வாழுநின் மாண்படியைத்
தொழத்தகு மன்பர் தெரிவித்த வாறுன் றொடர்பினினுந்
தழைக்குக நற்சைவ சித்தாந்த வேதத் தமிழ்ச்சபையே. (உக)

சடைக்கற்றை தாங்குவ்விச் சங்கர னார்தந்த தங்கவயிற்
படைக்கையெந் தாயறி யாமையி னன்செய்த பண்டைவினை
தொடைக்கட்டி யோடரைக் கட்டியு மானனி தோன்றியென்னை
நடக்கவொட் டாதுசெய் கின்றது சென்னை நகர்தனிலே. (உஉ)

நெல்வேலிச் சிக்க நரசைய னூரினன் னேர்வடக்கே
கல்வேலை செய்த மடஞ்சென்று காடாயக் காரர்கண்டு
சில்வேலை பூசைக் கிடமீகென் றேனவர் தெவ்வுரைத்தார்
வெல்வேலை யேந்திறை யேயிந்த வாறும் விளைந்ததென்னே. (உங)

தேன்பட்ட வாய்வண் டறைவெற்பு மேல்வாண தீர்த்தமதி
லூன்பட்ட காயந் தனையே நனைப்பா னுவந்துசென்று
நான்பட்ட பாடுன் றிருவுள்ள மொன்றே நனியறியுங்
கூன்பட்ட சோதிப் பிறைமுடித் தோனிளங் கோமகனே. (உச)

சேமத்தை வெல்லினுஞ் சாமத்தை வெல்லினுந் தீயவர்செய்
யோமத்தை வெல்லினு மீமத்தை வெல்லினு மோங்குசிங்க
வீமத்தை வெல்லினும் வீரத்தை வெல்லினும் வீறியெழு
காமத்தை வெல்வ தரிதுகண் டீர்குகற் கண்ணுநரே. (உரு)

நோயின்மை செல்வச் செருக்கின்மை சோம்பின்மை நொய்மையின்மை
பேயின்மை பேதைக் குணமின்மை சாமிசொற் பீடிகழும்
வாயின்மை யாயுட் குறைவின்மை பேருண்டி மாந்தலின்மை
தீயின்மை வேண்டுமென் றேசிவ யோகிற் றிளைப்பவர்க்கே. (உசு)

சவ்வுந் தசையு மெலும்புஞ் செறிபுன் சடத்தொடர்புந்
தெவ்வுந் திரிபுஞ் செயற்கையு நீங்குஞ் சிதம்பரச்சீ
ரொவ்வும் படிமன மும்படு மோம்ரீமை யுங்கிலியு
மவ்வுஞ்சவ் வுஞ்ச ரவண பவாய நமவெனவே. (உஎ)

தேங்கட லாய பராபர சண்முகன் சேத்திரமாம்
வேங்கடந் தன்னையைந் தாயுதற் காக்கியவ் வேங்கடத்திற்
பூங்கடங் கொள்ளரி யைக்குகன் பூசித்த தாப்பொறித்தோர்
தாங்கடம் விட்டபின் பேதடைந் தாரோ சழக்குடனே. (௨௮)

சடப்பொரு ளுள்ளு மிருக்கின்ற சாமி சடப்பொருட்குந்
திடப்பொரு ளாமுயி ரின்கண் விளங்கு திறமதிகந்
திடப்பொரு ளுக்குந் திடப்பொரு ளாமது சிகண்டனென்
னடப்பொருண் மூர்த்தியின் மின்ன லதிகநன் னட்பினரே. (௨௯)

நிலத்தி லழகுக் கழகுநற் கல்வி நிகழதுபோ
னலத்தி னடத்த லதினு மழகரு ளுட்டமுயர்
தலத்தி லிருத்த லதினு மழகயிற் சாமியினுன்
மலத்தி னடலறுத் துய்த லதனினு மாவழகே. (௩௦)

உலகத் தெதிலுங் கனநீளங் கண்ணறை யுள்ளமைபோ
விலகத் துவிதப் பொருட்கண்ணு மெய்யறி வின்பெனச்சொன்
னலகத் தனுண்மை யொருமூன் றையுங்குகன் ஞானமில்லார்
விலகத் தமேசெய்து சேர்க்கையென் றேதம் விரும்புவரே. (௩௧)

குறுந்தொழி விற்றென வோர்ந்தறி யாமைக் குறும்பதனைத்
தெறுந்தொழில் செய்குகன் றேசரு ளுடுந் திறமதொன்றே
நறுந்தொழி லல்லாத யாவுமெஞ் ஞான்று நலமொழிந்த
வெறுந்தொழி லென்றறி வீர்மா னவவுரு மேயவரே. (௩௨)

எவரம் பரத்தை யடைபொருட் டுப்பொழிக் கின்றனரோ
வவரம் புவிக்கு ளடையா ரவத்தைக ளங்ஙனமே
துவரம் பருப்புண் டிடின்வயிற் றிற்புழுத் தோன்றுமிந்த
விவரம் பழக்கத் தறிந்துசொன் னேன்குரு வேட்கையரே. (௩௩)

நூலாத்தர் பாசமெய் யென்பது கொண்டிந்த நோயுலகை
மேலாத்த முண்ணினை வோர்பரி பூரண மெய்யுணர்வு
சாலாத்த ளைக்குட் கிடப்பரே யெங்குஞ் சதாசிவமாம்
வேலாத்த னென்றுள்கு வோர்ஞான வீட்டின்ப மேவுவரே. (௩௪)

சாம்பொழு தோர்செவி கேட்கினு நன்றே தரும்புகழை
யாம்பொழு தெல்லா மறைந்தவெம் மானல் லருணகிரி
யோம்பொழு தாக்கண் டருளிணை டடைந்த வொருவனையே
போம்பொழு துள்ளத் திருத்துமின் பந்தம் பொடிபடுமே. (௩௫)

---

# செய்யுள் முதற்குறிப்பகராதி.